# ஸம்ராட் அசோகன்

பாலசந்த் நானாசந்த் ஷாஹ்



தமிழாக்கியவர்
'குகப்பிரியை'





கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் :: சென்னை-4.

## சமர்ப்பணம்

இந்த அருமையான நூலைத் தமிழாக்குவதற்கு
உடனிருந்து உதவிய என் இன்னுயிர்த்
தோழியும் தேசபக்தையுமான
**எச். கிருஷ்ணபாய்**
அவர்களுக்கு.

# முன்னுரை

இந்தமாதிரி ஓர் அருமையான மலரை வாசகர்களுக்கு அளிக்க வேண்டுமென்ற ஆவல் நெடுநாளாக உள்ளத்திலே ஊறிக்கிடந்தது. அதில் சிறிதளவேனும் செயலாக முடிந்ததுபற்றிப் பெருமை கொள்கிறேன்.

என் வேலை முடிந்துவிட்டது. பாரத பூமி என்ற நந்தவனத்தின் ஓர் அருமையான மலர், காலதேவன் என்ற மிகப் பெரிய பருவதத்துக்கு அடியில் மறைந்துகிடந்தது. ஆனால் அதன் நறுமணமோ இன்னும் பாரதநாட்டில் கமழ்ந்து கொண்டே இருக்கிறது. அந்த அற்புதமான மலர் கைக்கு எட்டவில்லை. அதினின்றும் உதிர்ந்த சில இதழ்களை என் நாட்டவருக்கே அர்ப்பணம் செய்கிறேன். அவர்கள் இதைச் சுவைத்து மகிழ்வார்கள் என்பதை நினைக்குந்தோறும் என் மனம் ஆனந்த மிகுதியினால் பூரிக்கிறது. இதனோடு நானும் மகாத்மா அசோகரிடம் விடைபெற்றுக் கொள்கிறேன்.

பாலசந்த் நாநாசந்த் ஷாஹ்.

# முகவுரை

**ஸம்ராட்** அசோகன் என்ற இந்தச் சரித்திர நாவலின் ஆசிரியர் **பாலசந்த் நானாசந்த் ஷாஹ்,** குஜராத்திக்காரர்; ஆனால் அவர் மராட்டி மொழிக்கு முதல்முதலில் சில சரித்திர நாவல்களைத் தந்து பெரும் பணியாற்றினர். அவர் மராட்டியில் எழுதிய சரித்திர நாவல்கள் சென்ற தலைமுறையில் மிகவும் பிரசித்தமாக இருந்தன. இன்றும் இவற்றை ஆசையோடு படிப்பவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். அவர் எழுதிய நாவல்களுள், கால வெள்ளத்தில் மறையாமல் அமர இலக்கியமாக மதிக்கத்தக்கது—**ஸம்ராட் அசோகன்.**

பாத்திரங்களை உருவாக்குவதிலும், உணர்ச்சி மிக்க சம்பாஷணைகளை அமைப்பதிலும் **பாலசந்த் நானாசந்த் ஷாஹ்** புகழ்பெற்றவர். 'இலக்கியம் மொழியைக் கடந்தது' என்பதற்கு அவருடைய நூல்கள் சான்றாக விளங்குகின்றன. ஹிந்தி, வங்காளி முதலிய பிற மொழிகளிலும் அவருடைய நாவல்கள் வெளிவந்து வாசகர்களின் அன்பைக் கவர்ந்திருக்கின்றன.

மராட்டி இலக்கியத்தில் பழமையான சரித்திர நாவல்களின் முன்னணியில் '**ஸம்ராட் அசோகன்**' இடம் பெறுகிறது. இதே காலத்தில் ஹரி நாராயண ஆப்டே என்ற பிரசித்த நாவலாசிரியர் எழுதிய ஒப்பற்ற சரித்திர நாவல்

களுக்கு இணையாக, இதையும் இலக்கிய விமரிசகர்கள் மதிக்கிறார்கள். பங்கிம் சந்திரருடைய நாவல்களில், சில பாத்திரங்களிடம் வெறுப்பை உண்டாக்கும் தன்மை உண்டு; ஆனால் இந்த நாவல் சாந்த ரசமே வடிவமானது; உள்ளத்தில் அமைதியை உண்டாக்க வல்லது.

நல்ல இலக்கியத்தைத் தமிழுக்குக் கொடுப்பதில் ஊக்கமும் திறமையும் மிகுந்தவரான பழம் பெரும் ஆசிரியை **'குகப்பிரியை'** அவர்கள், இந்தச் சுவையுள்ள நாவலைத் தமிழ்நாட்டுக்கு வழங்குகிறார்கள். ரசிகர்களான வாசகர்கள், இதிலுள்ள சரித்திரகாலத்துப் பாத்திரங்களோடு பழகி இன்புறுவார்கள் என்பதில் ஐயமில்லை.

2—11—'57
மயிலை, சென்னை.

**கா. ஸ்ரீ. ஸ்ரீ.**

## பொருளடக்கம்




# ஸாம்ராட் அசோகன்

## 1

### முற்றுகை.

ஆம்! சரியாய் நான்கு மாதங்கள் ஆயின. கலிங்க நாட்டுத் தலைநகராகிய இந்திரபுரத்தை முற்றுகையிட்டு அன்றுடன் சரியாக நான்கு மாதங்கள் முடிந்துவிட்டன. தோல்வி என்பதையே அறியாதவனாய் வட பாரதநாடு முழுவதையும் தன் வசமாக்கி, பௌத்த தர்மத்தைப் பிரசாரம் செய்துவந்த அசோகனது மனத்திலும் தனக்கு வெற்றி உண்டாகுமோ, உண்டாகாதோ? என்ற சந்தேகம் மெல்ல மெல்ல எழத் தொடங்கிற்று.

'வடபாரதத்தின் எல்லாப் பகுதிகளையும் வென்று, வாகை சூடியாயிற்று. இனிமேல் கலிங்கத்தையும் பார்த்துவிடுவோம்' என்று பலர் அவனுக்கு ஆலோசனை சொன்னார்கள். முதலில் இது மிகவும் சிறந்த யோசனை என்று ராஜ தந்திரிகள் வானளாவப் புகழ்ந்தனர். மிகுந்த முன் யோசனையுடன் ஆராய்ந்து தீர்மானித்த விஷயம் என்றுதான் மக்களும் நினைத்தார்கள்.

'உண்மைதான்; சுற்றுப் பக்கங்களில் உள்ளவைகளைக் கைப்பற்றி விட்டால் கலிங்கநாட்டை வெல்லுவது ஒரு பிரமாதமா!' என்றுதான் அசோகனும் நினைத்தான்.

ஆனால்—இப்பொழுது கண்ட காட்சி அவனது கலங்கா நெஞ்சத்தையும் சற்றே சலிக்கச் செய்தது. முற்றுகை தொடங்கி நான்கு மாதங்கள் ஆகியும் கொஞ்சமும் தளராமல் அவர்கள் எதிர்த்து நிற்பதைக் கண்டபொழுது, தான் எண்ணியது பெரும் பிசகு என்று அவனுக்குத் தோன்ற ஆரம்பித்தது. இந்திரபுரத்தை ஜயிப்பது என்பது தாங்கள் எண்ணியதுபோல் அவ்வளவு சுலப

மான விஷயம் அல்ல என்று அவனுடைய வீரர்களும் எண்ணத் தொடங்கினார்கள்.

'பெரிய வனத்தில் சிறு சிறு பிராணிகளைக் கொன்று குவித்து விடலாம். வனத்திற்கே அரசனாகிய சிங்கத்தைக் கொல்லுவது என்பது எப்பொழுதும் ஒரே மாதிரியான சிரமத்தைத்தான் கொடுக்கும்' என்று சொல்லுவதுண்டு. அதுபோல் கலிங்க நாட்டை வெல்லுவதும் மிகவும் கடினமான ஒரு செயல் என்று அசோகனுக்குத் தோன்றிற்று.

ஆனால் அவனுடைய முடிவான நோக்கம் என்ன? வெற்றி பெற வேண்டும். நாடு முழுவதும் பௌத்த தர்மக் கொடி பறக்கவேண்டும் என்பதுதானே.

ஆகவே அவன் இந்தக் கஷ்டத்தை ஒரு பொருட்டாக எண்ணிப் பயந்துவிடுவானா! அவனது வீரர்களோ தர்மப்பிரசாரம் என்கிற மதுவை உண்டு, வெறிகொண்டவர்போல் காணப் பட்டனர். கோட்டைக்குள்ளிருந்து தீ மழை பெய்வதேபோல் அம்புமாரி பொழிந்துகொண் டிருந்தது. அதை எதிர்த்து முன்னேறுவதற்காக முயன்றுகொண் டிருந்தார்கள் மகதநாட்டு வீரர்கள். அதனால் முன்னணியிலே இருந்த படைவீரர்கள் கலிங்க நாட்டாரின் எதிர்ப்புக்கு இரையாகிவிட்டனர். க்ஷணத்துக்கு க்ஷணம் பலம் குறைந்து வருகிறோம் என்று நினைக்கத் தொடங் கினர் சேனா வீரர்கள்.

கலிங்க நாட்டரசன் நரசிம்மன் இந்திரபுரத்துக் கோட்டை யின்மேல் மின்னல்போல் அங்கும் இங்குமாகத் தோன்றி, உற்சாகப்படுத்திக்கொண் டிருந்தான். அசோகனது படைவீரர் கள் அவனைக் குறிவைத்துக் கொல்ல முயன்றார்கள். ஆனால் அவன் இவர்களது குறிக்கு அகப்படாமல் நொடிக்குள் மறைந்து மறைந்து தோன்றிக்கொண் டிருந்தான்.

* * *

அப்பொழுது பாடலிபுத்திர நகரந்தான் மகதநாட்டின் தலைநகர். மௌரிய குலத்து மன்னர்கள் ஆண்டுவந்தனர். நாளுக்கு நாள் பௌத்த தர்மம் பாரததேச முழுமையும் வெகு வேகமாகப் பரவிக்கொண்டு வந்தது. அசோகன் தர்மப் பிரசாரத் திலே வெகு மும்முரமாக ஈடுபட் டிருந்தான். பௌத்த தர்மத்தை

நிலைநிறுத்தி உலக முழுவதும் பரவச் செய்வதே தனது வாழ்நாளின் நோக்கம் என்று எண்ணியிருந்தான். எண்ணியதோடன்றிச் செயலிலும் செய்து காண்பித்துக்கொண்டிருந்தான். அரசனுயிருந்து தர்மப்பிரசாரம் செய்வது சுலபம் என்பதும், அதன் பொருட்டே தான் சக்கரவர்த்தியாகவேண்டும் என்பதும் அவனுடைய நோக்கம். இதைத் தவிர, சக்கரவர்த்தியாக இருந்து, அரசனுக்குரிய சுகபோகங்களைத் தான் நுகரவேண்டும் என்று அவன் விரும்பவில்லை.

இதுபற்றியே அவன் விவாகத்தையும் விரும்பவில்லை. பௌத்ததர்மப் பிரசாரத்தையும், தன் ஒரே ஒரு உடன் பிறப்பான இந்திரையையும் தவிர வேறொருவரும் அவன் நெஞ்சிலே இடம் பெறவில்லை. இந்திரை இளமையிலேயே தாயை இழந்துவிட்டாள். தகப்பனும் அதையடுத்து விண்ணுலகடைந்தார். ஆகவே அந்த இந்திரையைப்பற்றிய முழுப்பொறுப்பும் அவனையே சார்ந்தது. இந்திரையைத் தகுந்த வரனைத் தேடி மணம் முடித்துவிட்டு, தான் துறவுபூண்டு பௌத்த தர்மத்தைப் பிரசாரம் செய்யும் 'பிக்ஷு'வாக வேண்டுமென்றும் எண்ணியிருந்தான்.

* * *

இன்று, போர்முனையிலே அசோகனது மனம் தளர ஆரம்பித்தது. கடந்த நான்கு மாதமாக முயன்றும் கலிங்கநாட்டார் அதே நிலையில் நின்று போர் புரிவதைக் கண்டு, அவன் மனம் ஆச்சரியத்தில் முழுகிற்று; அதோடு நின்றதா? அசோகனது படைகள் நாளுக்கு நாள் பின்னடைய, கலிங்கநாட்டாரின் பலம் பெருகி வருவதாகத் தோன்றிற்று. அசோகன் வாள் வலியால் தர்மப்பிரசாரம் செய்ய வேண்டுமென்று விரும்பவில்லை. பலாத்காரத்தினுல் மெய்யன்பை ஜனங்களது மனத்திலே விதைக்க முடியாது என்பது அவனுக்குத் தெரியும். ஆனுல் கலிங்க நாட்டை முற்றுகையிட்டதற்கு இதைத்தவிர வேறு சில காரணங்களும் இருந்தன.

அப்பொழுது கலிங்கநாடு சநாதனதர்மத்துக்கு உறைவிடமாக இருந்தது. கலிங்கநாட்டார் வைதிகப் பற்று உள்ளவர் என்பதையும், புராதன ஹிந்து தர்மக் கோட்பாட்டைத் தழுவி நடப்பவர்கள் என்பதைம் பாரதநாடு முழுவதும் அறிந்திருந்தது.

அவர்களது வைதிக நெறிகளைக் கண்டு, யாவரும் வியந்துகொண்டிருந்தார்கள். இந்தச் சமயத்தில் பௌத்த தர்மத்தைக் கலிங்க நாட்டிலேயும் பரவச் செய்யவேண்டும் என்ற ஆவல் எழுவது சகஜந்தானே. ஆனால் இந்த ஆவல் அசோகனது மனத்தில் எழவில்லை. பிக்ஷுக்களின் தலைவரான ஸம்புஷ்டாசாரியரது மனத்தில் மெல்ல எழுந்தது.

அசோகனது மாற்றாந்தாயாகிய புத்திமதிதேவி, பிக்ஷுக்களுக்குத் தலைவனான ஸம்புஷ்டாசாரியனைத் தெய்வமாகக் கருதியிருந்தாள். இந்த நிலைமையை மதப்பிரசாரத்திற்கு அனுகூலமாகச் செய்ய வேண்டுமென்று நினைத்தான் ஆச்சாரியன். சமயம் வாய்த்த பொழுதெல்லாம், புத்திமதிதேவியிடம், 'நான் ஒரு அருமையான யோசனை செய்திருக்கிறேன். அந்த யோசனையின்படி தாங்கள் செய்துவிட்டீர்களானால் பாரதநாடு முழுமையும் ஒரே கொடி, பௌத்தர்களது கொடி பறக்கும்' என்று சொல்லிவந்தான்.

புத்திமதிதேவியோ இவனது வாக்கை வேதவாக்காக மதிப்பவள். அவனது யோசனையைத் தெரிந்துகொள்ள விரும்பினாள். அவனது எண்ணம் என்ன? புராதன ஹிந்து தர்மத்திலே மிகுந்த பற்றுடையவன் நரசிம்மன். அவனது மகள் ரோகிணியை அரசிளங்குமரன் வீதசோகனுக்கு மணமுடித்தால் கலிங்கநாடும் படிப்படியாகப் பௌத்தர்களால் நிரம்பிவிடும் என்பதுதான்.

*　　　*　　　*

இந்த அபிப்பிராயம் புத்திமதிதேவியின் மூலமாக அசோகன் செவிகளிலும் விழுந்து, அவன் உள்ளத்தில் இடம் பெறலாயிற்று. மாற்றாந்தாயின் கட்டளையை நிறைவேற்ற எண்ணினான். இத்தகைய விவாக பந்தத்தால் வெகு சுலபமாக மதப்பிரசாரம் செய்யலாமென்றும், ஆனால் வைதிகத்தில் மிகுந்த பற்றுள்ள நரசிம்மன் இந்த விவாகத்திற்கு ஒருபொழுதும் இணங்க மாட்டான் என்றும் தெரியும். ஆகவே ராஜமாதாவைச் சமாதானம் செய்ய முயன்றான் அசோகன்.

"என் சக்களத்தியின் மகனாக இருப்பதால் நீ, என்மீது சீறுகிறாய்" என்றாள் புத்திமதிதேவி. தான் பிடித்த பிடியை விடாதவளாகையால், அவளுக்கு எதிரிடையாக நடந்தால் கலகம் நேரிடும் என்பதை எண்ணி, கடைசியாக நரசிம்மனைப் பெண் கேட்பது என்று தீர்மானித்தான் அசோகன்.

அதன்படி கலிங்கநாட்டரசனுக்கு முறைப்படி செய்தியைத் தெரிவித்தான். ஆனால் நரசிம்மவர்மனோ மதவெறியில் அசோகனுக்குத் தாழ்ந்தவன் அன்று. கடிதத்தைக் கண்டவுடன் அவன் முகம் சிவந்தது. தூதுவர்களும் நடுங்கினார்கள். புற்றிலிருந்தெழும் சர்ப்பம்போல் சீறி எழுந்தான் நரசிம்மன்.

"நீயோ நாஸ்திகன்; புராதன ஹிந்துமதத்தைக் குலைத்துப் புதிய தர்மத்தை வளர்க்கிறதாக எண்ணிப் பெருமை பேசுகிறாய். பெருமை பேசுவதோடல்லாமல், பழைய மதத்தைப் புறக்கணித்ததால் ஆஸ்திகர்களால் வெறுக்கப்பட்டவன். புராதன ஹிந்து மதத்தை ரக்ஷிக்கும் என்னிடம் எந்த முகத்தை வைத்துக்கொண்டு பெண் கேட்கத் துணிந்தாய். இது அசட்டுத்தனமான துணிச்சலைத்தான் காட்டுகிறது. கேவலம் நரி, குள்ளநரிக்குச் சிங்கக் குட்டியைக் கேட்பதுபோல் அல்லவா இருக்கிறது இது! நீயே உனக்கு அழிவைத் தேடிக்கொள்வது நலமன்று. அறிந்து நடப்பது தான் அறிவாளிகளுக்கு அழகு."

இதுதான் கலிங்கநாட்டரசனிடமிருந்து அசோகன் பெற்ற பதில்.

ஆனால், "இந்தக் கடிதத்திலுள்ள விஷயங்களைக் கண்டதும் அசோகன் உங்களைச் சும்மா விடமாட்டான். உடனே இந்தக் கடிதத்திற்கு வட்டியும் முதலுமாகத் திரும்பி வந்துவிடும். அசோகன் தனக்கேற்பட்ட அவமானத்துக்குப் பழிவாங்க அஞ்சமாட்டான்" என்று எச்சரிக்கை செய்தான் கலிங்கநாட்டு முதல் மந்திரி விசாகன்.

"அப்படி நேருமானால் மிகவும் நல்லது. நம்முடைய தோள் வலியைக் காண்பிப்பதற்கு நமக்கு ஒரு நல்ல தருணம் வாய்க்கிறதல்லவா?" என்றான் நரசிம்மன்.

இந்த நிலையில் விசாகன் வேறு என்ன செய்ய முடியும்! வெகு சீக்கிரத்திலேயே கோட்டை கொத்தளங்களை யெல்லாம் பழுதுபார்க்க வேண்டுமென்றும், யுத்த தளவாடங்களின் உற்பத்தியை அதிகரிக்கச் செய்ய வேண்டுமென்றும் உத்தரவிட்டான். வயது வந்த இளைஞர்கள் அனைவரும் கட்டாய ராணுவ சேவையில் ஈடுபட வேண்டுமென்று திட்டம் வகுத்தான். வெடி மருந்துகள் செய்யும் சாலைகளும் ஆயுதம் செய்யும் தொழிற்சாலைகளும் இரவு பகல் என்பதில்லாமல் வேலை செய்யத் தொடங்கின.

வருஷக் கணக்கில் யுத்தம் நடந்தாலும், வெற்றி பெறுவோம் என்று வீரர்கள் பெருமிதத்துடன் பேசிக்கொண்டார்கள்.

கடிதம் கிடைத்ததுதான் தாமதம். அசோகனது படை இந்திரபுரத்தை நோக்கிப் புறப்பட்டுவிட்டது. அசோகன் இத்தகைய பெரும் பொறுப்பைச் சேனைதிபதியிடம் ஒப்பித்துவிட்டு, தான் மட்டும் தலைநகரில் இருக்க விரும்பவில்லை. புத்திமதிதேவியும் புதல்வர்கள் இருவரும் போர்முனைக்குச் செல்ல வேண்டுமென்றே விரும்பினார்கள். ராம லக்ஷ்மணர்களை நிகர்த்த அவ்விரு அரசிளங் குமரர்களும் போர்முனையில் வந்து நின்றார்கள்.

அசோகனது படை, படிந்துகொண்டே வந்தது. கலிங்க நாட்டுப் படையோடு, மிகுந்த உற்சாகத்துடன், உயிரைத் துரும்பாக மதித்துப் போர் புரிந்துகொண்டே வந்தது. வெற்றி என்னும் தராசின் முனை, கலிங்க நாட்டினது பக்கமே சாய்ந்திருந்தது.

அசோகனது சேனைகளில் மடிந்தவர்களது சவங்கள் அங்கங்கே கிடந்து நாறத் தொடங்கின. அடிபட்டவர்களைப் போதுமானபடி உபசரிக்கவும் மனிதர்கள் இல்லை. இறந்தோரை எடுத்து அப்புறப்படுத்தவும் வசதிகள் இல்லை. ஆகவே அந்தப் போர்க்களம் முழுவதிலும் அதை ஒட்டிய பாசறைகளிலும் அசுத்தமான காற்றும் துர்க்கந்தமும் பரவலாயின. இதனால் கொள்ளை நோய் காணத் தொடங்கிற்று. ஒரு புறத்திலே எதிரிகளின் வீராவேசம்! பயங்கரமான தாக்குதல்! மற்றொரு புறத்தில் கொடிய கொள்ளை நோய்! இவ்விரண்டிற்கும் நடுவே அகப்பட்டுத் தவித்தது அசோகனது சேனை வெள்ளம்.

'இதே நிலையில் இன்னும் சில நாள் தொடர்ந்து யுத்தம் நடைபெறுமானால் சேனை முழுவதும் இங்கேயே அழிந்துவிடுமோ!' என்ற பயம் அசோகனது மனத்தில் தோன்றலாயிற்று. 'சமாதானம் செய்துகொள்ளலாமா?' என்ற எண்ணம் அவன் மனத்தில் தோன்றவே, ஏககாலத்தில் பல விஷங்களால் தாக்கப்பட்டவன்போல் அவன் முகம் கறுத்தது. இன்னது செய்வதென்று விளங்காதவனாகத் தவிக்கலானான் அசோகன்.

நடு நிசி. காயமுற்றவர்களின் பெருமூச்சையும், சவங்களைத் தின்னும் கழுகு கோட்டான் முதலிய பறவைகளின் கூச்சலையும் தவிர வேறு ஒருவிதமான சந்தடியும் இல்லை. காவற்காரர்கள் மெல்ல மெல்ல இங்கும் அங்குமாக நடந்துகொண்டிருந்தனர்.

இந்தச் சமயத்திலே ஏதோ ஒரு பொருள் கீழே விழுவதுபோன்று செவிகளுக்குப் புலனுயிற்று. அசோகன் பாசறையினின்றும் வெளி வந்தான். எதிரிலிருந்து வந்துகொண் டிருந்த காவலாளி அடி சறுக்கி விழுந்த ஓசைதான் அது என்பது தெரிய வந்தது. விழுந் தவன் அசோகனிடத்தில் மிகுந்த அன்புகொண்ட மோகனன்.

"மோகனு, அடி படவில்லையே?"

"இல்லை மகாராஜா! கால் தடுக்கிவிட்டது" என்று மிகுந்த வணக்கத்துடன் சொன்னுன்.

"சித்தப்பாவின் பாசறையில் இன்னும் விளக்கு எரிந்து கொண் டிருக்கிறதா?" என்று கேட்டான் அசோகன்.

"ஆமாம் மகாராஜா! அவர் இன்னும் விழித்துக்கொண்டுதான் இருக்கிருர். தளகர்த்தர்கள் இப்பொழுதுதான் அவரவரது பாசறை யிலிருந்து வெளியே வந்துகொண் டிருக்கிருர்கள். மகாராஜா வுக்குத் திருவுள்ளமானுல்..."

"ஆமாம்! அவரை இங்கே அழைத்துவா!"

தலை குனிந்து வணங்கினவனுக மந்திரி ராதாகுப்தனது பாசறையை நோக்கிச் சென்ருன் மோகனன்.

சற்று நேரத்திற்கெல்லாம் ராதாகுப்தன் பாசறைக்கு வந்து சேர்ந்தான். அவனைப்போன்ற சிறந்த ராஜபக்தியுள்ளவன் வேறு ஒருவருமே கிடையாது என்று நிச்சயமாகச் சொல்லலாம். ஆனுல் இதில் ஒரு ஆச்சரியமான விசேஷம்: பாடலிபுத்திர நகரமோ தர்மத்திற்கே பிறப்பிடம்; அப்படிப்பட்ட பௌத்தர் களின் இடையில், முதிர்ந்த ஸநாதன தர்மத்தைப் பின்பற்றும் ராதாகுப்தன் முதல் மந்திரியாக இருந்தான்! அசோகனைத் தவிர மற்றெல்லோருக்கும் அவன் ஹிந்து தர்மத்தை அனுசரிப்பவன் என்பதனுல் ஒருவிதமான வெறுப்பு.

புத்திமதிதேவியும் ஸம்புஷ்டாசாரியனும் இவனை எப்படி யாவது ஒழித்துவிட வேண்டுமென்று எவ்வளவோ சூழ்ச்சிகள் செய்து பார்த்தார்கள். ஆனுல் மகா உத்தம ராஜ பக்தனுகிய அவன் விஷயத்தில் இவர்கள் சூழ்ச்சிகள் விழலுக்கு இறைத்த நீராயின. இவ்வளவு கண்டங்களையும் வென்று அவன் அறுபதாவது வயதையும் தாண்டிவிட்டான்.

ராதாகுப்தனது வரவைக் கண்டதும் அசோகன் அவனை ஆசனத்தில் அமரும்படி சைகை காட்டினன்.

"மகாராஜா, இந்த நடுநிசியிலும் நீங்கள் விழித்திருப்பீர்களென்று நான் எண்ணவேயில்லை!"

"சிற்றப்பா! இந்த வயதில் உங்களை இந்த நள்ளிரவில் தொந்தரவு செய்வதுபற்றி மிகவும் வருத்தமாயிருக்கிறது. ஆனல் நான் என்ன செய்வேன்! நாம் இங்கே வந்த நோக்கம் என்ன? பகைவரின் எதிர்ப்பினுலும் நோயின் கொடுமையாலும் நாள்தோறும் ஆயிரக்கணக்கானவர் மடிகின்றுர்கள். இந்தக் கொடுமையை இன்னும் எத்தனை நாள்தான் பார்த்துக்கொண்டிருப்பது! தங்கள் கட்டளைப்படிதான் இந்த யுத்தம் நடைபெறுகிறது. மனிதத் தன்மையே இல்லாத இந்தப் படுகொலையைத் தாங்கள் எப்படிப் பார்த்துச் சகித்துக்கொண்டிருக்கிறீர்கள்!"

"கொலையினுலும் கொடுமையினுலும் தர்மப் பிரசாரம் செய்வது உண்மையான எந்தப் பௌத்தனுக்கு-ததாகரது உண்மையான சீடனுக்கு-விருப்பமாயிருக்கும்!" என்று மிகுந்த கவலையுடனும் வெறுப்புடனும் கூறினன்.

ராதாகுப்தன் பெருமூச் செறிந்தான். "மகாராஜா! இப்பொழுதோ சந்தர்ப்பங்கள் மிகுந்த நெருக்கடியா யிருக்கின்றன. நானும் தங்கள் தந்தையார் காலம் முதல் இதே சேவை செய்து வருகிறேன். ஆனல் இத்தகைய நெருக்கடி, இதற்குமுன் ஏற்பட்டதே இல்லை. ஆயிரக்கணக்கான இந்தச் சேனைகள் மாள்வதைப் பார்த்தும், இந்தக் கிழவயதில் என் கண்கள் ஏன் குருடாகவில்லை என்றே தோன்றுகிறது. சரீரத்திலோ பலம் இல்லை. பலம் இருந்தால் நொடிக்குள் இந்திரபுரத்து மதில்மேல் தாவி, ஒருநொடியில் எல்லாவற்றையும் முடித்துவிட மாட்டேனு!"

"சிற்றப்பா! இதென்ன வீண் பிரமை! தங்கள் சைனியத்திலே வீரர்களுக்குக் குறைவா? இதுவரையில் நமது படைவீரர்கள் வெல்வதற்கு அரியர்கள் என்றுதான் பெயர் பெற்றிருக்கிறுர்கள். இன்னும் உயிரைத் துரும்பாக மதித்துத்தான் போர் புரிகிறுர்கள். ஆனல் இந்திரபுர சேனைக்குக் கோட்டைச் சுவரின் பாதுகாப்பு இருக்கிறது. நமக்கோ அது கிடையாது. நம்மைப் போல் அவர்களுக்கு உணவுக்குப் பஞ்சமில்லை. நோயும் நலியும் அவர்களைக் கெடுக்கக் காத்திருக்கவில்லை. இதுதான் அவர்களுடைய வெற்றிக்குக் காரணம்" என்றுன் அசோகன்.

அசோகனது கேள்விக்கு ஏதாவது பதில் சொல்ல வேண்டுமே என்ற எண்ணத்துடன், "இன்று அவனுக்கு வெற்றி. நாளை நமக்கு வெற்றி" என்றான் மந்திரி.

"சிற்றப்பா! இந்த முகம் துடைக்கும் வேலை எதற்கு? உங்கள் வாயின் மூலமாக இரண்டு தேருதல் வார்த்தைகளைக் கேட்டு என் கவலையைத் தணித்துக்கொள்ளலாமென்று நான் தங்களை அழைக்கவில்லை. தங்களது அநுபவம் நிறைந்த புத்தி மதிகள்தான் எனக்குத் தேவை. படைவீரர்கள் 'பலமும் உற்சாகமும் பொருந்தி, 'எதிர்ப்போம்; வெற்றிபெறுவோம்' என்று தான் வந்தார்கள். அந்த நிலையிலே அவர்களால் செய்யமுடியாத ஒரு செயலை-இப்பொழுது-பலமும் உற்சாகமும் இழந்து நோயால் மெலிந்திருக்கும் இந்த எஞ்சியுள்ள வீரர்கள் எப்படிச் செய்து முடிக்க முடியும்! முடியும் என்று கூறுவது தங்களுக்கு அழகல்ல. இந்த யுத்தத்தை எப்படி முடிவுக்குக் கொண்டு வரலாம் என்பதைச் சொல்லுங்கள். இந்தக் கோரமான படுகொலையைப் பார்த்து இனிமேல் சகிக்கமுடியாது!" என்றான் அசோகன். அவன் குரல், துயரின் மிகுதியால் கம்மிப் போயிற்று. கண்களிலே கண்ணீர் மல்கி நின்றது.

"மகாராஜா! உண்மையான நிலை எனக்குத் தெரியாமல் இல்லை. ஆனால் நான் வேலை செய்யும் ஊழியன்தான். ஆய்ந்து ஓய்ந்து பாராமல், எதிர்ப்படுவதை, இடப்படும் கட்டளையைச் செய்வதுதானே என் கடமை!"

"என்ன! நான் அசோகன்; மகதநாட்டு மன்னன் அல்லவா! என் கட்டளை என் குடிகளின்மேல் செல்லாதா? அரசாட்சியில் என் சொந்த அபிப்பிராயத்துக்கு ஒருவிதமான மதிப்பும் இல்லையா! இந்த யுத்தத்தை நடத்துவது என் கைக்குள் இல்லையா? தாங்கள் ஏன் இவ்வாறு பேசுகிறீர்கள்? தங்களுக்கு இஷ்டமானால் நாளைக்கே உடன்படிக்கை செய்து......"

"மகாராஜா! யுத்தம் செய்வதல்லவோ அசோகனது வேலை. உடன்படிக்கை செய்துகொள்வது அசோகனது காரியம் அல்லவே.

"யுத்தத்தில் வெற்றி பெறுவதுதான் அசோகனது வேலை. காலநிலைமை மோசமாகி வருகிறது. என்னை மன்னிக்கவேண்டும். ......அசோகனைப்போல நியாய சீலனும் குடிகளின் நன்மையையே

கருதுபவனும் சூரனும் ராஜநீதி தவறுதவனுமான ஸ்ரீ ராமபிரானுக்கு நிகரான அரசனை அடையும் பாக்கியம் எங்களுக்கு இல்லை. மகதநாடு அப்படிப்பட்ட ஒரு புண்ணியத்தைச் செய்யவில்லை!" என்றுன் ராதாகுப்தன்.

அசோகன் மிகுந்த கலக்கத்துடன், மந்திரி ராதாகுப்தனை ஏறிட்டுப் பார்த்தான். 'இவர் என்ன சொல்லுகிறுர்? யுத்தம் செய்யவேண்டியது; வெற்றி பெறவேண்டியது இவ்விரண்டுந் தான் அசோகனுடைய வேலை. பெயரளவில் அசோகன் அரசன். ஆனுல் நாட்டைச் சீர்திருத்தவோ பரிபாலிக்கவோ வேண்டிய திட்டங்களையெல்லாம் வகுப்பது ராஜமாதா புத்திமதி தேவியும் ஸம்புஷ்டாசாரியனுந்தான் என்று சுட்டிக்காட்டிப் பேசுகிறுரோ?' என்று சிந்தித்தவனுய் நெடுமூச்செறிந்தான். பிறகு மிகவும் மெதுவான குரலில் சொன்னுன்.

"நான் பாடலிபுத்திரத்தின் மன்னனுயிருந்தும் தாங்கள் ஏன் இவ்வாறு சொல்லுகிறீர்கள் என்றுதான் எனக்கு விளங்கவில்லை" என்றுன்.

"இன்று மகதநாட்டின் சிம்மாசனத்தில் நற்குணசீலனுன அசோகன்தான் வீற்றிருக்கிறுன் என்று யார் சொல்லமுடியும்? இன்று மகதநாட்டின் அரசு, பௌத்த பிக்ஷுக்களின் கையிலல்லவா இருக்கிறது. மகத தேசத்தின் கடிவாளம் பிக்ஷுக்களின் கையில் இருக்கும்போது, அரசியல் சட்டதிட்டங்களும் ஆணைகளும் அவர்களிடமிருந்தே எழுகின்றன. அசோகன் அவர்கள் கட்டளையை நிறைவேற்றுகிறுன். அவ்வளவுதான். மகாராஜா! பிக்ஷுக்கள், தங்களை அவர்கள் கையில் அகப்பட்டுக்கொண்டிருக்கும் பதுமை என்றே எண்ணியிருக்கிறுர்கள். உயிருள்ள அளவும் போர்புரிவதே தங்கள் வேலை. உடன்படிக்கை செய்து கொள்ளவேண்டும் என்கிற சங்கடத்தில் தாங்கள் ஏன் அகப்பட்டுக்கொள்ள வேண்டும்."

ராதாகுப்தனுல் அதற்குமேல் பேச முடியவில்லை. அவனுக்கு ஏற்பட்ட ஆவேசத்தினுல் பேசமுடியாமல் தொண்டை அடைத்து விட்டது.

"சிற்றப்பா! தாங்கள் சொல்வதைத் தெரிந்துகொண்டேன். எனக்கு அரச பதவியில் இச்சையில்லை. புத்திமதி தேவி ஏற்கனவே வீதசோகனை அரசனுக்கவில்லை என்று குமுறுகிறுள். ஆகவே வீண் கலகத்தைத் தடுக்க அவள் கட்டளைப்படி

நடக்கத் துணிந்தேன்" என்று மிகவும் பணிவுடனும் அமைதியுடனும் சொன்னான்.

"அதனால்தான், 'அன்பிற் சிறந்த அசோகனது அரசியல் முறையில் அநியாயங்கள் நடைபெறுகின்றன' என்ற அபகீர்த்தி ஊரிலே பரவியிருக்கின்றது" என்று வெறுப்புடன்கூடிய குரலிற் சொன்னான் ராதாகுப்தன்.

"சிற்றப்பா! இரவு வெகு நேரம் ஆகிறது. நாளைக்கு நான் என்ன செய்யவேண்டும் என்பதைச் சொல்லுங்கள். எப்படியாவது இந்தப் படுகொலை நின்றுதான் ஆகவேண்டும். நினைக்க நினைக்க நெஞ்சம் குமுறுகிறது. இந்தச் சமயத்தில் சரியான யோசனை சொல்பவர்கள் தங்களைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள்! சிற்றப்பா! நான் என்ன செய்யட்டும்?" என்று மிகவும் தணிந்த குரலிற் கேட்டான் அசோகன்.

"அந்தக் கேள்விக்கு விடையளிப்பதிலேதான் எல்லாம் அடங்கியிருக்கிறது. ஸம்புஷ்டாசாரியனும் மற்றவர்களும் என்னைப் பௌத்த தர்மத்தின் விரோதி என்று நினைக்கிறார்கள். ஸநாதன தர்மத்துக்கு விரோதமாக நடைபெறும் இந்த மகாயுத்தத்தைப் பற்றி என்னைக் கேட்பதனால் நீங்கள் என்னிடம் கொண்டிருக்கும் மரியாதையும், என் அந்தரங்கமான ஆலோசனைகளில் உங்களுக்குள்ள பெரும் மதிப்பும் வெளியாகின்றன. தங்களது காரியங்களைக் காட்டிலும் உயர்ந்தது எது? தங்களது க்ஷேமமும் மகத நாட்டின் வருங்கால வாழ்க்கையுந்தான் என்னுடைய சுகம். ஆகவே நான் ஆற அமர யோசித்துத்தான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன். அவசரப்பட்டு நாளைக்கே சந்தி செய்துகொள்ள வேண்டாம்" என்று மிகுந்த நிதானத்துடன் சொன்னான் ராதாகுப்தன்.

"ஆனால் இன்னும் ஆயிரக்கணக்கான மக்களைப் பலிபிடச் சொல்லுகிறீர்களா!" என்று பதற்றத்துடன் கேட்டான் அசோகன்.

"நாளை ஒரு நாள்மட்டும் எப்படியாவது பொறுத்துக்கொள்ளுங்கள். புத்திமதி தேவியையும் அவரது மதி மந்திரியையும் நாளையதினம் இந்திரபவன் குகையிலே நடைபெறப்போகும் ரகசிய ஆலோசனை சபைக்கு வரவழையுங்கள்......"

அசோகன் இடைமறித்து, "அவர்கள் சொல்லுவதைக் கேட்டு நாம் நடக்கவேண்டும் அதுதானே உங்கள் முடிவு.

ஆயிரக்கணக்கான மக்களின் உயிர் இப்படிச் சேதமாகும்பொழுது வீணுக அவர்களது யோசனைகளுக்காகக் காத்திருப்பது எனக்கு இஷ்டமில்லை. அவர்களது யோசனைகளினுல் ஒருவிதமான நன்மையும் ஏற்படப் போவதில்லை" என்ருன்.

"நான் சொல்லுவதைக் கேளுங்கள். நாளை இரவு எல்லோரும் இந்திரபவனக் குகையிலே கூடும்பொழுது அவர்களுக்கெதிரில் இந்தச் சமாதான உடன்படிக்கையைப்பற்றிப் பேச்சைத் தொடங்குங்கள். சந்திக்கு அனுகூலமாக அவர்களும் அபிப்பிராயப்பட்டால் ஏற்றுக்கொள்வோம். இல்லாவிட்டால் தங்கள் இஷ்டப்படி செய்வதை அவர்கள் ஒருவராலும் தடுக்கவோ மறுக்கவோ முடியாது. உங்களுடைய விருப்பப்படியே நாம் முடிவு செய்துவிடலாம்" என்ருர் ராதாகுப்தர்.

அசோகன் மிகவும் ஆத்திரமும் கோபமும் கொண்டவனுய், "அவர்களுடைய அபிப்பிராயம் சமாதானம் செய்துகொள்ளுவதற்கு அனுகூலமாக இராது. அவர்களைத்தான் பிறர் அனுசரித்துப் போகவேண்டுமென்று நினைப்பார்களே ஒழிய நம்முடைய யோசனைகளை ஏற்றுக்கொள்வதென்பது அவர்களது மனப்போக்கிற்கு ஒவ்வாத விஷயம். உங்களுடைய வார்த்தைக்காக அவர்களுக்கு ஆள் அனுப்புகிறேன். ஆனுல் யுத்தத்தை எந்தவிதமாக நிறுத்துவது என்பதுதான் எனக்கும் விளங்கவில்லை" என்று கூறினுன் அசோகன்.

ராதாகுப்தன், "சமாதானம் செய்வதைத் தவிர்த்து வேறு ஒருவழியும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. இருந்தாலும் அவசரப்பட்டு நாமே முடிவுக்கு வந்துவிட்டோம் என்று பிறர் நினைக்கக்கூடாது" என்று வெட்கத்தால் தழுதழுத்த குரலில் கூறினுன்.

அசோகன், சிந்தனையில் ஆழ்ந்தான். 'பிறரது ஆலோசனைகளுக்காக, மற்றும் ஒரு நாள் யுத்தம் நீடிக்கவேண்டியது அவசியந்தானு? அதனுல் ஏற்படும் உயிர்க்கொலை நியாயமானதுதானு? இது வீண் வெறி' என்றெல்லாம் ஓடின அவன் சிந்தனைகள். சற்று நேரத்திற்கெல்லாம் அங்கிருந்து இரு தூதுவர்கள் பாடலிபுத்திரத்தை நோக்கிப் புறப்பட்டனர்.

## 2

## இந்திர பவனம்

இந்திரபுரத்திற்கு வடக்கே பிரும்மாண்டமான மலையொன்று இருந்தது. அந்த மலையிலே பல குகைகள் இருந்தன. அவைகளுக்கு நடுநாயகமாக மிகப்பெரிய குகையொன்று இருந்தது. அந்த அழகிய குகையை நிருமித்தவர் யாரென்பது தெரியாது. அது அதிஅற்புதமான சிற்பங்களினால் அழகு பெற்றிருந்தது. 'அந்த மலைக் குகை இப்பொழுது என்ன பெயரால் வழங்குகிறது? அப்படிப்பட்ட அழகுடன்கூடிய ஒரு குகை இப்பொழுது இருக்கிறதா?' என்பனபோன்ற கேள்விகளுக்கு விடையளிப்பது இயலாத காரியம். காலதேவனது செயல்களால் அது அழிந்ததோ அல்லது மாறு பெயருடன் இருக்கிறதோ யாருக்குத் தெரியும்?

அந்த மலையை இந்திரநீல பர்வதம் என்றுதான் அங்குள்ளோர் சொல்லுவர். அந்தக் குகைச் சிற்பங்கள் தேவதைகளால் செய்யப்பட்டனவாம்; ஓரிரவுக்குள் முடித்துவிட எண்ணினார்களாம்; முன்வாயிலைச் சீர்திருத்துமுன் பொழுது விடிந்துவிடவே. தேவதைகள் மறைந்து போய்விட்டார்களாம். இப்படி அக்கம்பக்கத்தில் உள்ளவர்கள் கதை சொல்லுவது உண்டு. அங்குள்ள சிற்பங்கள், கலை உலகிற்கே ஒரு பொக்கிஷமாகத் தோன்றின.

அந்தக் குகையின் பெயர் இந்திரபவனம். புதிதாகப் பார்ப்பவர்களுக்கு அந்த மலையிலே செடிகொடிகள் உண்டு என்றே தோன்றாது. கறுத்த, மழமழப்பான ஒரே பாறை என்றுதான் தோன்றும். அருகில் நெருங்கினால்தான் அது மிகவும் அழகு வாய்ந்ததென்பது தெரியும். இயற்கையரசி, தன் முழுச் சௌந்தரியத்தாலும் அந்த அற்புதமான மலையை அலங்கரித்துக்கொண்டிருந்தாள்.

அழகுக்கு அழகு செய்வதேபோல் மலையின்மீது இந்திர பவனம் அமைக்கப்பெற்றிருந்தது. அதன் முன்வாயில் தெற்கு நோக்கியிருந்தது. முன் வாயிலை அடுத்து, புத்தபகவானது இரண்டு பெரிய சிலைகள். ஒன்று தியானத்தில் இருப்பது போன்றது; மற்

ளென்று சிஷ்யருக்கு உபதேசிப்பதுபோன்ற நிலை. அந்தச் சிலை களின் முகத்திலே அருள் ததும்பி நின்றது. பொதுவாக இந்திர பவனத்துக்கு வரும் ஒவ்வொருவரும் அச் சிலைகளைக் கண்டு, சற்றே திகைத்து நிற்காமல் இருக்கமுடியாது. அவைகளைச் செய்த மகா சிற்பி எவனோ என்று எண்ணத் தோன்றும். கண் களையும் கருத்தையும் ஒருங்கே கவரும் அந்த அழகிய சிலைகளின் காலடியிலிருந்து சலசலவென்ற சப்தத்துடன் ஓடுகிறது, ஒரு தெளிந்த ஊற்று. அந்தச் சுனையிலிருந்து பெருகும் ஆற்றிற்கு இந்திராயணி யென்று பெயர். இத்தகைய அற்புதமான இடத்தை, பௌத்த பிக்ஷுக்கள் தங்களது மதப்பிரசாரத்திற்கு ஏற்ற இட மாகப் பயன்படுத்திக் கொண்டார்கள்.

இந்திரபுரத்து மக்கள் புராதன ஹிந்து தர்மத்தில் மிகுந்த பற்றுடையவர்கள். இந்த அஞ்ஞானிகளைக் கண்டு புத்த பகவானின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகிற்று என்றும், அந்தக் கண்ணீர்தான் இந்திராயணியாக உருவெடுத்தது என்றும் நதியின் வரலாறு கூறப்படும். இதையடுத்து, அழகிய, விசால மான மண்டபம். அதற்கு முன்ளேயுள்ள வாயிலில் எப்பொழுதும் ஆயுதபாணிகளாக வீரர்கள் காத்து நின்றிருந்தார்கள்.

இந்தக் குகையிலேதான் அந்த அவசரமான மந்திரா லோசனைக் கூட்டம் கூடியிருந்தது. சபாமண்டபம் மிகவும் அழகாக அலங்கரிக்கப்பட் டிருந்தது. நடு மண்டபத்திலே ஓர் உயர்ந்த பீடத்தின்மேல் மூன்று ஆசனங்களில் அசோகனும் வீத சோகனும் முதன் மந்திரி ராதாகுப்தனும் வீற்றிருந்தார்கள். பீடத் தின் கீழே மெய்காப்பாளர் நால்வர் உட்கார்ந்திருந்தனர்.

இம் மூவரைத் தவிர அங்கு வேறு ஒருவருமே இல்லை. மற்ற இடங்களில் உள்ள ஆசனங்கள் ஒழுங்குபெற அமைக்கப் பட்டிருந்தன. எங்கும் ஒரே நிசப்தம். அசோகன் யாருடைய வரவையோ எதிர்பார்த்திருந்தான். நேரம் செல்லச் செல்ல அவனது பதைபதைப்பும் அதிகமாயிற்று. நிலைகொள்ளாதவனாக மிகவும் துடிதுடித்த குரலில், "மோகனா!" என்று கூப்பிட்டான்.

"மகாராஜா! என்ன உத்தரவு?" என்று மிகுந்த வணக்கத் துடன் கேட்டவனாக மோகனன் வந்து கரங்குவித்து நின்றான்.

புருவத்தை நெரித்த வண்ணம், "நேரம் எவ்வளவு இருக்கும்?" என்றான் அசோகன்.

"நாம் இங்கே வந்தபொழுது இரவு எட்டு நாழிகை. இப்பொழுது இரண்டு நாழிகை ஆயிற்று."

"இரவு பத்து நாழிகை ஆகிவிட்டதா? அட்டா! ஏன் அவர்கள் இன்னும் வரவில்லை?" என்று மிகுந்த கலக்கத்துடன் கேட்டான் அசோகன். இந்த வார்த்தைகளுக்குப் பதில் உரைப்பதேபோல் 'ராஜமாதா புத்திமதி தேவிக்கு ஜே!' என்ற கோஷம் அவன் செவிகளில் வீழ்ந்தது.

மறு விநாடி தோன்றினள் புத்திமதிதேவி. ராஜமாதா புத்திமதிதேவியின் முகத்தில் அப்பொழுது மலர்ச்சியே காணப்பட்டது. அவளது முகம் காண்போருக்கு ஒரு விதமான பயத்தையும் பக்தியையும் உண்டுபண்ணிற்று. அவளுடைய கம்பீரமான முகமண்டலம் நெஞ்சைப் பிளப்பதாயிருந்தது. அவளது இதழ்களில் தோன்றிய புன்னகை மிகவும் குரூரமாயிருந்தது. அவளது அங்கங்களையும் தேகத்தையும் உற்றுநோக்கினல் இளமையில் கட்டழகியாக இருந்திருப்பாளென்றே தோன்றும். அனல் அவளுடைய சௌந்தரியத்தில், மோகிக்கச் செய்யும் தன்மையைவிட குரூரமே அதிகமாக வளர்ந்திருப்பதாகத் தோன்றும். அதிகார தோரணையோடு கூடிய அவளது நடை, வீரனுடைய நடையைப் போன்றிருந்தது. அவளது வெண் நிறமான பல்வரிசையும் வெண் கூந்தல் கற்றையும் வெண்துகிலும் தவிர வேறு எந்த வகையாலும் அவளை வயது சென்றவள் என்று கூற முடியாது. அவளது முகத்தில் இன்னும் யௌவனத்தின் சோபை திகழ்ந்துகொண்டிருந்தது. ராஜா பிந்துசாரனது மறைவிற்குப் பிறகு அவள் இந்தக் கோலத்தில்தான் இருந்தாள். தவக்கோலம் கொண்டிருந்தாலும் அதற்கு இருக்கவேண்டிய கருணை அவள் முகத்திலோ அகத்திலோ இருப்பதாகத் தெரியவில்லை. ஆனல் அவளுடைய அதிகாரத்திற்கும் புன்சிரிப்பிற்கும் மகதநாடு முழுவதும் கட்டுப்பட்டிருந்தது. அவளுடன் நான்கு பில்லஜாதிப் பெண்கள் மெய்காப்பாளராகக் கூட வந்துகொண்டிருந்தனர். அரசி உள்ளே நுழைந்து, மெல்ல நடந்து, பீடத்தை அணுகுமுன்னமே அசோகனும் வீதசோகனும் ராதாகுப்தனும் எழுந்து நின்று மரியாதை செய்தனர். புத்திமதிதேவி பெருமிதத்துடன் கழுத்தைச் சற்றே அசைத்து, ஆசனத்தில் அமர்ந்தாள்.

அவளுடன் கூட வந்திருந்த அந்தப் பில்லஜாதிப் பெண்மணிகளை வெளியே போகும்படி கட்டளையிட்டாள். அந்தப் பெண்மணிகளில் மூவர் முன்னே செல்ல, கடைசியாகச் சென்ற

இளநங்கைமட்டும் காவலாளன் மோகனனிடம் ஏதோ ஒரு சங்கேதமாகக் கண்களைச் சுழற்றிச் சென்றாள்.

"அப்பா! குழந்தாய் அசோகா! உன் உடம்பு மிகவும் இளைத்துப் போய்விட்டதே! அடடா, யுத்தம், தன் முழுச் சாமர்த்தியத்தையும் உன் உடலில்கூடக் காட்டிவிட்டதே!" என்று மிகுந்த கருணையுடன் கனிந்து சொல்வதுபோல் சொன்னாள் புத்திமதி தேவி.

"அம்மா! நீங்கள் அன்பின் மிகுதியால் இவ்வாறு சொல்கிறீர்கள். யுத்தத்தினால் என் உடலுக்கு நன்மைதான் விளைந்திருக்கிறதென்று எனக்குத் தோன்றுகிறது" என்பதற்குள் ராதாகுப்தன் இடைமறித்து "இந்த இளைப்பு யுத்தத்தினால் ஏற்படவில்லை. கவலையினால் ஏற்பட்டது" என்றான்.

அவள் முகம் சிவந்தது. கண்களைக் கொடுமையாக விழித்து, உரத்த குரலில், "என்ன சொன்னீர்? கவலையா? அசோகனைப் போன்ற சின்னஞ் சிறு குழந்தைகளுக்குக் கவலை எங்கிருந்து வரும்! கவலைப்படுவதற்கு நம்மைப்போன்ற கிழடுகள் இருக்கும் பொழுது அவனுக்கென்ன கவலை? யுத்தத்திலே போர்முனைக்குப் போகாமல், பாசறையிலே சௌக்கியமாகத் திண்டிலே சாய்ந்து கொண்டு, வெண்ணெயும் பாலுமாகச் சாப்பிடும் நீரல்லவோ கவலைப்பட வேண்டும். சின்னஞ்சிறு காளை, அவனுக்கென்ன கவலை!" என்று மிகுந்த வெடுவெடுப்புடன் கூறினாள் புத்திமதி தேவி.

இதே சமயத்தில் குகையின் வாயிற் புறத்திலிருந்து வாழ்த்தொலி புறப்பட்டது. 'பிக்ஷு ஸ்ரேஷ்ட ஸம்புஷ்டாசாரிய மஹாதேசிகேந்திரருக்கு ஜயம்! ஜயம்!' என்ற வார்த்தைகள் அக்குகை முழுவதும் எதிரொலித்தன. எதிர்பாராத இந்த ஜய கோஷத்தினால் ராதாகுப்தன்மீது பெய்துகொண்டிருந்த பூமாரி நின்றுவிட்டது.

அரைமணி நேரத்திற்குள் மண்டபம் முழுவதும் ஒரே விதமான காவியுடை, கையில் ஒரே விதமான கமண்டலங்கள், தாடியும் மீசையுமற்ற ஒரே மாதிரியான முகம், மழுங்கச் சிறைக்கப்பட்ட தலைகள்; அவர்களது மிதியடிகள்கூட ஒரே மாதிரிதான். அவைகள் ஒரேமாதிரியாக இருந்தது ஆச்சரியமன்று. அவர்கள் நடந்துவந்த அந்தச் சடசட வென்னும் சப்தமும்கூட ஒரே தாள ஒத்துக்கு இசைந்திருந்தது. புதியவர்கள் எவரேனும் கண்டால்

இவர்களைப் பிரித்து அடையாளம் தெரிந்து கொள்வதுகூடச் சிரமம். அவ்வளவு புதுமையாக இருந்தது அந்தக் காட்சி. புற்றிலிருந்து எழும் ஈசல்களைப்போல வந்துகொண்டே யிருந்தனர் ஒரு புறம். ஒவ்வொரு பிக்ஷுவும் கணக்காக அடி யெடுத்து வைத்து, அசோகனது பீடத்துக்கு எதிரில் வந்து, "அசோக மஹாராஜன் தர்மப்பிரசாரத்தில் வெற்றிபெறுக" என்று உயர்ந்த குரலில் ஆசி கூறி, ஆசனத்தில் அமர்ந்தனர். கடைசியாகக் கையிலே தங்கத் தண்டத்தை ஏந்தியவனுகப் பிக்ஷுக்கூட்டத்தின் தலைவன் தோன்றினுன். ஆனுல் அவன் தனியே வரவில்லை. காற்றிலே ஒசிந்தாடும் பூங்கொடிபோன்ற ஒரு கட்டழகி, முகமூடி அணிந்தவளாக அவனுடன் கூட வந்துகொண் டிருந்தாள்.

ஆச்சரிய மிகுதியால் அங்கிருந்த அனைவரது கண்களும் மலர்ந்தன. ஆனுல் அவள் யார்? எங்கிருந்து வந்தாள்? என்று கேட்க ஒருவரும் துணியவில்லை. புத்திமதி தேவியும் புருவத்தை நெறித்தவண்ணம் பார்த்துக்கொண் டிருந்தாள். சீடர்களின் ஜய கோஷத்துடன், அசோகன் வரவேற்க, மெல்ல மெல்ல அசோகன் வீற்றிருந்த பீடத்தின்மேல் தலைமைப் பிக்ஷு ஏறினுன்.

அவனுக்கென்று போடப்பட்டிருந்த ஆசனத்தை இரு கரங் களாலும் காண்பித்தான் அசோகன். அதை அடுத்த ஆசனத்திலே தான் மந்திரி ராதாகுப்தன் உட்கார்ந்திருந்தான். ஆசனத்தில் உட்காரச்சென்ற ஸம்புஷ்டாசாரியன் திடுக்கிட்டான். அதுவரை யில் அவன் சொல்லிக்கொண் டிருந்த ஆசிமொழிகள் நின்று விட்டன. ஏதோ தகாத செயலைச் செய்துவிட்டோமோ என்று வருந்துபவன்போல் அந்தப் பீடத்தைவிட்டுக் கீழே இறங்கினுன் பிக்ஷு சிரேஷ்டன்.

இவன் ஆசி கூறும்பொழுதே இவனுடன் வந்த அந்த அழகி, தானும் பீடத்தின்மேல் ஏறி, புத்திமதி தேவிக்கு அடுத்தாற் போல் உட்கார்ந்திருந்தாள். ஆசாரியனுடைய இந்தச் செய்கை யின் கருத்து அவளுக்கு விளங்கவில்லை. ஆகவே இன்னது செய்ய வேண்டுமென்று தெரியாதவளாக அவளும் பீடத்திலிருந்து இறங்கி விட்டாள்.

ஒரே நிசப்தம். சற்று நேரம் வரையில் ஒருவரும் பேசவே இல்லை. எல்லோரும் திகைத்து, ஆசாரியனையே பார்த்துக்கொண் டிருந்தார்கள். மிகுந்த வணக்கத்துடன், "மஹாராஜா! என்

போன்ற துறவிகளை இந்த மாதிரி ஒழுங்கீனமான கூட்டத்திற்குத் தாங்கள் அழைத்திருக்கவே வேண்டாம். அதர்ம மார்க்கத்தில் நடக்கும் மனிதர்களின் நிழல்கூட நம்மீது படவேண்டாமென்று எண்ணி, நாம் மனித சஞ்சாரமற்ற காடுகளிலே வசிக்கிறோம். தாங்களோ இந்த அதர்மிகளாகிய மக்களின் கூட்டுறவை உண்டாக்கி வைக்கிறீர்கள்!" என்று சொல்லி, சுற்றிலும் ஒருமுறை பார்த்து நின்றான் ஸம்புஷ்டாசாரியன்.

உடனே,–அசோகன் பேசத் தொடங்குமுன்னமே–புத்திமதி தேவி மிகுந்த பணிவுடன், "குரு ஸ்ரேஷ்ட, என்ன தவறு நேர்ந்து விட்டது? அதைத் தயவுசெய்து தெரிவியுங்கள்; உடனே நிவர்த்தி செய்விக்கிறோம்" என்றாள்.

ஆசாரியனது முகம் பின்னும் சிவந்தது. அவனது கோபம் எல்லையைக் கடந்தது. எரிக்கும் கண்களுடன், "ஏ! ராஜமாதா! உங்களுக்கு இதுகூட விளங்கவில்லையா? பகவான் கௌதம புத்தர் வைதிக தர்மத்தை, பொய், ஆடம்பரம் இவைகளுக்கு உறைவிடம் என்று சொல்லவில்லையா? அந்த மதத்தை அனுசரிக்கிற இவன் பதிதன். இவன் பாடலிபுத்ர நாட்டிற்கே ஒரு களங்கம். தர்மப்பிரசாரமாகிற சந்திரனுக்கே இவன் ராகு. மகத சாம்ராஜ்யத்துக்குப் பிடித்த சனி. இவன் மந்திரி என்ற பெயரோடு இந்தப் பீடத்திலே எனக்குச் சரிசமமாக உட்காருகிறதா! இப்பொழுது இப்படி இவனுக்கு இடங்கொடுத்தால், நாளை ஸம்புஷ்டாசாரியனது அதிகாரத்தின்மேல் விபரீதமான வியாக்கியானம், விதி, உறை முதலியவைகளைக் கட்டிவிடமாட்டானா?" என்பதற்குள் மந்திரி ராதாகுப்தனது கண்களும் உதடுகளும் துடித்தன. அசோகன் தடுத்ததையும் சட்டைசெய்யாமல் கோபத்தை அடக்கியவனாய், "ஆசாரியரே! அறுவகைப் பகைவர்களை வென்றவர்கள் என்று சொல்லப்படுகிற தம்மைப்போன்ற முனிவர்களுக்கு இவ்வளவு கோபம் உண்டாவது அழகல்லவே?" என்றான்.

இதுதான் சமயமென்று புத்திமதி தேவி மிகவும் உயர்ந்த குரலில், அமர்த்தலாய், "மந்திரியாரே! பௌத்தர்களின் கூட்டத்திற்கு நீர் வருவதற்கே அருகதையற்றவர். வந்ததோடன்றி பகவான் புத்த தேவனது பிரதிநிதியாகிய ஆசாரியன் விஷயத்தில் இப்படிப் பேசுவதைப் பார்த்தால் உம்முடைய உயிரில் உமக்கு ஆசையில்லைபோல் காண்கிறது. தெரிந்ததா!" என்றாள்.

இதற்குள் ஸம்புஷ்டாசாரியன் நிமிர்ந்து நின்று, "உமக்குக் கொஞ்சமாவது அடக்கமும் விவேகமும் இருந்தால் உடனே இந்தப் பீடத்திலிருந்து இறங்கி, சபாமண்டபத்திலுள்ள மற்றவர்களுடன் போய் உட்காரும்" என்ருன்.

உடனே அசோகன் இது முற்றிஞல் இன்னும் விபரீதம் ஆகிவிடும் என்று எண்ணி, ஆசாரியனையும் புத்திமதி தேவியையும் பார்த்து, "இப்படி அக்கிரமமாகப் பேசிச் சிற்றப்பாவுக்கு அவமரியாதையை உண்டாக்க வேண்டாம். அவர் இந்தப் பீடத்தின் மேல் இந்த ஸ்தானத்திலே உட்காரத் தகுதியுடையவர் என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆகையால் நானேதான் அவரை இங்கே உட்காரச் சொன்னேன்; சொல்லுகிறேன்; சொல்லுவேன்!" என்ருன்.

புத்திமதியின் முகம் பின்னும் சிவந்தது. கோப மிகுதியினுல் உதடுகள் துடித்தன. மிகவும் கண்டிப்பான குரலில், "அசோகா! இதென்ன மயக்கம். சாக்ஷாத் புத்த பகவானுடைய பிரத்யக்ஷ அவதாரம் நமது குருநாதர். அவர் தர்மவிரோதியான அவனை இறங்கச் சொல்லுகிருர். நீயோ என்னமோ பிரமாதமாக அவனைக் கொண்டாடுகிருய்!" என்று சீறிஞள்.

"அம்மா! பிக்ஷுசிரேஷ்டன் தன்னுடைய கொள்கைகளைத் தானே எதிர்க்கிறது போன்ற கட்டளைகளை இடமாட்டான். புத்தபகவானது மொழிகளை உண்மையாகப் பின்பற்றுகிற எவனும் சிற்றப்பாவைப்போன்ற புண்ணிய புருஷனை அவமதிக்க மாட்டான். தர்மத்தின் பொருளை எல்லோரும் ஒருங்கே அறிய வேண்டும். 'எல்லோரும் ஓர் குலம், எல்லோரையும் கடவுளாய்க் கருதி வழிபடு' என்று சொன்ன ததாகதன், சிற்றப்பாவைப் போன்ற சத்புருஷர்களை வேறு தர்மத்தை அனுசரிக்கிறவர்கள் என்று சொல்லியிருக்கிருரா?"

"மகாராஜா! தங்களைவிட அதிக நாள் இவ்வுலகில் வாழ்ந்திருக்கிறேன். பௌத்த தர்மத்தின் உண்மையான தத்துவமும் கொள்கைகளும் உங்களைவிட எனக்கு அதிகமாகவே தெரியும். தங்களிடமிருந்து உபதேசம் யாருக்கு? என்னிடம் கௌரவம் இருந்தால், புத்தபகவானது தர்ம பீடத்தின்மேல் மதிப்பிருந்தால் இந்த மந்திரியிடம் தாங்கள் வைத்திருக்கும் மயக்கத்தை ஒழியுங்கள். அவனைக் கீழே இறக்குங்கள். இந்தப் பீடம் எம்போன்ற துறவிகளுக்கும், எம்மை மதித்து அரசுபுரியும் உமக்குந்தான்

உட்காரத்தக்கது. இதை ராதாகுப்தனும் தெரிந்துகொள்ளட்டும்!'' என்று மிகுந்த அதிகார தோரணையுடன் கட்டளையிட்டான் ஆசாரியன்.

அவனது இந்த வார்த்தைகள் முடியுமுன்னமே, "மந்திரியைக் கீழே இறக்குங்கள்! ராதாகுப்தனைக் கீழே இறக்குங்கள்!" என்ற கூக்குரல் அந்தக் குகை முழுவதும் சிலை ஓடிற்று. ராதாகுப்தன், சாந்தமாக, அந்த ஆசனத்தில் இருந்தபடியே என்ன நடக்கிறதென்று கவனித்துக்கொண்டிருந்தான். கிழ மந்திரி, சிறுபிள்ளையின் விளையாட்டைப் பார்ப்பதுபோல் எல்லாவற்றையும் வென்ற இந்தத் துறவியின் திருவிளையாடல்களைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

புத்திமதிதேவி மிகுந்த ஆவேசத்தோடு, "என்ன? என்ன நடக்கிறதென்று உமக்குத் தெரியவில்லையா? ஸம்புஷ்டாசாரியன் மட்டும் உம்மைக் கீழே இறங்கிவரச் சொல்லவில்லை. மகத ஸாம்ராஜ்யமே உமக்குக் கட்டளையிடுகிறது!'' என்று கூறினள்.

ராதாகுப்தன் அமைதியாக, "அம்மா! மகதநாடு எதுவரையில் பிக்ஷுக்களின் ஆதீனமாகாமல் இருக்கிறதோ, எதுவரையில் மகதநாட்டு ராஜ மகுடம் மௌர்ய குலத்தைவிட்டுத் திருடப்பட்டு பிக்ஷுக்களுடைய மொட்டைத் தலைகளின்மீது வைக்கப்படவில்லையோ அதுவரையில் இந்த ராதாகுப்தன் எந்தப் பிக்ஷுவின் ஆணைக்கும் தலைகுனிய வேண்டியதில்லை. அரசர் கட்டளையிட்டாலன்றி ஆசனத்திலிருந்து எழவேண்டிய அவசியமும் இல்லை'' என்ருன்.

ஆனல் மண்டபத்திலே மறுபடியும் அதே கூச்சல்: "மந்திரியாரே இறங்குங்கள்!'' என்று சொன்னதோடு நில்லாமல் நாலைந்து பிக்ஷுக்கள் செயலிலே காட்டவும் நினைத்தனர்.

அசோகன் அவர்களை நோக்கி, "ஜாக்கிரதை! நில்லுங்கள்! ஒரு அடி முன்னே வைத்தால் தெரியும், என்ன நேருமென்று! அவருக்குரிய கௌரவம் அளித்தவன் நானே. அவரை அங்கிருந்து எழுப்புவது மரியாதை அன்று. பேசாமல் கூச்சலை நிறுத்திவிட்டுப் போய் உட்காருங்கள். ஆசாரிய ஸ்வாமிகளே! தங்களுக்கு அவருடன் உட்கார இஷ்டம் இல்லாவிட்டால் தங்களுக்கென்று ஒரு தனியான பீடமும் அதன்மீது ஆசனமும் அமைக்கச் சொல்லுகிறேன்'' என்ருன்.

இனி, மேலும் போனுல் விரஸமாகிவிடும் என்பது ஆசாரிய னுக்கு விளங்கிவிட்டது. வேறு விதியில்லாமல், அசோகன் சொல்வதை ஒப்புக்கொள்வதாக அபிநயித்தான். உடனே வேருெரு பீடமும் அதன்மேல் ஆசனமும் தயார் செய்யப்பட, அதிலே அமர்ந்தான் ஆசாரியன்.

அசோகன் ஆசாரியனை நோக்கி, "தங்களுடன் வந்திருக்கும் பிக்ஷுகணங்களும் அந்தப் பெண்மணியும் நம்பிக்கைக்கு உரியவர்கள்தாமே? இன்று பேசப்போகும் விஷயம் மிகவும் ரகசியமானது" என்ருன்.

ஆசாரியன் கர்வத்துடன் கழுத்தை அசைத்து, "எவ்விதமான சந்தேகமும் இல்லை. திவ்வியமாகப் பேசலாம்" என்ருன். அசோகன் அன்றைக் கூட்டத்தின் உத்தேசத்தைப்பற்றிப் பேசத் தொடங்கினுன்.

"கலிங்கநாட்டிலே பௌத்த தர்மத்தைப் பிரசாரம் செய்ய வும் விவாக பந்தத்தால் அரசியல் விஷயங்களும் மதவிஷயமும் ஒன்றுபடச் செய்யவும் முடியும் என்று எண்ணினேம். பிறகு அவர்களது பதிலிலிருந்து யுத்தம் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது. வெற்றி என்பது நாளுக்குநாள் எட்டி விலகிக் கொண்டு போய்க்கொண் டிருக்கிறது. முற்றுகையின்பொழுது இருந்த சேனையில் நாலில் ஒரு பங்குகூட இப்பொழுது இல்லை. எல்லோரும் போர்க்களத்தில் மடிந்தாலும் பரவாயில்லை. பாசறை யிலே கொள்ளைநோய் பரவியிருக்கிறது. தினந்தோறும் ஆயிரக் கணக்கான வீரர்கள் நோய்க்குப் பலியாகிருர்கள். யுத்தத் திலேயோ ஓர் அங்குலங்கூட நாம் முன்னேறவில்லை. நமக்கு அழிவு ஏற்பட ஏற்படக் கலிங்கநாடு வளர்ந்துவருகிறது. நமது வீரரோ யுத்த பூமியிலே மடிய விரும்புகிருர்கள்; சத்துருக்களோ எப்படி யாவது நோயிலேயே அழிந்துபோகட்டும் என்று நினைக்கிருர்கள். இந்த நிலைமையில் யுத்தத்தைத் தொடர்ந்து நடத்துவதா? நிறுத்திவிடுவதா? என்ற கேள்வி எழுகிறது. இதை நிர்ணயிக்கும் பொருட்டே உங்களை நான் அழைத்தேன்" என்ருன்.

ஸம்புஷ்டாசாரியனது முகத்தையும் ராஜமாதாவின் முகத் தையும், என்ன சொல்லுகிருர்களோ என்ற ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தான் அசோகன். சற்று நேரம் நிசப்தம்.

"பகைவனுடைய பலத்தையும் பெருமையையும் ஏற்றுக் கொண்டு, அவனுக்குத் தலைவணங்கும்படியான சந்தர்ப்பம் மகத





நாட்டுச் சக்கரவர்த்திகளுக்கு இதுவரையில் ஏற்பட்டதில்லையே" என்று மிகுந்த அலக்ஷயத்துடன் சொன்னாள் புத்திமதிதேவி.

"ஆமாம், உண்மைதான். தர்மப்பிரசார விஷயமாக இதுவரையில் நடந்துள்ள யுத்தங்களிலே மகதநாட்டார் முன்வைத்த காலைப் பின்வைத்தார்களென்று கனவுகூடக் கண்டதில்லையே" என்று அதை ஒட்டித் தன் அபிப்பிராயத்தைத் தொடங்கினான் ஸம்புஷ்டாசாரியன்.

"தர்மப் பிரசாரம் என்று பெயர் வைத்துக்கொண்டு, கொன்று குவிப்பதனால் என்ன பயன்? கத்தியைக் காண்பித்து, பயமுறுத்தி, பௌத்த தர்மத்தைப் பின்பற்றச் செய்வது என்ன நீதி? கொலையுண்ட மனிதர்களின் ரத்தக் கறையினால் அசுத்தமான பூமியின்மேல் தர்மமாகிற அழகிய மாளிகையைக் கட்ட முடியுமா? அஹிம்ஸையைப் போதிப்பதற்காக மக்களைக் கொன்று குவிக்கிறேன் என்று சொன்னால், அந்த வார்த்தை, கேட்பதற்கே பரிகாசமாக இருக்கிறது! கலிங்கத்து மக்கள் ஸ்வதர்மத்திலே அசாத்தியமான பற்றுதல் வைத்திருக்கிறார்கள். அரசன் நரசிம்மனோ தன் கடமையை ஒழுங்காகச் செய்கிறவன். தனக்கு விரோதமாகப் பிரசாரம் கூடாது என்று சொல்லவும் இல்லை. அப்படி இருக்கும்பொழுது நாம் பலவந்தமாக மக்களைப் பௌத்தர்களாக ஆக்குவது எப்படி முடியும்? பலவந்தத்தினால் ஏற்படும் பலன் எவ்வளவு நேரம் நிற்கும்? அன்பினால் வெல்ல முயலவேண்டும்" என்று அசோகன் சொல்வதற்குள் ஸம்புஷ்டாசாரியன் உரத்த குரலில், "பகவான் கௌதமபுத்தர் பிரசாரம் செய்யும்படி சீடர்களுக்கு உத்தரவிட்டார். அந்த உத்தரவை நாம் சிரமேற் கொள்ளவேண்டியதுதானே" என்றான்.

அசோகன் ஆவேசம் வந்தவன்போல் "ஆசாரியரே! பகவானது உத்தேசம் அன்பினால் பிரசாரம் செய்ய வேண்டும் என்பதுதான். அன்பினால் மனத்தில் ஏற்படக்கூடிய பயம், பக்தி, விசுவாசம் இவைகள் அடிபிடிக் கட்டாயத்தினால் ஏற்படுமா? ஒரு சின்னஞ்சிறு ஆட்டுக் குட்டிக்கும் தீங்கு நேரிடக் கூடாதென்று சொன்ன மகானுபாவன், யுத்தத்தின் மூலமாகப் பிரசாரம் செய்ய வேண்டும் என்று எப்படிச் சொல்லுவார்? இப்பொழுது நாம் எண்ணிக்கொண்டிருப்பது முழுப் பிசகு. இதனால் நாமே நம்முடைய தர்மத்தை அநாதரவு செய்கிறோம்" என்றான்.

புத்திமதிதேவிக்குக் கோபம் பொங்கி எழுந்தது. அடியுண்ட வேங்கையைப்போல் சீறி, "அசோகா! தர்மம் என்று சாக்குப் போக்குச் சொல்லி, போர்க்களத்தில் பின்வாங்குவது உன் போன்ற வீரர்களுக்கு அழகன்று. நரசிம்மன் செய்த அவமானம் உனக்கு இதற்குள் மறந்துவிட்டதா? அவமதிப்புக்குப் பழிவாங்க வேண்டிய விதத்தை மௌரியகுலத்துக்குக் கற்றுக்கொடுக்க வேண்டுமா? சிறு அவமானத்தையும் பொருமல் நந்த வமிசத்தையே அழித்த சந்திரகுப்தன் உன் பாட்டனல்லவா? அந்த மகாமந்திரம் இரண்டாம் தலைமுறைக்குள்ளேயே மறந்து போய் விட்டதா? மறந்தார்களென்றாலும் நம்ப முடியுமா? ஒரு நாளும் முடியாது. ஆகவே அசோகா! யுத்தம் நடக்கத்தான் வேண்டும்!" என்றாள்.

இதற்குள், "யுத்தத்தை நிறுத்தக்கூடாது. நடத்தத்தான் வேண்டும்" என்ற கூக்குரல் நாற்புறத்தினின்றும் எழுந்தது.

அசோகன் ஆசனத்தை விட்டு எழுந்து, அதிகாரத்துடன் பின் வருமாறு பேசலானான்:

"அம்மா! பிக்ஷுக்களே! ஸம்புஷ்டாசாரிய ஸ்வாமிகளே! உங்கள் அபிப்பிராயம் கேட்பதன் பொருட்டு அழைத்தேனே தவிர, எனக்கு உத்தரவிடுவதற்காக அல்ல. உங்களுடைய அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள். எனக்கு இஷ்டமானால்-என் எண்ணங்களுக்கு ஒத்திருந்தால்தான் - ஏற்றுக்கொள்வேன். அரசியல் விஷயங்களில் இதைவிட அதிகமான மரியாதையை நான் காண்பிக்க முடியாது. பெண்ணை யாருக்குக் கொடுப்பது என்ற விஷயத்தில் ஒரு தகப்பனைக் கட்டுப்படுத்த யாருக்கும் அதிகாரம் இல்லை. ஆகவே கலிங்கராஜன் நரஸிம்மன் குற்றவாளியென்றாவது நம்மை அவமதித்ததாகவாவது சொல்ல முடியாது."

"அப்படிப்பட்ட எண்ணம் உனக்கு இருந்திருந்தால் ஏன் யுத்தத்தை ஆரம்பித்தாய்?" என்றாள் புத்திமதிதேவி.

"அம்மா! உங்கள் கேள்வி நியாயமானதுதான். யுத்தம் தொடங்கும்பொழுது அசோகன் தன் சொந்தக் கண்களால் ஒன்றையும் பார்க்கவில்லை. ராஜமாதாவின் கண்களாலும் ஸம்புஷ்டாசாரியன் கண்களாலுந்தான் பார்த்தான். அதனால்தான் உண்மை விளங்காமல் புல்லும் கல்லும் கண்டு உருகும்படி இந்தக் கோர யுத்தம் நேர்ந்துவிட்டது. இப்பொழுது என் செயல்களுக்காகப் பச்சாத்தாபப்படுகிறேன்......" என்று சொல்லிச் சற்றே உட்கார்ந்தான் அசோகன்.

ஆனால் அவன் உள்ளிருந்து எழுந்த ஆவேசம் இன்னும் அடங்கவில்லை. மேலும் மிகவும் கம்பீரமான குரலில், "வெறும் சந்தேகத்தின் காரணமாக எத்தனையோ கொடுமைகள் செய்திருக்கிறேன். மானஹானி உண்டாகிவிட்டது என்ற புரளியைக் கிளப்பி, அதன் காரணமாக எத்தனையோ உயிர்களுக்கு நஷ்டம் ஏற்படுத்தி இருக்கிறேன். தர்மப்பிரசாரம் என்ற போலிக் காரணத்தினால் எத்தனையோ ராஜ்யங்கள் அழிந்திருக்கின்றன. கருணைக்கே இருப்பிடமான பகவானின் பெயரைச் சொல்லிக்கொண்டு, எவ்வளவோ கொடுமைகளை இதுவரையில் செய்துவிட்டோம். மறுபடி கௌதம புத்தருடைய விமலமான கீர்த்தியின் பேரில் ஆணையாகச் சொல்கிறேன். இனி தர்மப்பிரசாரத்தின் பொருட்டு வாள் வெளியே வராது!" என்று அழுத்தமாகச் சொன்னான்.

அந்த அழகியைப் பார்த்தவண்ணம், "இன்னும் இரண்டே நாள்" என்றான் ஆசாரியன்.

விஷயம் முற்றிவிடுவதற்கு முன்னமே ஒரு விதமாக முடிக்க வேண்டுமென்று ராதாகுப்தன், "மகாராஜா! ஆசாரியரது வார்த்தையைத் தாங்கள் அங்கீகரிக்கத்தான் வேண்டும். உங்களுக்கு வாள் எடுக்க விருப்பம் இல்லாவிட்டால், சேனாதிபதி பதத்தைத் ஆசாரியஸ்வாமிகள் அலங்கரிக்கட்டும். இந்த இரண்டு நாட்களில் எப்படி வெற்றி பெறுகிறார் பார்ப்போம். யுத்தத்தைப்பற்றிப் பிக்ஷுக்களும் கொஞ்சம் கற்றுக்கொள்ளட்டுமே!" என்றான்.

"நாளைக் காலைமுதல் மறுநாள் சூரியாஸ்தமனம் வரையில் சேனைகள் ஆசாரியரது ஆணைக்கு அடங்கி நடக்கட்டும்" என்றான் அசோகன்.

ஸம்புஷ்டாசாரியன் மிகுந்த இறுமாப்புடன், 'அப்படி முற்றுப் பெறும்பொழுது இந்திரபுரத்துக் கோட்டைக் கொடிமரத்தின் மேல், பாடலிபுத்திர வெண்கொடி பறந்துகொண் டிருக்கும்" என்றான்.

"வீரர்கள் நான்கு மாதமாக முடிக்காத ஒரு செயலை, இரண்டே நாட்களில் செய்வது வீரர்களால் முடியாது. தேவரீரைப்போன்ற ஆசாரியர்களுக்குத்தான் தகும்" என்றான் அசோகன்.

முக்காடிட்ட அந்த அழகியைப் பார்த்தவனாய், "தலைகீழாய் நின்றும் மூன்று வருடம் நான்கு மாதமாய் முடிக்காத அந்தக்

காரியத்தை இந்த ஸம்புஷ்டாசாரியன் இரண்டே நாளில் முடித்துக் காட்டுவான்!" என்று மிகுந்த மிடுக்குடன் கூறினன் ஆசாரியன்.

இதற்குப் பதில் சொல்லுவது அநாவசியமென்று கருதி, அசோகன் ராதாகுப்தனது கைகளைப் பற்றியவனாகப் பாசறைக்குப் புறப்பட்டான்.

ஆசாரியரது வார்த்தைகளினால் பிக்ஷுக்களுக்கு ஆச்சரியம் அடங்கவில்லை. ராஜமாதாவும் இதைப்பற்றி யோசித்துக்கொண்டிருந்தாள். இளங்கோ வீதசோகனும் இந்த நிகழ்ச்சிகளைக் கண்டு, திகைத்துப்போய் உட்கார்ந்திருந்தான். ஆசாரியன் எந்தத் தைரியத்தினால் இந்த வார்த்தைகளைச் சொன்னான் என்பதை அறிய ஆவல் உள்ளவளாய் ராஜமாதா கேட்டுவிட்டாள்:

"நாளை, சேனாதிபத்யத்தைத் தேவரீர்தான் வகிக்கப் போகிறதோ?"

"ஓம்!"

"இன்னும் இரண்டு நாளில் வெற்றிதானே?"

"ஓ!"

அவளது ஆச்சரியம் அளவு கடந்தது. பிக்ஷுக்கூட்டங்களும் நெருங்கிவர ஆரம்பித்தனர். அப்பொழுது ஆசாரியன் பேசவில்லை.

"இரண்டு நாளைக்குள் வெற்றி பெறுவோம் என்கிற நம்பிக்கை இருக்கிறதா?"

"ஓம்!"

"யுத்தம் செய்வதுதானே வெற்றி?"

"சூழ்ச்சியும் யுத்தமும் சேர்ந்ததுதான்!"

"ஆசாரியா! எங்களை எவ்வளவு நேரம் இம்மாதிரியான சந்தேகத்திலும் ஆச்சரியத்திலும் வைத்திருக்கப் போகிறீர்கள்?" என்று புத்திமதிதேவி கேட்டுக்கொண்டிருக்கும்பொழுதே முக்காடணிந்த அந்த மங்கை, தன் முகத்தை மூடியிருந்த முகத் திரையை விலக்கினாள்.

எல்லோரும் அவளைக் கண்டு திகைத்துவிட்டார்கள். "நம்முடைய வெற்றிக்கு மூலப்பொருள் இவள்தான்" என்று வெகு சாவதானமாகச் சொன்னான் ஆசாரியன்.

ஜயகோஷம் வானைப் பிளந்தது.

# 3

## விமலை

மறுநாள் காலை. இளங் கதிரவனின் கிரணங்கள் இந்திரபுரத்துக் கோட்டையின்மீது பொன்முலாம் தீட்டிக்கொண்டிருந்தன. இந்திரபுரத்துப் படைவீரர்கள் பௌத்தர்களின் நிலைமையைக் கண்டறியும் பொருட்டு இங்கும் அங்குமாய் உலாவிக்கொண்டிருந்தார்கள். ஓரிடத்திலாவது அசோகனது பொன்முடி அவர்களது கண்களுக்கு புலனாகவில்லை. படை வீரர்களது வாள்களும் உறைகளிலேதான் உறங்கிக் கிடந்தன. மகத நாட்டு வெண் கொடியைப் போர்க்களத்திலே கணோம். ஆனால் அவனது பாசறையின் முன்புறத்தில் பறந்துகொண்டிருந்தது.

இத்தகைய அறிகுறிகளினால் கலிங்கநாட்டாருக்கு ஒன்றுமே விளங்கவில்லை. 'அசோகனது எண்ணம் என்ன? என்ன செய்யப் போகிறான்?' என்பதை அவர்களால் கற்பனை செய்து பார்க்கவும் முடியவில்லை.

விடிந்து நான்கு நாழிகையும் கழிந்தது. இன்னும் அதே அமைதி. மன்னன் நரசிம்மன் கோட்டைச் சுவர்களின் மேல் உலாவிக்கொண்டிருந்தான். 'மகதநாட்டுச் சேனைகள் ஏன் சும்மா இருக்கின்றன? யுத்தம் திடீரென்று நின்ற காரணம் என்ன? அசோகன் ஒரு வேளை ராஜதானிக்கே சென்றுவிடலாமென்று உத்தேசித்திருப்பானோ?' என்று எண்ணினான். ஆனால், 'அசோகன், வெற்றி அல்லது மரணம் இவ்விரண்டைத் தவிர மூன்றாவதாக வேறொன்றையும் நினைக்கவும் மாட்டான்" என்று அவன் நெஞ்சு சொல்லிற்று.

'இந்தப் பிடிவாதக்கார பிக்ஷுக்கூட்டம் முன்வைத்த காலைப் பின் வைக்காது. இந்த யுத்தம் நின்ற காரணம் எதுவாக இருக்கும்? விசாக நந்தனை அழைத்துக் கேட்போமா! ஏன் அதைவிட நாமே அங்கே சென்றுவிட்டால்' என்று எண்ணியவனாகக் குதிரையில் தாவி, அதை மந்திரி வீட்டிற்குத் தட்டிவிட்டான்.

விசாகநந்தன் வீட்டிற்கு அரசன் வருவதைக் கண்டு ஆட்கள் திகைக்கவில்லை. ஏனென்ருல் யுத்தம் ஏற்பட்டது முதல் அரசன்பலமுறை அகாலங்களிலும் வந்தது உண்டு. அரசனது வருகையைக்கண்டு ஜனங்கள் தலைவணங்கினர். ஒருவன் குதிரையின் கடிவாளத்தைப் பற்றி நிறுத்த, மற்றவன் மிகுந்த மரியாதையுடன் உள்ளே அழைத்துச் சென்ருன்.

விசாகநந்தன் ஒற்றர்களுடன் விஷயங்களைக் கேட்டுக்கொண்டிருந்தான். அரசனது வரவைக் கண்டு, புன்னகையுடன் வரவேற்ருன்.

"மந்திரியாரே, இன்று யுத்தம் நின்று, அமைதியாயிருப்பதன் காரணம் என்ன?" என்று மிகுந்த ஆவலுடன் கேட்டான் அசோகன்.

"அரசே! இந்த அமைதி, நன்மைக்கு அறிகுறியாகத் தோன்றவில்லை. ஆனுல் அசோக பூபதி, சந்தி செய்துகொள்ளச் சித்தமாயிருப்பதாகவும், அதன் பொருட்டே யுத்தம் நின்றிருப்பதாகவும் ஒற்றர்களது செய்தி.

"என்ன! அசோகன் சமாதானம் செய்துகொள்ள உடன்பட்டு விட்டானு! இந்த நல்ல செய்தியைக் கொணர்ந்தவன் யார்?"

"பொறுங்கள். அதற்குள் வெகுமதி கொடுக்க ஆரம்பித்து விடாதீர்கள். இது ஒருவன் அல்ல; பலர் கொணர்ந்த செய்தி. ஆனுல் இது பொய்யாக இருக்கவேண்டும். இது நம்மை ஏமாற்றும் பொருட்டு அசோகன் செய்த சூழ்ச்சிதான். சந்தேகமே இல்லை."

"ஒருவர் இருவர் அல்ல; பலர் என்று சொல்லுகிறீர்கள்? அப்படியிருந்துமா உங்களுக்கு நம்பிக்கை இல்லை? உங்களுடைய சந்தேகம் மிதமிஞ்சிப் போகிறது" என்ருன் அரசன்.

"எல்லா ஒற்றர்களும் ஒரே விதமாகத்தான் கொணர்ந்திருக்கிருர்கள். இதுவே சந்தேகாஸ்பதமான விஷயம். தவிர அதிசீக்கிரத்தில் நமக்கு ஏதோ ஒரு பெரிய ஆபத்துக் காத்திருக்கிறது, இந்தப் பிக்ஷுக்களால் என்று தெரிகிறது. எதிரியின் அதிகாரத்துக்கு உட்பட்டு, சந்தி செய்துகொள்ளுவது எந்தவிதமாகவும் நல்லதன்று. வேறு வழியில்லாமல் போனுல்தான் இப்படிப்பட்ட செயலைச் செய்யவேண்டி வரும். இது கிடக்கட்டும். சந்தி

செய்வதாகவே வைத்துக்கொள்வோம். அது எங்கே? எப்பொழுது? என்பதும் தெரியாது. ஆனால் பௌத்தர்கள் முகமலர்ந்து 'நாங்கள் சந்தி செய்துகொள்வதை விரும்புகிறோம்' என்கிறார்கள். இதனால்தான் இது முழுப் பொய் என்று தோன்றுகிறது."

"ஏற்கனவே நோயினாலும் யுத்தத்தினாலும் ஏராளமான சேதம். ஆகவே சந்தி செய்துகொள்வது உசிதம் என்று அசோகன் எண்ணலாம். இப்படிப்பட்ட நிலையில் இதை முழுப் பொய் என்று சொல்ல முடியாது."

"இதுவரையில் அசோகன் புறங்காட்டியதோ சந்தி செய்ததோ கிடையாது. மகதபூபதி சந்தியைப்பற்றிக் கனவிலும் நினைத்திருக்கமாட்டான்."

"கலிங்கநாட்டாரும் இதேமாதிரிதான் என்பதில் சந்தேகம் உண்டா?" என்று சற்றே கர்வத்துடன் கூறினான் நரசிம்மன். மறுபடி இந்த நெருக்கடியான நிலைமையில் அவன் நமக்குப் புறங்காட்டி, பாடலிபுத்திரத்தை நோக்கி ஓடவேண்டியே வரும். இதன்பொருட்டு அவன் சந்தி செய்துகொள்ளத்தான் வேண்டும். உங்களுக்கு ஏன் இவ்வளவு சந்தேகம்? இவைகளெல்லாம் வீண் பயம்; அநாவசியமான பீதி."

"மகாராஜா இந்த யுத்தவிஷயமாக என் ஆலோசனைகளைப் பரிகசித்துத் தட்டிவிட்டது நினைவிருக்கலாம்."

"ஆம். நினைவில்லாமல் என்ன? இருக்கிறது. அதனால்தான் இன்று ஆனந்தோற்சவம் கொண்டாட உத்தரவு செய்வதாயிருந்தவன் நிறுத்திவிட்டேன். யுத்தவிஷயம் இரண்டில் ஒன்று தெரியும்வரையில் தங்கள் ஆலோசனைப்படியே நடத்துவதென்று முடிவு செய்துவிட்டேன்."

"தாங்கள் சொல்வது உண்மைதானா?"

"மன்னன் நரசிம்மன் ஒரே சங்கதியை இரண்டுமுறை சொல்லுவது வழக்கம் இல்லை."

"அப்படியானால் அரசி இந்துமதி தேவியாரையும், குமாரி ரோகிணி தேவியையும் மாறுவேஷத்துடன் ஹரித்துவாரத்திலுள்ள சிதானந்தருடைய ஆசிரமத்துக்கு அனுப்பிவையுங்கள்."

"ஏன் அப்படி?" என்று மிகுந்த ஆச்சரியத்துடன் கேட்டான் அரசன் நரசிம்மன்.

"என் யோசனைப்படி நடக்க ஒப்புக்கொண்டீர்களல்லவா? அதனால்தான்."

"இப்படி அர்த்தமில்லாமல் தாங்கள் ஏதாவது சொன்னால் அதன்படி நடக்க நான் சித்தமாயில்லை. அவர்களை நாடு கடத்துவதற்கு வேறு சரியான காரணம் ஏதாவது இருக்கிறதா?"

"நான் நாடுகடத்த வேண்டுமென்று சொல்லவில்லை. சரியான பாதுகாப்பில் நன்றாக இருக்கக்கூடிய ஓர் இடத்துக்குச் சௌகரியமாகப் போய்ச் சேரவேண்டும் என்பதே."

"அவர்களை ஏன் அனுப்பவேண்டும்? அதற்குக் காரணம் தெரியவேண்டும்."

"காரணம் வேறொன்றும் இல்லை. சந்தி விஷயமாக ஏற்பட்டிருக்கும் வதந்திதான்."

"நேற்றுவரையில் யுத்தம் நடந்துகொண்டிருக்கும்போது அவர்களது பாதுகாவல் விஷயமாக நீர் ஒன்றும் பேசவில்லை. இன்று அமைதியாயிருக்கிறது. சந்தி செய்வார்கள் என்ற எண்ணமும் பலமாயிருக்கிறது. இப்பொழுது இந்த யோசனை உமக்கு உதிப்பானேன்?"

"இதுவரையில் யுத்தம் நேர் வழியில் சென்றுகொண்டிருந்தது. ஆகவே பயத்துக்கு இடமில்லை. இப்பொழுதோ தங்களுக்கு வெற்றிஏற்படாது என்று தோன்றிவிட்டதால்,. பௌத்தர்கள் சூழ்ச்சி, வஞ்சனை முதலியவைகளின் உதவியை நாடத் தொடங்கிவிட்டார்கள். ஆரிய சாணக்கியனது உபதேசம் பாடலிபுத்திரத்து மௌரியர்களின் உள்ளத்தில் நன்றாகப் பதிந்திருக்கிறது. இனிமேல் அதை அனுசரித்தேதான் செயல்கள் நடைபெறும். இந்த மௌரியர்கள் நந்த வம்சத்தை அழித்தது நாம் அறியாத விஷயம் அன்று. அஹிம்சை என்ற கொடியைமட்டும் தாங்கி, இந்தப் பௌத்த பிக்ஷுக்கள் அட்டூழியங்கள் செய்யத் தொடங்கிவிட்டார்கள். இன்று காணப்படும் அமைதி, உண்மையான அமைதியன்று. புயலுக்குமுன் காணப்படும் அமைதிதான்" என்று விருத்தனாகிய விசாகநந்தன் அடிவயிற்றிலிருந்து எழும் கவலையோடு சொல்லிப் பெருமூச்சுவிட்டான்.

அரசன் சற்றே நிதானித்தான். சற்று எண்ணமிட்டவனாய், "இது விஷயமாக நான் சற்று யோசிக்கவேண்டும்" என்றான்.

"இப்பொழுது எதைப்பற்றி ஆலோசிக்க வேண்டும்? ஆலோசனை செய்வதற்கு இது சமயம் அன்று. அரசியும் அரசிளங் குமரியும் எவ்வளவு சீக்கிரம் இந்திரபுரத்தை விட்டு விலகுகிறார் களோ அவ்வளவு உத்தமம், அவர்கள் இங்கே இருக்கும் ஒவ்வொரு கணமும் மேன்மேலும் அவர்களுக்கு ஆபத்துத்தான்."

"மந்திரியாரே, தங்களுக்கு உண்டாகியிருக்கும் இந்தப் பயத்துக்கு ஆதாரம் எவ்வளவு இருக்கிறது? தங்கள் மனத்தில் அலை அலையாக எழுந்த இந்த எண்ணங்களை நான் எதுவரையில் நம்பலாம் என்று ஆலோசித்தே தீரவேண்டும்" என்று கூறியவனாக அவ்விடத்தைவிட்டுச் சீக்கிரமாக வெளியேறினான்.

அவன் வெளியே வந்ததுதான் தாமதம். அவன் கையில் ஓர் இளங் குமரி, மடித்து மூடிய ஒரு கடிதத்தைக் கொடுத்தாள். அரசன் கடிதத்தைப் பிரித்தவண்ணம், "யார் கொடுத்தது?" என்றான்.

"விமலாதேவி தங்களிடம் சேர்ப்பிக்கும்படி கட்டளை யிட்டாள்" என்றாள். அந்தக் கடிதத்தைப் பிரித்துப் பார்த்ததும் ஆச்சரிய மிகுதியினால் அவன் முகம் மலர்ந்தது. திரும்பத் திரும்பப் பலமுறை படித்தான். 'நள்ளிரவில் என்னைச் சந்திக்கும் படி அப்படியென்ன காரியம் இருக்கலாம்?' என்று எண்ணி யவனாய் வெளிப்படையாக, "குமுதம், வாய்மொழியாக ஏதாவது சொன்னாளா?" என்று கேட்டான்.

"ஒன்றும் இல்லை, கடிதம் ஒன்றுதான்" என்றாள்.

'எந்தச் சமயத்திலும் அவள் தாராளமாக என்னை வந்து பார்க்கலாம். அப்படியிருந்தும் நள்ளிரவில் என்னை ஏன் அங்கே வரச்சொல்லுகிறாள், என் மகளுக்குச் சமமான விமலை? ஏதாவது சங்கடத்தில் அகப்பட்டுக்கொண் டிருக்கலாம். இல்லாவிட்டால் வரச்சொல்லுவாளா?' என்று எண்ணி, அந்தப் பெண்ணிடம், "இன்றிரவு குறிப்பிட்ட இடத்தில் நான் அவளைச் சந்திப்பேன் என்று சொல்லு" என்று சொல்லியவனாகக் குதிரையுடன் அந்த இருளில் மறைந்துபோனான் அரசன் நரசிம்மன்.

மறு விநாடி அருகிலிருந்த திரைச் சீலையிலிருந்து வெளியே வந்தாள் விமலை. எப்பொழுதுமே அன்றலர்ந்த மலர்போல்

திகழும் அவள் வதனம் இன்னும் பன்மடங்கு எழிலுடன் சோபித்துக்கொண் டிருந்தது. தவிர, அவள் வேண்டுமென்றே செயற்கை முறைகளால் தன் பேரழகை விளம்பரப்படுத்திக் கொண் டிருந்தாள். காதளவு நீண்ட கருவிழிகளிலே மை, தம்பலத்தாற் சிவந்த அழகிய இதழ்கள், இவையனைத்திற்கும் அழகு செய்வதுபோல் சிந்தூர திலகம், இவைகளுடன், தன் மோகனச் சிரிப்பினுல் உலகையே மயக்கிவிடக்கூடிய மோகினி போல் தோன்றினுள் விமலை. அவள் நெஞ்சத்துள் மறைந்திருந்த எண்ணங்களோ, இந்தப் பேரெழிலுக்கு மாருகக் காளகூட விஷமாக நிரம்பியிருந்தன.

பஞ்சியொளிர் விஞ்சுகுளிர்
　　பல்லவ மனுங்க
செஞ்செவிய கஞ்சநிமிர்
　　சீறடிய ளாகி
அஞ்சொலிள மஞ்ஞையென
　　அன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென
　　வஞ்சமகள் வந்தாள்.

என்று கம்பர் கூறியது சூர்ப்பணகையைக் காட்டிலும் இவளுக்கே பொருந்தும்.

விமலை! இந்த விமலை யார்? என்கிற கேள்விக்குப் பதில் சொல்லுவது மிகவும் சுலபம். விமலையின் தந்தை, கலிங்கநாட்டுக் குடிகளுள் மிகவும் உயர்ந்த பதவியில் இருந்தவன். அரசனது அன்புக்கும் மக்களது அன்புக்கும் பாத்திரமாயிருந்தான். எதிர் பாராத விதத்தில் அவன் மரணமடைந்தான். மன்னன் நரசிம்மன், தாயும் தந்தையுமற்ற அந்தச் சிறுமி விமலையைத் தன் மகளுடனே அந்தப்புரத்தில் இருக்கச்செய்தான். அரசிளங் குமரி ரோகிணி, அவளைத் தன் இன்னுயிர்த் தோழியாகக் கருதியிருந்தாள். ஆனுல் இவ்விருவரது உருவங்களும் பேரெழில் பெற்றிருந்தன. குணமோ ஒன்றுக்கொன்று நேர் எதிர்மாருக இருந்தது. ரோகிணியின் நெஞ்சிலே அன்பு ததும்பும். தாய் தந்தையற்ற இந்தப் பெண்ணின் நெஞ்சிலே கர்வமும் கடுகடுப்பும் மிகுந்திருந்தன. அரசிளங் குமரியின் ஒப்பற்ற பேரெழில், நிலவுபோல் மனத்திற்கு இன்பம் பயப்பதாயிருந்தது. விமலையின் அழகு, சூரியனது

கிரணங்களைப்போல் இருந்தது. ரோகிணியின் கருவிழிகளிலே அவளது உள்ளத்தின் தூய்மை பிரதிபலித்தது. விமலையின் கண்களிலோ கபடமும் பொறாமையுமே தோன்றின.

குணவிஷயத்திலே இவ்வளவு வேற்றுமை இருப்பானேன் என்று மன்னன் பலமுறையும் ஆச்சரியப்படுவது உண்டு. ஆனாலும் கருணையின் மிகுதியால் அவளையும் தன் மகளென்றே கருதினான். ஆனால் அவளது மனமோ பேராசைக்கு அடிமையாகி, இன்னும் உயர்பதவியை அடையவேண்டும் என்னும் ஆவலால் துடிதுடித்தது. அரசிளங் குமரன் மகேந்திரனை மணந்து, அந்த நாட்டிற்கே அரசி ஆகலாம் என்றும் கனவுகள் காணத் தொடங்கினாள். தன்னுடைய ஒப்பற்ற சௌந்தரியத்தினால் அரசிளங் குமரனை நொடியில் வசப்படுத்திக் கொள்ளலாமென்று அவள் நினைத்தாள். ஆனால் அவனைப் பார்ப்பது எங்கே?

இளங்கோ மகேந்திரன் தனது பத்தாவது வயதிலேயே ஹரித்துவாரத்தில் ஸ்வாமி சிதானந்தரது குருகுலத்திற் சேர்ந்து படித்துவந்தான். பௌத்த மதம் தலைதூக்கி நிற்கும் அந்த நிலையிலே அரசன் நரசிம்மன் சிதானந்தரது கல்வியினால்தான் தன் மகன் ஆஸ்திக மதத்தைக் காக்கமுடியும் என்று நம்பினான். ஆகவே இளங்கோ கலிங்கநாட்டைக் காண்பதும் இல்லை; வருவதும் இல்லை. குருகுல வாசம் முடியும் வரை அவனைக் கலிங்கநாட்டுக்கே வரவழைக்கக் கூடாது என்பது அரசனின் எண்ணம்.

விமலை சாமானியமானவளா? ஹரித்துவாரத்திற்கே சென்று தன்னுடைய வலையை வீசினால் என்ன என்று நினைத்தாள். ஆனால் சிதானந்தரது ஆஸ்ரமத்து பிரம்மச்சாரிகளின் கடுந் தவத்தைப்பற்றியும், அங்கே பெண்களின் நிழல்கூடப் படுவது இல்லை என்ற விஷயத்தைப்பற்றியும் அவள் கேள்விப்பட்டிருந்தாள். ஆகவே ஹரித்துவாரத்துக்குச் செல்வதை விட்டுவிட்டு, வேறுவிதமான முயற்சிகளைச் செய்யலாம் என்று நினைத்தாள். இளவரசன் வருவதற்கு இன்னும் இரண்டு வருஷமோ அல்லது அதிகமோ ஆகலாம். அதுவரையில் தாமதிப்பானேன் என்று நினைத்தவளாகத் தன் மனநிலையை மெல்லமெல்லத் தோழியிடம் விவரித்து, நாளடைவிலே அரசன் செவிகளுக்கும் எட்டச் செய்தாள்.

அரசன் நரசிம்மன் தனக்குள்ளே சிரித்துக்கொண்டான். இந்தப் பெண்ணின் மனப்போக்கையும் அவசரத்தையும்பற்றிப் பரிகசித்தான். கபடமற்ற அரசிளங்குமரி ரோகிணி இதை அவளிடம் சொல்லிவிட்டாள். ரோகிணி சொன்ன வார்த்தைகளைத் தனக்குப் பிரதிகூலமாக வியாக்கியானம் செய்துகொண்டாள் விமலை. அவளது பேராசை பொங்கியெழுந்தது.

தன்னை வளர்த்தவன் ஆயிற்றே, அரசன் ஆயிற்றே என்று கூடத் தயங்கவில்லை. நேரில், அரசன் எதிரில் வந்து நின்றுகொண்டு "உங்கள் கண்ணெதிரிலேயே நான் இந்தக் கலிங்க நாட்டுப் பெருந்தேவியாக, இந்திரபுரத்துக்கு அரசியாக ஆகாமல் விடுவது இல்லை!" என்று சபதம் செய்தாள். இந்தப் பிதற்றலைக் கண்டு ஏளனமாக நகைத்தவண்ணம் எழுந்து போய்விட்டான் நரசிம்மன். 'இது என்ன அசட்டுத்தனம், இதுவரையில் அடக்க ஒடுக்கமாக இருந்த இந்தப் பெண் இப்படிப் பிதற்றுவானேன்? ஏதாவது உடற்கோளாறு மனக்கோளாறு?' என்றெல்லாம் நினைத்தான் அவன்.

இது நடந்த சில மாதங்களுக்கெல்லாம் விசாகநந்தனது மூன்றும் மனைவி இறந்துபோனாள். ஆனால் தர்ம சாஸ்திரப்படி மீண்டும் விவாகம் செய்துகொள்ள வேண்டியது அவசியமாக இருந்தது. 'இந்தஅருமையான சந்தர்ப்பத்தை நாம் ஏன் விட வேண்டும்' என்று விமலையே ஆலோசிக்கத் தொடங்கினாள். 'கிழவனை வசப்படுத்திவைத்து அவன் மூலமாகக் கலிங்க நாட்டையே ஒரு ஆட்டம் ஆட்டிவைத்தால் என்ன?' என்றெல்லாம் ஓடிற்று அவளது சிந்தனைகள். தானே வலிய முன் வந்து அந்தக் கிழ மந்திரியை வரித்து மாலையிட்டாள் விமலை. இது உசிதம் அன்று என்று அரசன் தன்னால் இயன்றவரையில் சொல்லிப்பார்த்தான். ரோகிணி காலில் விழாக் குறையாகக் கெஞ்சித் தடுத்தாள். ஏன்? அரண்மனை முழுமையுமே தடுத்தது. அரசி இந்துமதி தேவி நயத்தாலும் பயத்தாலும் சொல்லிப் பார்த்தாள். அப்படியிருந்தும் ஒரே பிடிவாதமாக அந்தக் கிழவனுக்கே மாலையிட்டாள் குமரி.

இந்திரபவனக் குகையில் ஸம்புஷ்டாசாரியனுடன் முகத்தை மூடியவளாக வந்திருந்த கட்டழகி இந்த விமலையேதான்.

திரைச் சீலையை விட்டு வெளி வந்ததுதான் தாமதம். விமலை நேராக விசாகநந்தன் இருக்கும் இடம் சென்றாள். அந்தச் சமயத்தில் மந்திரி, அரசி இந்துமதி தேவியையும், அரசிளங்குமரி

ரோகிணியையும் எப்படிக் காப்பது என்ற விஷயத்தை ஆலோசித்துக்கொண் டிருந்தான். தன்னிடம் ஒற்றர்கள் வேறு ஏதோ விஷயத்தைச் சொல்ல வருவதுபோல் தோன்றவே, "சரி, அதன் பிறகு என்ன?" என்று கேட்டவனுகத் தலையை நிமிர்ந்தான். அதே சமயத்தில் தன் ஒப்பற்ற சோபையுடன் எதிரே நின்ருள் விமலை.

புது மணப்பெண், ரதி தேவியைப்போல் திடீரென்று தோன்ற, அவன் யோசனைகளெல்லாம் சிதறுண்டு போயின. சற்றே மூடியிருந்த அவன் விழிகள் திறந்தன. கண்களால் அவளது சௌந்தரியத்தைப் பருகலானுன்.

"என் அன்பே!" என்ருள். இத்தகைய வார்த்தைகளை அவன் கேட்டு நெடுநாட்கள் ஆயிற்று. ஆகவே தன் மனைவி என்று நிற்கும் அக் குமரியைத் தொட்டுப்பார்த்தான். விமலை சற்றே கோபிப்பதுபோல் நடித்து, "எனக்கு எவ்விதமான அவமதிப்பு உண்டாகியிருக்கிறது என்று சிறிதளவாவது உங்களுக்குத் தெரியுமா?" என்ருள்.

"என் கண்மணியை அவமதிக்கும் தைரியம் எந்தக் கசடனுக்கு உண்டாயிற்று?" என்று வெகுண்டான் அவன்.

"என் அன்பே! அவன் பெயரைக் கேட்டுத் தாங்கள் என்ன செய்யமுடியும்? நடப்பவைகள் எல்லாம் வெகு அழகாக நடந்துகொண்டு வருகின்றன. உங்களைத் தேடி வாழ்க்கைப் பட்டதைவிட ஒரு சிப்பாய்க்கு வாழ்க்கைப்பட்டிருந்தால் தன் உயிரைக் கொடுத்தாவது என் மானத்தைக் காப்பாற்றுவான்."

"என்ன? நீ என்ன சொல்லுகிருய்? இந்த விசாகநந்தன் ஒரு அற்ப சிப்பாயைக் காட்டிலும் தாழ்ந்துவிட்டானு? உன் கற்பில் கண் வைத்தவன் எவன்? சொல்! இந்த க்ஷணமே அவன் ஒழிந்தான்!"

"என் பிராணேச! உங்களிடத்தில் அவன் பெயரைச் சொல்லி என்ன பயன்? உங்களால் ஒன்றும் நடவாது. வீணுகக் கவலைப்படுவதுதான் மீதி."

"என் செல்வமே! இந்த யுத்தத்திற்குத் தலைமை வகித்து, இந்த மந்திரி எப்படி நடத்தி வருகிருன் என்று உனக்குத் தெரியாதா? நான் செய்து வருவதுபோல் திறமையுடன் அரசனுலும் செய்ய முடியாதே! உன்னைத் துன்புறுத்தினவன் பெயரைச் சொல்லிவிடு."

"இப்போதுதான் எனக்குத் தெரிகிறது. இப்படிப்பட்ட அவமானத்தைவிடத் தற்கொலை செய்துகொண் டிருக்கலா மென்று."

"என்னேடு ஒரு வார்த்தை சொல்லேன்' எவன் உன்னைக் கண்ணெடுத்துப் பார்த்தவன்? எப்பொழுது துன்பப்படுத்தினுன்? சொல்லேன்."

"பிராணநாதா! இந்தத் துன்பம் பொறுக்காமல் நான் எப்பொழுதோ தற்கொலை செய்துகொண் டிருப்பேன். ஆனல் தங்கள் பேரன்பு அவ்வாறு செய்ய ஒட்டாமல் தடுக்கிறது" என்று சொல்லி அவனைத் தழுவிக்கொண்டாள் விமலை.

மந்திரி மிகுந்த காதலுடன் அவள் முகத்தைத் தடவிக் கொடுத்து, "கண்மணி, ஒரு வார்த்தை. அவன் யாரென்பதை மட்டும் தெரிவி. பிறகு பார்த்துக்கொள், விசாகநந்தனது சாமர்த்தியம் எவ்வளவு என்று" என்முன். ஆத்திரத்தின் மிகுதியால் அவன் குரல் நடுங்கிற்று.

"அன்பே! அவனைப்பற்றிக் கேட்க ஆவல் கொள்வதிலும் ஆத்திரப்படுவதிலும் பயனில்லை. அவனைத் தண்டிப்பது உங்களால் முடியாது."

"நான் தண்டிக்க முடியாத ஒருவன் இக் கலிங்கநாட்டில் இருக்கிருனு? கலிங்கநாட்டில் மட்டுமா? இந்தப் பாரத நாட்டின் எந்த மூலை முடுக்கில் இருந்தாலும் அவனைத் தண்டிக்க எனக்குச் சக்தி உண்டு."

"முடியவே முடியாது. அவனைத் தண்டிப்பதென்பது உங்கள் அதிகாரத்தையும் மிஞ்சியது."

"இப்படி அரைகுறையாகவும், ஒட்டியும் ஒட்டாமலும் பேசாதே. அவன் பெயரைச் சொல்லு. அவன் எந்தப் பாதாளத்தில் ஒளிந்திருந்தாலும் என் ஆட்கள் ஒரு நொடியில் கொணர்ந்துவிடுவார்கள். அரசன் கட்டளைக்குக்கூடக் காத்திராமல் என் கட்டளையின்படி அவன் உடல் வேருகவும் தலை வேருகவும் செய்துவிடுவார்கள்."

அவனது ஆத்திரத்தை அதிகரிக்கச் செய்ய விரும்பியவளாய் மறுபடியும் விமலை, "உங்கள் சேனை வீரர்களின் அதிகாரம் அவனிடம் செல்லாது. சேனை வீரர்கள் அவனது அடியிணை

களுக்குத் தலை வணங்குவார்கள்!''—இந்த வார்த்தைகள் அவனைச் சற்றே நிலைகுலையச் செய்தன.

"அவன் எவன்?"

"அப்படியானால் நீங்கள் அவனைத் தக்கபடி தண்டிப்பதாக வாக்களிப்பீர்களா?"

"நிச்சயம்!"

"தண்டனை அளிப்பது தங்கள் சக்திக்கு மீறின விஷயமாக இருந்தால்?"

"நீ என்ன செய்யச் சொல்லுகிறாய்?"

"பிறரிடமிருந்து உதவி பெற்றாவது அவனைப் பழிக்குப்பழி வாங்குவீர்களா.

"அப்படியே கட்டாயம் செய்வேன். இதில் சந்தேகம் என்ன?"

"பிறகு மறுக்கக் கூடாது?"

"ஒரு காலும் மறுக்கவில்லை. தன் மனைவியின் கற்பைக் குலைக்கும் ஒரு மனிதனைப் பழிவாங்காமல் உட்கார்ந்திருப்பவன் இந்த விசாகநந்தனன்று. இப்படிப்பட்ட தூர்த்தருக்கு மரண தண்டனை விதிக்க வேண்டியதுதான் கலிங்கத்து நீதி."

"சட்டம் உங்களுக்கு உதவி செய்யாது; அதைப் புறக்கணித்தே தீரவேண்டும்."

"சரி; அவன் பெயரைச் சொல்."

"முதலில் உங்கள் தெய்வத்தின் மேல் ஆணையிடுங்கள். பழி வாங்குவதில் என் வழியை நாடி நடப்பதாகச் சபதம் செய்யுங்கள்.

"எனக்கு நிச்சயம் உண்டாகும்படி நீ நிரூபிக்க வேண்டும்."

"நான் சொல்லுகிற வார்த்தைகள் போதாவா?"

"போதா."

"சரி; ஆணையிடுங்கள், மெய்ப்பிக்கிறேன். நான் சொல்லுகிற வார்த்தைகள் உண்மையென்று மெய்ப்பிக்கிறேன்."

மறு விநாடி ஆணையிட்டு ஆத்திரத்துடன், "அவன் பெயரை இப்பொழுது சொல்" என்ருன் விசாகநந்தன்.

"மன்னன் நரசிம்மன்!"

"யார்? நரசிம்ம மன்னனு! மகாராஜா நரசிம்மனு! வெறும் பொய்; வெறும் கற்பனை. ஒரு துளிகூட நம்ப முடியாது" என்று ஆச்சரியத்துடன் கூவிஞன் விசாகநந்தன்.

"ஆம்; நீங்கள் நம்பமாட்டீர்கள் என்றுதான் நானும் பெயரைக் கூறுவதற்கு முன்பின் யோசித்தேன். கடைசியில் ஆணையும் சபதமும் பொய்யாகி விட்டனவல்லவா? ஏதாவது ஆழமான கிணற்றைத் தவிர வேறு புகலிடம் எனக்கில்லை" என்று சொல்லியவளாய்க் கைகளை உதறிவிட்டு, வெளியே செல்வதுபோல் நடித்தாள் விமலை.

உடனே விசாகநந்தன் அவள் பின்னே ஓடிச்சென்று, "நில்! இம்மாதிரி அசட்டுத்தனமாய் ஓடாதே. என்ன என்ன நடந்தது என்பதைச் சாந்தமாகச் சொல். நான் மன்னனைக்கூட மதிக்கமாட்டேன்" என்ருன்.

விமலை முகத்தைத் திருப்பிக்கொண்டு, "நீங்கள் இப்பொழுது சொல்வது உண்மைதானு?" என்று கேட்டாள்.

கிழ மந்திரி அவளது மணிக்கட்டைப் பற்றிக்கொண்டு, "ஆம்! உண்மைதான். வா, திரும்பிப் போவோம்" என்று அவளைக் கூடத்தின் புறம் இழுத்தான்.

விமலைக்கு உள்ளூற ஆனந்தம். தான் விரித்த வலைக்குள் கிழவன் விழுந்துவிட்டான் என்று நிச்சயமானதும், மெல்ல மெல்ல நரசிம்மன் தன்னை ஏற்கனவே பாபதிருஷ்டியுடன் பார்த்ததாகவும், அதிலிருந்து மீளவே இவனை மாலையிட்டதாகவும் சொன்னுள். அப்படிச் செய்த பின்னும் அவனுல் ஏற்படும் தொல்லைகள் அசாத்யமென்றும் பசப்பினுள். மகா கொடிய வளாகிய அவள் நெஞ்சம் இத்தகைய விபரீதமான பொய் மொழிகளை ஏற்றுக்கொள்ள அஞ்சுவதுபோல் நடுங்கிற்று.

"ஆனுல் அரசன் அடிக்கடி என்னிடம் வந்துகொண்டிருந்தது இதற்காகத்தானே?"

"ஆமாம்; உங்களைக் கண்டு பேசுவதை முன்னிட்டு இங்கே வந்தால் என்னையும் சந்திக்கலாம் என்ற எண்ணந்தான். இல்லாவிட்டால் ஏன் உங்களையே ராஜமஹாலுக்கு அழைக்கக் கூடாது?"

"சரி; அதன் பின்?"

"இன்று அவன் குமுதத்திடம் ஒரு செய்தி அனுப்பியிருக்கிருன்: 'இன்று நள்ளிரவில் உன்னைச் சந்திப்பேன். மஹாலின் தென்னண்டைக் கதவைத் திறந்துவை' என்று."

"ஓகோ! அப்படியா சங்கதி. அதனால்தான் என்னோடு பேசிக்கொண்டிருந்தவன் வெளியே குமுதத்தைக் கண்டதும் சட்டென்று எழுந்து போய்விட்டான்."

"என் அன்பே! இப்பொழுதுதான் எல்லாவற்றையும் சொல்லிவிட்டேன். இதற்கு நீங்கள் எந்த விதத்தில் பழிவாங்கப் போகிறீர்கள்?"

"இதை முதலில் எனக்கு மெய்ப்பிக்க வேண்டும்."

"இன்னும் என்ன மெய்ப்பிக்க வேண்டிக் கிடக்கிறது. இன்று இரவு கண்களைத் திறந்துகொண்டு நன்ருகப் பாருங்கள். அப்பொழுதாவது தெரிகிறதா பார்ப்போம். பிறகு என்ன செய்யப் போகிறீர்களோ?"

"எனக்குக் கொஞ்சமாவது நம்பிக்கை வரும்படி இருந்தால் இந்த அரசனைத் தொலைத்தே தீருவேன்! இந்த யுத்தத்தின் நெளிவு சுளிவுகளெல்லாம் என் கையில் இருக்கின்றன. அரசனைத் தொலைக்க நெடுநேரம் ஆகாது. அவன் சொற்படி இரவு கதவைத் திறந்து வை. அவன் உன்னிடம் எப்படி நடந்து கொள்கிருன் என்பதை நான் பார்க்கவேண்டும். இந்தக் கூடத்திலேயே நிறுத்திக்கொள். நான் பலகணியிலிருந்து பார்ப்பேன்" என்று மிகுந்த ஆத்திரத்துடன் சொன்னுன் மந்திரி.

தான் விரித்த வலையில் கிழவன் அகப்பட்டுக்கொண்டான் என்று உறுதியானதும், விமலை ஒவ்வொன்ருக அதன் கயிறுகளை இறுக்கத் தொடங்கினுள். மிகவும் அன்பும் பரிவும் கலந்த குரலில், "வேண்டாம்; என் ஆருயிரே! அவனை நீங்கள் நேரில் கண்டால் சும்மாயிருக்க முடியுமா? கோப மிகுதியால் அவன்மீது பாய்வீர்கள். அவனே தங்களைவிட இளையவன். தாங்களோ

பலம் குறைந்திருக்கிறீர்கள். இந்த நிலையில் அவன் தங்கள் உயிருக்கே தீங்கு செய்ய நினைத்தால்..."

"அதன் பொருட்டு நீ பயப்பட வேண்டாம். அவன் சுபாவம் எனக்கு நன்ருகத் தெரியும். ஆகவே நான் பதறி ஒன்றையும் செய்துவிட மாட்டேன். அவனிடம் ஆகவேண்டிய காரியங்களை முடித்துக்கொள்ள வேண்டும் என்பது ஞாபகத்தில் இருக்கிறது."

"அப்படியாளுல் அது இருக்கட்டும். அவனிடம் வஞ்சம் தீர்த்துக்கொள்ள அறிவுக் களஞ்சியமான உங்கள் மூளையில் என்ன உபாயம் இருக்கிறது?"

விசாகநந்தன் சற்றே தயங்கினுன். பிறகு மிகவும் கலக்கத்துடன் கூடிய குரலில், "முதலில் எனக்கு இது உண்மை என்ற நம்பிக்கை உண்டாகட்டும்" என்ருன்.

விமலே துள்ளினுள். "உண்மையா! உண்மை என்ற நம்பிக்கையை இதோ உண்டாக்கப் போகிறேன். அதன் பிறகு என்ன செய்வீர்கள்?"

விசாகநந்தனது குரல் கரகரத்தது. மிகவும் பதற்றத்துடன், "வேறென்ன; பழிதீர்த்துக்கொள்ள வேண்டியதுதான்" என்ருன்.

"எந்த விதத்தில்?"

"அதைப்பற்றி இனிமேல்தான் யோசிக்கவேண்டும்."

விமலே மிகவும் அமர்த்தலாக முகத்தை அசைத்த வண்ணம், "சரி; என்னை இப்பொழுது என் வழியிலேயே போக விட்டு விடுங்கள். யோசனை செய்வதைத் தவிர உங்களால் வேருென்றும் ஆகப்போகிறதில்லை" என்று சொல்லியவளாக வெளியே எட்டிப் பார்த்து, அங்கே நின்றிருந்த யாரையோ உள்ளே வருமாறு சமிக்ஞை செய்தாள்.

அடுத்த விநாடி அவள் வேலைக்காரி மாதவி அங்கே தோன்றினுள். அவள் கையிலே ஒரு கடிதம் இருந்தது. மந்திரியின் பார்வை அவள் கையிலிருந்த கடிதத்தின்மேல் சென்றது.

மாதவியிடம் இருந்த நிருபம் விசாகநந்தன் கைக்கு வந்தது. "நான் புத்த தேவனது ஸ்ரீபாத தீர்த்தம் எடுத்துவரும் பொருட்டு

இந்திரபவன குகைக்குப் போயிருந்தேன். திரும்பி வரும்பொழுது ஆயுதம் தரித்த வீரன் ஒருவன் என்னை வளைத்து, வயது முதிர்ந்த ஒரு யோகினியிடம் கொண்டுபோய் விட்டான். அவள் என்னிடம் இந்தக் கடிதத்தைக் கொடுத்து, 'இதை மந்திரி விசாகநந்தனிடம் கொடு' என்று சொன்னாள். நான் பயத்துடன், 'சரி' என்று பெற்றுக்கொண்டேன்" என்று நிருபத்தை நீட்டினாள் மதவி.

நடுங்கும் கரங்களுடன் அக் கடிதத்தைப் பிரித்தான் விசாகநந்தன். அதில் மகதநாட்டு முத்திரை இருந்தது. அடியில் ராஜமாதா புத்திமதி தேவி என்ற கையொப்பமும் காணப்பட்டது.

மந்திரியின் முகத்தில் விசித்திரமான மாறுதல்கள் தோன்றின. தன்னுடைய சூழ்ச்சி பலித்துவிடும் என்ற நம்பிக்கையினால் விமலையின் அகமும் முகமும் ஒருங்கே மலர்ந்தன.

பொன் நாணயங்கள் நிறைந்த பை ஒன்றை எடுத்து, "மாதவி, இதைப் பெற்றுக்கொள்" என்றான் விசாகநந்தன். மாதவி மிகுந்த பணிவுடன் வணங்கி அதைப் பெற்றுக்கொண்டாள்.

மந்திரி மிகவும் தணிந்த குரலில், "இந்த விஷயம் ஒருவருக்கும் தெரியக்கூடாது. கடுகளவாவது வெளிவந்ததோ தொலைந்தாய்" என்றான்.

என்னை நம்பலாம் என்று சொல்லுவதுபோல் அவனை ஏறிட்டுப் பார்த்துக் கரங் குவித்து மீண்டும் வணங்கினாள் மாதவி.

விமலையின் கண்கள் வெற்றியின் ஆனந்தத்தால் மலர்ந்தன. மிகவும் ஒய்யாரமாக நடந்து, விசாகநந்தனது அருகில் வந்து, ஒன்றுமே அறியாத பரம சாதுவைப்போல், "அந்தக் கடிதத்தில் என்ன எழுதி இருக்கிறது?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள்.

மந்திரி மிகுந்த அன்பும் பரிவும் கலந்த குரலில், "மன்னனை எப்படிப் பழி வாங்குவது என்பதற்கு மிகவும் சுலபமான வழி ஒன்று இருக்கிறது" என்றான்.

"என்ன ? இந்தக் கடிதத்திற்கும், பழி வாங்குவதற்கும் என்ன சம்பந்தம்!" என்று திகைத்த வண்ணம் கேட்டாள் விமலை.

கிழவன் நிமிர்ந்து உட்கார்ந்தான். "சம்பந்தம் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி; நான் சம்பந்தம் கற்பிக்கிறேன்"

என்று ஆத்திரத்துடன் கூச்சலிட்டான். பிறகு சற்றுத் தணிந்த குரலில், "அவனேயும் பழி வாங்கலாம்; நாமும் நன்மை அடையலாம்" என்முன்.

மிகுந்த ஆவலுடன், "அப்படியா ? நாமும் நன்மை அடையலாமா?" என்று கொஞ்சலாகக் கேட்டாள்.

"ஆம்; நமக்கு அளவற்ற லாபம் கிடைக்கும். இன்று இரவு நீ சொன்ன விஷயம் உண்மைதான் என்பதைக் காட்டிவிடு. பின்பு பார்" என்ருன்.

"இன்னும் உங்களுக்குச் சந்தேகம் தீரவில்லேயா ?"

"இல்லே."

"........."

"இன்றிரவு அவன் உன்னிடம் எப்படி நடந்துகொள்கிருன் என்பதை நேரில் கண்டால்தான் சொல்ல முடியும். நாம் ஓர் அபாயகரமான காரியத்தில் இறங்கும்பொழுது, அதில் தலேயிடுவதற்கு முன், மனத்தை அமைதியான நிலேயில் வைத்துக்கொள்ள வேண்டும்."

"உங்களுக்கு நம்பிக்கை உண்டாகி விட்டாலோ?"

"அவன் அடியோடு தொலேந்தான் என்று நினேத்துக் கொள்."

"அதனுல் நமக்கென்ன லாபம் ?"

மந்திரியின் ஆவலும் பேராசையும் உச்சநிலேயை அடைந்தன. "என் கண்மணி விமலா கலிங்கநாட்டு அரசியாவாள்" என்று சொல்லிவிட்டான்.

"என்ன! கலிங்கத்துக்கு அரசியா?" என்று கேட்டுவிட்டு, ஆனந்த மிகுதியால் கூத்தாடத் தொடங்கிளுள் விமலே. இந்த வார்த்தை பலமுறையும் அவள் வாயினின்றும் எழுந்தது. நெடுநேரம் அங்கேயே நின்றுகொண் டிருந்தால் ஆனந்த மிகுதியால் எதையாவது உளறிவிடுவோமோ என்று பயந்தவளாக, 'கலிங்க நாட்டரசி விமலே' என்று முணுமுணுத்தவளாகக் கிழவனே அங்கேயே விட்டு விட்டுத் தான் மஹலே நோக்கி நடந்தாள்.

# 4

## கபட நாடகம்

**வி**மலையின் கண்களினின்றும் கண்ணீர் பெருகி ஓடிக்கொண்டிருந்தது. மன்னன் நரசிம்மன் அவள் முகத்தைத் தூக்கி, "உன் பேரிலா பழி சுமத்துவது? உன்னையா தாழ்வாகச் சொல்வது? எவன் இப்படிப்பட்ட வீண்பழி சுமத்துவது?"? என்று மிகுந்த வருத்தத்துடன் சொன்னான்.

விஷமந் தீட்டப்பெற்றிருந்த மந்திரியின் கண்களுக்கு அவன், குனிந்திருந்த அவள் முகத்தை நிமிர்த்திய அந்த ஒரு சம்பவமே போதுமானது. இதற்கு விபரீதமான கற்பனைகளைச் செய்து கொண்டு கோபத்தினால் கொதித்துக்கொண் டிருந்தான் மந்திரி.

தந்தை, தன் அன்புமிக்க மகளிடம் கேட்கும் தோரணையிலே நின்றிருந்த அந்தக் காட்சியும், அருண்டவன் கண்களுக்குப் பேயாகவே தோன்றிற்று. ஆனால் இதை உறுதிப்படுத்தும் பொருட்டு அந்த விமலை மிகுந்த துக்கப்படுபவள்போல் நடித்து, "அரசே! எல்லாவற்றையும் தங்களிடம் சொல்லியே தீரவேண்டும். சொல்லாவிட்டால் வேறு வழியும் இல்லை. அந்தச் சொல்லை நான் வாய்விட்டு எப்படிச் சொல்வேன்? ஆனால் சொல்லித் தான் ஆகவேண்டும். இல்லாவிட்டால் அமைதியாக இருக்க முடியாது. முழுவதையும் உங்களிடம் சொல்லிவிட்டு, எல்லாவற்றையும் துறந்து ஆண்டியாகப் போய்விடலாம் என்று தீர்மானித்துவிட்டேன்" என்று சொல்லிவிட்டுத் தலைகுனிந்தவளாக விம்மலானாள்.

அரசனது மனம் இளகிற்று. மிகவும் அன்பான குரலில் மறுபடியும் அவள் முகத்தை நிமிர்த்தி, "விமலா! இதென்ன இது? இப்படிப்பட்ட அமர்க்களமான வார்த்தைகள் எதற்கு? உன்னை யார் என்ன சொன்னார்கள்?" என்றான்.

"தங்களுடைய மந்திரியார்தான். நெடுநாள் உலக அநுபவமுள்ள அவர்தான்! மனைவியாக இருக்கும் என்னிடம் கூசாமல் இப்படிப்பட்ட வார்த்தையைச் சொல்லிவிட்டார்!" என்று விக்கி விக்கி அழத் தொடங்கினாள்.

"அடடா! இதென்ன இது! என் ஆதரவில் என் அரண்மனையில் என் மகளோடு வளர்ந்த பெண்ணை இப்படி அவமதிப்பாகப் பேச எப்படித் துணிந்தான்!"

"அடடா! இவ்வளவுதானு? என்னை மட்டும் அல்ல. இதில் தங்களது பெயரையும் சேர்த்திருக்கிறுர்" என்று சொல்லித் துக்கம் தாங்க முடியாதவள்போல் தவிக்கலானுள் விமலை.

"சீ! சீ! என்ன நீசத்தனம்? எப்படிப்பட்ட வார்த்தை. மந்திரி, தன் சொந்தப் புத்தியோடு இப்படி என் ஒழுக்க விஷயமாகக் கனவு கண்டிருக்கவும் முடியாது. பிரக்ஞை தப்பித்தான் உளறி இருக்க வேண்டும். என் குழந்தை, என் ரோகிணி வேறு, என் விமலை வேறு என்று எண்ணுத என் பேரிலா களங்கம்! பேஷ்! பேஷ்! நல்ல யோசனை, நல்ல வார்த்தைகள்!

"விமலா தக்க சமயத்தில் நீ நினைவு மூட்டினுய். மந்திரியாருடைய இந்தத் துர்ப்புத்தியைப் போக்கடிக்க வேண்டும். இனி மந்திரிக்கும் எனக்கும் யுத்த சம்பந்தமான வேலை இல்லை. ஆகவே அவரை விசாரித்து உன் மாசற்ற தன்மையை நிரூபிக்கலாம். அழாதே அம்மா! அழுது அழுது உடல் நிலையைக் கெடுத்துக் கொள்ளாதே" என்று சொல்லியவனுக அரசன் நரசிம்மன் அந்த இருளில் மறைந்தான்.

விமலை நெடுநேரம் அவன் போகும் திசையை நோக்கி நின்றுகொண்டிருந்தாள். தான் காலையில் மருந்தால் நிரப்பிய அந்த அதிர்வெடி இப்பொழுது வெடித்துவிட்டதைக் கண்டதும் ஆனந்த மிகுதியால் அவள் உடல் பூரித்தது. 'விமலை கலிங்க நாட்டு அரசி!' என்று அவள் மறுபடியும் தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டாள்.

இரண்டாவது முறையாக, குனிந்திருந்த அவளது தலையை நிமிர்த்தி, அரசன் மிகவும் வாத்ஸல்யத்துடன் பேசியபொழுது கோபத்தின் மிகுதியால் 'ஆ!'வென்று அலறியபடி சாய்ந்துவிட்டான் மந்திரி. அவன் விழித்தெழுந்த பொழுது மகா உத்தமியும் பதிவிரதையுமாகிய அவன் இளம் மனைவி விமலை அவனுக்கு விசிறிக்கொண்டிருந்தாள்.

கிழ மந்திரி மனத்துக்குள் பச்சாத்தாபப் படலானுன். ஆனுல் இந்தச் சிறு பெண்ணிடம் சொன்னுல்தானே திருப்தி. ஆகவே அவன் அருமையான வார்த்தைகளால் அவளை அழைத்து, தான்

நம்பாமற் போனதற்காக வருந்தி மன்னிப்புக் கேட்டான். ஒன்றையுமே சட்டை செய்யாதவளாக ஒன்றுமே நடவாதது போல் பாவித்து, அந்த நள்ளிரவில் ஓடி ஓடி அந்தக் கிழவனுக்குச் சிசுருஷைகள் செய்யத் தொடங்கினாள் விமலே. இந்த உபசாரங்களை அவனால் தாள முடியவில்லை. பிறகு மெதுவாக அவளை அருகில் அழைத்து, "என் கண்மணி! என்ன பாக்கியம் செய்தோ இந்தக் கடைசிக் காலத்தில் அமிர்தசஞ்சீவிபோல் நீ வந்து வாய்த்தாய். அருமை அறியாமல் உன்னைக் கசக்கிவிட்டேனே! மடையன். என்னை மன்னித்துவிடு" என்றான்.

"இதைப்பற்றிப் பேசவும், சொல்லவும் இது சமயம் அன்று. மேல் நடக்கவேண்டியவைகள் காத்திருக்கின்றன. அவன்மேல் பழிவாங்குவதுதான் முக்கியம்" என்றாள்.

"ஆம் அதுதான். அதன்பொருட்டு ராஜமாதா புத்திமதிதேவியின் கடிதத்தின்படி செய்து விடுவதென்று தீர்மானித்து விட்டேன்."

"அப்படியானால் நகரத்துக்குள் வரும் அந்த ரகசிய வழிக்கும் பீரங்கிக் குண்டுகள் வைத்திருக்கும் ஆயுதசாலைக்கும் உள்ள சாவிகளைக் கொடுத்து விடுங்களேன். ஸம்புஷ்டாசாரியனின் ஆட்கள் குறிப்பிட்ட இடத்தில் வந்து தங்களிடம் இருந்து செய்தியைப் பெற்றுப் போவதற்காகக் காத்திருப்பார்கள் அல்லவா?" என்று அவசரக் கோலத்தை அள்ளித் தெளித்துவிட்டாள் விமலே.

"என்ன விமலா? ரகசிய வழியின் திறவுகோலும் ஆயுதசாலையின் திறவுகோலுமா? கடிதத்தில் இந்தச் செய்திகள்தாம் குறித்திருந்தன என்பது உனக்கு எப்படித் தெரியும்?"

ஒரு நொடி திகைத்துவிட்டாள் விமலே. அதற்குள் 'பளிச்' சென்று ஒரு யுக்தி தோன்றிவிட்டது. "நான் ஆவல் மிகுதியினால் தங்கள் பையினின்றும் கடிதத்தை எடுத்துப் பார்த்தேன். அதனால் என்ன? சாவியைக் கொடுங்கள்" என்று அவசரப்படுத்தினாள் விமலே.

விசாகநந்தனுக்கு இன்னது செய்வதென்று விளங்கவில்லை. அவன் மனத்தை அடக்கியாள அவனால் முடியவில்லை. வேறு வழி இல்லாமையால் சட்டைப் பையிலிருந்து இரண்டு சாவிக் கொத்துகளை எடுத்து வேண்டா வெறுப்பாக அவள் கையில் கொடுத்தான். அவள் கைகள் நடுங்கிக்கொண் டிருந்தன.

ஆனந்த மிகுதியினுல் உள்ளம் பொங்க, வெறி கொண்டவள்போல் சாவிக் கொத்தை எடுத்துக்கொண்டு வெளியே ஓடினுள் விமலே.

'மன்னு! நரசிம்மா! உன்னுடைய கேவலமான நடத்தையினுல் நீ எவ்வளவு பெரிய விபத்தை வலிய அழைத்துக்கொண்டாய்!' என்று எண்ணியவனுகப் படுக்கையில் சாய்ந்தான் மந்திரி விசாகநந்தன்.'

5

## கலிங்க விஜயம்

அழகிய மண்டபம். அதிலே கம்பீரமாக உட்கார்ந்திருக்கிருன் நரசிம்மன். அசோகன் இவன் அருகே வந்து, "ஆனுல் நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள். நான் பௌத்த தர்மத்தைப் பிரசாரம் செய்வதில்லை என்ற நிபந்தனைக்கு உட்பட்டேதான் தங்களுடன் சந்தி செய்துகொள்ள வந்திருக்கிறேன்" என்ருன்.

கலிங்கர்கோனது மனம் ஆனந்தத்தால் மலர்ந்தது. "என்ன? அசோக பூபதிதாஞ இப்படிப் பேசுவது!" என்று கேட்டவனுக அவனை ஆவலுடன் தழுவிக்கொள்ள இரு கரங்களையும் நீட்டினுன்.

மேல் மாடத்திலே, மெல்லிய சயனத்தில் படுத்திருந்த அவன், தன் கைகளை உண்மையாகவே நீட்டினுன். ஆனுல் அசோகனுக்குப் பதிலாக வேறு யாருடைய கைகளின் ஸ்பரிசமோ அவனுக்கு ஏற்பட்டது.

"அசோகா! உன்னை நான் அன்புடன் வரவேற்கிறேன்" என்று சொல்லியவனுக அவன் தன்னுடைய கைகளுக்குள் அகப்பட்ட அந்த மனிதனைத் தழுவிக்கொள்ளப் போனுன்.

"அரசே! அசோகனை வரவேற்று உபசரிக்கும் சமயம் சென்றுவிட்டது. அவனுடைய படைவீரர்கள் உம்மைத் தேடிப் பிடிப்பதன் பொருட்டு அரண்மனை முழுவதும் அமளி குமளி செய்கிருர்கள்" என்ற வார்த்தைகள் அந்த மனிதனின் வாயினின்றும் எழுந்தன.

"ஸ்வாமிகளே! தாங்களா?" என்று ஆச்சரியத்துடன் கூவினுன் மன்னவன்.

"ஆம்! நான்தான். ஆனுல் மற்றப் பேச்சுகளிலும் உபசாரத்திலும் வார்த்தைகளையும் நேரத்தையும் செலவுசெய்ய இது சமயமன்று. மறு பேச்சுக்கே இடமில்லை. உடனே இந்தப் பிக்ஷுவின் உடையை அணிந்து, கிழக்குக்கோட்டையின் ரகசிய வழியே ஓடு. பெரிய விபத்து தலைக்குமேல் காத்திருக்கிறது. துரோகிகள் சதி செய்துவிட்டார்கள்!"

"இப்படிக் கோழைபோல் என்னை ஓடிப்போகச் சொல்கிறீர்களா?"

"காரணம் கேட்கவேண்டாம். இந்திரபுரம் முழுவதும் அசோகனது படைவீரர்களும் பிக்ஷுக்களும் நிறைந்திருக்கிறார்கள். வெடிமருந்துக் கிடங்கிலே தீ வைத்துவிட்டார்கள். அந்தத் தீயின் உதவியினால் பௌத்த பிக்ஷுக்கள் சநாதன தர்மிகளைச் சின்னபின்னம் செய்கிறார்கள்."

"இப்படிப்பட்ட சமயத்திலா தாங்கள் என்னை ஓடிப் போகச் சொல்லுகிறீர்கள்?"

"புராதன வைதிக மதம் அழியாதிருக்க வேண்டுமானால் நீ ஓடித்தான் போகவேண்டும். வேறுவழி இல்லை."

"தங்களைக் குருவாக அடைந்த நரசிம்மனுக்கு இந்த மாதிரி கோழைத்தனமாக ஓடி வழக்கம் இல்லையே!"

சிதானந்தர் அதற்குமேல் பேசவில்லை. தானே பலவந்தமாக அவனுக்கு அந்த ஆடையை அணிவித்து, "இப்பொழுது நடப்பது தர்மயுத்தம் அல்ல. துரோகம்! விசுவாச காதகம்! படுகொலை! இதிலிருந்து உயிர் தப்புவதுதான் முக்கியமேயொழிய எதிர்ப்பதில் ஒரு பயனும் இல்லை. உனக்காக அல்ல; தர்மத்தை ரக்ஷிப்பதன் பொருட்டு ஓடி உயிர்பிழைக்கத்தான் வேண்டும். கலிங்கர்கோன் அழிந்தால் சநாதனமே அழிய வேண்டியதுதான். வீண் பேச்சுப் பேசவேண்டாம். உடனே கிழக்குப் பக்கத்து ரகசிய வழியின் வழியே ஓடு" என்று வெகு கண்டிப்புடன் துரிதப்படுத்தினார் சிதானந்தர்.

"அது முடியாது. அந்த ரகசிய வழிகளின் சாவிகள் மந்திரி விசாகநந்தனிடம் அல்லவா இருக்கின்றன" என்றான்.

சிதானந்தர் அவனை ஏற இறங்க ஒருமுறை பார்த்து, "கிழக்கு வாயில் இப்பொழுது ரகசிய வாயில் அன்று. அது பகிரங்கமாகத் திறந்து வைக்கப்பட் டிருக்கிறது. ஸம்புஷ்டாசாரியனுடைய ஆட்கள் அங்கே காவல். அதைக் கடப்பதற்குரிய சங்கேத வார்த்தை 'விமலே!' உனக்கோ இந்தப் பிக்ஷு உடை நன்றாகப் பொருந்தியிருக்கிறது. உடனே போ!" என்று அதிகாரத்தோடு கட்டளையிட்டார் சிதானந்தர்.

அரசனது ஆச்சரியம் எல்லையைக் கடந்தது. மந்திரியிடம் இருந்து சாவிகள் எப்படிப் போயின! வெடிமருந்துச் சாலையில் எப்படித் தீ நுழைந்தது! அந்தப் பிக்ஷுக்கூட்டம் எப்படிக் கோட்டைக்குள் நுழைந்தது! இவை எல்லாவற்றையும்விட இந்த 'விமலை' என்ற பெயர் எப்படிக் குழுக்குறியாக மாறிற்று! விமலா, உன்மேல் ஏற்பட்ட சந்தேகத்திலிருந்து இது பரிணமித்ததோ?" என்றான்.

"வீண் வார்த்தைகள் வேண்டாம். ஓடு சீக்கிரம்" என்று அவர் சொல்லி முடிக்குமுன்னமே அந்த அறையின் கதவு படீரென்று திறந்தது.

வாட்களை ஏந்தியவண்ணம் பல பிக்ஷுக்கள் அங்கே தோன்றினார்கள். வந்த பிக்ஷுக்கள் சிதானந்தரைச் சூழ்ந்துகொண்டார்கள். அவர்களுக்குப் பின்னால் முகத்திலே பெருமிதத்துடன், கையில் வாளை ஏந்தி விமலையும் தோன்றினாள். கலிங்க மன்னன் அவளைக் கண்டு கல்லாய்ச் சமைந்துபோனான். அந்த நெருக்கடியினாலும் வேஷ மாறுதலினாலும் விமலையால் அவனைக் கண்டுகொள்ள முடியவில்லை. இரண்டொரு விநாடிகள் முன்னதாக வந்திருந்தால் அவள் எண்ணியபடி அரசனை முடித்துவிட்டிருப்பாள். எப்படியும் அரசனைப் படுக்கை அறையிலேயே பிடித்துவிடலாம் என்ற தைரியத்தோடுதான் வந்திருந்தாள். ஆனால் அவனுக்குப் பதில் ஒரு சந்நியாசியைக் கண்டதும் அவளுக்கு ஆச்சரியமும் ஆத்திரமும் உண்டாயின.

"ஏ பிச்சையாண்டி! அந்த நரசிம்மன் எங்கே இருக்கிறான்!" என்று கர்ஜித்தாள் அவள். அவன் வாயே திறக்கவில்லை.

"சொல்லுகிறாயா, இல்லையா?" என்று சீறியவளாய் அவர் மீது பாய எத்தனித்தாள். ஆனால் மறுபடியும் சற்று நிதானித்தவளாய், "உயிரின்மேல் ஆசை இருந்தால் அவன் எங்கே என்பதைச் சொல்லு!" என்றாள்.

சிதானந்தர் மிகுந்த கம்பீரத்தோடு, "ஓஹோ! உயிரின்மேல் ஆசை இருந்தால் சொல்லவேண்டுமோ? சொல்லுகிறேன், பேயே! உன் பேச்சை முதலில் நிறுத்து. ஒரு அடி முன் வைத்தாயோ தெரியும்!" என்று சொல்லிக் கலகலவென்று சிரித்தார். குறிப்பாக நரசிம்மன் வெளியேறிவிட்டானா என்பதைக் கவனித்தார்.

இதற்குள் விமலை கோபம் மிகுந்தவளாக, "ஏ பிச்சையாண்டி! நீ யார் என்னை உத்தரவு செய்ய! ஒரு அடி முன்னே வைத்தால் என்ன செய்துவிடுவாய்! அட!" என்றாள் அலட்சியமாக.

"சீ, சீ! மோசக்காரி! துரோகி! பேசுகிறாயா வெட்கமில்லாமல்!"

இந்த வார்த்தைகள் விமலையின் கோபத்தீக்கு ஆகுதிபோல் ஆயின. அவரைப் பிடித்து வெட்டிவிட வேண்டுமென்று நெருங்கினாள்.

"சீ! சீ! சண்டாளி போ! நில் அங்கேயே! இது வரையில் இந்தச் சிதானந்தனது உடலின்மேல் எந்தப் பெண்ணினுடைய நிழலும் விழுந்ததில்லை. கடும் பிரம்மசாரியின் உடல் எவ்வளவு கடூரமானது என்று பரீக்ஷிக்காதே. அது விஷப் பரீக்ஷை. இந்த உடலைத் தீண்டி என்னுடைய கோபாக்கினிக்கு இரையாகாதே!" என்று கம்பீரத்தோடு சொன்னார் சிதானந்தர்.

சிதானந்தன் என்ற வார்த்தை அவர் வாயினின்றும் எழுந்ததோ இல்லையோ, அவளுடைய கோபம் உடனே அடங்கி விட்டது. இன்னதென்று விவரிக்க முடியாத ஒருவகைப் பயத்தினால் அவள் உடல் கிடுகிடுவென்று நடுங்கியது. 'என்ன! சிதானந்தரா?' என்று திகைத்தது அவள் உள்ளம். பௌத்த பிக்ஷுக்கள் ஒருவரை ஒருவர் பார்த்தவண்ணம் மெதுவாகப் பின்வாங்கலாயினர்.

பின்வாங்கிவிட்டால் விஷயம் கெட்டுவிடும் என்று எண்ணிய விமலை, இரண்டடி முன்னே வந்து, அந்தப் பிக்ஷுக்களை நோக்கி, "இவனை அசோகனது கூடாரத்துக்கு அழைத்துச் செல்லுங்கள்" என்று கட்டளையிட்டவளாய், "ஏ சிதானந்தா! உயிரோடு அரசன் ஒருநாளும் இந்திரபுரத்தைவிட்டு வெளியே போக முடியாது. அவன் அவசரக்காரன். ஒருவனாகவே பலரை எதிர்க்கத் தொடங்கிவிடுவான். ஆகவே நாளை சூரியோதயத்திற்குள் நல்ல சுப சமாசாரம் நீ கேள்விப்படப் போகிறாய். அது என்ன தெரியுமா? இந்த மஹா யக்ஞத்திலே நரசிம்மன் முதல் ஆகுதி ஆகிவிட்டானென்று தெரியவரும்" என்று சொல்லிக்கொண்டே அரசனைத் தேடப் புறப்பட்டாள்.

"ஏ பேயே! உன்னுடைய இந்த வார்த்தைகளையெல்லாம் கேட்டுக்கொண் டிருந்தால் அவன் இவற்றைத் தனக்கு அனுகூல

மாக உபயோகப்படுத்திக்கொள்வான். இந்த நெருக்கடியான சமயத்தில் ஆசாரியனையாவது மனைவி மக்களையாவது காப்பாற்ற வேண்டியது அவனுடைய கடமை அல்ல. தன்னைக் காத்துக் கொள்ளவே முற்படுவான். பிறகு சமயம் கிடைக்கும்பொழுது என்னையும் காப்பாற்றி, உங்களுக்கும் புத்திபுகட்டுவான்."

"ஏ! ஆண்டி! அவனுடைய சவத்தைப் பார்க்கிறவரையில் நீ கனவுகள் கண்டுகொண்டே இருக்கலாம். ஆனால் அவனுக்கு உயிருடன் இருக்கும்பொழுது உபதேசித்ததை விட மரண காலத்திலே மந்திரோபதேசம் செய்வதுதான் குருவாயிருப்பவர் செய்யவேண்டிய கடமை. அப்படி நீ அவனைச் சந்திக்கும் பொழுது உன்னுடைய மந்திரோபதேசங்களோடு, 'விமலை கலிங்க நாட்டுக்கு அரசியாகிவிட்டாள்' என்பதையும் சொல்லு. இந்த வார்த்தைகள் அவன் இறப்பதற்கு முன் அவன் காதிலே விழ வேண்டும்'' என்று சொல்லிக்கொண் டிருந்தாள்.

அப்போது அவளுடைய பணிப்பெண் மாதவி பறக்கப் பறக்க ஓடிவந்து, "அம்மா! அந்தப்புரத்திலே தேவி இந்துமதியும் இளவரசி ரோஹிணி தேவியும் இல்லை. நேற்று இரவே அவர்கள் எங்கேயோ போய்விட்டார்களாமே'' என்றாள்.

"ஐயையோ! பக்ஷிகள் பறந்துவிட்டனவா? அடடா! எப்படியும் எல்லையைத் தாண்டுமுன் பிடித்துவிட வேண்டும்!" என்று முணுமுணுத்துக்கொண்டாள் விமலை.

"இந்த வார்த்தைகளைக் கேட்டதும் சிதானந்தரது முகம் மலர்ந்தது. "ஏ ராக்ஷசி! உன்னுடைய எண்ணம் பலிக்காது. அரசி இந்துமதிதேவியும் இளவரசியும் தகுந்த இடத்திற்குப் போய்ச் சேர்ந்துவிட்டார்கள். இதேபோல் நரசிம்மனும் இங் கிருந்து தப்பிப்போய்ச் சிறிதுகாலம் கழித்துப் புராதன ஹிந்து தர்மத்தை நிலைநிறுத்துவான். சநாதன தர்மம் என்கிற சூரியன் பௌத்தர்கள் என்கிற ராகுவினால் பீடிக்கப்பட்டாலும், அதி லிருந்து விடுபட்டு, முன்போல் பிரகாசித்தே தீரும். ஈச்வர ஆக்ஞை யும் அப்படித்தான் இருக்கும் என்பது என்னுடைய உறுதியான நம்பிக்கை. ஹிந்து தர்மத்தைப் பாதுகாப்பதிலே உயிரிழக்கும் படி நேர்ந்தாலும் அதைப் பெருமையாக ஏற்றுக்கொள்வேன்!'' என்று மிகவும் அமைதியாகச் சொன்னார் சிதானந்தர்.

"ஓஹோ! அப்படியா? விமலையின் ஆக்ஞைக்கு முன்னாலே உன்னுடைய ஈச்வர ஆக்ஞை ஒரு துரும்புக்குச் சமானம்.

இதை வெகு சீக்கிரத்திலே உன் அநுபவத்திலேயே தெரிந்து கொள்ளப் போகிருய்!'' என்று சொல்லிக்கொண்டே அவ் விடத்தைவிட்டு வெளியே சென்ருள் விமலே.

அவள் சென்ற மறுவிநாடி அதே வாயிலின் வழியாகத் தலேகுனிந்து நிராயுதபாணியாக வெளியே சென்ருன் ஒரு பிக்ஷு.

சிதானந்தர் பிக்ஷுக்களின் வசமாகிவிட்டார்; விமலேயும் தன் வாக்கை நிறைவேற்றிவிட்டாள். சுக்கிரோதயத்துக்கு முன் தலேயற்ற ஒரு சவத்தைச் சிதானந்தருக்குக் காணிக்கையாக அனுப்பினுள். சிதானந்தர் அதைப் பார்த்துவிட்டு, "இது யாருடைய சவமென்று எனக்குத் தெரியவேண்டும் என்பதுதானே உன் எஜமானியின் விருப்பம்?'' என்ருர்.

"எவனே ஒரு துஷ்டன் கலிங்கநாட்டு அரசரைக் கொன்று விட்டான். இது அவருடைய சவந்தான்'' என்ருன் உடன் வந்தவன்.

"ஓஹோ! இன்னெரு கபடநாடகத்துக்கு ஆரம்பமோ!'' என்று சிரித்தார் சிதானந்தர்.

மகதநாட்டு வீரர்களும் பிக்ஷுக்கூட்டங்களும் இந்திரபுரத்தில் ஆர்ப்பரித்துக்கொண் டிருந்தார்கள். ஆனல் இதன் வாசனேகூட அசோகனது பாசறையை எட்டவில்லே. இரவு நெடுநேரம் வரையில் மந்திரி ராதாகுப்தருடன் சமாதான உடன்படிக்கையைப் பற்றி ஆலோசித்துக்கொண் டிருந்தான். இரவு நெடுநேரம் வரையில் கண் விழித்ததன் பயனுகக் காலேயில் எழுந்ததும் அரசன் உடலும் உள்ளமும் சோர்ந்திருந்தன. வழக்கமாகச் சூரியோதயத்திற்கு முன் எழுந்திருக்கும் அவன் அன்று சூரியோதயத்திற்குப் பிறகே எழுந்து வெளியே வந்தான்.

கூடாரத்தை விட்டு வெளியே வந்து பார்த்தபொழுது உலகமே அவனுக்குப் புதுமையாகத் தோன்றிற்று. நடுநிசிவரையில் அங்கே குறட்டைவிட்டுத் தூங்கிக்கொண் டிருந்தவர்களில் ஒரு வீரனேயாவது காணவில்லே. 'என் உத்தரவில்லாமல் எங்கே போயிருப்பார்கள்?' என்று தன்னேயே கேட்டுக்கொண்டான்.

இவற்றையெல்லாம்விட ஆச்சரியமாக அந்தக் கூடாரத்தின் வாயிலிலே பறந்துகொண் டிருந்த மகதநாட்டின் வெண் பதாகையையும் காணவில்லே. ஆச்சரிய மிகுதியினுல் திகைத்து நாற்புறமும் நோக்கினுன் அசோகன்—'கொடி! அந்தப் புகழ்க்

கொடி எங்கே! ஒருவேளை ஒற்றர்கள்......சே! சே! அப்படி இருக்காது' என்று எண்ணுவதற்குள் அதற்கு விடை சொல்லு பவன்போல் மோகனன் தோன்றினன். அவன் முகத்திலே ஆனந்தம் குடிகொண்டிருந்தது. "மகாராஜா! அதோ பாருங்கள்! நமது கீர்த்திக் கொடி!" என்று இந்திரபுரக் கோட்டையைச் சுட்டிக்காட்டினன்.

மகதநாட்டு வெண் கொடியின்மீது காலை இளங் கதிரவனது பொன்மயமான கிரணங்கள் பட்டு, அதை அழகுபடுத்திக்கொண்டிருந்தன. மிகவும் கம்பீரமாக வானை அளாவிப் பறந்து நின்றது அந்த மணிக்கொடி. அசோகனது கண்கள் ஆச்சரிய மிகுதியினல் மலர்ந்தன. ஆனந்தத்தினல் வாயினின்றும் ஒரு வார்த்தையும் எழவில்லை. கேட்கவேண்டுமென்று நினைத்த சொற்கள்கூடத் தொண்டையிலேயே நின்றுவிட்டன.

இந்த நிலையிலேயே நெடுநேரம் இருக்கும்படி நேரவில்லை.

"மகாராஜா! இந்திரபுரம் வசப்பட்டுவிட்டது. கலிங்க நாட்டை வெற்றிகொண்டுவிட்டோம்!" என்று பெருமையுடன் கூறினன் மோகனன்.

அசோகன் சற்றே நிதானித்தான். "ஆனல் இது எப்படி முடிந்தது? அதுதான் விளங்கவில்லை. ஆறே நாழிகைக்குள் நம்முடைய கொடி எப்படிக் கோட்டைக் கோபுரத்தின் மீது ஏறிற்று?" என்று மிகுந்த சந்தேகத்துடன் கேட்டான். அவன் முகத்திலே கவலைக்குறிகள் காணப்பட்டன.

"அது விஷயம் எனக்கும் தெரியாது" என்று மிகுந்த பணிவுடன் சொன்னன் மோகனன். அசோகன் சற்றே கீழும் மேலுமாக நடந்தான். தயக்கத்தோடு கூடிய குரலில், "நம்முடைய படைவீரர்கள் எப்பொழுது இவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டார்கள்?"

"இரண்டு நாழிகைக்கு முன்."

"இரண்டே நாழிகைக்குள்ளாகவா அவர்கள் இந்திரபுரக் கோட்டையின்மேல் கொடியைப் பறக்கவிட்டார்கள்!"

மோகனன் மிகவும் மெல்லிய குரலில், "சேனைகள் இங்கிருந்து புறப்படுவதற்கு முன்பே இந்திரபுரம் வசப்பட்டுவிட்டது."

"என்ன! வசப்பட்டுவிட்டதா! அப்படியானால் இந்தச் செயல் மந்திரமா! அல்லது தெய்விக அற்புதமா!" என்ற வார்த்தைகள் அவன் வாயினின்றும் எழுந்தன.

"ஸம்புஷ்டாசாரியானது பிக்ஷுக்கூட்டந்தான் இந்திர புரத்தை வென்றது" என்ற வார்த்தைகள் அவன் ஆச்சரியத்தைப் பின்னும் அதிகமாக்கின.

"என்ன மோகனா! இதென்ன விடுகதைபோலல்லவா தோன்றுகிறது!" என்று தன்னையே கேட்டுக்கொள்வதுபோல் கேட்டான் அசோகன்.

"மகாராஜா! நள்ளிரவிலே தாங்கள் படுக்கைக்குச் சென்ற சற்று நேரத்திற்கெல்லாம் நானும் அயர்ந்து படுத்தேன். திடீரென்று எங்கிருந்தோ மின்னல் மின்னுவதுபோல் தோன்றிற்று. வெளியே வந்து பார்த்தேன். இந்திரபுரம் ஒரே அக்கினிப் பிரளயமாகத் தோன்றிற்று. முன்னே சென்ற ஸம்புஷ்டாசாரியரது தலைமையில் பிக்ஷுக் கூட்டம், கூட்டமாக இந்திரபுரத்தை நோக்கி விரைந்து சென்றுகொண் டிருந்தது. சற்று நேரத்திற்கெல்லாம் கோட்டைக்குள் பிக்ஷுக்கள் இங்கும் அங்கும் உலாவுவது அந்த ஜோதி வெளிச்சத்திலே தெரிந்தது. ஆனால்-ஒருவிதமான தடையுமின்றி, ஆசாரியர் எப்படித் தன் பிக்ஷு மண்டலங்களுடன் உள்ளே நுழைந்தார் என்பதைப்பற்றி எத்தனையோ விதமாக அநுமானித்துப் பார்த்தேன். அது ஒன்றுதான் விளங்காத விந்தை! இதைப் பற்றி நான் யோசனையில் ஆழ்ந்திருந்தபொழுது திடீரென்று குதிரைகளின் காலடி ஓசை கேட்டது. இரண்டு அழகிய வெண் புரவிகளின்மீது ஒன்றில் ராஜமாதாவும் மற்றொன்றில் ஒரு பிக்ஷுவுமாக வந்தார்கள். வெகு வேகமாக வந்து, கொடியைக் கையில் எடுத்துக்கொண்டு திரும்பிவிட்டனர். விஷயத்தைத் தங்களுக்குத் தெரிவிக்க எண்ணினேன். 'மோகனா, அவனை எழுப்பாதே! விஷயங்களைக் காலையில் தெரியப்படுத்து' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார் ராஜமாதா.

அசோகனது கண்கள் ஆச்சரியத்தால் நிறைந்தன. "நம்முடைய சேனைகள் எப்பொழுது போயின?" என்றான்.

"இந்திரபுரத்துக் கோட்டைக் கோபுரத்தின்மேல் கொடி நாட்டப்பட்டு நெடுநேரம் ஆன பிறகு."

அசோகன் புருவத்தை நெறித்துக்கொண்டான்.

"ஆனால் கடைசியாகப் பிக்ஷுக்களின் உதவியினலா கோட்டையை வென்றுவிட்டார் அவர்! நம்முடைய பங்குக்கு அதில் ஒரு சிறு பகுதிகூடப் பாக்கியில்லைபோல் இருக்கிறது. அதோ யாரோ வருவதுபோல் இருக்கிறதே? யார்? பார்" என்ருன் அசோகன்.

மோகனன் அருகிலிருந்த ஓர் உயரமான மேடையில் ஏறி, அவர்கள் வரும் திசையை நோக்கித் தன் பார்வையைச் செலுத்தினன். "கையிலே பொன் தண்டத்தைத் தாங்கி ஆசாரியரும் அவருக்கு இரு புறத்திலும் இரண்டு பெண்மணிகளும் வருகிருர்கள் என்று தோன்றுகிறது. ஆசாரியர் மிகுந்த கர்வத்துடன் இருபுறமும் திரும்பித் திரும்பி ஏதேதோ பேசிக்கொண்டே வருகிருர். அவருக்கு வலதுபுறத்தில் இருப்பவர் வேறு யாரும் அல்ல; ராஜமாதாவேதான். ஆனால் கையில் வாளுடனும் முகத்திலே கோபத்துடனும் சாக்ஷாத் ரணதேவதைபோலவே தோன்றுகிருர். அவரது அவிழ்ந்த வெண்கூந்தல் பஞ்சுபோல் காற்றிலே பறக்கிறது. அந்த வெண்மையான ஆடையும் அவர் வரும் தோற்றமும் துர்க்காதேவியே வருவதுபோல் மனத்தை அச்சப்படுத்துகிறது!" என்று சொல்லுமுன், ஓர் அழகிய இளைஞன் வந்து குதிரையினின்றும் குதித்தான்.

இறங்கியவன் வெகு வேகமாக, கைகளை நீட்டியவண்ணம் அசோகனை நெருங்கினன். தமையனும் தம்பியும் ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டனர். அது ராமனும் பரதனும் தழுவி நின்ற கோலம்போல் தோன்றிற்று. ஆனந்த மிகுதியினல் சலிக்கும் குரலுடன், "அண்ணு! கலிங்கம் வசப்பட்டுவிட்டது! மாசற்ற தங்களுடைய கீர்த்திக்கு வருவதாயிருந்த களங்கம் நீங்கிவிட்டது! மௌரிய குலத்தின் பெருமை மேலும் உயர்ந்து நிலைத்துவிட்டது!" என்று கூறினன் வீதசோகன்.

"தம்பீ! நீ சமரிலே சிங்கமல்லவா? 'தம்பியுள்ளவன் படைக்கஞ்சான்' என்பது முதுமொழியன்ருே? நீ இருக்கும்போது எனக்கென்ன குறை!" என்று அன்பு ததும்பும் குரலில் கூறினன் அசோகன்.

"அண்ணு! தாங்கள் மௌரியகுல தீபமன்ருே!"—இதற்கு மேல் அவனல் பேச முடியவில்லை. எல்லையற்ற ஆனந்தப் பெருக்கினல் அவன் நா தழுதழுத்தது. இந்த நிலையில் நெடுநேரம்

அவர்களால் இருக்கமுடியவில்லை. தாம் இருவரும் ஒருவரை ஒருவர் சந்தித்து, அன்புடன் பேசுவது தமது தாய் புத்திமதி தேவிக்குப் பிடிக்காது என்பது இருவருக்கும் தெரியும். ஆகவே புத்திமதிதேவி அருகில் வருகிறாள் என்று தெரிந்ததும் இருவரும் தங்கள் பேச்சைச் சுருக்கிக்கொண்டனர்.

"மோகனா! பச்சைக்கூடாரத்திலே தர்பார் நடைபெறப் போகிறதென்று எல்லோருக்கும் தெரிவி. இங்கே இருப்பவர்களை அழைத்து, அவரவர்களுக்கு ஏற்ற இடத்தில் அமர ஏற்பாடு செய். மந்திரிகள், பிரதானிகள் எல்லோருக்கும் விஷயத்தை அறிவித்துவிடு" என்று சொல்லியவனாகக் கூடாரத்துக்குள் நுழைந்தான் அசோகன்.

* * *

அசோகனது அன்பின் பெருக்கையும் அவனது பேரழகையும் கண்டு, அவனுக்குத் தான் தம்பி என்று எண்ணும்பொழுதெல்லாம் வீதசோகனின் மனம் ஆனந்தத்தால் நிரம்பும். 'அண்ணாவின் ரூப செளந்தரியத்தைவிட அவரது குணசெளந்தரியந் தான் அவருக்கு அதிகமான சோபையை அளிக்கிறது. மௌரிய குலத்திற்கே என்றும் அழியாத, எவராலும் அழிக்க முடியாத ஒரு புகழைத் தேடிவிட்டார்' என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டவனாய் அங்கேயே நின்றிருந்தான் வீதசோகன்.

இளங்கோ வீதசோகன் மாற்றாந்தாயின் மகன்தான். ஆனால் நமது நாட்டுச் சரித்திரத்திலே இது புதிய நிகழ்ச்சியா? பரதன் மாற்றாந்தாயின் மகன்தானே. அசோகனையும் வீதசோகனையும் பார்க்கும்பொழுது புராண புருஷர்களைத்தான் உவமை சொல்ல முடியும். அத்தகைய பேரன்பினால் பிணைக்கப்பட் டிருந்தார்கள் இவ்விரு அபூர்வ சகோதரர்களும்.

அரசன் பிந்துசாரனுக்குப் பல மனைவியர் உண்டு. ஒரே மனைவியை மணந்துகொண்டு இல்லறம் நடத்தவேண்டும் என்ற நியமம் அந்த நாளைய அரசர்களுக்கு இல்லை. மனைவியரைக் கணக்கிட்டே, மன்னரது வலிமையையும் புகழையும் கணக்கிட்டார்கள் என்றுகூடச் சொல்லிவிடலாம். இந்த நியமத்தின்படி பிந்துசாரனது கணக்கற்ற மனைவியர் அந்தப்புரம் என்னும் சிறையிலே அடைக்கப்பட் டிருந்தனர்.

புத்திமதிதேவி என்பவள்தான் பட்டமகிஷி. இந்தச் சமயத்திலே ஓர் ஏழைப் பிராம்மணன் தன் அழகிய பெண்ணுடன்

அரச சபைக்கு வந்து சேர்ந்தான். 'இவளுடைய ஜாதகத்தில் இவள் ஒரு சக்கரவர்த்திக்குத் தாயாவாள் என்று தெரிகின்றது. ஆகவே இவளைத் தாங்கள் மனைவியாக அங்கீகரிக்க வேண்டும்'' என்று சொன்னான் பிராம்மணன்.

ஜோதிட விஷயமான இந்த வார்த்தைகளைப் பிந்துசாரன் நம்பினானோ இல்லையோ தெரியாது. ஆனால் அந்தப் பெண்ணின் பேரழகு அவன் மனத்தைக் கொள்ளைகொண்டது. அந்தக் கடைக்கண் பார்வையின் பொருட்டு, சுபத்ராங்கி என்று பெயர் கொண்ட அந்த ஏழைப் பெண்ணுக்காகச் சிம்மாசனத்தைக்கூடத் துறந்துவிடலாம் என்று தோன்றியது அரசனுக்கு.

அழகுக்கு அழகுசெய்யும் மென்மலராளைத் தன் பூங் காவனத்தை அழகு செய்யும்பொருட்டு ஏற்றுக்கொண்டான். பிறகு கேட்பானேன். அந்தக் கட்டழகியின் சந்நிதானத்திலே பழியாகக் கிடந்துவிட்டான் அரசன். புத்திமதிதேவியும் மற்ற ராணிமார்களும் ஒன்றுகூடி அந்தப் பேதைப்பெண்ணைப் பல விதத்தாலும் ஒழிக்க வழி தேடினர். படிப்படியாக அரசனை விட்டுப் பிரித்துவிட்டால் பிறகு விஷயம் சுலபமாகிவிடும் என்று பல தந்திரங்கள் செய்தனர். விஷயம் பலித்தது. அரசன் அவளை அறவே மறந்துவிடும் நிலைக்கு வந்துவிட்டான்.

அந்த எளிய, கபடமற்ற பேதைப்பெண் வேறொன்றும் தெரியாதவளாக அங்கேயே இருந்துவந்தாள். கணவன் இருந் தும் விதவைபோல், ஏவின குற்றேவல்களைச் செய்துகொண்டு அங்கேயே அடைத்துக் கிடந்தாள். புத்திமதிதேவியின் அதிகா ரத்தின் கீழ் அந்தப்புரமே கிடுகிடுவென்று நடுங்கிக்கொண் டிருந்தது. பாவம், சுபத்ராங்கி அரசனைச் சந்திக்கப் பலமுறை முயன்றாள். ராஜா பிந்துசாரனோ கண்டாலும் கண்டுகொள்வ தில்லை. அவனுடைய இந்த மறதியைத் தனக்கு அநுகூலமாக உபயோகித்துக்கொண்டாள் புத்திமதிதேவி.

எப்படியாவது அவனைச் சந்தித்துத் தன்னை முன்பிருந்த நிலை மைக்கு உயர்த்திக்கொள்ள வேண்டுமென்று விரும்பினாள் சுபத்ராங்கி. அரசன் காலையில் தினந்தோறும் சௌளம் செய்து கொள்வது வழக்கம். அப்பொழுது ஒரு பணிப்பெண் தலையைச் சீவி முடிப்பது வழக்கம். அந்த வேலையைத் தானே செய்வதாக ஏற்றுக்கொண்டாள். அந்த நாளிலே நாவிதப் பெண்கள்தான் இந்த வேலையைச் செய்வது வழக்கம். இவளை யாரோ ஒரு பணிப்

பெண் என்றே நினைத்துவிட்டான் அரசன். சுபத்ராங்கி மிகுந்த பக்தியுடன் தினந்தோறும் இந்த வேலையைச் செய்துவந்தாள். பிந்துசாரன் இவள் அன்புடன் செய்யும் வேலையினால் மனங் குளிர்ந்து, "உனக்கு என்ன வேண்டுமானாலும் கேள்; கொடுக் கிறேன்" என்றான்.

அவள் மிகுந்த மகிழ்வுடன், "பட்டமகிஷி பதத்தைவிட மேலானது எது? அதை எனக்கு அளிக்கவேண்டும்" என்றாள்.

"அதெப்படி முடியும்? நீயோ நாவிதப்பெண்; நான் க்ஷத்திரியன்" என்றான்.

சுபத்ராங்கி தன் வரலாறு முழுவதையும் கூறத் தொடங்கினாள். அரசன், தன் பிழைகளுக்காக வருந்தினான். பிறகு, "பட்ட மகிஷி பதவி புத்திமதிதேவிக்கே உரியது. அதை அளிக்க எனக்கு உரிமையில்லை. நீ முன்போல் சுதந்தரமாக இருக்கலாம்" என்று தெரிவித்து மற்ற ராணிகளின் கொடுமையிலிருந்து அவளை மீட்டான்.

சில நாட்களுக்கெல்லாம் பிந்துசாரனின் குடிமக்கள் ஆனந்த மிகுதியினால் பூரிக்கத் தொடங்கினார்கள். வம்சம் அற்றுப் போய் விடுமோ என்று கவலைகொண் டிருந்த மகதநாட்டு மக்கள், அரண்மனையிலே நடக்கவிருக்கும் புத்திரோத்ஸவத்தை எதிர் பார்த்து நின்றார்கள்.

உரிய காலத்தில் ஒரே தினத்தில் சுபத்திரா தேவியும் புத்திமதி தேவியும் இரண்டு அழகிய ஆண்குழந்தைகளுக்குத் தாயானார்கள். ஒரே நாளில் பிறந்ததன் பயனாக ஒரு பெரிய விவாதம் உண்டா யிற்று. 'அசோகன் சில மணி நேரம் முன்னே பிறந்துவிட்டான். ஆகவே அவனே மூத்த குமாரன். பட்டத்துக்கு உரியவன்' என்று சட்டநிபுணர்கள் நினைத்தார்கள். ஆனால் வீதசோகன் பட்ட மகிஷியின் புதல்வன்; அவன்தான் பட்டத்திற்கு உரியவன் என்றும் ஒரு விவாதம் நடக்கலாயிற்று. இதைப்பற்றி அரசன் ஒன்றுமே சொல்லவில்லை. இரு குழந்தைகளையும் கண்ணின் கருமணிபோல் காத்துவந்தான். இருவருள் எவன் எல்லா விதத் திலும் மேதையோ அவனே முடி சூடட்டும் என்று சில சமயம் நினைத்தான். ஆனால் இவ்விருவரில் எவன் உயர்வு என்பது கண்டுபிடிக்க முடியாத விஷயமாக இருந்தது. அசோகன் கள்ளங் கபடற்ற சுபத்திராங்கியின் பாதுகாப்பிலே வளர்ந்து வந்தான். ஆனால் வீதசோகனோ தாயின் கபட தந்திரங்களுக்கு

இடையிலே வளர்ந்துவந்தாலும், அவனது இதயம் மாசு மறுவற்ற பளிங்குபோல் இருந்தது; அன்பினால் நிறைந்திருந்தது. ஆகவே இருவரில் எவனைத் தேர்ந்தெடுப்பதென்று அரசனுக்கே விளங்க வில்லை.

எதிர்பார்த்ததற்கு மாறாகப் பிந்துசாரன் சீக்கிரமே விண்ணுலகம் புகுந்தான். அரியணைக்கு உரியவன் வீதசோகன்தான் என்று நிச்சயித்தாள் புத்திமதிதேவி. இதுவரையில் அடங்கியிருந்த புயல் சீறியெழத் தொடங்கிற்று. ஊரிலே பிளவு ஏற்பட்டது. கட்சிப் பிரதி கட்சிகள், சதியாலோசனைகள் எல்லாம் அங்கங்கே கிளம்பத் தொடங்கின. தன் முழு வலிமையையும் உபயோகித்து, வீதசோகனுக்கே பட்டம் கட்டவேண்டுமென்று சூழ்ச்சி செய்துகொண் டிருந்தாள் புத்திமதிதேவி. இவளுக்கு உதவியாகச் ஸம்புஷ்டாசாரியனும் தோள் தட்டினான். கட்சிகள் வலுத்த பிறகு சும்மாயிருக்க முடியுமா ?

'அசோகன்தான் மூத்தவன். ஆகவே சட்டப்படி உரிமை அவனுக்கே!' என்று வாதித்தார்கள் ஒரு கட்சி. மந்திரி ராதாகுப்தன் அசோகனது கட்சிக்குப் பல ஆதாரங்கள் காட்டினான். ஆனால் அரசனது உத்தரக்கிரியைகள் முடிவதற்கு முன்பே இது தீர்மானிக்கப்படவேண்டி யிருந்தது. இதன் பொருட்டு ஐந்து பெரியார்களை - நடுநிலைமை தவறாதவர்களை – மத்தியஸ்தம் கோரினார்கள். அந்த ஐம்பெருங் குழுவினர், தீர ஆலோசித்து அசோகனே அரசுக்கு உரியவன் என்று முடிவு செய்தார்கள்.

புத்திமதிதேவி அவர்களை எந்த எல்லைவரையில் நிந்திக்க முடியுமோ அந்த வழியிலெல்லாம் நிந்தித்து அவமதித்தாள். ஆனாலும் அவள் இருதயத்தில் கனிந்துகொண் டிருந்த பொறாமைத் தீ, கொழுந்துவிட்டு எரிந்துகொண் டிருந்தது. இந்தக் குழுவினரின் தீர்ப்பு, தான் தோல்வியுற்றோம் என்கிற ஆத்திரம் இவைகளெல்லாம் சேர்ந்து அந்தத் தீயிலே நெய்யை ஊற்றினாற் போல் ஆயிற்று.

அரசன் அசோகன்தான் என்று நிர்ணயித்தாகிவிட்டது. இனி வாயைச் சிந்தி வரிசை குலைவதிலே பிரயோஜனம் இல்லை. முள்ளாலே போகிற காரியத்திற்குக் கோடாலியின் உதவி தேடும்படி ஆகிவிட்டது. எப்படியாவது மட்டந்தட்டி இவனைக் கீழே இறக்கிவிடலாம் என்று நினைத்துத் தன் கோபத்தை அடக்கிக்கொண்டாள். இந்த எண்ணங்கள் அவள் மனத்திலே

ஊறி ஊறி முளைத்து எழுந்துகொண் டிருந்தன. அசோகனது புகழ் பெருகப் பெருக அவள் நெஞ்சு கொழுந்துவிட்டு எரியத் தொடங்கிற்று. எந்தக் காரணத்தை முன்னிட்டாவது வீத சோகன் அசோகனை வெறுக்கவேண்டும்; பிறகு பழிவாங்கி, தனக்குரிய அரியணையை அடையவேண்டும் என்று விரும்பினுள். ஆனால் வீதசோகன் இதற்கு மாருக அசோகனிடம் எல்லையற்ற அன்புகொண் டிருந்தது இவள் கண்களிலே உறுத்தத் தொடங்கிற்று.

அவளது மதி மந்திரியாகிய ஸம்புஷ்டாசாரியன், இவர்களை இப்படியே வைக்கக் கூடாதென்று, சமயம் நேரும்பொழு தெல்லாம் அவள் செவிகளில் ஓதிவந்தான். இவளும் மெல்ல வீதசோகன் மனத்தில் பகைமையை விதைக்க முயன்ருள். தன் தாயின் மனத்தை வெகு சீக்கிரத்திலேயே உணர்ந்து கொண்டான் வீதசோகன். நாளுக்கு நாள் அவனது சகோதர வாத்ஸல்யம் வளர்ந்து வந்தது. ஆனால் தன் நிலை தன் தாய்க்குத் தெரியக் கூடாதென்று மிகவும் எச்சரிக்கையுடனும் விழிப்புட னும் நடந்துகொண்டான்.

அசோகன் கூடாரத்துக்குள் நுழைந்து சற்று நேரம் ஆகி யிருக்கும். இன்னும் முன்பு நின்றுகொண் டிருந்த அதே இடத்தில் மெய்மறந்து நின்றுகொண் டிருந்தான் வீதசோகன். அவன் கண்களிலே ஆனந்த பாஷ்பம் துளித்து நின்றது. தன் தமையனது புகழைப்பற்றிய இன்பக் கனவுகளிலே ஆழ்ந்திருந்தது அவன் மனம்.

"இளவரசே! ராஜமாதா தங்களைக் காண விரும்புகிருர்கள்" என்ற சொல் அவன் காதில் விழுந்ததும் கனவு கலைந்தது. சற்றே திகைத்தான். பிறகு, "அவர் எங்கே இருக்கிருர்?" என்று கேட்டான்.

"பச்சைக் கூடாரத்தில் நடைபெற வேண்டியவைகளுக்கு ஏற்பாடு செய்யும்பொருட்டுத் தேவியார் அங்கே போயிருக்கிருர். தங்களையும் அரசர் பெருமானையும் அங்கே எதிர்பார்க்கிருர்கள்" என்று சொல்லி வணங்கியவனுகக் கூடாரத்தை நோக்கி நடந்தான் மோகனன்.

வீதசோகன் சிந்தனையில் ஆழ்ந்தவனுய் அந்த வாசலிலேயே நின்றிருந்தான்.

## 6

# ஆர்யாவர்த்தத்தின் முதல் சக்கரவர்த்தி

பச்சைக் கூடாரம் மிகவும் அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. பிரதான மந்திரி ராதாகுப்தனும், கலிங்கநாட்டு யுத்தத்தின் பொருட்டுத் திரண்டிருந்த எல்லாச் சிற்றரசர்களும் அன்று தர்பாரில் கூடியிருந்தனர். ஸம்புஷ்டாசாரியன் அங்கே கூடியிருந்த வீரரையும் சிற்றரசர்களையும் அதிலும் முக்கியமாக மந்திரி ராதாகுப்தனையும் மிகவும் இகழ்ச்சிக் குறியுடன் பார்த்துக் கொண்டிருந்தான். சற்று நேரத்திற்கு ஒருமுறை ராஜமாதா புத்திமதிதேவியுடனும் விமலையுடனும் ஏதோ சில வார்த்தைகளைச் சொல்லிவிட்டு, மண்டபம் முழுவதையும் அளப்பவன்போல் சுற்றிப் பார்த்துக்கொண் டிருந்தான்.

வீதசோகன் தன் ஆசனத்தில் அமர்ந்திருந்தான். ராஜமாதா புத்திமதிதேவி, சாக்ஷாத் துர்க்காதேவியேபோல் அட்டகாசத்துடன் வீற்றிருந்தாள். அவளை அடுத்து மிகவும் ஒய்யாரமாகப் பெரிய சக்கரவர்த்தினிபோல் வீற்றிருந்தாள் விமலை. இதற்கிடையில் கூடாரத்தின் வாயிற்புறத்திலிருந்து அரசனது வருகையை அறிவிக்கும் வெண்சங்கு முழங்கிற்று. சங்கத்வனி ஓய்ந்தவுடன், "மௌரியகுலரவி, மகதாதிபதி ஸம்ராட் அசோகப் பெருயானுக்கு ஜயம்! ஜயம்!" என்று கோஷித்தான் கட்டியக்காரன்.

அதை ஒட்டிக் கூடாரத்துக்கு வெளியிலும் ஜயகோஷம் வானை அளாவிற்று. சிற்றரசர்கள், பிரபுக்கள் அனைவரும் எழுந்து அசோகனை வணங்கி, "மௌரியகுல ரவி அசோகனுக்குச் ஜயம்! மகதாதிபதிக்கு ஜயம்! சக்கரவர்த்தி அசோகனுக்கு ஜயம்!" என்று மிகுந்த உற்சாகத்துடன் கோஷித்தனர். சமயோசிதமாகப் புத்திமதிதேவியும் ஸம்புஷ்டாசாரியனும்கூட இந்தக் கோஷத்தில் கலந்துகொண்டனர். ஆனால் இளங்கோ வீதசோகனும் மந்திரி ராதாகுப்தனும் மட்டும் வாயே திறக்கவில்லை.

ராஜதேஜஸுடன் ஜொலிக்கும் தன் சகோதரனது அழகிய வடிவத்தையும் கம்பீரத்தையும் கண்டு, மெய்மறந்தவனாக

வீதசோகன் வீற்றிருந்தான். ஆனால் இது அங்கே கூடியிருந்தவர்களுக்கு ஆச்சரியத்தை விளைவித்தது. ஆனந்த மிகுதியினால் பேச நாவெழாமல் புன்முறுவலுடன் வைத்த கண் வாங்காமல் தன் தமையனையே பார்த்துக்கொண்டிருந்தான் அவன்.

ஆனால் புத்திமதிதேவி வேறுவிதமான கண்களால் பார்த்து, வேறுவிதமான கற்பனைகள் செய்து, தனக்குள்ளாகவே மகிழ்ந்து கொண்டிருந்தாள். இவைகளையெல்லாம் கடைக்கண்ணால் பாராததுபோல் பார்த்துக்கொண்டிருக்கும் ஸம்புஷ்டாசாரியனிடம் மிகவும் மெதுவான குரலில், "கடைசியாக இளங்கோவின் மனத்தில் பகைமை புகுந்துவிட்டது" என்றாள்.

ஸம்புஷ்டாசாரியனது முகம் மலர்ந்தது. ஆனால் மந்திரி ராதாகுப்தன் ஏன் வாய்திறந்து பேசவில்லை என்பதுதான் எல்லோருக்குமே ஆச்சரியமாக இருந்தது. அசோகன் அங்கே வந்து நுழையும்போது ராதாகுப்தர் எழுந்து நின்றார். அவன் நின்ற நிலையிலும் முகத்தில் தோன்றிய மலர்ச்சியிலும் ஏதோ ஒரு சந்தோஷமான விஷயத்தைத் தெரிவிக்கப்போகிறார் என்றே பலரும் எதிர்பார்த்தார்கள்.

அசோகன் தனக்கென்று அலங்கரித்திருந்த ஆசனத்தில் உட்காரப்போகையில் ராதாகுப்தன் நெருங்கிவந்து, "அரசர் பெரும! சற்றுப் பொறுங்கள். என் விண்ணப்பத்தைக் கேட்டுவிட்டு முன் செல்லுங்கள்" என்றான். அசோகன் ஆச்சரியத்தால் திகைத்தான். மேடைமீதிருந்த ஆசனத்திற்குச் செல்லும் முதற்படியிலேயே அவன் நின்றுவிட்டான். எல்லோருடைய கண்களும் மந்திரியின்மீதே பதிந்தன.

"பொறுக்கவேண்டும்; சற்று நான் சொல்வதைக் கேட்டருளவேண்டும். விருத்தனாகிய ராதாகுப்தன் ஹிருதய பூர்வமாக வாழ்த்துகிறான். தங்களை மகதாதிபதி என்று சொல்வதும், ஸம்ராட் என்று வாழ்த்துவதும் குறைவென்றே தோன்றுகிறது. ஆர்யாவர்த்தத்தின் எல்லாப் பகுதிகளையும் வென்று வாகை சூடியாகிவிட்டது. எஞ்சி நின்றுகொண்டிருந்த கலிங்க நாடும் இன்று நம் வசம் ஆகிவிட்டது. ஆகவே ஆர்யாவர்த்தத்தின் பிரதம சக்கர்வர்த்தி என்ற திருநாமத்தாலேயே தங்களை வாழ்த்துகிறேன்.

"தங்களால் மௌரியகுலத்தின் பெருமை ஒரு பிடி உயர்ந்துவிட்டது. ஆகவே மௌரியகுல ரவி, ஆர்யாவர்த்தத்தின் சக்கர

வர்த்தி என்றே நான் வாழ்த்துகிறேன்" என்று தழுதழுத்த குரலில் கூறினர்.

ராதாகுப்தனது உள்ளன்புடன் கூடிய இந்த வார்த்தைகளினல் அசோகனது முகம் இன்னும் கம்பீரமாகச் சோபிக்கலாயிற்று. அங்கே கூடியிருந்த சிற்றரசர்களது செவிகள் மந்திரியாரது சொற்களில் ஈடுபட்டிருந்தன. இளங்கோ வீதசோகனது கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று. இதுவரையில் மிகுந்த அலட்சியத்துடன் இருந்த விமலையும், அவனது பேரழகிலும் காம்பீர்யத்திலும் ஈடுபட்டவளாக மெய்மறந்து அவனையே பார்த்துக்கொண் டிருந்தாள்.

ஆனல் ராதாகுப்தனது வார்த்தைகள் ஸம்புஷ்டாசாரியனுக்குக் கர்ண கடூரமாக இருந்தன. புத்திமதிதேவியின் நெஞ்சோ பேராசையும் பெருமையும் பொங்கி வெடித்துவிடும் நிலைமையில் இருந்தது. ஆகவே மேலும் பேசத் தொடங்கிய மந்திரியின் பேச்சை இடைமறித்து, "என்ன மந்திரியாரே! வீணே பிதற்றிக் காலதாமதம் செய்வதில் என்ன லாபம்? இன்னும் செய்ய வேண்டியவைகள் ஏராளமாக இருக்கின்றன" என்று மிகுந்த வெறுப்புடனும் அதிகாரத்துடனும் சொன்னுள்.

"இப்படி என் பேச்சிலே குறுக்கிட வேண்டாம். அரசருக்கு வாழ்த்துக் கூறவேண்டியது மிகவும் முக்கியமான காரியம். பொருமையுள்ளவர் கண்களுக்கும் அராஜகத்தை விரும்புவோர் செவிகளுக்கும் என் பேச்சுகள் பயனற்றவைகளாகத் தோன்றும். ஏதோ வீணுக ஆடம்பரம் செய்வதாகவும் நினைக்கலாம். ஆனல் நான் சொல்லுகின்ற ஒவ்வொரு சொல்லும் என் இருதயத்திலிருந்தே எழுபவை. கேவலம் நுனி நாக்கால் பேசும் வார்த்தைகள் அல்ல."

"அரசர்களே! சபையோர்களே! நமது சக்கரவர்த்தி பெருமானுக்குச் சொல்லும் இந்த வார்த்தையிலே சிறிது மாறுதல் செய்துகொள்ளுங்கள். இப்பொழுது நான் சொன்ன இந்த வார்த்தைகள் உங்களுக்கும் பரம திருப்தியை அளித்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை. அந்த வார்த்தைகளையே நீங்களும் சொல்ல விரும்புகிறீர்கள். ஆகவே ஆரியாவர்த்தத்தின் பிரதம சக்கரவர்த்தி என்றே வாழ்த்துங்கள். இன்று நான் அடைந்திருக்கும் ஆனந்தத்தைச் சொல்லமுடியாது. சொல்வதற்குத் தகுந்த சொற்களே இல்லை. ஆகவே இந்த வாழ்த்தொலி பரதகண்டம்

முழுவதும் ஒலிக்கட்டும். எதுவரையில் மனிதவர்க்கம் உலகில் அழிவதில்லையோ அதுவரையில் இவரது கீர்த்தி மங்காமல் உலகில் உலவட்டும்!" என்று சொல்லிவிட்டு உட்கார்ந்தான் ராதாகுப்தன்.

உடனே சபாமண்டபம் முழுவதும் ஜயகோஷம் எதிரொலித்தது. அந்த ஆனந்தமான நிலையில் அசோகன் அரியணையில் அமர்ந்தான். அசோகனுக்கு இப்பொழுது உண்டாகியிருக்கும் இந்த எல்லையற்ற புகழுக்கும் வெற்றிக்கும், இனி உண்டாக விருக்கும் புகழுக்கும் தாமே காரணமாக இருந்ததை எண்ண எண்ணப் புத்திமதிதேவியின் நெஞ்சு கொதித்தது. ஸம்புஷ்டாசாரியனே, 'அடடா! ஏன் இவனுக்கு இத்தகைய புகழை அளிக்க முனைந்தோம்!' என்று தன்னைத்தானே நொந்துகொண்டான்.

ஜயகோஷத்தின் எதிரொலி அடங்கியதும் அசோகன் சபையை வணங்கிப் பேசலானான்: "ஆசாரிய ஸ்வாமிகளே! தாயே! தாங்கள் இருவரும் தங்களது யுக்தியினாலும் சாமர்த்தியத்தினாலும் இளங்கோ வீதசோகனது தோள் வலிமையாலும் கலிங்கத்தை வென்றுவிட்டீர்கள். அதுபற்றி மகதநாட்டு அரியணை தங்களிடம் நன்றி பாராட்டுகிறது. இந்திரபுரத்தில் நுழைவதற்குத் தாங்கள் என்ன என்ன உபாயங்களைச் செய்தீர்கள்? இளங்கோ எத்தகைய வீரச் செயல்களைச் செய்தான் என்பதை ஆதியோடந்தமாகக் கேட்க விரும்புகிறேன். அதைச் சாவகாசமாக மற்றொரு சமயம் பார்த்துக்கொள்வோம். இப்பொழுது கலிங்கநாட்டின் அரசியல் சம்பந்தமாக ஏற்பாடுகள் செய்துவிட்டுப் பாடலிபுரத்திற்குத் திரும்ப விரும்புகிறேன். மன்னன் நரசிம்மன் எங்கே இருக்கிறார்? அவர் உடன்படிக்கை செய்துகொள்ளச் சித்தமாயிருக்கிறாரல்லவா?" என்று சொல்லுகையில்,

"நேற்றிரவு அவரை எவனோ கொன்றுவிட்டான்!" என்று உரத்த குரலில் கூவினாள் விமலை.

"என்ன! என்ன சொல்லுகிறீர்கள்? நரசிம்மன் கொலையுண்டாரா? இதென்ன ஆச்சரியம்!" என்றான் அசோகன்.

"அது மாத்திரமா? அதுவும் அவர் பள்ளியறைக்கு அடுத்தாற்போலவே கொல்லப்பட்டிருக்கிறார். அதைவிட ஆச்சரியம், அவரைக் கொன்றவன், அவரது நம்பிக்கைக்குப் பாத்திரமானவனும், மிகவும் அந்தரங்கமானவனுமான ஒரு மனிதன்!" என்று மிகவும் அமர்த்தலுடன் சொன்னார் ஸம்புஷ்டாசாரியர்.

அசோகன் திகைத்தான். பிறகு, "அப்படியா! இதென்ன விபரீதம்? அப்படியானல் இதை முழுவதும் நன்ருக ஆராய்ந்து, மூலகாரணத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். நரசிம்மனைப் போன்ற சுத்த வீரனை நான் இதுவரையில் கண்டதில்லை. அவருடைய சௌந்தரியத்தை மெச்சி வாழ்த்துரை கூறுவதாக இருந்தேன். சரி; நடந்தது நடந்துவிட்டது. அவருடைய விசித்திரமான உடல் எங்கே இருக்கிறது?" என்று பெருமூச் செறிந்தவனுகக் கேட்டான் அசோகன்.

"கூடாரத்திற்கு வெளியே வைக்கப்பட் டிருக்கிறது" என்ருள் விமலை.

"கொலை எப்படி நடந்தது? எதனுல் கொன்றிருக்கிருர்கள்?"

"வாளினுல்தான்!"

"வாள் கிடைத்ததா?"

"இதோ இருக்கிறது."

"கொலையாளி யார்? அவனைப் பிடித்தாயிற்ரு?"

"அரசனைப் பிடிக்கச் சென்றபொழுது, அரசனைக் கொன்று விட்டு, அவர் படுக்கையருகிலே நின்றுகொண் டிருந்தான் கொலை யாளி! அவனைப் பிடித்துக்கொண்டு வந்திருக்கிருர்கள்" என்ருள் விமலை.

"அப்படிப்பட்ட நராதமன் யார்? அவனை உடனே தண்டிக்க வேண்டும்."

விமலை, தனக்கு அருகில் நின்றுகொண் டிருந்த சேவகனுக்குச் சமிக்ஞை செய்தாள். அசோகனுக்கு இவளது சொற்களும் தோற்றமும் ஆச்சரியத்தை அளித்தன. மிகவும் கம்பீரமான குரலில், "இவ்வளவு விஷயங்கள் தெரிந்த நீங்கள் யார்?" என் ருன் அசோகன்.

இவர் கலிங்கநாட்டு மந்திரி விசாகநந்தனது மனைவி. இவர் பெயர் விமலாதேவி" என்று மிகுந்த மிடுக்குடன் பதில் சொன் ஞன் ஸம்புஷ்டாசாரியன்.

"இந்திரபவன குகையிலே நடந்த கூட்டத்திற்கு முகமூடி அணிந்து, தங்களுடன் வந்தது இவர்தாமோ?"

"ஆம் மகாராஜா!" என்று மென்று விழுங்கிக்கொண்டே கூறினன் ஆசாரியன்.

மறுபடியும் எதையோ நினைத்துக்கொண்டவன்போல், "கலிங்கநாட்டை வெற்றிகொண்டதில் இவர் நமக்குப் பேருதவி செய்திருக்கிருர்" என்ருன்.

"நீங்கள் எப்படி இவர்களுக்கு உதவி செய்தீர்கள்? உங்கள் கணவரையும் வஞ்சித்து, நாட்டையும் எதிர்த்து, முறையற்ற அக்கிரமமான வழியில்தானே இவர்களுக்கு உதவி செய்திருக்கிறீர்கள்?" என்று சற்றே இகழ்ச்சிக்குறி தோன்றக் கேட்டான், அசோகன்.

அதே சமயத்தில் சிதானந்தருடன்கூட விமலையின் சேவகன் உள்ளே நுழைந்தான். சிதானந்தரது முகத்தை ஏறிட்டுப் பார்த்த அசோகன், விமலையை நோக்கி, "இவரைத்தான் நீங்கள் கலிங்க மன்னனைக் கொலைசெய்தவர் என்று குறித்தீர்களோ?" என்ருன் அசோகன்.

"ஆம் மகாராஜா!"

"நன்ருகக் கவனித்துச் சொல்லுங்கள்: ஆலோசித்துப் பேசுங்கள். இந்தத் துறவியா அவரைக் கொன்றவர்!"

அசோகன் சிதானந்தரது முகத்தைக் கண்டவுடனேயே அவர் எத்தகையவர் என்பதை உணர்ந்துகொண்டான்.

பிறகு மிகவும் மிருதுவான குரலில், "அடிகளே! தங்களது திருநாமம் என்னவென்று அறிந்துகொள்ளலாமா?" என்ருன்.

"இந்தச் சரீரத்தைச் சிதானந்தன் என்று சொல்லுவார்கள்" என்று கம்பீரமாக விடையளித்தார் துறவி.

அசோகன் திடுக்கிட்டான். "ஹரித்வாரத்துச் சுவாமி சிதானந்தர் தாங்கள்தாமோ!" என்ற வார்த்தைகள் மிகுந்த மரியாதையுடன் அவன் வாயினின்றும் எழுந்தன.

"ஆம்!" என்று தலையசைத்தார் சிதானந்தர்.

அசோகன் விமலையை ஏற இறங்கப் பார்த்து, "இவர்தாம் கலிங்கநாட்டு அரசரது குரு என்பதைப் பரதகண்டம் முழுவதும் அறியும். தமது சீடனை ஆபத்திலிருந்து காப்பதை விட்டு, இவர்

கொன்றிருப்பாரா? கொன்றிருக்கத்தான் முடியுமா? நீங்கள் இன்னமும் அப்படியேதான் சொல்லுகிறீர்களா?'' என்றான்.

விமலை மிகுந்த பணிவுடன், "அரசே நான் எதையும் அவசரப்பட்டுச் சொல்லுபவள் அல்ல. ஆர அமர யோசித்து எனக்கு நம்பிக்கை ஏற்பட்டால்தான் சொல்லுவேன். இந்த விஷயத்திலும் அப்படியேதான் சொல்லுகிறேன்.''

அசோகன் திகைத்து உட்கார்ந்துவிட்டான். சற்று நேரம் எங்கும் ஒரே அமைதி. மறுபடியும், "அடிகளே! தங்கள்மீது சுமத்தப்பட் டிருக்கும் குற்றச்சாட்டைக் கேட்டீர்கள் அல்லவா? இது விஷயமாக ஏதாவது நீங்கள் சொல்ல விரும்பினால் சொல்லிக் கொள்ளலாம்!''

"கலிங்காதிபதி நரசிம்மன் கொல்லப்படவில்லை. இது ஒன்று தான் நான் சொல்லக்கூடிய பதில்'' என்று மிகவும் சாந்தமாக விடையளித்தார் சிதானந்தர்.

"கலிங்கபதி இன்னும் பிழைத்திருக்கிறாரா!''

"ஆம்; அவர் எங்கேயோ ஓரிடத்தில் உயிரோடுதான் இருக்கிறார்.''

"மன்னரது உடலைக் கொண்டுவாருங்கள்'' என்று கட்டளையிட்டான் அசோகன்.

எல்லோரும் மிகுந்த ஆவலுடன் பார்த்தனர். ஆனால் அது தலையற்ற உடல். "விமலாதேவி! இந்த உடலிலே தலை காணப்படவில்லையே! தலை எங்கே?'' என்றான் அசோகன்.

"என்னைக்காட்டிலும் சிதானந்தர்தாம் இந்தக் கேள்விக்குச் சரியான பதில் அளிக்கக்கூடியவர்'' என்று மிடுக்குடன் சொன்னாள் விமலை.

"சிதானந்தரே! தலையற்ற இந்த உடல் யாருடையது?''

"நரசிம்மனுடையது அல்ல.''

"எப்படி?''

"அவன் உயிருடன் இருக்கிறானென்பது எனக்குத் தெரியும்.''

"விமலாதேவி! இது அரசருடையது என்று நீர் எப்படிச் சொல்லுகிறீர்கள்" என்முன் அசோகன்.

விமலே வாயே திறக்கவில்லை. அசோகன் சிந்தனையில் ஆழ்ந்தான். சிதானந்தரைப்பற்றிய விஷயங்கள் அசோகனுக்குத் தெரியும். அவர் கலிங்க மன்னனிடம் எத்தகைய பேரன்புகொண்டிருந்தார் என்பதும் தெரியும். அதனுல் அவர் கொலை செய்திருக்கவே மாட்டார். 'மன்னன் எங்கே?' என்ற கேள்விக்கு அவர் வேருென்றும் பதில் சொல்லாமல், 'உயிரோடிருக்கிருர்' என்று மட்டுமே சொல்லிவிட்டார். அசோகன் பெரிய சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டான்.

நெடுநேரம் யோசித்த பிறகு, மந்திரி ராதாகுப்தரிடம், "சிறந்த ஐந்து பேர்களை இந்த உடல் விஷயமாக விசாரிப்பதற்கு நியமியுங்கள். பரீக்ஷித்து இந்த உடலைப்பற்றிய முழு விவரத்தையும் எழுதிவையுங்கள். பிறகு அரசருக்குரிய மரியாதை பிறழாமலும், புராதன மதக்கோட்பாடுகளை அநுசரித்தும் அவரது ஈமக்கடன்களை நடத்திவையுங்கள். விமலா தேவியையும் மற்றும் இந்த விஷயங்களில் சம்பந்தம் உள்ளவர்களையும் இன்னும் ஒரு மாதத்தில் பாடலிபுத்திரத்தில் நடைபெறப்போகும் தர்பாருக்கு வரும்படி கட்டளையிடுங்கள். தவிர இந்தத் துணிமணிகள், மற்ற அடையாளங்கள் எவைகள் உண்டோ அவற்றையும் பாடலிபுத்திரத்துக்கு அனுப்பிவையுங்கள். உண்மையில் கலிங்க மன்னன் கொலை செய்யப்பட்டிருந்தால் அதன் உண்மையைக் கண்டுபிடிப்பது நமது கடமை" என்முன்.

மந்திரி ராதாகுப்தன், "சக்கரவர்த்தியாரின் கட்டளைப்படியே" என்முர்.

அசோகன் சிதானந்தரைப் பார்த்து, "அடிகளே! தாங்கள் எம்முடன் எமது ராஜதானிக்கு எழுந்தருளவேண்டும். தங்களுடைய சௌகரியங்கள் தங்களது நிலைக்கு ஏற்றவாறு நடைபெறும். ஜபதபங்கள், நேமநிஷ்டைகள் இவைகளெல்லாம் ஒழுங்காக நடைபெறும்படி மந்திரியார் கவனித்துக்கொள்வார்."

ஸம்புஷ்டாசாரியனது கண்கள் பொருமையால் எரிந்தன. மிகுந்த ஆத்திரத்துடன், "அரசர் பெரும! தாங்கள் சொல்லும் மொழிகள் ராஜ நீதிக்கு ஏற்றவையல்ல. கொலைசெய்தவன் என்று கருதப்படுகிறவனைச் சமதையாகப் பாவித்து உபசரிப்பது தம்போன்றவர்களுக்கு அழகல்ல" என்முன்.

"ஆசாரியரே! ராஜநீதி என்பது அரசர்களுக்கும் குடிமக்களுக்கும் ஏற்பட்டது. தங்களைப்போன்ற உலகைத் துறந்த துறவிகளுக்கு அல்ல. இந்த மாதிரி விவகாரங்களில் குறுக்கிடுவது தங்களைப் போன்றவர்களுக்குச் சோபையை அளிக்காது. சிதானந்தரது மாசற்ற ஒழுக்கத்தையும் அவருக்குத் தம் சீடன்பால் உள்ள அன்பையும் நினைத்துப் பார்க்கும்பொழுது அவர் குற்றமற்றவர் என்றே எனக்குத் தோன்றுகிறது" என்று மிகவும் அமைதியாகச் சொன்னான் அசோகன்.

'அவர் குற்றமற்றவர்' என்ற வார்த்தைகள் செவிக்குள் நுழைந்ததோ இல்லையோ புத்திமதி தேவி, விமலை, ஸம்புஷ்டாசாரியன் இம் மூவருடைய வாயினின்றும், "குற்றமற்றவரா? குற்றமற்றவர் என்று சொல்லுகிறீர்?" என்ற கேள்விகள் ஒரே சமயத்தில் எழுந்தன.

"ஆம்! அதுதான் என் அபிப்பிராயம். அவசரப்பட்டுக் கூச்சல் போடாதேயுங்கள். உங்களுடைய பகைவனை நான் இப்பொழுது விடுதலை செய்துவிட வில்லையே. ஏன் இந்த ஆத்திரம்? அவர் குற்றவாளிதான் என்று நிரூபிக்கப்பட்டுவிட்டால் குரு என்று நம்பியிருந்தவர் சீடனைக் கொலை செய்திருந்தால் மிகக் கடுமையான தண்டனை விதிக்க அஞ்சுபவன் இந்த அசோகன் அல்ல. ஆனால் இந்தப் பழி மத விரோதத்தினாலோ துவேஷ புத்தியினாலோ பொறாமையினாலோ கொண்டுவரப் பட்டதென்று தெரிந்தால், அப்பொழுது விமலாதேவி! இத்தகைய பரம பவித்திரமான மஹாபுருஷன்மீது வீண்குற்றம் சுமத்தி, அவமானம் செய்ததன் பொருட்டு அதே விதமான கடுந்தண்டனையை மற்றவர்களும் ஏற்கச் சித்தமாயிருக்கவேண்டும்" என்றான். அவன் பேச்சிலே உறுதியும் கம்பீரமும் தொனித்தன.

இந்தப் பேச்சுக்கள் விமலையின் மனத்தில் பயத்தை மூட்டின. நெஞ்சம் திடுக்கிட்டது. விளையாட்டாகப் பேசுபவள்போல், "உண்மை அதிசீக்கிரம் வெளிப்பட்டுவிடும்" என்று தெளிவற்ற குரலில் கூறினாள்.

* * *

சிதானந்தர் அவ்விடத்தைவிட்டு வெளியே போனார். அதன் பிறகு மிகவும் முக்கியமான சில விஷயங்கள் நடைபெற்றன. அசோகன் எழுந்து, கலிங்க வெற்றியிலே தங்களுக்குப் பேருதவி

செய்ததன் பொருட்டு விசாகநந்தரைக் கலிங்கநாட்டு அதிபதி யாக்குவதாக அறிவித்தான். இதைப்பற்றி மேலும் சில வார்த்தைகள் கூறிச் சபையோருக்கு விளக்கிவிட்டு, "இனி இந்தக் கலிங்கநாடு முழுவதும் புனிதமான பௌத்தமதம் பரவும். இன்று விசாகநந்தர் கலிங்காதிபதி யாகிவிட்டார்! விமலாதேவி கலிங்க நாட்டு ராணியாகிவிட்டாள்! ஆனால் இறந்துபோனதாகக் கருதப் படும் நரசிம்மன் திரும்பிவந்தால், யாதொருவிதமான தடையு மின்றி அரசுரிமையை அவருக்குத் திரும்பக் கொடுக்கவேண்டியது தான். அல்லது அவரது புதல்வன் இளங்கோ மகேந்திரன் வருவானால் அவன் ஸநாதன தர்மத்தை விட்டுவிட்டுப் பௌத்த தர்மத்தைக் கைக்கொள்ளும் பட்சத்தில் அரசுரிமை அவனுக்கு அளிக்கப்படவேண்டும். இந்த இரண்டு நிபந்தனை களுக்கும் உட்பட்டுத்தான் இன்று கலிங்க நாட்டு அரியணை மந்திரி விசாகநந்தரை வரவேற்கிறது. இதற்கு உட்பட்டேதான், விமலா தேவியும் நடந்துகொள்ள வேண்டும்" என்று சற்றே நிறுத்தினான் அசோகன். "மேலும் இவ்விருவரும் வரத்தவறி இளவரசி ரோகிணி தேவியோ அல்லது ராணி இந்துமதி தேவியோ வருவார் களானால் நமக்குக் கப்பங்கட்டும் முறையிலே அவர்கள் அரசாள லாம்" என்று சொல்லிவிட்டு விசாகநந்தனையும் விமலாதேவியை யும் ஏறிட்டுப் பார்த்தான் அசோகன்.

இந்த வார்த்தைகளை அங்கீகரித்ததற்கு அறிகுறியாகச் சபை யோர் ஆரவாரித்தனர். ஸம்புஷ்டாசாரியனது முகத்திலே ஆனந் தம் ததும்பி நின்றது. தன்னைப் பிறர் எப்படிப் பார்க்கிறார்கள் என்பதை அறிய ஆவலுள்ளவன்போல் நிமிர்ந்து, சுற்றிலும் ஒரு முறை பார்த்துக்கொண்டான். ஆனால் விமலையின் முகம் மட்டும் இந்த மகத்தான வெற்றியின் பெருமிதத்தைக் காட்டவில்லை. அதற்கு மாறாக எதையோ சிந்தித்தவளாக அவள், தன் பற்களால் கீழுதட்டைக் கடித்துக்கொண்டாள்.

'அடடா! அதிர்ஷ்டம் வரும்பொழுது நம்மைக் கேட்டுக் கொண்டா வருகிறது? இந்தச் சில மாதங்களுக்குள்ளேதான் எத்தனை மாறுதல்கள். வெறும் விமலை கலிங்க நாட்டரசி! என்ன ஆச்சரியம்! இந்தக் கிழ மந்திரி விசாகநந்தனுக்குத்தான் என்ன பாக்கியம்! திடீரென்று ஓர் அழகி மனைவியாக வாய்த்தது ஆச்சரியமா? அல்லது கலிங்க நாட்டு மணிமுடி இவர் தலையில் ஏறி யது ஆச்சரியமா? இனி இந்த விமலையின் சாமர்த்தியத்தினால் கலிங்கநாடே தலைகீழாய்ப் புரண்டுவிடாதா! பழைய வைதிக மதம் ஓடி ஒளிய வேண்டியதுதான்.

'நாடு முழுவதும் பௌத்த விகாரங்களும் சைத்தியங்களும் முளைத்தெழுந்துவிடும். பழைய ராஜ குடும்பத்தார் என்னவானார்கள் என்று ஒருவரும் நினைக்கக்கூட மாட்டார்கள்......அடடா! இந்த ஸம்புஷ்டாசாரியருடைய சக்திதான் என்ன? அவரும் ராஜமாதா புத்திமதி தேவியுமாகச் சேர்ந்து, வகுத்த திட்டங்களுக்கு அசோகனை எப்படியோ இணங்க வைத்துவிட்டார்களே! ஆனால் அவன் விதித்த அந்த நிபந்தனை! அது ஒன்றுதான் எனக்குப் பிடிக்கவில்லை. இந்தக் கிழவர்தான் ஆயிற்று; இந்த நிபந்தனையை ஏன் ஒப்புக்கொள்ள வேண்டும்...கேட்பதற்குச் சுலபமாகத்தான் இருக்கிறது. நரசிம்மன் மீண்டும் வந்தால்...அல்லது இளங்கோ மகேந்திரன் பௌத்த தர்மத்தைக் கைக்கொண்டால் கலிங்கம் அவர்களுக்கே சொந்தமாம். மற்ற இருவரையும் பற்றிக் கவலையே இல்லை. ரோகிணி வெறும் குழந்தை. அவளுக்கென்ன தெரியும்?..."மன்னன் நரசிம்மன் இறந்துவிட்டான். இளங்கோ மகேந்திரன் சிதானந்தரது குருகுலத்திலே வளர்ந்தவன். அவன் ஒருநாளும் பௌத்த தர்மத்தைப் பின்பற்றமாட்டான்" என்கிறாள் ராஜமாதா. அவள் இது ஏதோ ஒரு சம்பிரதாயமான சடங்கு என்று நினைக்கிறாள். ஆனால் இத்தனை சிக்கல்களோடு கலிங்க நாட்டுச் சிம்மாசனம் யாருக்கு வேண்டும்? வழியிலுள்ள முட்களை நீக்காவிட்டால் இந்த மணிமுடி நிலைக்குமா?' என்றெல்லாம் ஓடின கலிங்கநாட்டுப் புதிய ராணி விமலா தேவியின் சிந்தனை.

'நிபந்தனை! இந்த நிபந்தனை நீக்கப்படாவிட்டால்...அதை வற்புறுத்துகிறவனையே ஒழிந்துவிட்டால்?'...என்றும் அவள் எண்ணிவிட்டாள். இந்த வார்த்தைகளை மனத்துள் பன்முறை சொல்லிக்கொண்டவளாக அசோகனை ஏறிட்டுப் பார்த்தாள். அவளது முகத்தில் தோன்றிய விகாரத்தை அசோகனும் கண்டுகொண்டான். "விமலாதேவி! எம்முடைய நிபந்தனை உம்முடைய மனத்திடத்தைப் பாதிப்பதாகத் தெரிகிறது. ஆனால் அந்த நிபந்தனையை நீக்க முடியாது. அதை வற்புறுத்தித்தான் ஆகவேண்டும். மன்னன் நரசிம்மன் உயிருடன் திரும்பிவந்தால் ஒருவிதமான நிபந்தனை இன்றியும், இளங்கோ வந்தானானால் பௌத்த தர்மத்தைப் பின்பற்றச் செய்தும், ராஜ்யத்தைத் திருப்பிக் கொடுத்தே தீரவேண்டும்.

"இனி அரசிளங் குமரி ரோகிணியைப் பற்றித்தான் பாக்கி" என்பதற்குள் புத்திமதிதேவி இடை மறித்து, "அவளைப்பற்றி இப்பொழுது யோசிக்கவேண்டிய அவசியம் இல்லை. அவர்களது

குடும்பம் நிலைதாழ்ந்து போய்விட்டது. இனிமேல் அவள் விஷய மாக நமக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. அந்தப் பேச்சு அப்படியே நிற்கட்டும்" என்று மிகுந்த ஆத்திரத்துடன் சொன்னாள்.

அத்துடன் பச்சைக் கூடாரத்து நிகழ்ச்சிகள் முடிந்தன. இந்த அவசரத்தைப் பயன்படுத்திக்கொள்ள முயன்று புத்திமதிதேவி, கலிங்க நாட்டு இளவரசனைப் பிடிக்க உத்தரவு பெற்றுக்கொண்டாள். தர்பார் கலைந்தது. அசோகன் ஜயகோஷத்தினிடையே வெளியே போனான். விமலை அவனை வெறிக்கப் பார்த்து, பற்களைக் கடித்து, 'நிபந்தனை நீக்கப்படாவிட்டால் விதித்தவனையே ஒழித்துவிட மாட்டேனா!' என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டாள்.

# 7

## வனராஜனும் மான்கன்றும்

மேற்குத் திசைமகளின் முகம் நாணத்தால் சிவந்திருந்தது. பறவைகளின் கலகல என்னும் சப்தத்தின் மூலமாக மதியும் தன் வரவை உலகத்திற்கு அறிவித்துக்கொண் டிருந்தான். கதிரவன், தன்னை வரவேற்று உபசரிக்க ஆவலுற்று, நாணத்தால் முகம் சிவக்க நிற்கும் அந்தத் திசைமகளை அடைய வெகு வேகமாகச் செல்லு வதைக் கண்டு, கங்காநதி பொருமை கொண்டாள். அவளது ஒளியைத் தன் நெஞ்சிலே பிரதிபலிக்கச் செய்தவளாய், இயற்கை யரசியால் அளிக்கப்பெற்ற அணிகலன்களால் தன்னை அழகு படுத்திக்கொண்டு, வளைந்து வளைந்து, மிகுந்த கம்பீரத்துடன் தன் கணவனுகிய கடலை நோக்கிச் சென்றுகொண் டிருந்தாள்.

ஒரு முறை அந்தக் கங்காநதியின் அழகிலும் மறுபடி அந்தி வானத்தின் அழகிலும் ஈடுபட்டவனாய் ஓர் இளங்குமரன் கரை யோரத்திலுள்ள ஒரு பாறையின்மேல் உட்கார்ந்திருந்தான். அவன் இப்பொழுதே இளமையின் எல்லையைக் கடந்திருந்தான். இன்பமயமான யௌவனம் என்னும் பூஞ்சோலையின் வாயிலில் நிற்பவன்போல் தோன்றினன். ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருக் கிறன் என்பதை அவனது முகம் தெரிவித்தது.

அவனது அழகிய முகத்திலே பிரம்மசரியத்தின் ஒளி வீசிக் கொண்டிருந்தது. செவ்வரி படர்ந்த அந்த மலர்க் கண்களிலே தூய்மையின் ஒளி. உடல் அமைப்பிலே ஓர் அபூர்வமான காந்தி. இவையெல்லாம் சேர்ந்து அவன் ஏதோ ஒரு பெரிய ராஜ வம்சத்தைச் சேர்ந்தவன் என்று கூறுவதுபோல் இருந்தன. ஆனல் அவனது உடையோ, அவனது தோற்றத்திற்கு நேர்மாருக ஒரு ரிஷி குமாரனே என்று நினைக்கத்தக்கதாக இருந்தது.

அவன் உட்கார்ந்திருந்த பெரும் பாறைக்கு எதிரிலே ஒரு வில் கீழே கிடந்தது. ஒரே நீண்ட வெள்ளாடையை அரையில் உடுத்து, அதன் மிகுதியைத் தாவணி அணிவதுபோல் சுற்றிக் கொண்டிருந்தான். தலையில் அழகிய கேசத்தைத் தவிர வேறு ஒருவிதமான பாதுகாப்பும் இல்லை. அவன் பாறையின்மேல்

உட்கார்ந்தபடியே அந்திநேரத்தின் ஒப்பற்ற அழகிலே ஈடுபட்டு, வெகுநேரம் அந்தக் காட்சியையே பார்த்துக்கொண் டிருந்தான்.

அவன் ஆசிரமத்திலிருந்து நெடுந் தூரம் தாண்டி இங்கே வந்து உட்காருவானேன்? இந்த இயற்கை அரசியின் பேரெழில் எல்லா இடங்களிலும் ஒரேமாதிரிதானே அரசு செலுத்துகிறது. ஆனாலும் இந்த இடமும் இந்தச் சிலாதலமுந்தான் அவனுக்கு மிகப் பிடித்தமானவை. வாசனையைச் சுமந்து வரும் மெல்லிய காற்றும் இடத்தின் சாந்தமான தன்மையும் கங்காநதியின் அற்புதமான காட்சியும் அவனது கண்களையும் கருத்தையும் பிணித்து வைத்திருந்தன. ஆகவே அவன் இங்கேதான் தினந்தோறும் அந்தி நேரத்தைக் கழிப்பது வழக்கம்.

மெல்ல மெல்லச் சூரியன் மறைந்துவிட்டான். இன்னும் இளங்குமரனின் இயற்கை ஆராய்ச்சிகள் முற்றுப்பெற வில்லை. எதிர்பாராத ஒரு சம்பவம் நேர்ந்திராவிட்டால் அவன் இன்னும் எவ்வளவு நேரந்தான் அங்கே இருந்திருப்பானோ தெரியாது. விஷயம் வேறொன்றும் இல்லை. பயத்தினால் நடுங்கிய ஒரு மான் கன்று ஓடிவந்து, அவனருகில் வந்ததும் திகைத்து நின்றது. ஆச்சரிய மிகுதியினால் அவன் திகைத்துப் போனான். "இந்த மானுக்கு எவ்வளவு தைரியம்! கொலைகாரக் கூட்டமான நம்மைச் சரணடைவதுபோல் அல்லவா வந்திருக்கிறது!' என்று நினைத்தவனாய் அந்த மானைத் தடவிக் கொடுத்தான்.

மறு விநாடி மான் ஓடிவந்த அதே திசையிலிருந்து கட்டழகியான ஒரு பெண் ஓடிவந்தாள். அவளது அடர்ந்த குழற்கற்றை, கட்டப்படாமல் காற்றிலே பறந்து, இங்கும் அங்குமாகச் கலைந்து விளையாடிக்கொண் டிருந்தது. வேகமாக ஓடிவந்ததனால் ஆடை ஒழுங்கீனமாகக் கலைந்திருந்தது. பயத்தினால் அவளது கண்கள் மருண்டிருந்தன. வேர்வை, முத்து முத்தாக நெற்றியில் அரும்பியிருந்தது.

மானைக் கண்டபோது உண்டான ஆச்சரியம் இந்தப் பெண் மானைக் கண்டதும் இருமடங்காயிற்று. 'இந்தக் காட்டிலே இந்தச் சின்னஞ்சிறு பெண் எப்படி வந்தாள்?' என்று எண்ணலானான் இளைஞன். தன்னுடைய மான் யாரோ ஒருவனுடன் உறவாடி நிற்பதைக் கண்டு அந்தப் பெண் தன் ஓட்டத்தின் வேகத்தைச் சற்றே குறைத்தாள். ஆனாலும் அவளது பெருமூச்சும் களைப்பும் இன்னும் தணியவில்லை. என்ன செய்வது,

என்ன சொல்வது என்று தெரியாதவளாக அப்படியே நின்று விட்டாள் வந்தவள்.

குமரன் திகைத்தான். தன் இரு கண்களாலும் அவளது பேரெழிலைப் பருகிவிடுபவன்போல் அவளையே பார்த்தவனாகச் செயலற்று நின்றுவிட்டான். உலகமே மறந்துவிட்டது. புனிதமான இந்தக் கங்காநதியின் கரை, சுவர்க்கமென்றும், அந்தக் கட்டழகி தேவமங்கையென்றும் அவன் தீர்மானித்துவிட்டான். அதே சமயத்தில் மான் அவனுடைய உடலிலே உராய்ந்தது. இதனால் அவனது இன்பக் கனவுகள் சிதறின. கால் குரோச தூரத்தில் பூவுலகத்தின் ஹரித்வாரம் இருக்கிறதென்பதும், வெகு சமீபத்தில் உள்ள சிதானந்தரது ஆசிரமும் அங்குள்ள பல சீடர்களில் தானும் ஒருவன் என்பதும் அவனுக்கு நினைவு வந்தன.

ஆனால், 'இந்தக் கட்டழகி இந்தப் பரமசாதுவான மானை ஏன் துரத்த வேண்டும்?' என்ற கேள்வி அவன் மனத்துள் எழுந்தது. அவள் சற்றுச் சமீபத்தில், வந்ததும் "அம்மா! இந்தச் சாதுவான மானை நீங்கள் ஏன் துரத்திக்கொண்டு ஓடி வந்தீர்கள்? இந்தப் பிராணியினால் ஒருவருக்கும் ஒரு தீங்கும் நேரிடாதே" என்றான்.

அவனைக் கண்டதும், குழந்தைபோல் ஓடிவந்ததை யெண்ணி நாணத்தால் தலைகுனிந்தாள் அழகி. ஆடைகளும் கூந்தலும் அலங்கோலமாகக் காற்றில் பறப்பதைச் சற்றே திருத்திக்கொண்டாள். என்ன பதில் சொல்வது என்று விளங்காதவளாகத் தான் ஓடி வந்ததன் பொருட்டுத் தன்னையே கடிந்துகொண்டாள்.

இளைஞனே விடுவதாயில்லை. "அம்மா! நீங்கள் எதன் பொருட்டுத் துரத்தினீர்கள்? என்னிடம் சொல்வதில் ஆட்சேபம் இல்லையே?" என்றான்.

இனிமேலும் பேசாமல் இருப்பது மரியாதை யன்று என்று அவளுக்குத் தோன்றிற்று. மிகவும் பணிவுள்ள குரலில், "ஒரு சிங்கம் இதைத் துரத்திற்று. அதனால்தான் நானும் துரத்திக் கொண்டு ஓடி வந்தேன்" என்றாள்.

அவன் மிகுந்த ஆச்சரியத்துடன், "சிங்கத்தினிடமிருந்து இதைக் காப்பாற்ற உங்களால் முடியுமா!" என்று சொல்லிக் கொண்டே குனிந்து, வில்லையெடுத்து, நாணைப்பூட்டி, காது வரையில் இழுத்தான். அம்பை விடப்போகும் சமயம் சட்டென்று

திடுக்கிட்டான். வில்லினின்றும் அம்பை வாங்கிவிட்டு வில்லைத் தரையில் எறிந்தான்.

இதைக் கண்டு அந்த அழகி சற்றே மலைத்தாள். அவன் வில்லை எடுத்த தோரணையையும், அம்பை வைத்து இழுக்கும் லாகவத்தையும் கண்டு அவன் சிறந்த வில்லாளி என்று அவள் நினைத்தாள். ஆனந்த மிகுதியினால் அவள் கண்கள் மலர்ந்தன. அதுகாறும் கண்டிராத ஓர் ஆனந்த அநுபவம் அவள் நெஞ்சைக் குளிரச் செய்தது. வைத்தகண் வாங்காமல் அவனது ஒப்பற்ற அழகைத் தன் இரு கண்களாலும் பருகலானாள்.

ஆனால் அவன் வில்லைத் தரையில் எறிந்தவுடனே அவளது மனம் மாறத் தொடங்கிற்று. "இவன் வெறும் கோழை! ஏதோ அரங்கத்திலே நடிப்பதுபோல் வில்லைத் தூக்கிவிட்டான். அழகு மட்டுந்தான்; ஆற்றல் இல்லை!" என்று நினைத்தவளாய் இகழ்ச்சிக் குறி தோன்ற அவனை ஏறிட்டுப் பார்த்தாள், அந்த வடிவழகி.

சிங்கமோ, மான் இனித் தன்னை விட்டுப் போகாது என்ற எண்ணத்துடன் மெதுவாக அலட்சியமாக வந்துகொண்டிருப்பதுபோல் இருக்கிறது என்று அவள் எண்ணினாள். அவள் எண்ணத்தை ஆமோதிப்பதுபோல் சிங்கம் ஒய்யார நடை நடந்து வந்துகொண்டிருந்தது.

அவள் முகம் பயத்தினால் சிவந்தது. தன் உயிரையும் மான் கன்றின் உயிரையும்விட வில்லை எறிந்துவிட்டு நிராயுதனாக நிற்கும் அவனைக் காப்பதுதான் கடமையென்று தோன்றிற்று. மான் கன்றும் மிகுந்த பீதியுடன் அவள் அருகே வந்து ஒட்டிக் கொண்டது. என்ன செய்வதென்றே அவளுக்கு விளங்கவில்லை. ஒரு நொடியில் வில்லையும் அம்பையும் எடுத்துச் சிங்கத்தின் தலைக்குக் குறி வைக்கத் தொடங்கினாள்.

அவன்—அந்தக் குமரன்—திடுக்கிட்டான். சட்டென்று எழுந்து வில்லை ஒரு கையாலும், அவளது வலக்கரத்தை ஒரு கையாலும் பற்றினான். அவள் திகைத்தாள். எதிர்பாராத இந்தச் சம்பவத்தால் உடல் படபடத்தது. நாணத்தால் மருண்ட பார்வையுடன், சற்றே புருவத்தை நெறித்து, அவனை ஏறிட்டுப் பார்த்தாள் அந்தப் பெண்மயில்.

குமரனது முகத்திலே இளநகை அரும்பிற்று. இன்னதென்று சொல்லமுடியாத ஒரு இன்பக் கனவிலே ஒரு கணம்

திகைத்துவிட்டான். இதற்குள் சிங்கம் சமீபத்தில் வந்து விட்டது. அப்பொழுதே கனவினின்றும் விழித்தவள்போல் அவன் பிடியை விடுவித்துக்கொண்டு மறுபடியும் அம்பை எய்யத் தொடங்கினுள்.

"தேவி! பொறுங்கள், பொறுங்கள் வீரர்க்குரிய இந்தச் செயலை உங்களுடைய மெல்லிய கரங்கள் ஏன் செய்யவேண்டும்?"

"வீரர்கள் என்று எண்ணப்படுகிறவர்கள் கோழைகள்போல் வில்லைக் கீழே எறிந்துவிட்டால் அவர்களைக் காப்பாற்றும் பொறுப்பு, பிறர்மேலல்லவா விழுகிறது? இந்த மாதிரி சந்தர்ப்பங்கள் நேரும்பொழுது க்ஷத்திரியப் பெண்கள் பின்வாங்க மாட்டார்கள்."

"நிறுத்துங்கள்! நீங்கள் நினைப்பது தவறு. நான் வில்லை ஏன் எறிந்தேனென்று உங்களால் ஊகிக்க முடியவில்லை. என்னைக் காப்பாற்றும் பொறுப்பைக் கட்டழகியான உம்மீது சுமத்தக் கூடிய அவ்வளவு பயங்கொள்ளியல்ல நான்."

"ஆனுல் வில்லைக் கீழே எறிவானேன்?"

"இந்தக் கேள்விக்கு என்னைவிட இந்த வனராஜனே சரியான பதில் சொல்லுவான்" என்று சொல்லியவனுக அந்தச் சிங்கத்தின் அருகே சென்று, அதன் பிடரியைத் தடவிக் கொடுக்கலானுன். ஆச்சரிய மிகுதியினுல் அந்த இளம் பெண் திகைத்துவிட்டாள். கனவா, நனவா? என்று கருதுவதேபோல் அந்த இளங்குமரனையும் சிங்கத்தையும் வைத்த கண் வாங்காமல் மாறி மாறிப் பார்க்கலானுள்.

"அம்மணி! உங்களுடைய பயம், சந்தேகம் இவைகளெல்லாம் நிவர்த்தியாயினவா? இனிமேல் உங்களுக்காவது, உங்கள் மான் கன்றுக்காவது, உங்களால் காப்பாற்றப்பட வேண்டிய எனக்காவது பயமில்லையே" என்ருன். அவனது இதழ்க்கடையில் விஷமத்துடன் கூடிய இளநகை அரும்பிற்று.

அவள் முகம் நாணத்தால் சிவந்தது. தலைகுனிந்தவளாக மெல்லிய குரலில், "தெரியாத்தனமாக உளறிவிட்டேன்; மன்னிக்க வேண்டும்" என்ருள். வெட்கத்தினுலும் பச்சாத்தாபத்தினுலும் வார்த்தைகள் குழறின.

அவளை அன்புடன் பார்த்து, "நீங்கள் வருந்த வேண்டாம். இந்த வனராஜன் பரம சாது. மான்களை அவன் கொல்லுவதே இல்லை. தனக்குக் கெடுதி செய்பவரைத்தான் எதிர்ப்பான். நல்லவேளை! நான் அநியாயமாக இவனை யாரோ என்று நினைத்துக் கொல்ல நினைத்தேன்! உரிய சமயத்தில் தெரியவந்தது. வனராஜ! இன்று நீ பிழைத்தாய்" என்று அதன் முதுகில் தட்டினான். எஜமானனுடன் விளையாடும் சிறு நாய்க்குட்டிபோல் அந்தப் பயங்கரமான சிங்கம் அவனுடன் கொஞ்சிக் குலவி நின்றது.

அந்தப் பெண் சற்றே பயம் தெளிந்தவளாய், "ஓகோ! இவர் வனராஜனா? ஆனால் இன்று நல்ல வேளைதான்! ராஜதரிசனம் கிடைத்தது. முதல் முறை அரசர்களின் சமூகத்திற்கு வெறுங் கையுடன் வரக்கூடாது. முதல் பேட்டியின் அறிகுறியாக இந்த முத்து மாலையை இவர் கழுத்தில் போடுகிறேன்" என்றாள். மாலையைக் கையில் எடுத்து மெதுவாகச் சிங்கத்தை நெருங்கினாள்.

ஆனால் அவளது பார்வை சிங்கத்தின்மீது விழவில்லை. அவளது கண்கள் அக்குமரனது பேரெழிலைப் பருகலாயின. இன்னதென்று விவரிக்க முடியாத ஓர் ஆனந்தம், ஓர் உணர்ச்சி தோன்றலாயிற்று. 'இங்கேயே, இந்த நிலையிலேயே இருந்துவிட்டால் என்ன?' என்றும் தோன்றலாயிற்று. இதுகாறும் கண்டும் கேட்டும் இராத ஓர் ஆனந்தம் அப்பொழுதே கிட்டியதுபோல் அவள் அகமும் முகமும் ஒருங்கே மலர்ந்தன.

அவளது இந்த நிலையை ஒரு நொடியில் கண்டுகொண்டான் அவன். தனது பார்வையால் அவளது இதயத்தையே படித்து விட்டவன்போல், "ஏன்? கையில் எடுத்த முத்து மாலையை அரசருக்கு அளிக்க மனமில்லையா? என்ன தயக்கம்? க்ஷத்திரியப் பெண்கள் சொல் வேறு செயல் வேறு செய்வார்களென்று கேட்டதில்லையே. செயல் முன்னும் சொல் பின்னுமாகவல்லவோ இருக்கும்!" என்று பரிகாசக் குரலில் கூறினான் அவன்.

அவளுக்கு என்ன செய்வதென்று விளங்கவில்லை. அசைவற்று நின்றுவிட்டாள்.

"ஏ, மானே! நீ இன்று யமன் வாயிலிருந்து மீண்டாயல்லவா? அதற்கு ஏதாவது வெகுமதி வழங்கத்தான் வேண்டும். ஆனால் என்னிடம் இந்த மோதிரந்தான் இருக்கிறது. ஆகையால் இதை

உனக்குக் கொடுக்கிறேன்'' என்று கூறி, வெகு அமைதியுடன் முன்னே இரண்டடி வந்து மோதிரத்தை மான் கொம்பில் அவன் மாட்டினான்.

பிறகு சமாளித்துக்கொண்டு அவள், "சொன்னதைச் செய்ய வேண்டியதுதான். ஆனால் இதன் பிடரியில் இந்த முத்து மாலையை அணிவிக்க முடியவில்லை. ஆகையால் இந்த அன்புப் பொருளைத் தங்களிடம் கொடுக்கலாம் அல்லவா?'' என்றாள். அவன் தன் கரங்களை நீட்டி அதைப் பெற்று, வனராஜனுக்கு அணிவிப்பதுபோல் நடித்து, தன் கழுத்திலேயே அணிந்து கொண்டான். அவளும் அந்த மோதிரத்தை மானின் கொம்பி னின்றும் கையில் எடுத்துக்கொண்டு மிகுந்த ஆனந்தத்துடன் அவனையே பார்த்து நின்றாள். அவனும் ஏதோ சொல்ல வாயெடுத் தான். இதற்குள், "இந்திரா! இதென்ன இந்தச் சிங்கத்தினிடம் உனக்குப் பயமில்லையா?'' என்று கேட்டவண்ணம் பயத்துடன் மெல்ல நடந்து வந்து தொலைவிலே நின்றாள் கமலை.

"பயமா? இதோ பார்! நம் மான் கன்றோடு சிங்கம் விளையாடுகிறது! என்ன ஆச்சரியம்! அசோகனது நாட்டிலே எதுதான் நடவாது!'' என்றாள் இந்திரா.

கமலையின் பின்னால் நின்றபடியே எட்டிப்பார்த்தவளாக மற்றொரு தோழி, "ஓகோ! எனக்கு விளங்கிவிட்டது. மிருக ஜாதி வனராஜனும் மான் கன்றும் விளையாடுகின்றனவா? மனித ஜாதி வனராஜனும்——என்றல்லவா தோன்றுகிறது''? என்று பரிகாசமாகக் கூறினாள்.

இந்திரைக்கு அவள்மேல் ஆத்திரம் வந்தது, கோபத்தால் முகம் சிவந்தது. இதற்குள் அந்த விஷமக்காரி அவன் கழுத்திலிருந்த முத்து மாலையைப் பார்த்துவிட்டு, "ஏண்டி இந்திரா! இந்த முத்துமாலை அங்கே எப்படிப் போயிற்று''? என்றாள்.

இந்திரைக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது. இருந்தாலும் வாய் திறக்க வழியில்லை. மௌனமாகக் கேட்டுக்கொள்வது தான் மரியாதை என்று நினைத்தாள். இதற்குள் சற்றுத் தயங்கி, திடீரென்று எதையோ நினைத்தவள்போல், "இங்கேயே எவ்வளவு நேரம் நிற்கப் போகிறாய் இந்திரா? இன்றைக்கே பாடலிபுத்திரத் திற்குத் திரும்பிவிட வேண்டுமென்று சுபத்திராங்கி தேவியார் நிச்ச

யித்து விட்டார்; கலிங்க நாட்டு யுத்தம் முடிந்துவிட்டது" என்றாள்.

"என்ன சொல்லுகிறீர்கள்? கலிங்கநாட்டுப் போர் முடிந்து விட்டதா? நல்லது. முடிவு என்னவாயிற்று?" என்று மிகுந்த ஆவலுடன் கேட்டான் அந்த இளைஞன்.

"என்னவாகும்? நினைத்த படிதான் நடந்தது. வெற்றிமேல் வெற்றி பெற்ற அசோகனுக்கு இங்கேயும் வெற்றிதான். கலிங்கர் கோன் நரசிம்மனை எவனோ கொன்றுவிட்டானாம்" என்றாள் சரோஜினி.

* * *

குமரன் திடுக்கிட்டான், "என்ன கலிங்கமன்னரா! கொலையுண்டாரா! என்ன இப்படிச் சொல்லுகிறீர்கள்" என்றான். அவன் குரலில் பதை பதைப்பு; முகம் வெளேரென் றிருந்தது.

"ஆமாம்; கலிங்கத்திலிருந்த ஆள் மூலமாகத் தகவல் வந்தது. அவன்தான் இந்திரபுரத்திலிருந்து வெற்றிச் செய்தியும் கொணர்ந்தான். யாரோ சுவாமி சிதானந்தர் என்பவர்தாம் கொன்றாராம்."

"என்ன? என்ன? சிதானந்தரா? அவரைப் பிடித்து எங்கே வைத்திருக்கிறார்கள்"?

"சக்கரவர்த்தியோடு கூடவே பாடலிபுத்திரத்திற்குக் கொண்டுபோகிறார்களாம்."

இதற்குமேல் அவன் ஒன்றும் பேசவில்லை. அவன் முகத்தில் சோகம் குடிகொண்டது. எதையோ எண்ணியவனாகச் செயலற்று உட்கார்ந்துவிட்டான். அவனது முகவேறுபாட்டைக் கண்டு திகைத்து நின்றுவிட்டாள் இந்திரை. சட்டென்று, 'இவன் கலிங்க மன்னனுக்கு நெருங்கிய உறவினனாக இருக்கலாமோ? இல்லாவிட்டால் செய்தியைக் கேட்டவுடன் இவ்வளவு தடுமாற்றமும் துக்கமும் ஏற்படுவானேன்?' என்று தோன்றிற்று. மிகுந்த வணக்கத்துடன், "தங்களது திருநாமம் என்னவென்பதை நான் தெரிந்துகொள்ளலாமா?" என்று அன்பும் பணிவும் கலந்த குரலில் கேட்டாள்.

இளைஞன் பெருமூச் செறிந்தான். "இந்திரா! என் பெயரைத் தெரிந்துகொள்ள விரும்பாதே. அதனால் உனக்குத் துக்கமே

உண்டாகும். எப்பொழுதாவது ஈசுவர ஆக்ஞை இருந்து, நல்ல காலம் பிறந்தால் என் பெயரை நானே வலிய வந்து தெரிவிக்கிறேன். இன்று நாம் சந்தித்தது மட்டும் உன் நினைவில் இருந்தால் அதுவே என் பாக்கியம். நான் சிதானந்தரது மாணுக்கன். அவரது ஆசிரமத்திலேதான் வசிக்கிறேன். இப்போதைய நிலைமையில் என் துரதிருஷ்டப் பெயரைச் சொன்னுல் அது நன்மை தராது. சொல்லுவதைவிடச் சொல்லாமல் இருப்பதே சிலாக்கியம்'' என்று சொல்லுகையில் அவன் குரல் கம்மிப் போயிற்று ; கண்கள் கலங்கின. அவனை ஏறிட்டுப் பார்த்து, பின் தலையைக் குனிந்து கொண்டாள் இந்திரை.

இந்திரை ஏதோ சொல்ல விரும்பினுள். எதிர்பாராத இந்தச் சோகமும் மௌனமும் அவள் மனத்தைக் குழப்பிவிட்டன. சற்றே தயங்கினுள். வார்த்தைகள் வாயை விட்டு வர மறுத்தன: சற்றே நிதானித்தாள். பிறகு மெல்ல மெல்ல அவன் அருகில் வந்து, "ஒரே ஒரு வார்த்தை, இனிமேல் இந்த மோதிரத்தின் சிந்தனையிலேயே என் வாழ் நாட்களைக் கழிப்பதாகத் தீர்மானித்து விட்டேன். நீங்களும் என் முத்துமாலையை மறக்கக்கூடாது" என்று சொல்லுகையில் அவளுக்கு நா, தழு தழுத்தது.

"இல்லை! இல்லை! இந்திரா! உடலில் உயிர் உள்ளவரையில், ஞாபகசக்தி என் மனத்தை விட்டு அகலாதிருக்கும் வரையில் முத்துமாலையை மட்டும் அல்ல; அதை அளித்த மலர்க் கரங்களையும் என்னுல் மறக்க முடியாது" என்று சொல்லுகையில் அவன் கண்களில் துளிர்த்து நின்ற நீர்த்துளிகள் பலபலவென்று சிதறின.

இந்திரை மெல்ல மெல்ல நடந்தாள். இவனுக்குப் பிரதியாக நாம் போவோம் என்று நினைத்ததுபோல் அந்த வனராஜன் அவளைத் தொடர்ந்து செல்லலாயிற்று.

* * *

**வ**னராஜன் திரும்பி வந்தபொழுது கொதித்துக்கொண்டிருந்த பூமிதேவியைச் சந்திரன் தனது குளிர் கிரணங்களால் சாந்தப்படுத்திக்கொண் டிருந்தான். கங்காதேவியும் நிலவின் ஒளியில் மயங்கியவளாக மெதுவாகச் சென்றுகொண் டிருந்தாள். வந்த வனராஜன் திகைத்தான். ஏன்? அந்தச் சிலாதலத்தின்மேல் ஒரு பிக்ஷு உட்கார்ந்திருந்தான். முதலில் அவனைப் பார்த்து இடிபோல் உறுமினுன். ஆனுல் அந்தப் பிக்ஷுவின் குரலைக்

கேட்டதும் பணிந்து, அருகில் சென்று அவனது பாதங்களை நக்கத் தொடங்கினன்.

" வனராஜா! உனக்காகத்தான் காத்திருந்தேன். இனி விடை கொடு" என்று சொல்லியவனாக, அதன் பிடரியைக் கட்டிக்கொண்டு அவன் கண்ணீர் சிந்தினன். 'வனராஜனே திகைத்தான் என்றால் எனக்கு இந்தப் பிக்ஷு வேஷம் மிகவும் பொருந்தி யிருக்கிற தென்றல்லவா தெரிகிறது' என்று எண்ணி யவனாக எழுந்தான் பிக்ஷு. வனராஜன் பின் தொடர்ந்தான்.

# 8

## மதுரா நகரில்

மதுரா நகரத்தின் பௌத்த தேவாலயங்களின் வானளாவிய சிகரங்கள் தெரிய ஆரம்பித்தன. அந்தத் தேவாலயங்களிலிருந்து புறப்பட்டு வரும் பெரிய பெரிய ஆராய்ச்சிமணிகளின் ஓசை, காதுகளைச் செவிடுபடச் செய்தது. மணியின் இந்தப் பேரொலியைத் தவிர அங்கே வேறு சந்தடியே இல்லாமல் மனிதப் பூண்டற்ற வெறும் சூனியமான இடமோ என்றுகூடத் தோன்றிற்று.

நகரத்தை அடுத்த பூஞ்சோலைகளிலிருந்து தென்றலானது வாசனையைச் சுமந்துவந்து, நகரெங்கும் நிறைத்தது. அந்த நகரத்தின் உயர்ந்த மாளிகைகளின் தங்கமயமான தூபிகள் செல்வத்தின் பெருக்கை விளம்பரப் படுத்திக்கொண் டிருந்தன. அந்த நகரத்தை நோக்கி மூன்று பிரயாணிகள் சென்றுகொண் டிருந்தார்கள். அவர்களுள் ஒருவன் இளைஞன்.

"சாமசுந்தரரே! நீங்கள் சொல்கிறீர்களே, அந்த மதுரை இதுதானே? இங்கிருந்து பார்த்தால் தேவாலயங்களைத் தவிர வேறு ஒன்றுமே தெரியவில்லையே. இந்தமாதிரி, காதுகளைத் தொளைக்கும்படி கண்டாமணி அடித்துக்கொண்டே இருந்தால் சுற்றுப் பதின்காதத்திற்கு ஜனங்கள் வரக்கூட அஞ்சுவார்கள். இந்தத் தலைவேதனையைச் சகித்துக்கொண்டு யார்தான் இங்கே குடியிருக்க முடியும்? அப்பப்பா! என்ன ஓசை! என்ன ஓசை! பித்துப் பிடித்துவிடும்போல் அல்லவா இருக்கிறது" என்றான் இளைஞன்.

அடுத்தாற்போல் இருந்த பெரியவள், "அம்மா! கடிவாளத்தை நழுவ விட்டுவிடாதே. சரியாக உட்கார்ந்துகொள்" என்று சொல்லியவளாய்த் தான் உட்கார்ந்திருந்த குதிரையை அவளுக்குச் சமீபமாக நடத்தி, "ரோகிணி, எனக்கும் முதலில் அப்படித்தான் தோன்றிற்று. மாளிகைகளைப் பார்த்த பிறகுதான் 'இது நகரந்தான்; மனிதர்கள் இங்கே வசிப்பார்கள்' என்று தோன்றுகிறது" என்றாள். "ஏதோ மாளிகைகள் தெரிகிறதே

தவிர இது மதுரா நகரமாக இருக்குமென்று எனக்குத் தோன்ற வில்லை! அப்படி ஒருவேளை இருந்திருந்தாலும் இந்த மணி ஓசை யினுல் பாழாகப் போயிருக்கும். நகரத்திற்கு இவ்வளவு சமீபத்தில் வந்தும் மனித சஞ்சாரத்துக்கான அறிகுறி ஒன்றையுமே காணுமே? எனக்கு இது மதுரா நகரமாக இருக்கும் என்றே தோன்றவில்லை. சாமசுந்தரர் சொன்ன மதுரா நகரம் வேறு ஏதாவதோ?''

"இல்லை அம்மணி, நான் குறித்த மதுரை நகர் இதுவேதான். இன்னும் சற்று முன்னே சென்ருல் உங்களுக்குப் புரியும். ஆனுல் நான் ஒரு வார்த்தை சொல்லுகிறேன். இந்துமதி ராணி அவர் களே! நீங்களும் இதைக் கேட்டுக்கொள்ளுங்கள். அது சரியோ தப்போ சொல்லிவிடுகிறேன். சொல்லட்டுமா?'' என்று பீடிகை போட்டான் சாமசுந்தரன்.

* * *

**ரோ**கிணி கொல்லென்று சிரித்து, "இவ்வளவு பெரிய பூர்வ பீடிகையைப் பார்த்தால் விஷயம் ரொம்ப பலமாயிருக்குமோ என்று சந்தேகிக்கிறேன். ஆனுல் உங்களிடம் அப்படிப்பட்ட பெரிய விஷயம் ஒன்றும் இராது என்று தெரியும்'' என்ருள்.

அவன் கனைத்துக்கொண்டு ஏதோ பெரிய பிரசங்கம் செய் யப் போகிறவன்போல் உடலை நிமிர்த்திக்கொண்டு, "ராணி இந்துமதிதேவியே! இனிமேல் நீங்கள் ரோகிணியை அவள் சொந்தப் பெயரால் அழைக்கக் கூடாது. நீங்கள் ஆண்வேஷத் தில் இருக்கும் அவளை, 'ரோகிணி! ரோகிணி! என்று கூப்பிட் டால் விஷயம் விபரீதம் ஆகிவிடும். ஹரித்வாரம் போய்ச் சேரும் வரையில் நாம் மிகுந்த ஜாக்கிரதையுடன் போகவேண்டும். ஆகவே அவளுக்கு ஏதாவது ஒரு புதுப் பெயர் வைக்க வேண்டும். அவளை 'ரமேசன்' என்று கூப்பிடுவோம்'' என்ருன்.

"ஆனுல் நீங்கள் மட்டும் நொடிக்கு நூறு முறை, 'ராணி, இந்துமதி, ராணி சாகிபா!' என்று சொல்லிக்கொண்டே பேசி னுல் ஒருவருக்குமே புரியாதோ! நீங்கள் இதைவிடக் கலிங்க நாட்டு அரசியே என்று கூப்பிட்டுவிடுங்கள். நாம் மூவரும் கட்டாயமாக இந்தப் பூலோகத்து ஹரித்வாரத்தைவிட நிஜமான ஹரியின் வாயிலுக்கே போய்விடலாம்'' என்று பரிகாசக் குரலில் கூறினுள் ஆண் உடையில் இருந்த ரோகிணி.

சாமசுந்தரன் சிரித்தான். "ரோகிணி" என்று மறுபடியும் கூப்பிட்டாள் ராணி இந்துமதிதேவி.

"அடடா! மறுபடியும் இப்படியே கூப்பிடுகிறீர்களே. 'ரமேச மகாராஜா!' என்று கூப்பிடுங்கள்."

"நல்லது ரமேச மகாராஜா? நீங்கள் வீணுகச் சாமசுந்தரரைப் பரிகசிக்கவேண்டாம். என்ன இருந்தாலும் பெரியவர். முன் யோசனையுடன்தான் பேசுவார். அநாவசியமான விஷயத்தைப் பிரமாதப் படுத்தமாட்டார். ஆகையால் அவர் சொல்லுகிறபடி நாம் கேட்டுக்கொண்டே போவோம்" என்றுள் இந்துமதிதேவி.

"நல்லவேளை! முதல் சங்கதியை ஒப்புக்கொண்டீர்கள். இரண்டாவதாக இன்னென்று இருக்கிறது. அதைச் சொல்லட்டுமா?"

"சரி; சொல்லுங்கள்."

"மகாராணி அவர்கள் வேறு ஒரு பெயரை வகிப்பது நல்லதென்று தோன்றுகிறது."

ரோகிணியின் சிரிப்பைக்கண்டு சாமசுந்தரன் அவ்வளவோடு நிறுத்திவிட்டான். ஆனால் இந்துமதி மிகவும் தணிந்த குரலில், "நீங்கள் சொல்வதும் நியாயந்தான். ஆனல், 'தேவி, ராணி' என்று குறிக்காமல் கூப்பிட்டால் ஒருவரும் கண்டுகொள்ள முடியாது. என் மட்டில் பகைவர்களுக்கு நடுவிலே இருந்தாலும் ஒருவரும் ஒன்றும் செய்யமுடியாது. இந்தப் பெண்ணைத்தான் வெகு பத்திரமாகக் காப்பாற்றவேண்டும்" என்று பெருமூச் செறிந்தாள்.

ஆண் வேஷத்தில் இருந்த ரோகிணி, வேஷத்திற்குரிய கம்பீரத்தோடு அவ்விருவரையும் பார்த்துத் தன்னையும் ஒருமுறை பார்த்துக்கொண்டாள்.

அந்தப் பார்வை, 'ஒரு க்ஷத்திரிய வீரன் தன்னைத்தான் காத்துக்கொள்ள மாட்டானு?' என்று கேட்பதுபோல் இருந்தது.

சாமசுந்தரன் மிகுந்த பணிவுடன், "தேவி! இப்பொழுது நம்முடன் வருவது இளவரசர் மகேந்திரன் என்றே தோன்றுகிறது. ராணி சாஹெப், உங்களுக்கு ஞாபகம் இல்லையா?

ஐந்தாறு வருஷங்களுக்கு முன் யுவராஜன் வந்தபொழுது நான் இருவருக்கும் ஒரேமாதிரி உடை உடுத்து, ராஜ சபைக்கு அழைத்துப்போனேன். அங்கே போனதும் யார் நிஜமான மஹேந்திரன் என்று எங்களுக்கே தெரியவில்லை. சிலர் யுவராஜாவுக்கும் சிலர் குமாரிக்கும் வந்தனம் செய்தார்கள். நான் மட்டும் இருவருக்கும் வந்தனம் செய்துவிட்டேன். என்னைப் பார்த்த பிறகே மந்திரி விசாகநந்தரும் வணங்கினர். மகாராஜா என் புத்தி சாதுரியத்தை வியந்தார். இந்தக் கற்பனையே என்னுடையதுதான் என்றேன். அதற்குத் தகுந்த வெகுமதியும் கிடைத்தது" என்றார்.

"எனக்குச் சரியாக ஞாபகம் இல்லை; அப்படியா? என்ன வெகுமதி கொடுத்தார்?" என்றாள் கண்களில் விஷமம் தோன்ற ரோகிணி.

"ராணி சாஹெப்! ஸர்தார் பதவி கொடுத்தார்."

"அட ராமா! மறுபடி பழைய பல்லவிக்கே வந்துவிட்டீரே!"

"என்ன, ராணி சாஹெப்?"

"சே! சே! முழு மோசம்" என்று புருவத்தை நெறித்தாள் ரோகிணி.

சாமசுந்தரன் மிகுந்த பயத்துடன், "நான் வேண்டுமென்று சொல்லவில்லை. வாய் தவறி வந்துவிடுகிறது" என்றான்.

"பரவாயில்லை. வெறும் 'பாயி சாஹெப்' என்று சொல்லிவிடுங்களேன்" என்றாள்.

"பாயி சாஹெப்! நேற்று அசைப்பில், யுவராஜன் என்றே ஏமாந்து போனேன்" என்றான்.

"இன்னும் எத்தனை நாளில் ஹரித்வாரம் போவோம்? எனக்கு அண்ணாவைப் பார்க்க வேண்டுமென்று ஆவல் துடி துடிக்கிறது" என்றாள் ரோகிணி.

"ஆமாம்; குழந்தையைக் கண்ணால் கண்டு எத்தனையோ நாள் ஆகிறது. எப்பொழுது போய்ச் சேர முடியுமோ?" என்று பெருமூச் செறிந்தாள் தேவி.

சாமசுந்தரன் விரல்களை எண்ணி எண்ணிக் கணக்கிட்டு, கடைசியாக, "இங்கிருந்து இருபத்தைந்து யோசனை தூரம்" என்றான்.

"ஆனால் இன்னும் எட்டுநாள் பிரயாணமா? இந்தக் குதிரைகள்தான் சுமக்குமா?" என்றாள் தேவி.

"ஆம்; எட்டு நாள் ஆகும். இந்திரபுரத்தைவிட்டுப் புறப்பட்டது முதல் நமக்கும் ஓய்ச்சல் இல்லை; குதிரைகளும் பாவம், நிற்கக்கூட இல்லை. இங்கே இரண்டு நாள் தங்கிவிட்டுப் பிறகு ஹரித்வாரம் போவோம்."

"ஆனால், இரண்டு நாள் முழுவதும் மதுரையிலேயே ரகசியமாக இருக்க முடியுமா? யாராவது—" என்பதற்குள்,

"தேவி! மதுரையைப்போன்ற பெரிய நகரத்தில் இரண்டு நாள் மறைந்திருப்பது ஒன்றும் பிரமாதமான விஷயமல்ல. மேலும் இந்த ஊரில் எனக்குத் தெரிந்த பெரிய வியாபாரி ஒருவர் இருக்கிறார். அவர் எனக்கு உயிர்த் தோழர். அவர் வீட்டிலே நாம் தாராளமாக இரண்டு நாள் அல்ல; இரண்டு வருஷங்கூடத் தங்கலாம்" என்றான்.

தேவிக்கு இது சரியென்றே தோன்றிற்று. ஆனால் ரோகிணி, "இந்தப் பாழும் ஊரில் நுழையவே வேண்டாம். இந்த மணிச் சத்தத்தினால் காது செவிடாகவே போய்விடும்" என்றாள்.

நகரத்தில் நுழைந்த உடனே அவர்களுக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. அந்த நகரத்தின் அழகையும் மாடமாளிகைகளையும் மிகுந்த சுறுசுறுப்புடன் இங்குமங்கும் ஓடிக்கொண்டிருக்கும் மக்களையும் கண்டு தேவியும் ரோகிணியும் ஆச்சரியம் அடையாமல் என்ன செய்ய முடியும்! சாமசுந்தரன் இருவரையும் அழைத்துக்கொண்டு, குறிப்பிட்ட இடம் வந்து சேர்ந்தான். தன் பழைய நண்பன் ஓடிவந்து, தன்னை வரவேற்பான் என்று நினைக்க அவன் மனம் ஆனந்தத்தால் மலர்ந்தது. வெளியே நின்று அங்கிருந்த ஒருவனிடம் தன் வருகையைத் தெரியப்படுத்தினான். அவன் உள்ளே நுழைந்து, மறைந்து போனான். சற்று நேரம் நின்றார்கள்.

அரசி குதிரையின்மீதிருந்து கீழே இறங்கி, நின்றுகொண்டாள். ரோகிணியோ விஷயம் தெரியாமல் கீழே இறங்கத் துணிய

வில்லை. இன்னும் சற்று நேரம் ஆயிற்று. இந்துமதி பொறுமையை இழந்தாள். "என்ன? சாமசுந்தரரே! வீடு தப்பி வந்து விட்டீரோ? அல்லது உமது நண்பர் இல்லையா? வீடு இதுதான் என்பது நிச்சயந்தானு? அண்டை அயலில் விசாரியுங்களேன்" என்ருள்.

"இவ்வளவு கஷ்டம் என்னத்திற்கு? ஏதாவது ஒரு சத்தி ரத்தில் தங்கி, இராப்பொழுதைக் கழித்துவிட்டு, காலையில் புறப்பட்டுவிடுவோமே" என்ருள் ரோகிணி.

"ரமேச மகராஜ்! சற்றுப் பொறுங்கள்; நான் வந்திருக்கி றேன் என்று தெரிந்ததும் என் நண்பன் நந்திகுப்தன் எப்படி எதிர்கொண்டழைக்க வருகிருன் என்பதைப் பாருங்கள்" என்ருன்.

"முன்னே சென்ற மனிதன் உங்கள் வார்த்தையைக் காதில் வாங்கிக்கொண்டதாகவே தெரியவில்லையே? வேறு யாரை யாவது உள்ளே அனுப்புங்கள்" என்ருள் ரோகிணி.

வழியே போய்க்கொண் டிருந்த ஒருவனை அழைத்து, "உள்ளே போய், நந்திகுப்தச் செட்டியாரிடம் நான் வந்திருக் கிறேன் என்று சொல்" என்ருன்.

'நான்' என்ற தொனியின் அழுத்தத்தைக் கேட்டு அவனை ஏற இறங்கப் பார்க்கலானுன் அந்த மனிதன். "நான்—கலிங்கத் திலிருந்து சாமசுந்தரன்—வந்திருக்கிறேன் என்று சொல்" என் ருன். இவனுடைய அதிகாரத்துடன் கூடிய வார்த்தைகளைக் கேட்டுவிட்டு, அவர்களை ஏற இறங்க ஒருமுறை பார்த்துவிட்டு அவன் தன் வழியே போனுன்.

சாமசுந்தரனுக்குத் தன்னுடைய நண்பனிடம் அசாத்தியமான கோபமும் எரிச்சலும் உண்டாயிற்று.

"உங்களுடைய சரித்திரம் முழுவதையும் சொல்லிக்கொண் டாலும் ஏனென்று கேட்பார் இல்லை. ஒன்று, நீங்களே உள்ளே போய்ப் பாருங்கள். இல்லாவிட்டால் நேராகச் சத்திரத்திற்கே போய்விடுவோம்" என்று கோபமும் வெறுப்பும் தோன்றச் சொன்னுள் ரோகிணி.

அவனுக்கு மிகுந்த கவலையாகிவிட்டது. தான் மட்டுமானால் எங்கேயாவது தங்கிவிடலாம். இப்பொழுது இவர்களைக் காக்கும் பொறுப்பு வேறு. மெல்லத் தயங்கியவனாக உள்ளே நுழைந்தான்.

மறுபடி அவன் வெளியே வந்தபொழுது அவன் முகத்தில் துக்கத்தின் அறிகுறி தோன்றலாயிற்று. "என்ன? அவர் இருக்கிறாரா?" என்றாள் தேவி.

"அவர் போய்விட்டார்" என்றான். அவன் குரலிலே துயரம் கலந்திருந்தது. இந்துமதி அவன் அருகில் வந்து மிகவும் மெல்லிய குரலில், "எப்பொழுது?" என்றாள்.

"பத்து வருஷம் ஆயிற்றாம்."

அந்த நிலையிலும் கொல்லென்று சிரித்துவிட்டாள் ரோகிணி. "பத்து வருஷந்தானா? ஆனால் அவருக்கும் உங்களுக்கும் எப்பொழுது முதல் பரிச்சயம்?"

"நாற்பது வருஷங்களுக்கு முன் அவரும் நானும் ஒன்றாக விளையாடியவர்கள்."

"அடடா! அவ்வளவு பழைய நண்பர் வீட்டிற்கா இவ்வளவு உபசாரம். சரி; மேல் சங்கதியைப் பார்ப்போம்."

"மேல் என்ன? செத்தவனை நினைத்து வருந்துவதனால் என்ன லாபம்?" என்று தனக்குள் சொல்லிக்கொண்டான் அவன்.

"அதைப்பற்றி இப்பொழுது கேட்கவில்லை. நாங்கள் எங்கே தங்குவது என்று கேட்கிறேன்" என்று மிகுந்த வெறுப்புடன், இப்படிப்பட்ட அசடனுடன் வந்துவிட்டோமே என்று வருந்துபவள்போல் அவனைப் பார்த்தாள் தேவி.

"பாயி ஸாஹெப்! நண்பனுடைய சோகத்தினால் எனக்கு ஒரு மாதிரி ஆகிவிட்டது; மன்னிக்கவேண்டும். நந்திகுப்தனுடைய—" என்பதற்குள், இந்துமதி வெகு கோபத்துடன் "அவனுடைய பெயரையே எடுக்கவேண்டாம்" என்று சீறினாள்.

"தேவீ! கோபிக்கவேண்டாம். கொஞ்சம் என் பேச்சுக்குச் செவிகொடுங்கள். அவன் மகன் உபகுப்தன் என்று ஒருவன் இருக்கிறான். அவன் வீட்டில் இன்றிரவைக் கழிப்போம்" என்றான்.

## 9

## செட்டியார் உபகுப்தனர்

நெடுநேரம் தேடித் தேடிக் கடைசியில் உபகுப்தனரது வீடு வந்து சேர்ந்தார்கள். தன் தகப்பனருடைய நண்பர் என்று தெரிந்ததும் அவர் மிகுந்த அன்புடன் அவர்களை எதிர்கொண்டு அழைத்துச் சென்றார். ஆனால் சாமசுந்தரன் நினைத்தபடி அவரது வீடு பெரிய அரண்மனையாகவோ பெரிய மாளிகையாகவோ இருக்கவில்லை. மிகவும் சாதாரணமான ஒரு சிறு வீடு. முன் பகுதியிலே ஒரு சிறு கடை. சில்லறைச் சாமான்களும் வாசனைத் திரவியங்களும் வைத்திருந்தன. அடுத்தாற்போல் சிறு நடை. அதன் ஒருபுறம் பூஜையறை. எதிர்ப்புறம் சமையல் அறை. இவற்றைத் தாண்டி ஒரு முற்றம். இவ்வளவுதான். சாமசுந்தரனின் மனக் கண்கள் முன்பு இது செட்டியாருடைய வீடாகவே தோன்றவில்லை. சமையலறையிலே ஓர் அழகிய ஸ்திரீ சமையல் செய்துகொண் டிருந்தாள். வரவேற்ற மனிதன் உபகுப்தனது வேலைக்காரனாக இருக்கலாம் என்று நினைத்தான். செட்டியார் குதிரைகளைப் பிடித்துக்கொண்டு பின்புறமுள்ள கொட்டிலில் கட்டிவிட்டுத் திரும்பிவந்து நின்றார்.

சாமசுந்தரனே அரசியிடம் தன்னுடைய கற்பனையின்படி இவரை வேலைக்காரனென்றும், சமையல் செய்துகொண் டிருந்தவளைச் சமையற்காரி யென்றும் சொல்லிவைத்தான்.

"நெடுந்தூரத்திலிருந்து வருகிறாற்போல் இருக்கிறது. சற்றுச் சிரமபரிகாரம் செய்துகொள்ளுங்கள். ஸ்நான பானத்திற்கு ஏற்பாடு செய்திருக்கிறது. பிறகு ஸ்நானம் செய்யலாம்" என்று மிகுந்த பணிவுடன் கூறினர் செட்டியார்.

"தங்கள் பெயரைத் தெரிந்துகொள்ளலாம் அல்லவா?" என்றான் சாமசுந்தரன்.

"உபகுப்தன் என்று சொல்லுவார்கள்."

"ஆனால் எஜமானனுக்கும் சேவகனுக்கும் ஒரே பெயரா? உபகுப்தர் அந்தப் பெரிய மாளிகையை ஏன் விற்றுவிட்டார்? வேறு எங்கேயாவது கட்டியிருக்கிறாரா? நாளைக்குச் சாவகாச

மாக அவரைப் பார்ப்போம்" என்றான் சாமசுந்தரன். அவனுக்கு இந்தச் சிறு வீடும் இந்த எளிய மனிதனும் நந்திகுப்தனைச் சேர்ந்தவர்கள் அல்லவென்றே தோன்றின.

"பெரியவரே! நந்திகுப்தருடைய மகன் உங்கள் முன் நிற்கும் நானேதான். அவருடைய கீர்த்தி அந் நாளிலே எப்படிப் பரவிநின்றதோ அதேபோலத்தான் இன்றும் மங்காமல் இருக்கிறது. அவருடைய புகழைக் கேட்ட பிறகு என்னைப் பார்ப்பவர்களுக்கு நான் அவர் மகன் அன்று என்று தோன்றுவதில் ஆச்சரியமில்லை" என்று மிகுந்த பணிவுடன் கூறினார் செட்டியார்.

"நான் அவரைப்பற்றிக் கேள்விப்பட்டவன் அன்று. அவருடன் கூடவே இருந்து அநுபவித்திருக்கிறேன். என்னிடம் அளவற்ற அன்பு வைத்திருந்தார்."

செட்டியாருடைய முகம் சந்தோஷத்தால் மலர்ந்தது. "என் தகப்பனாரின் நண்பரைப் பார்க்கக் கிடைத்தது என் பாக்கியம். எனக்குத் தங்களை எப்படிப்பட்ட மொழிகளால் உபசரிப்பது என்பதே தெரியவில்லை. இன்று பத்து வருஷம் கழித்து, என் தந்தையையே நேரில் காண்பதுபோல் மகிழ்கிறேன்" என்றார்.

சாமசுந்தரன் பாடு பெரிய ஏமாற்றம் ஆகிவிட்டது. 'அந்தக் கோடீச்வரனா இவன் தந்தை! அடடா! எப்படி இவ்வளவு தாழ்மையான நிலைக்கு வந்துவிட்டார்கள்!' என்று சிந்திக்கலானான்.

இவர் போய்விடலாமென்று யோசிக்கிறாரோ என்று எண்ணியவனாய், "தந்தையார் காலத்திற்குப் பிறகு காலத்தின் கதியே மாறிவிட்டது. ஆகவே நிலைமைக்குத் தக்கபடி உங்களை உபசரிக்க முடியாதவனாக இருக்கிறேன். மாளிகை, பணியாட்களின் கூட்டம், செல்வம் எல்லாமே சிதறிவிட்டன. ஆனால் அதற்காகத் தங்களுக்கு ஒரு குறையும் வேண்டாம். நான் தங்களுடைய தாஸன். தங்களுக்குச் செய்யவேண்டிய சிசுருஷைகளை நானும் என் மனைவியும் செய்யக் காத்திருக்கிறோம்" என்றார்.

சாமசுந்தரனுக்கு ஞானோதயம் ஏற்பட இவ்வளவு நேரம் ஆயிற்று. ராணி இந்துமதி இவர்களது வார்த்தையைக் கேட்டுக் கொண்டு அங்கேயே இருந்தாள். செட்டியாரது விநயத்தையும் பணிவையும் இன்னதென்றே தெரியாமலிருந்தும் அவர் அன்

புடன் உபசரிப்பதையும் பார்த்து, அவள் மனம் பூரித்தாள். மெல்லிய குரலில், "சாமசுந்தரருக்குத் தங்களிடம் பரிச்சயமில்லை. ஆகவே பிழைபடப் பேசிவிட்டார். தங்களுடைய விநய சீலமும் தங்களது பெருந்தன்மையும் கிடைக்காத செல்வங்கள். தங்களது தவச் செல்வத்திற்கு உலகத்திலுள்ள சகல ஐசுவரியங்களும் ஈடாகா. உள்ளபடி தாங்கள்தான் பெற்றேரின் புகழைக் காக்கும் தவப்புதல்வர்!" என்ருள். ஆனந்த மிகுதியால் அவள் குரல் தழுதழுத்தது.

இந்துமதி தேவி சொன்னது வெறும் புகழ் மொழி அன்று. திருமகள் அவரைக் கைவிட்டுவிட்டாள். தவச்செல்வம் ஒன்றுதான் எஞ்சி நின்றது. உபகுப்தனுர் பௌத்த தர்மத்தில் ஈடுபட்டவர். ததாகதரது அருள் மொழிகள் அவர் நெஞ்சி லேயே குடிகொண் டிருந்தன. அவரது தந்தையாரது அளவற்ற செல்வம் இவரது கொடையினுலே கரைந்து போயிற்று. அங்கங்கே கட்டப்பட்டிருந்த சத்திரங்களிலே நூற்றுக்கணக்கான ஏழை எளியவர்களுக்கு அன்னதானம் செய்யப்பட்டு வந்தது. அங்கே கிடைக்கும் அறுசுவைகளுடன் கூடிய உண்டியை மக்கள், 'ராஜ போஜனம்' என்றே புகழ்ந்தனர். ஆனுல் இவர் வீட்டிலோ தம்பதிகள் இருவரும் வறுமையால் வாடிக் கூழுக்கும் ஏங்கி நிற்கும் நிலை. மதுரா நகர வாசிகள், 'கர்ணன் இவனே' என்று புகழ்ந்தனர். இவர் புகழை அந்தப் பிராந்திய முழுவதும் கோஷித்துக்கொண் டிருந்தது.

இவைகளெல்லாவற்றிற்கும் மேலாக அவரது ஒழுக்கம் என்கிற கவசம் அவரை மனிதருள் தேவனுக்கியது. முனிவர் களாலும் வெல்லுதற்கரிய காமப் பேயை அவர் வெகு அலட்சிய மாக ஜயித்துவிட்டார்.

அந்தச் சமயத்தில் வாசவதத்தை என்னும் ஒரு வேசை மதுரா நகரிலே சௌந்தரியத்துக்கே அதிதேவதைபோல் கொலுவிருந் தாள். அவளது பேரழகாகிய தேனை நுகரும் பொருட்டுத் திரள் திரளான ஜனங்கள் மதுரா நகரத்திற்கு வந்து போவார்கள். அரசர்களும் பிரபுக்களும் நாள் தோறும் அவளது விருந்தினராக வந்து, நிறைந்து கிடந்தார்கள். மிகப் பெரிய பெரிய பணக் காரர்களும் மனம் போனபடி செலவு செய்து, அவளைக் காண் பதே பெரும் பாக்கியமென்று காத்திருந்தனர்.

அப்படிப்பட்ட, உலகையே மயக்கவல்ல அந்த மோகனுங்கி ஒருநாள் உபகுப்தனுரது கடைவழியே சென்றுகொண் டிருந்தாள்.

அழகுக்கு உறைவிடம்போல் இருந்த அவரது பொன் மேனியைக் கண்டு அவளே திகைத்துவிட்டாள். செட்டியார் வழக்கம்போல், வருகிறவர்களுடன் மிகுந்த பணிவுடன் பேசி, வியாபாரம் செய்துகொண் டிருந்தார். அவரது விநயமான குரலின் இனிமை தேவகானம்போல் அவள் செவியில் விழுந்தது. 'அவரை இன்னும் சற்று நேரம் பார்க்கமாட்டோமா?' என்ற ஆவல் உள்ளத்தே எழுந்தது. வாசனைத் திரவியம் வாங்குபவள் போல் நேரில் கடைக்குள் புகுந்தாள்.

அக்கம் பக்கங்களிலுள்ள காளைப்பருவத்துக் கடைக்காரர்கள் ஆச்சரியம் நிறைந்த கண்களுடன் பார்த்துப் பொருமலாயினர்.

வாசவதத்தை வெகு நேரம் அந்தக் கடையிலேயே தங்கி விட்டாள். அவரது ரூப சௌந்தரியத்திலே மூழ்கித் திளைக்கலானாள் அவள். நெடுநேரம் அவருடன் ஏதேதோ கேட்டுப் பார்த்தாள் அவள். அவரோ வெகு சாமானியமான மனிதருடன் பேசும் பணிவுடன் விநயமும் காண்பித்தவராய்ப் பேசினார். அவளுடைய அஸ்திர சஸ்திரங்களெல்லாம் அவரது உரங்கொண்ட நெஞ்சை அசைக்கவும் முடியவில்லை.

வாசவதத்தை மிகவும் சோர்ந்து போனாள். கிடைக்காத பொருள்களின்மேல் ஆவல் அதிகரிப்பதைப்போல் அவளது பேதை நெஞ்சம் உபகுப்தனாரைச் சுற்றிச் சுழன்றுகொண் டிருந்தது. 'பெரிய பெரிய சக்கரவர்த்திகள் என் காலடியில் வீழக் காத்திருக்கிறார்கள். இந்த எளிய வாசனை வியாபாரியின் நெஞ்சுமட்டும் என்ன? கல்லோ! இரும்போ!' என்று அவள் தவித்தாள்.

மறுபடி சில நாட்களுக்கெல்லாம், 'தங்களது மலர்த் தாள்களுக்குச் சேவை செய்யும் அந்தப் பாக்கியத்தை இந்தத் தாஸிக்கு அளிக்கலாகாதா?' என்று கெஞ்சி ஒரு காதல் கடிதம் அனுப்பினாள்.

'நான் பரம ஏழை, என்னைச் சந்திப்பதனால் என்ன லாபம். என்னைச் சந்திக்க வேண்டிய காலம் பின்னால் வரும்' என்று எழுதிவிட்டார் செட்டியார்.

அவள் மனம் தவித்தது. இந்தக் கடிதத்தைக் கண்டு அவள் பின்னும் ஆச்சரியத்தில் முழுகினாள். 'ஸ்வாமி! தங்களிட

மிருந்து பொன்னையும் பொருளையும் விரும்பவில்லை. தங்களது தரிசனம் கிடைத்தால் போதும்' தங்களது பாத துளியால் ஒரு முறை என் வீட்டைப் புனிதமாக்க வேண்டும்'' என்று எழுதினுள்.

'அதற்குச் சமயம் இதுவல்ல' என்று எழுதிவிட்டார் செட்டியார். வாசவதத்தை மனமழிந்து போனுள். பிறகு சில வருஷங்களுக்கெல்லாம் அரசனது அதிருப்தி காரணமாக வாசவ தத்தை அங்கஹீனப் படுத்தப்பட்டு, நகருக்கு வெளியே ஓரிடத் திலே தள்ளப்பட்டாள். இந்த விஷயத்தைக் கேள்விப்பட்டதும் உபகுப்தரது நெஞ்சம் இளகிற்று. அவள் இருப்பிடத்தைத் தேடிச் சென்ருர். உபகுப்தர் வருகிருரென்று தெரிந்ததும் அவ ளுக்கு வெட்கம் உண்டாயிற்று. மிகவும் தீனமான குரலில், "பிரபுவே! இந்த உடல், அழகிற்கு உறைவிடமாக இருந்த பொழுது நான் எவ்வளவோ தடவை கெஞ்சியும் வேண்டியும் தங்களுடைய கருணை எனக்குக் கிட்டவில்லை. இப்போது பேயும் நெருங்குவதற்கு அஞ்சும் இந்தப் பரிதாபமான நிலையில், இந்தப் பாழும் உடலைப் பார்ப்பதற்கு ஏன் வந்தீர்கள்'' என்று கதறத் தொடங்கினுள்.

இந்தத் தீனமான சொற்கள் அவரது நெஞ்சைப் பிளந்தன. கருணை தோய்ந்த குரலில், "பெண்ணே! உன்னைச் சந்திக்க இது தான் ஏற்ற தருணம். உன் உயிரோ மண்ணுக்கும் விண்ணுக்குமாக ஊசலாடுகிறது. இந்த உலக போகங்கள் எவ்வளவு தாழ்வான வைகள் என்பது உனக்கு விளங்கிவிட்டதல்லவா? நீ நல்ல நிலையில் இருந்தபொழுது உன்னைச் சூழ்ந்திருந்தவர்களும் முகஸ்துதி பாடியவர்களும் வான முகட்டிலே ஏற்றி வைத்தவர்களும் இப் பொழுது உன் விஷயத்தில் ஏதாவது ஒரு சிறு உதவியாவது செய்தார்களா? செய்ய முடிந்ததா? இதுதான் நீ தர்மோப தேசம் பெறுவதற்குத் தகுந்த நிலை'' என்று சொல்லி, அவளுக்குத் தர்மோபதேசம் செய்தார் உபகுப்தர்.

* * *

**ஏ**ற்கனவே பௌத்தர்கள் துஷ்டர்கள் என்று நினைத் திருந்த இந்துமதி உபகுப்தரது பெருமையைப் பற்றியும் கேள்வியுற்றிருந்தாள். அதே உபகுப்தர் வீட்டிற்குத் தான் விருந் தாளியாக வர நேரும் என்று அவள் நினைக்கவில்லை. அவரது சிறு குடிலில் தனக்குக் கிடைத்த அன்பான வரவேற்பும் அந்தத்

தம்பதிகளின் அருங் குணமும் தேவியின் மனத்தைக் கொள்ளை கொண்டன. இத்தகைய நற்குண சீலர்களுடன் உறவாட நேர்ந்தது பற்றி மனம் பூரித்தாள்.

மறுநாள் காலை; விடியும் சமயம். அப்பொழுதே கண் விழித்தாள் தேவி இந்துமதி. வாயிலில் கோபமாக யாரோ பேசுவது அவள் செவிகளில் விழுந்தது. யாராக இருக்கலாம் என்று சற்றே நிதானித்தாள். நெடு நாட்களுக்கு முன் உபகுப்தருக்குக் கடன் கொடுத்திருந்த சௌகார் ஒருவன் இரண்டு அரசாங்கச் சேவகர்களுடன் அவரைப் பிடிப்பதன் பொருட்டு வந்திருந்தான். வீட்டிலேயோ செப்புச் சல்லிகூடக் கிடையாது. தரித்திர தேவதை கோர தாண்டவம் செய்துகொண் டிருந்தாள். ஏதோ இருந்ததை நிரவி மூடி, வந்தவர்களை உபசரித்திருக்கிறார் செட்டியார்.

அவர்களைக் கண்டவுடனேயே செட்டியாருக்கு விஷயம் விளங்கிவிட்டது. இருந்தாலும் இந்த விஷயம் விருந்தினருக்கு எட்டக்கூடாது என்ற எண்ணத்துடன் மிகவும் ரகசியமாக வந்தவர்களுடன் பேசிக்கொண் டிருக்கிறார். திடீரென்று கண் விழித்த ரோகிணி, தன் தாய் எதையோ உற்றுக் கேட்பதைக் கண்டு என்னவென்று கைகளினால் சமிக்ஞை செய்தாள். 'இதற்குள் அசலும் வட்டியும் சேர்த்து இரண்டாயிரம் பொன்' என்ற வார்த்தைகள் அவ்விருவர் செவிகளிலும் தெளிவாகக் கேட்டன. செட்டியார் மெதுவான குரலில் அவர்களுக்கு ஏதோ சில வார்த்தைகள் சொல்லிவிட்டு, வீதியில் இறங்கிச் சென்றார். வந்த சேவகர்களும் சௌகாரும் தெருத் திண்ணையிலேயே உட்கார்ந்துவிட்டனர். சேவகர்கள் வீதியில் இருப்பதைப் பார்த்து, அவர்கள் விஷயமாகத்தான் செட்டியார் வெளியே போகிறார் என்று நினைத்தாள் இந்துமதி.

இதற்கிடையில் தெருக் கோடியிலே சிலர் கூட்டமாக வருவது தெரிந்தது. அவர்களுள் ஒருவன் உரத்த குரலில் பேசிக்கொண் டிருந்தான். அவன் பின்னே ஆயுதந் தரித்த வீரர்கள் பதின்மர்; அதை அடுத்து ஊர் ஜனங்களின் கூட்டம். அதை ஒட்டிச் சிறுவர் சிறுமிகளின் கூட்டம். இவை கோவென்ற இரைச்சலுடன் பவனி வருவதைப்போல் வந்துகொண் டிருந்தன.

பறை ஒலி டமடம வென்று முழங்க இந்தக் கூட்டம் உபகுப்தரது கடைக்கு எதிரில் வந்து நின்றது. அந்தச் சமயத்தில்

சாமசுந்தரனும் ரமேச மகாராஜனும் சௌகாருடன் ஏதோ பேச எண்ணி, வாயிலின் முன் புறத்தை யடைந்தனர்.

கூட்டத்தின் அமைதி கலேந்தது. பறையொலி சற்றே நின்றது. கூட்டத்தின் நடுவில் நின்றுகொண் டிருந்த மனிதன் தொண்டை கிழியும்படியான உரத்த குரலில், "கலிங்க நாட்டைச் சக்கரவர்த்தி அசோகன் ஜயித்துவிட்டார். கலிங்கநாட்டு இள வரசன் மகேந்திரனைப் பிடிக்கும்படி சக்கரவர்த்தியாரது கட்டளை. அவர் ஹரித்வாரத்தில் இல்லை. யாராவது அவரைப்பற்றிய தகவலை அறிவித்தாலும் எங்கள் முன் கொண்டுவந்தாலும் அவர் களுக்குப் பதினுயிரம் பொன் இனும்! இனும்! இனும்!" என்று கூச்சலிட்டுப் பறையை மறுபடி முழக்கினுன்.

இந்தச் சொற்கள் செவிகளில் விழுந்ததோ இல்லையோ ரோகிணி இந்த உலகையே மறந்தாள். அம்மாவென்று கூவிய வளாக உள்ளே நுழைந்து, தாயின் கழுத்தைக் கட்டிக் கொண்டாள்.

தேவி மிகுந்த சோகத்துடன், "எல்லாச் சொற்களையும் கேட்டாயிற்று. மறுபடி கேட்கவேண்டுமா?" என்ருள்.

"அம்மா! இது பெரிய சோதனைக் காலம். என்ன செய்வது! ஹரித்வாரத்திற்குப் போவதா வேண்டாமா? இடிமேல் இடி யாய் விபத்துக்கள் தொடர்ந்து வருகின்றனவே; என்ன செய்வது? பொறுத்துக்கொள்ளத்தான் வேண்டும்" என்ருன் சாமசுந்தரன்.

* * *

**ரோ**கிணி துக்கத்தினுல் மெய்ம்மறந்து இடிந்துவிட்டாள். "அப்பாவின் கதி என்ன வாயிற்ரு?" என்ற வார்த்தைகள் உடைந்த சொற்களாக அவள் வாயினின்றும் எழுந்தன.

'யுத்தத்தில் புறங்காட்ட அவர் கற்றதில்லையே. ஒருவேளை நடுக்களத்திலே சத்துருவின் சேனைகள் சூழ்ந்து பிடித்திருப்பார் களோ?' இதற்கு மேல் யோசிக்க அவளால் முடியவில்லை. தலை சுழன்றது.

தாயின் எண்ணங்களை முகத்திலிருந்தே ஊகித்துவிட்டாள். ரோகிணி, "அம்மா! அப்படிப்பட்ட அமங்கலமான எண்ணங்கள் எதற்கு? அப்பா எங்கேயாவது சௌக்கியமாக மறைந்திருப்பார் என்றே எனக்குத் தோன்றுகிறது" என்ருள்.

இந்துமதிதேவி பொங்கி வரும் துக்கத்தை அடக்கிக்கொண்டு "எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. திடீரென்று யுத்தத்தின் முடிவு இப்படி எப்படி மாறிற்று? தவிர, மகேந்திரனுக்கோ நாம் விஷயத்தையே தெரிவிக்கவில்லை. இந்த மனிதர்கள் அவனை ஒரு நொடியில் பிடித்துவிடுவார்கள். இதற்கு வேறு ஏதாவது ஓர் உபாயம் தேடவேண்டும்." என்று சொல்லுகையில் அவளது மலர்க் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் பொல பொலவென்று உதிர்ந்தன. ஒருவரை ஒருவர் தேற்ற வகையின்றி இருவரும் விம்மி விம்மி அழலாயினர். சாமசுந்தரன், தாங்கள் இன்னாரென்று தெரிந்துவிடப் போகிறதே என்ற பயத்தினால் துக்கத்தை அடக்கிக் கொண்டு அங்கும் இங்கும் நடந்துகொண் டிருந்தான்.

இந்தச் சமயத்தில் உபகுப்தர் அங்கே இல்லாமலிருந்தது இவர்களுக்குச் சற்று ஆறுதல். அவர் இரண்டாம் கட்டிலே தம் மனைவியிடம் ஏதோ செய்தி தெரிவித்துக்கொண் டிருந்தார். தேவியின் பாடு வெகு சிரமம் ஆகிவிட்டது. முன்கட்டின் நடையில் சௌகாரும் அரசாங்கச் சேவகர்களும் செட்டியாரைக் கைதுசெய்யக் காத்திருக்கிறார்கள். பின்கட்டிலே அந்தத் தம்பதிகளின் சோகமயமான பிரிவு வார்த்தைகள். இடையிலே இவர்கள் தவிப்பு. இன்னது செய்வதென்று தெரியாதவளாக அவள் அங்கேயே உட்கார்ந்து விட்டாள்.

சாமசுந்தரன் மெதுவாகத் தேவியின் அருகில் வந்து, "நமது விசனம் வெளியில் தெரிந்தால் தொலைந்தது. எப்படியாவது இங்கிருந்து கிளம்பி ஹரித்வாரம் போகவேண்டும். நல்ல காலம் வரும்வரையில் அஞ்ஞாத வாசந்தான் செய்யவேண்டும்" என்றான்.

தேவி மிகவும் தணிந்த குரலில், "அவரைப்பற்றிய தகவலோ ஒன்றுமே தெரியவில்லை. இளவரசனைப் பிடிக்க வேண்டுமென்று உத்தரவு செய்திருப்பதனால் அவரையும் பிடித்திருப்பார்களோ என்று எனக்குத் தோன்றுகிறது" என்றாள்.

"பௌத்தர்கள் எல்லோருமே இந்தச் செட்டியாரைப்போல் இருந்தால் இந்த யுத்தமே நடைபெற்றிராது. அந்த மகதாதிபதி கொடிய ராட்சசன் என்றுதான் தோன்றுகிறது. இல்லாவிட்டால் தர்மப் பிரசாரம் செய்கிறேனென்று மனிதர்களைக் கொன்று குவிப்பானா, ஈவு இரக்கமற்ற அவன்? அதோடு மத வெறியும் சேர்ந்துவிட்டது; தீயுடன் காற்றுச் சேர்வது போல" என்று படபடத்துக் கூறினாள் ரோகிணி.

அலைகள் ஒன்றன்மேல் ஒன்ருக மோதுவதுபோல் இந்துமதி தேவியின் மனத்தில் நூற்றுக்கணக்கான எண்ணங்கள் தோன்றுவதும் மறைவதும் எழுவதுமாக இருந்தன. கடைசியில், "என் மகேந்திரன் ஒருவனை மட்டும் தப்பித்து விட்டுவிட்டால் இன்றைக் கல்ல; இன்னும் நான்கு வருஷங்கள் கழித்தாவது கலிங்கத்தை அந்தப் பாஷண்டிகளிடமிருந்து விடுவித்து விடுவான். வைதிகமே அழிந்து போய்விடுமோ என்ற கவலையை நொடியில் தீர்த்து வைப்பான். இப்பொழுது அவனைக் கண்டுபிடித்துக் கைதியாக்காமல் காப்பதுதான் முக்கியம். இப்பொழுதே ஹரித்துவாரத்துக்குப் புறப்படுவோம்" என்ருள்.

"ஆம் தேவியே! அவன்தான் வைதிக தர்மத்தின் கொழுந்து. குற்றுயிராயிருக்கும் தர்மத்திற்கு அவன்தான் அமிருத சஞ்சீவி. அவன் சத்துருக்களிடம் சிக்கிவிட்டால் கலிங்கநாட்டின் புராதன தர்ம விருக்ஷத்தின்மேல் இடிவிழுந்த மாதிரிதான்!" என்ருன்.

"முதலில் அவனைக் கண்டுபிடிக்க வேண்டும். பிறகு காப்பாற்றவேண்டும். இந்த இரண்டு காரியங்களையும் பலவீனர்களாகிய நம்மால் செய்ய முடியுமா?" என்று பெருமூச்செறிந்தாள் தேவி.

* * *

இதுவரையில் மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தாள் ரோகிணி. இடையில் ஒரு வார்த்தையும் சொல்லவில்லை. திடீரென்று அவள் முகம் மலர்ந்தது. முகத்திலே இளமுறுவல் அரும்ப, "அம்மா! இந்தப் பறையொலியும் வெகுமதியும் இந்த ஊருக்கு மட்டுமா? அல்லது எல்லா நகரங்களிலும் உண்டோ?" என்ருள்.

"சந்தேகம் என்ன? நகரங்கள் மட்டும் அல்ல. கிராமங்கள், காடு, மலை, குகை, பள்ளத்தாக்கு எங்குந்தான் தேடுவார்கள். அதிலும் இவர்கள் பௌத்தர்கள். பூமண்டலம் முழுவதையும் தலைகீழாகச் சுற்றி வந்துவிடுவார்கள்.

"இப்படி அலுப்புச் சலிப்பில்லாமல் தேடினல் கட்டாயம் ஒரு நாள் அகப்பட்டே தீருவான்!"

"ஆமாம்; அதற்காகத்தானே நாமும் துக்கப்படவேண்டியிருக்கிறது."

"அவர்கள் தேடுவதையே நிறுத்திவிட்டால்?"

"அது எப்படி முடியும்? சொப்பனத்திலும் நடவாது."

ரோகிணி உற்சாகம் பொங்கும் விழிகளால் தாயை ஏறிட்டுப் பார்த்து, "அவர்கள் தேடுவதைத் தாமாகவே நிறுத்திவிடுவார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. மகதாதிபதியையே நாம் வசப்படுத்திக்கொண்டால்?"

"ரோகிணி! [illegible]ஷயங்கள் விபரீதமாகப் போய்க்கொண்டிருக்கும்போது நிராசையினால் நீ இம்மாதிரி உளருதே. இப்படிப்பட்ட வார்த்தைகளை வாயிலிருந்து சிந்தாதே!"

"அம்மா! நான் நிராசையாலாவது, வெறுப்பினாலாவது சொல்லவில்லை. என் முகத்தைப் பார். தீர ஆலோசித்து, புத்தியும் சக்தியும் சரியாக இருந்துதான் பேசுகிறேன்."

"ஆனால், நீ என்ன சொல்லுகிறாய்? தேடுவதை நிறுத்திவிடலாம். மகதாதிபதியை வசப்படுத்திவிடலாம் என்றா? இதென்ன பிதற்றல், ரோகிணி! இதன் கருத்தென்ன? ஜாலவித்தையா? மோகன மந்திரமா?" என்று மகளை ஏறிட்டுப் பார்த்தாள் தேவி.

"ஆமாம்; அப்படித்தான் என்றே வைத்துக்கொள்வோம். ஜாலவித்தை என்பதும் மோகன மந்திரம் என்பதும் கற்பனை உலகத்தால் மனோராஜ்யம் செய்யும், மூளை குழம்பியவர்களுடைய உபாயம். அந்த மாதிரியான குயுக்திகளால் அசோகனை வசப்படுத்துவது என்பது இந்தப் பூமியில் பிறந்த ஒருவனாலும் முடியாதென்பது எனக்குத் தெரியும்."

ரோகிணியின் இந்த வார்த்தைகளைக் கேட்ட பிறகு அவ்விருவருக்கும் இருதயத்திலிருந்த ஆசையென்னும் முளை கிளம்பத் தொடங்கிற்று. "அப்படியானால் ராஜகுமாரி, எந்தவிதமான உபாயத்தினால் காரியசித்தி பெறப்போகிறீர்கள்?"

"என் மேனியின் சாயலை உபயோகித்து."

இந்த வார்த்தைகள் காதில் விழுந்ததும் இந்துமதிதேவியின் முகம் கறுத்தது. கண்களுக்கு எதிரில் ஒரு மின்னல் மின்னி, மறுபடியும் காரிருள் சூழ்ந்தாற்போல் தோன்றிற்று.

"ரோகிணி! இதென்ன இப்படி உளறி வழிகிறாய்? இதென்ன வார்த்தைகள்?" என்றாள் தேவி.

தன் வார்த்தைகளைத் தாய் வேறு விதமாக எண்ணிக் கொண்டாளென்று அவளுக்கு ஒரு நொடியில் விளங்கிவிட்டது. மிகவும் ஆத்திரத்துடன், "அம்மா! நான் என்ன சொன்னேன்? அண்ணவைப்போல் நானும் இருக்கிறேனென்று நீங்கள் சொல்ல வில்லையா?"

"அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?"

"நான்தான் சொன்னேனே; என் மேனியின் சாயலை உப யோகித்து யுவராஜனைத் தேடுவதை நிறுத்திவிடுவேன்."

"ரோகிணி! நிதானமாகப் பேசு. உன்னுடைய விடுகதை கள் எனக்குப் புரியவில்லை."

"அம்மா! மகேந்திரனைப்போன்ற வடிவமுள்ள மற்ரெரு வன் கைதியாகிவிட்டால் அவனைத் தேடுகிறது என்கிற காரியம் நின்றுவிடும் அல்லவா?"

பளிச்சென்று மின்னல் மின்னுவதுபோல் இந்துமதிக்கு அப்பொழுதுதான் விஷயம் விளங்கிற்று. அவளை மார்புறத் தழுவிக்கொண்டு, "ரோகிணி! இது மிகவும் துணிச்சலான காரியம்."

"அம்மா! வீணுகப் பேசுவதற்கு இது சமயம் அன்று. எவ்வளவுக்கு எவ்வளவு சீக்கிரம் பிடிபடுகிறேனே அவ்வளவுக்கு அண்ணவுக்கு க்ஷேமம்."

"ஆனுல்—"

"அம்மா! இந்த ஆனுல், போனுல் இவைகளையெல்லாம் விட்டுவிடு. நான் தீர்மானித்துவிட்டேன். அந்த ஒரு வழிதான் இருக்கிறது. கலிங்கநாடும் வைதிக தர்மமும் பிழைத்திருக்க வேண்டுமானுல் நான் சிறைப்பட்டே தீரவேண்டும்" என்று படபடப்புடன் சொன்னுள் ரோகிணி.

இது விஷயமாக நெடுநேரம் வாதம் நடந்தது. பிறகு வேறு வகையில்லாமையால் ஒப்புக்கொண்டாள் இந்துமதிதேவி.

ரோகிணி, "அம்மா! இந்த விஷயத்திலே இன்னெரு சூட் சுமம் இருக்கிறது. உபகுப்த செட்டியாருக்கோ பணமுடை. பதினுயிரம் பொன் கிடைக்கும். ஆகவே அவரே என்னைப் பிடித் துக் கொடுக்கட்டும்" என்ருள்.

தேவி, உபகுப்தரை அழைத்து, யுவராஜன் மகேந்திரன் என்று அறிமுகப்படுத்தினள். செட்டியார் ஆனந்த மிகுதியால் புகழ்மொழிகள் கூறினர். உடனே மெல்ல மெல்ல ரோகிணி தன் ஆலோசனையை அவரிடம் தெரியப்படுத்தினள். விஷந் தீண்டியவர்போல் திடுக்கிட்டார் செட்டியார். ரோகிணியோ, "செட்டியாரே! நானே வலியக் கைதியாவதன் பொருட்டு வந்து விட்டேன். நீரே என்னைக் கொடுக்கவேண்டாம். நானே செல்லுகிறேன். இதனால் உங்களுக்கு ஒருவிதக் களங்கமும் இல்லை" என்று மன்றாடினள்.

"மகேந்திர மகாராஜா! நான் தங்களது வார்த்தையை வருத்தத்துடன் மறுக்கிறவன் ஆகிறேன். தாங்கள் சொல்லும் அநீதிக்கு இந்த உபகுப்தனது மனம் கனவிலும் ஒப்பாது" என்று சொல்லிவிட்டு, வணங்கியவராய், கதவருகிலே காத்துக்கிடந்த அந்தச் சாவுகார், அரசாங்க உத்தியோஸ்தர் இவர்களிடம் தம்மை ஒப்பித்துக்கொண்டார்.

அவர் மனைவி குந்தநந்தினி கலங்கிய கண்களுடன் அவரையே பார்த்து நின்றாள். அதிகாரிகளுடன் வீதியில் இறங்கினர் உபகுப்தர்.

குந்தநந்தினியும் ரோகிணியும் நெடுநேரம்வரையில் பேசிக் கொண்டே இருந்தனர். அன்று மாலைக்குள் எப்படியாவது கைதியாகிவிட வேண்டும் என்பது அவளது பேரவா. கடைசியாகத் தன் கணவன் மேலுள்ள காதலால் குந்தநந்தினி இளவரசனைப் பிக்ஷுக்களிடம் பிடித்துக்கொடுக்கத் துணிந்தாள். ரோகிணி, தாயிடமும் சாமசுந்தரனிடமும் விடைபெற்றுக் கொண்டாள்.

சற்று நேரத்திற்கெல்லாம் குந்தை, பிக்ஷு சைன்யர்களுடன் வந்து சேர்ந்தாள். தேவி இந்துமதி ஒரு மூலையில் கண்ணீர் பெருக நின்றுகொண்டிருந்தாள். இளவரசன் பிடிபட்டுவிட்டான். உடனே பதினயிரம் பொன் நிறைந்த பைகள் வந்து விழுந்தன.

குந்தநந்தினி இரண்டாயிரம் பொன்கள் செலுத்தி, உபகுப்தரை மீட்க வந்தாள். அவருக்குப் பழைய விஷயங்கள் மறந்து போயின. வீட்டிற்கு வந்த உடனே யுவராஜன் அங்கே இல்லை. குந்தையை, "அவர்கள் எங்கே?" என்று மிகவும் உக்கிரமான குரலில் கேட்டார். இதற்கு முன் அவர் குரலிலே இத்தகைய

கடுமையை அவள் ஒருபோதும் கேட்டதில்லை. மிகுந்த பயத்துடன் அவள் விஷயத்தைச் சொன்னுள். 'ஆம்' என்று சாட்சி கூறுவதுபோல் பாக்கியுள்ள எண்ணுயிரம் பொன் நிறைந்த பைகள் எதிரே கிடந்தன. அவர் வாழ்க்கையில் முதல் தடவையாகவும் கடைசித் தடவையாகவும் கோபம் பொங்கும் பார்வையினுல் அவளை அப்படியே எரித்துவிடுபவர்போல் பார்த்தார். தம் வலிமை முழுவதையும் சேர்த்து, ஒரே உதையாகப் பொன் நாணயங்கள் நிறைந்த அந்தப் பைகளை உதைத்துத் தள்ளினுர்.

# 10

## மங்கள வாழ்த்து

அன்று நகரம் முழுவதும் ஒரே கோலாகலமாக இருந்தது. அசோகன் வெற்றி வேந்தனுகப் பாடலிபுரத்திற்குத் திரும்பி வருகிறுன். இந்தச் செய்தியினுல் நகர மாந்தர்களது மனம் ஆனந்த வாரிதியில் ஆழ்ந்திருந்தது. எங்கும் இதே பேச்சு. வீடுகளும் மாளிகைகளும் மிகவும் நேர்த்தியாக அலங்கரிக்கப்பட் டிருந்தன.

வீதிகள் தோறும் அழகிய பூந் தோரணங்கள். வாயில்களிலே குங்குமத்தால் அழகு படுத்தப்பெற்ற கோலங்கள். சிற்சிலர் சந்தனக் குழம்பினுல் வீதி தெளித்தார்கள். பூந் தோரணங்களிலிருந்து காற்றிலே தவழ்ந்துவரும் நறுமணமும் வீடுகள் தோறும் ஏற்றப்பட் டிருக்கும் அகில் மணமும் கலந்து மனத்திற்கு இன்பம் ஊட்டிக்கொண் டிருந்தன.

தங்கள் அரசனது தோள் வலியையும், தாங்கள் வரவேற்பதற்காக அலங்கரித்திருக்கும் பெருமையையும் உவமை கூறி ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள். மங்கள ஆரத்திகளை ஏந்தி, முதியவர்கள் அசோகனது வரவை எதிர்பார்த்து நின்றனர்.

மேற்குத் திசையிலே மங்கள வாழ்த்தொலியும், வாத்திய கோஷங்களும் கேட்கத் தொடங்கின. ஜய ஜய சப்தம் அந்த நகர முழுவதும் சிலேயோடிற்று, பட்டத்து யானையின்மேல் அசோகனும் வீதசோகனும் வெற்றியின் ஆனந்தம் முகத்திலே தோன்ற அமர்ந்திருந்தார்கள். கிழ ராதாகுப்தன் அழகிய வெண் புரவியின்மேல் அவர்களை அடுத்து வந்துகொண் டிருந்தார். இந்த விழாவில் கலந்துகொள்ளும் பொருட்டுப் பல சிற்றரசர்கள் இவர்களைச் சூழ்ந்திருந்தனர்.

மிகுந்த மிடுக்குடன் ஒரு ரதத்தில் கழுத்தை விறைத்த வண்ணம் பிக்ஷு சிரேஷ்டன் ஸம்புஷ்டாசாரியனும், ராஜமாதா புத்திமதிதேவியும் இந்த அழகிய கூட்டத்திற்குத் திருஷ்டிப் பரிகாரம்போல் அவர்களுக்கு அடுத்தாற்போல் வந்துகொண் டிருந்தார்கள். மிகுந்த பயபக்தியுடன் ஸம்புஷ்டாசாரியனது

சிஷ்யகோடிகள், 'நமோ புத்தாய!' என்று உச்சரித்த வண்ணம் பின்னே மெல்ல மெல்ல நடந்து செல்லலாயினர்.

அழகிய கொலுமண்டபத்தில் மிகவும் அழகாக அலங்கரிக்கப் பட்ட ஆசனத்திலே அமர்ந்திருந்தான் அசோகன். அவன், மாசற்றதும் மிகவும் சாமானியமானதுமான வெள்ளாடை அணிந்திருந்தான். அந்த வெண்மையான ஆடையைக் கண்டு குறுநில மன்னர்கள் வெட்கமடைந்தார்கள். அணிகலன் ஏதும் அணியாமல் சர்வசாதாரணமாகத் திகழ்ந்த அந்தச் சக்கரவர்த்தியை அவர்கள் ஆச்சரியம் நிறைந்த பார்வையால் ஏற இறங்கப் பார்க்கலாயினர். ராஜமாதா புத்திமதிதேவியும் ஸம்புஷ்டாசாரியனும் தங்களுடைய நியமநிஷ்டைகளுக்குரிய நேரம் வந்துவிட்டதென்று கூறி, மெல்ல அங்கிருந்து எழுந்து போயினர். ஆனால், உண்மையான காரணம் பொறுமையே. வீதசோகனையும் ஏதோ காரணங்கொண்டு அப்புறப் படுத்திவிட வேண்டுமென்று துடித்தாள் புத்திமதி.

"அவன் அங்கேயே இருக்கட்டும். இந்தக் காட்சிகளைப் பார்த்துப் பார்த்துத்தான் அவன் தன் நிலையை உணர்ந்துகொள்ள வேண்டும்" என்றார் பிக்ஷு சிரேஷ்டர்.

"இந்த அசட்டுப் பிள்ளைக்கு என்ன சொன்னாலும் புத்தியில்லை. அவனுடன் குலாவுகிறது. அங்கேயே இருந்தால் என்னையும் மீறி ஏதாவது செய்துவிடப் போகிறேனே என்றுதான் எழுந்துவிட்டேன்" என்றாள் புத்திமதிதேவி.

இதற்குள் எல்லோரும் ஆசனத்தில் அமர்ந்தனர். பிறகு மந்திரி ராதாகுப்தன் எழுந்து நின்றான். இந்திரபுரத்துப் பாசறையிலே பேசிய அதே ரீதியில் அரசரை வாழ்த்தினான். மந்திரியின் அச்சிறு சொற்பொழிவுக்குப் பின் எல்லோரும் மும்முறை அரசரை வாழ்த்தி அமர்ந்தனர். வாழ்த்தொலி வானைப் பிளந்தது. மற்றும் சில சிற்றரசர்கள் எழுந்து வாழ்த்திய பிறகு மதுரை நகரத்தரசன் அசோகனது வெற்றியையும் சக்கரவர்த்தி பதத்தையும் புகழ்ந்த பிறகு, 'தேவானம்பிரிய: பிரியதர்சி:' என்ற பட்டத்தை வகிக்கும்படி மந்திரி வேண்டிக்கொண்டான்.

அதை வகிக்கும்பொழுது அசோகன் மெல்லிய குரலில், "தேவர்களுக்குப் பிரியமானவன் என்ற பெயரை ஏற்றுக்கொள்ளுமுன் இறந்தகால நிகழ்ச்சிகளைப் பார்க்கவேண்டியிருக்கிறது. தேவர்களது அன்புக்கு நான் உரியவன் அல்ல என்றே தோன்றுகிறது. லக்ஷக்கணக்கான மனிதர்கள் இந்த யுத்தத்தில் பலியா

னார்கள். ஆயிரக்கணக்கான மக்கள் சிறைப்பட்டார்கள். இத்தகைய கொடிய செயலைச் செய்தவன், ரத்தத்தைச் சிந்துவதன் மூலம் தர்மப்பிரசாரம் செய்ய முற்பட்டவன், கருணையற்ற விலங்கிற்கே நிகர் என்று என் நெஞ்சு இடித்துக் கூறுகிறது. ஆனால் இந்தக் கொடிய செயலை நீத்துப் பச்சாத்தாபப் படும்படியான ஒரு தன்மையைப் பகவான் எனக்கு அளித்து விட்டான். பகவானுடைய அருளின்றி இந்த அநுதாபம் என் நெஞ்சில் புகுந்திராது. இந்த ஒரு சிறு மாறுதலினால் தாங்கள் அனைவரும் ஒருமுகமாகக் கொடுக்கும் இந்தப் பட்டத்தை மறுக்க அஞ்சுகிறேன். ஆனாலும் உங்களுக்கு ஒரு வார்த்தை சொல்லுகிறேன். வாள்வலியால் வெற்றி பெறுவது என்பது மிகவும் குரூரமான செயல். அன்பினாலேயே ஒருவர் மற்றவரை ஆளவேண்டும். இந்த உண்மையை 'ததாகதர்' நமக்கு எடுத்துச் சொல்லியிருந்தும் வீண் பிரமையில் அகப்பட்டு நாம் கொலை செய்து வாழ்கிறோம். அன்பே உயிர், அன்பே கடவுள், அன்புக்கு நிகரான பொருள் ஒன்றுமே கிடையாது. அன்பினாலேயே தர்மப்பிரசாரம் செய்யுங்கள். அன்பும் ஆதரவும் நிர்வாண நிலையை அடைவதற்கு உரிய படிகள். அதுதான் இகத்திலும் பரத்திலும் உண்மையான ஆனந்தத்தை அளிக்கும்" என்று சொல்லி நிறுத்தினான் அசோகன்.

மேலும் என்ன பேசப்போகிறானோ என்ற ஆவலுடன் சபையோர் அவன் முகத்தையே பார்த்திருந்தனர். அசோகன் கருணை பொழியும் குரலில், "இனிமேல் யாக யக்ஞங்கள் என்ற பெயராலும், வேறு தர்மகாரியங்கள் என்ற பெயராலும் பிராணிகளை வதை செய்யும் கொடுமை நிறுத்தப்பட வேண்டும். இதுவரை அரண்மனையிலே லக்ஷக்கணக்கான பிராணிகள் உணவின் பொருட்டுக் கொல்லப்பட்டன. விருந்தாளிகளும் மிக ஆவலோடு புலால் உண்டனர். இந்தக் கொடுமை இன்றுடன் ஒழிய வேண்டும். இந்த விஷயத்தைக் கிராமங்களிலும் நகரங்களிலும் பிரகடனம் செய்யுங்கள். அஹிம்சையே சிறந்த தர்மம். வாள் வலியால் தர்மப்பிரசாரம் செய்யக்கூடாது. காரியசித்தியில்லாமல் மங்களோத்ஸவம் செய்தல் இழிவு. ஒழுக்கமே உயர் செல்வம். இந்த நான்கு வாக்கியங்களையும் மகாவாக்கியங்களாக நினையுங்கள். இவை கேவலம் அசோகனாகிய என் மொழிகள் அல்ல. பகவான் 'ததாகதர்' என் மனத்துட் புகுந்து கட்டளையிடுகிறார் என்று கொள்ளுங்கள்" என்றான். தெய்விகத் தன்மையின் ஒளி அவன் முகத்திலே சுடர்விட்டுப் பிரகாசித்தது.

உண்மையில் ஆவேசமே வந்துவிட்டதென்று மந்திரி ராதா குப்தன் எண்ணிவிட்டான். பக்தியின் பெருக்கினுல் அவன் மெய்சிலிர்த்தான். பிறகு மெதுவாக எழுந்து, "சபையோர்களே! இப்பொழுது அரசர் பெருமான் பொழிந்துள்ள அமுதமொழியின் சுவை, பாரத கண்டம் மட்டும் அல்ல. சீன, யவன, சிங்கள தேசங்களிலும் பரவுவதற்கான ஏற்பாடுகள் செய்யவேண்டும். சூரிய சந்திரர்கள் உள்ளவரையில் உலகில் உலவுமாறு இந்த அமுதச் சொற்களை மலைகளிலும் குன்றுகளிலும் குகைகளிலும் தேவாலயங்களிலும் சிலாதலங்களிலும் வெட்டுவிப்பேன்" என்ருர்.

ஜயகோஷமும் கரகோஷமும் காதுகளைச் செவிடுபடச் செய்தன. கடைசியாக மதுரைமன்னன் எழுந்து, "குற்றவாளிகளைத் தண்டிக்க 'நரகம்' என்று ஒன்றை ஸ்தாபித்து அச்சுறுத்துவதனுல் நாட்டிலே தீமைகள் குறையும்; நன்மைகள் பரவும்" என்று விண்ணப்பித்துக்கொண்டான்.

அசோகனுக்கு இதுவும் நன்மை பயக்கலாமென்று தோன்றிற்று. ஆனுல் ராதாகுப்தன் இதைப்பற்றி ஆலோசிக்கத் தொடங்கினுன். இது உசிதமல்ல என்றும் தெரிவித்தான். அசோகன் நன்மை பயக்கலாம் என்று எண்ணி நரகத்தை நிர்மாணிக்க உத்தரவு செய்துவிட்டான்.

மந்திரி ராதாகுப்தனது மனத்தில் இது ஏதோ ஒரு பெரிய தீமைக்கு அறிகுறியென்றும், சுலபமான இந்த வேளைக்கு ஒரு அமங்கலக் குரல் என்றும் தோன்றிற்று.

'ஒருவேளை இது அந்தப் பொட்டையாண்டியின் துர்ப்போதனையோ?' என்ற நினைவு அவன் மனத்துள் எழுந்தது.

# 11

## குந்தநந்தினி

உபகுப்தர் அந்த எண்ணுயிரம் பொன்னேயும் அலட்சிய மாக உதைத்துத் தள்ளிவிட்டு ஒரே சிந்தையில் ஆழ்ந்தார். அவருடைய இந்த மாதிரியான செய்கை அவர் மனேவிக்கு அநுபவித்தறியாத புதுமையாக இருந்தது. இந்துமதிதேவியும் சாமசுந்தரனும் இந்தச் செயலேக் கண்டு திகைத்துப்போய் நின்ருர்கள். அவரது இந்தச் செயல் எதிலே போய் முடியுமோ என்று அவர்களால் நிர்ணயிக்க முடியவில்லே. ஏற்கனவே ரோகிணியும் அவரை வற்புறுத்தியிருந்தபடியால் அவர் ஏதோ ஒருவிதமாக ஒப்புக்கொண்டு விடுவாரென்றும் மனேவியைச் சந்தோஷத்துடன் பார்த்து, மீதிப் பணத்தைப் பெட்டியிலே போடுவார் என்றும் சாமசுந்தரன் எண்ணினுன். ஆனுல் என்ன செய்துவிடுவாரோ இப்பொழுது!.

உபகுப்தர் மெதுவாக, கலக்கமில்லாத தெளிந்த குரலில் பேசத்தொடங்கினுர். "குந்தா, இன்று நீ பெரும்பிழை செய்து விட்டாய். இவ்வளவு நாளாக என்னுடன் பழகியும் என்னே நீ உள்ளபடி தெரிந்துகொள்ளவில்லே. இன்று நீ செய்த ஒரு பெரும் பிழையினுல் இதுவரையில் நான் வாழ்ந்த வாழ்க்கை, ஒழுக்கம் எல்லாம் பாழாகிவிட்டன. இந்தப் பாபத்துக்குப் பிராயச் சித்தம் இனி உலக வாழ்க்கையில் இருப்பதால் உண்டாகும் என்று நான் நினேக்கவில்லே. செல்வத்தின் மேல் ஆசையிருந்தால் பெரிய வர்கள் தேடிய கடல்போன்ற செல்வத்தைத் தண்ணீர்போல் தானதர்மங்களில் செலவு செய்திருக்கமாட்டேன். வாசவதத்தை, தன் அளவற்ற செல்வத்தையும் எனக்கு அளிக்க விரும்பினுளே; அதை ஏன் மறுத்தேன்! இந்த யுவராஜன் உன் எதிரிலேயே வேண்டவில்லேயா? நீ செய்த இந்த யுக்தி எனக்குத் தெரியாதா? இவைகளேப்பற்றி நீ கொஞ்சமாவது எண்ணிப் பார்த்தாயா? இது எவ்வளவு அவிவேகம்."

குந்தையின் கண்களிலே கண்ணீர் மாலே மாலேயாகப் பெருகி ஓடிற்று. "நாதா! இந்தச் செயலேக் கேவலம் பணத்தின்மேல்

உள்ள ஆசையால் செய்யவில்லை. தங்களை விடுவிக்கவேண்டும் என்கிற ஆவலேதான் இதற்குக் காரணம்" என்ருள்.

உபகுப்தனுர் கோபம் தொனிக்க, "அதிதிகளாக வந்த விருந்தினரை, ஆபத்திற்கு உள்ளாக்கும் அந்த ஆவலைச் சுட்டால் என்ன? மகதநாட்டு ராஜகுடும்பம் கலிங்கநாட்டு ராஜகுடும்பத்தை எவ்வளவு துச்சமாக மதிக்கிறது என்பது உனக்குத் தெரியாது. உன்னுல் கற்பனை செய்துகொள்ளவும் முடியாது. இந்த மகத நாட்டார் தங்களைப் பகவான் கௌதம புத்தரது அடியார்களென்று பெருமையாகச் சொல்லிக்கொள்கிருர்கள். ஆனுல் செயல்களோ ராக்ஷஸச் செயல்கள்! பைசாசச் செயல்கள்! கோடிக்கணக்கான மனிதர்களைக் கொன்று குவித்து, அந்த ரத்தக்கறை படிந்த பூமியின்மேல், 'அஹிம்ஸா பரமோ தர்ம: என்று பிரசாரம் செய்கிருர்கள். கபட நாடகங்களாலும் சூழ்ச்சிகளாலும் வெற்றிபெறுகிருர்கள். ஸம்புஷ்டாசாரியனைப்போன்ற துஷ்ட பிக்ஷுக்கள், துறவி என்ற சொல்லுக்கே அருகதையற்றவர்கள். தங்களைப்போன்ற நீசபுத்தியுள்ள ஜனங்களைத் துணை சேர்த்துக்கொண்டு, ராஜ்ய நிர்வாகம் செய்கிருர்கள். இப்படிப்பட்ட அசுரர்கள் கையில் ராஜகுமாரன் அகப்பட்டால் ஏதாவது பழிசுமத்தி, நொடியில் கொன்றுவிட மாட்டார்களா? குந்தா, உனக்கேன் இப்படிப் புத்தி போயிற்று? என் உயிரைக் காப்பாற்றுவதற்காக நாட்டிற்கே தீங்கு விளையக்கூடிய காரியத்தைச் செய்துவிட்டாயே! அழியக்கூடிய இந்தச் சரீரத்தின்மேல் வைத்த ஆவலைப் பகவானிடத்தில் வைக்கலாமென்று உனக்குத் தோன்றவில்லையா?" அவர் குரலிலே இரக்கமும் பரிவும் ஏக்கமும் கலந்து ஒலித்தன.

குந்தை விம்மிய குரலில், "தாங்கள் கோபிப்பது நியாயந்தான். என்னுடைய அறியாமையினுல்தான் இப்படிப்பட்ட கொடுஞ் செயலைச் செய்துவிட்டேன். இளவரசனுக்கு இவ்வளவு ஆபத்துக்கள் நேரக்கூடுமென்று எனக்குத் தோன்றவே யில்லை" என்று கண்ணீர் பெருக்கினுள். இதுவரையில் பேசாமல் சிந்தனையில் ஆழ்ந்திருந்த தேவி இந்துமதி, "செட்டியாரே! இந்த விஷயத்திலே குந்தையின்மீது குற்றமே யில்லை. யுவராஜன் எப்படியும் கைதியாகி விடுவதென்றே முடிவுசெய்திருந்தான்" என்ருள்.

"நீங்கள் யுவராஜனுேடு இவ்வளவு ஜாக்கிரதையாக வந்திருப்பதிலிருந்தே யுவராஜனைப் பகைவர்கள் கையில் சிக்காமல் காப்பாற்ற வேண்டும் என்றுதானே ஏற்படுகிறது. அப்படியிருக்க,

கைதியாக விரும்பினுன் என்பது அவ்வளவு பொருத்தமாக இல்லையே" என்று சொல்லிவிட்டு, தேவியையும் சாமசுந்தரரையும் ஏற இறங்கப் பார்த்தார் உபகுப்தர்.

பிறகு சற்றுக் கடுமையான குரலில், "உள்ளபடி பார்த்தால் உங்கள் இதயங்கள் வெறும் கல்லினுலோ இரும்பினுலோ செய்திருக்கின்றன என்றே தோன்றுகிறது. இளவரசனே உலக இயல்பு அறியாத சின்னஞ்சிறு குழந்தையாக இருக்கிருன். அவன் வலியச்சென்று பகைவர்கள் கையில் விழுகிருன் என்ருலும் அதை நீங்கள் தடுத்திருக்கவேண்டும். அப்படியின்றி வேடிக்கை பார்த்துக்கொண்டு நின்றிருந்திருக்கிறீர்களே, இது நியாயந்தானு? இது பெரும் பிழையென்று உங்களுக்குத் தோன்றவில்லையா?" என்று கேட்டார்.

உபகுப்தருடைய இந்த வார்த்தைகள் தேவியின் நெஞ்சைப் பிளந்தன. விஷயம் தெரியாமல் அவர் கோபிக்கிருர் என்ருலும் ரோகிணியும் கைதியாகி இன்னொரு புதிய விபத்தை விலைக்கு வாங்கிவிட்டாளே என்பதை நினைக்க நினைக்க அவளது துயரம் பன்மடங்கு பெருகலாயிற்று. ஒரு புறம் குந்தையின் விம்மல், மறுபுறம் தேவியின் கண்ணீர், இவ்விரண்டிற்கும் இடையே மீண்டும் பேசலானுர் உபகுப்தர்.

"குந்தா! இன்று நீ செய்துவிட்ட இந்த மாபெரும் குற்றத்திற்காக உடல் எரிந்து சாம்பலாகும் அளவுக்குப் பச்சாத்தாபப் பட்டாலும் போதாது. குந்தா! உலகைத் துறப்பதற்கு ஏற்ற சமயம் இதுதான். சாவுகாரின் பிடியிலிருந்து இன்றைக்கு இல்லாவிட்டாலும் இன்னும் இரண்டொரு நாளில் திரும்பி வந்திருப்பேன். அதற்குள் பொறுமையை இழந்துவிட்டாயே! உன்னுடைய உலக ஆசை தலைதூக்கி நின்றது. இந்தச் சிறு பிரிவைப் பெரியதென்று நினைத்துவிட்டாய். அதன் பயனுக இந்த மகாபாதகத்தையும் செய்துவிட்டாய். இந்த உலக வாழ்க்கை எப்படிப்பட்ட மாயை என்று இதிலிருந்தே தெரியவில்லையா? இந்த மாயையிலிருந்தே விடுபட்டு, நிர்வாணபதம் அடைய முயலுவதுதான் மனிதனுடைய வாழ்க்கையின் லட்சியம். இப்பொழுதே நிச்சயித்துவிடு. காற்றுள்ள பொழுதே தூற்றிக் கொள்."

குந்தை, கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள். அவரது அழகிய திருமேனியை ஏற இறங்க ஒரு தடவை பார்த்துவிட்டு

சாந்தமும் கருணையும் தவமும் நிறைந்த அவரது முகத்தை வைத்த கண் வாங்காமல் பார்க்கலானாள். அவள் மனத்துள் பெரும் போராட்டம். ஆனால் அவருடைய முகத்திலே உறுதியின் அறிகுறி தோன்றிற்று. வாடிக் கிடந்த அந்த முகத்திலே ஒரு புதிய ஒளி தோன்றிற்று. ஏதோ ஒரு திவ்விய சக்தி தன் உடலுக்குள் பிரவேசித்து, உடல் முழுவதும் பரந்து நிற்பதுபோல் அவளுக்குத் தோன்றிற்று.

இதற்குமுன் பல தடவைகள்; ஏன் நூற்றுக்கணக்கான தடவைகள் உபதேசம் செய்திருக்கிறார். ஆனால் இன்றே அது பலன் அளித்தது. சற்று நேரம் ஒருவரும் ஒன்றுமே பேசவில்லை. எங்கும் ஒரே அமைதி.

திடீரென்று மிகவும் இனிமையான குரலில், "சரி; எனக்கு மனம் தெளிந்துவிட்டது" என்றாள் குந்தநந்தினி. அவள் வார்த்தையிலே உறுதியின் அழுத்தமும் வேகமும் தொனித்தன.

"குந்தா! நன்றாக ஆர அமர யோசித்துப் பேசு."

"வெகுநாளாகவே சிந்தித்துக்கொண்டுதான் இருந்தேன். இன்று நிச்சயித்துவிட்டேன். இன்று எதிர்பாராமல் நேர்ந்த இந்த நிகழ்ச்சிகளால் என் கண்கள் திறந்தன. உலக போகத்தினால் ஏற்படும் துக்கத்தின் பெருக்கையும் துறவு பூணுவதால் கிடைக்கக் கூடிய அழிவற்ற ஆனந்தத்தின் பெருமையையும் நான் ஒருவாறு தெரிந்துகொண்டேன். இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும். சொல்லுங்கள்" என்றாள்.

அவரது முகம் மலர்ந்தது. தாம் இதுகாறும் அவளுக்குச் செய்துவந்த போதனைகள் பலனளிக்கும் தருணத்தில் இருக்கின்றன என்பதையும் கண்டுகொண்டார். மிகவும் கனிவுடன் கூடிய குரலில் அவளை நோக்கி, "குந்தா! உலக வாழ்க்கையிலிருந்து உன் மனம் திரும்பிவிட்டதா?" என்றார்.

"ஆம்" என்று மிகுந்த வணக்கத்துடன் மொழிந்தாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அவரது உள்ளம் ஆனந்த மிகுதியால் பொங்கி எழுந்தது. "நமோ புத்தாய" என்று மும்முறை உச்சரித்தார் அவர். மிகுந்த உவகையோடு குந்தநந்தினியையே பார்த்துக்கொண் டிருந்தார். நெடுநாள் தவமிருந்த பக்தன், கடவுளையே நேரில் கண்டுவிட்டால் எத்தகைய பரவச நிலையை அடைவானோ அதே நிலையில் குந்தையின் எதிரில் நின்றிருந்தார் உபகுப்தர்.

குந்தையின் வைராக்கியம் க்ஷணத்துக்கு க்ஷணம் வளரத் தொடங்கிற்று. மிகுந்த கருணையுடன் கூடிய குரலில், "அடிகளே! இந்த உலக பந்தத்தை நான் அறுத்து எறிந்துவிட்டேன். இது வரையில் தங்களுக்கும் எனக்கும் இடையில் கணவன் மனைவி என்ற பாசம் இருந்தது. இன்றுமுதல் அதையும் துறந்துவிடுகிறேன். இதுவரை தாங்கள் செய்துவந்த உபதேசங்களினால் என்னை உயர்ந்த நிலைக்குக் கொண்டுவந்து விட்டீர்கள். இதன் பொருட்டு நான் பகவான் கௌதம புத்தரை நோக்கித் தங்களுக்கு அழியாத ஆனந்தத்தை அளிக்குமாறு வேண்டுகிறேன். ஆனால் ஒரே ஒரு விண்ணப்பம்" என்று சற்றே நிறுத்தினாள் குந்தை. அப்பொழுது அவரது கண்களிலிருந்து ஆனந்தபாஷ்பம் பெருகிக்கொண்டிருந்தது.

மிகவும் மெல்லிய குரலில், "குந்தா! இன்றே என் உபதேசம் பலித்தது. இளம் பருவத்திலே உன்னை எனக்கு மணம் முடித்து விட்டார்கள். இல்லாவிட்டால் நெடுநாட்களுக்கு முன்பே துறவறத்தை மேற்கொண்டிருப்பேன். உன்பொருட்டே நான் இல்லறத்தில் இருந்தேன். உன்னை அஞ்ஞானத்தில் விட்டுவிட்டுப் போவது அநுசிதம் என்று தோன்றிற்று. இதன் பொருட்டே இன்றுவரையில் உனக்கு உபதேசங்கள் செய்து வந்தேன். என் உபதேசங்கள் இன்றே பலன் அளித்தன" என்று சொல்லும் பொழுது ஆனந்த மிகுதியால் அவர் குரல் கரகரத்துப் போயிற்று. அவள் எழுந்து அவர் பாதங்களிலே விழுந்து வணங்கி, "அடிகளே! அடியாள் தேவரீருக்கு இன்றுமுதல் சிஷ்யை. நான் என்ன செய்யவேண்டும்; பணித்தருளுங்கள்" என்றாள்.

"என்னைவிடச் சிறந்த பெரியோர்களிடமிருந்து நீ உபதேசம் பெறவேண்டும். மகாத்மா மங்கலிபுத்திரர் ஒருவர்தாம் இப்பொழுது உபதேசிக்கத் தக்கவர். அவரைச் சரணமடைந்து பிக்ஷுணியாகி, அந்நிலைக்கு உரியவைகளை அநுஷ்டித்து, நிர்வாண நிலையை அடைய முயல்வதுதான் உன் கடமை. நான் இப்பொழுதே பிக்ஷுவாக முடியாது. யுவராஜனை விடுதலை செய்யாமல் வேறு எதைச் செய்தாலும் அது நியாயமும் அல்ல; தெய்வ சம்மதமும் ஆகாது. நீயும் உன் பாபச் செயலுக்காக இடைவிடாது பச்சாதாபப் படு. நான் விடுதலைக்கு உரிய வழியைத் தேடுகிறேன்" என்றார்.

"அடிகளே! யுவராஜன் விடுதலை அடைந்தான் என்று தெரிந்தாலொழிய என் துயரம் ஆறாது."

"அதற்காகவே நான் இப்பொழுது புறப்பட்டுப் பாடலி புத்திரம் போகிறேன். அங்கே சென்றவுடன் அதற்கானவைகளைச் செய்வேன்" என்று சொல்லியவராய் வீட்டைவிட்டு வெளியே இறங்கினார் உபகுப்தர்.

குந்தையும் உடன் கிளம்பத் தயாரானாள். இந்த நிகழ்ச்சிகள் நடைபெறும்போது அண்டை அயலிலிருந்து வந்த சிலர், அங்கே நின்றிருந்தனர். அவர்கள் இவரது செயல்களைக் கண்டு வியந்து, "இப்படியே விட்டுவிட்டுப் போய்விடுகிறீர்களா?" என்றார்கள்.

"மிகுதியான பொன்னையும் பொருளையும் வீட்டையும் நல்ல வழியிலே செலவு செய்யுங்கள்" இந்த ஒரு வார்த்தைதான் அவர் சொன்னார்.

ராணி இந்துமதி தேவியும், சாமசுந்தரனும் திகைத்துப்போய் நின்றுவிட்டார்கள். பிறகு தேவி இந்துமதி அவர்முன் வந்து, "நாங்களும் பாடலிபுத்திரந்தான் வருகிறோம். நீங்கள் என் குமாரனுடைய குதிரையை உபயோகித்துக்கொண்டு எங்களுடன் வரலாம்" என்று பணிவுடன் தெரிவித்தாள்.

உபகுப்தரும் இந்த ஏற்பாட்டுக்கு ஒப்புக்கொண்டார். குந்தை, நீர் மல்கும் கண்களுடன் அவருக்கு அருகிலேயே நின்று கொண்டிருந்தாள். எல்லோரிடமும் விடைபெற்றுக் குதிரையின் மீது ஏறுமுன்பு மீண்டும் ஒரு முறை அவர் பாதங்களில் பணிந்து, "அடியாள் தேவரீருக்குக் கடைசி முறையாக நமஸ்கரிக்கிறேன்" என்று கூறி விம்மலானாள்.

"வாழ்க மெய்யறம்! வாழ்க மெய்யறம்!" என்று அற முறைப்படி ஆசி கூறினார் உபகுப்தர். சற்று நேரத்துக்கெல்லாம் குதிரையின்மீது ஏறிச் சென்ற அம் மூவரையும் இமைகொட்டாமல் பார்த்தவண்ணம் நின்றாள் குந்தை. இனி, தான் அந்த வீட்டில் நிற்பது தகாது என்று நினைத்தவள்போல் வீதியில் இறங்கி நடக்கலானாள். "புத்தம் சரணம் கச்சாமி! சங்கம் சரணம் கச்சாமி! தம்மம் சரணம் கச்சாமி!" என்ற சொற்களை அவள் வாய் முணுமுணுத்துக்கொண் டிருந்தது.

இத்தகைய அன்பு மிகுந்த தம்பதிகள் ஒரே நொடியில் உலக வாழ்க்கையையும் வலுவில் வந்த பொற்குவியலையும் துச்சமாக மதித்து, துறவு பூண்ட அந்தக் காட்சி பாரத நாட்டிற்குப் புதியதா?

# 12

## ஸதி இந்துமதி

செட்டியார் உபகுப்தர் அரசிளங் குமரனைக் கைது செய்த சைனிகர்கள் போய்ச்சேருமுன் தாம் பாடலிபுத்திரத்தை அடைந்து விடவேண்டுமென்று துடியாய்த் துடித்துக்கொண் டிருந்தார். தனியாகப் புறப்பட்டிருந்தால் இதற்கு முன்னமே போய்ச் சேர்ந்திருப்பார். இந்துமதி தேவியும் சாமசுந்தரனும் கூடவே இருந்ததால் அவர்களுக்காக அடிக்கடி தங்க நேரிட்டது.

ஆரம்பத்தில் அவர்களுக்கும் சேனை வீரர்களுக்கும் இடையில் சொற்ப தூரமே இருந்தது. ஆனால் வரவர அது சில காதங்களாகப் பரிணமித்துவிட்டது. அன்று சாயங்காலம் இவர்கள் ஒரு கிராமத்தை அடைந்தபோது கைதியோடு அவர்கள் ஊரை விட்டுச் சென்று நான்கு நாட்கள் ஆயிற்றென்று தெரியவந்தது.

அந்தக் குக்கிராமத்தின் அருகே அகன்ற வெளி. அதை அடுத்து ஒரு சத்திரம். அந்தச் சத்திரத்திலேதான் நான்கு நாட்களுக்கு முன்னர் இளவரசனும் சைனிகர்களும் தங்கி யிருந்தார்கள். ஊருக்கு வெளியே உள்ள அந்தச் சத்திரத்தில் அமைதியே குடி கொண்டிருந்தது.

இவர்களை அங்கேயே இருக்கும்படி சொல்லிவிட்டு, உணவுக் கானவைகளைத் தயாரிக்கும் பொருட்டு வெளியே போனார் உப குப்தர். சற்று நேரத்துக்கெல்லாம் குதிரைகளின் காலடி ஓசை கேட்கத் தொடங்கிற்று. யாராக இருக்குமோ என்று அஞ்சிய வளாகத் தேவி, ஒரு மறைவிடத்தில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

வந்தவள் ஒரு பெரிய தனிகனது மனைவிபோல் காணப்பட்டாள். மிகுந்த அதிகாரத்துடன் கூடிய குரலில், "மாதவி! ஏற்கனவே யாரோ இந்தத் தர்மசாலையிலே தங்கி யிருக்கிறார்கள் போல் இருக்கிறது. அவர்களிடம், 'நாங்கள் இங்கே தங்கப் போகிறோம்; வேறு யாரும் இங்கே தங்க முடியாது. அதோ! அடுத்துள்ள கிராமத்தில் போய் தங்கலாம்' என்று சொல்" என்றாள்.

மாதவி ஒரே பாய்ச்சலில் உள்ளே நுழைந்து, அங்கே முகத்தை மறைத்தவண்ணம் உட்கார்ந்திருக்கும் பெண்மணியை நெருங்கினுள். முகத்தைப் பார்த்தாளோ இல்லையோ அப்படியே கல்லாய்ச் சமைந்து போனுள்.

தேவியும் திடுக்கிட்டாள். அப்பொழுதே கலிங்கநாட்டு விஷயத்தைத் தெரிந்துகொள்ளலாம் என்ற ஆவல் ஒரு புறமும் ஆனல் செய்தி நல்லதோ பொல்லாதோ என்கிற சந்தேகமும் அவளை வதைத்தன. அவளது நெஞ்சு, 'படீர், படீர்' என்று அடிக்கத் தொடங்கிற்று. என்ன கேட்பதென்று தெரியாதவளாகச் சற்று நேரம் அப்படியே அயர்ந்துவிட்டாள்.

தேவியின் சுமங்கலிக்குரிய சின்னங்களைக் கண்டு அவளுக்கு இன்னும் விஷயம் தெரியாதென்று ஊகித்தாள் மாதவி.

கடைசியில் தேவி மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, "மாதவி, நீ இங்கே எப்படி வந்தாய்? எல்லோரும் க்ஷேமந் தானே?" என்ருள். இந்த வார்த்தைகள் எங்கேயோ கிணற்றுக் குள்ளிருந்து பேசுவதுபோல் இருந்தன.

மாதவிக்கு என்ன சொல்லுவது, எப்படிச் சொல்லுவது என்றே விளங்கவில்லை. சற்று யோசித்துவிட்டு, "ராணி விமலா தேவியாரோடு பாடலிபுரத்திற்குப் போயிருந்தேன்" என்ருள்.

"ராணி விமலாதேவியா? அது யார்?" என்ற வார்த்தைகள் ஏக காலத்தில் ராணி இந்துமதியின் வாயினின்றும், சாமசுந்தரனின் வாயினின்றும் எழுந்தன.

"விமலா தேவி வேறு யார்? கலிங்கநாட்டு ராணிதான்".

"என்ன? கலிங்கத்து ராணியா?"

"ஆமாம். இதில் அவ்வளவு ஆச்சரியப்படும்படியான சங்கதி என்ன இருக்கிறது?" என்று மிகுந்த அலட்சியத்துடன் கூறினுள் மாதவி.

"மாதவி! நீ யாரோடு பேசிக்கொண்டிருக்கிருய் தெரியுமா?

"ஆகா! திவ்வியமாகத் தெரியும்."

"இல்லை; நீ ஏதோ உளறுகிருய். கண்ணைத் திறந்து பார் தெரியும்".

"கண்ணைத் திறந்து பார்க்கவேண்டிய அவசியமே இல்லை. யாரையும் அடையாளம் கண்டுபிடித்துத் தெரிந்துகொள்ள வேண்டியதும் இல்லை. 'நாங்கள் இன்று இங்கே தங்கப்போகிரும். நீங்கள் இங்கே தங்கக்கூடாது. இஷ்டம் இருந்தால் அந்தக் கிராமத்துக்குள் போய்த் தங்க இடம் தேடுங்கள்' என்று கலிங்க நாட்டரசி கட்டளையிடுகிருர்" என்ருள்.

இந்துமதி தேவியின் முகம் கோபத்தால் சிவந்தது. "உங்கள் ராணிக்கு அவ்வளவு அகம்பாவமா? நாங்கள் இதைவிட்டுப் போகமாட்டோம். வேண்டுமாளுல் அவளே கிராமத்தில் இடந் தேடிக் கொள்ளட்டும்" என்று சொல்லிவிட்டு, "இந்த விமலா ராணி யார்?" என்று சிந்திக்கத் தொடங்கினுள். இதற்குள் சாக்ஷாத் விமலா தேவியே அவள்முன் தோன்றினுள்.

"யார்? விமலையா!" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் தேவி. மிகவும் பணிவுள்ள குரலில், "ஆம் அம்மா! தங்கள் திருவடிகளுக்குத் தொண்டு செய்யும் விமலைதான்" என்ருள்.

"நீ எப்படி ராணியாகிவிட்டாய்?" அரசியின் குரலில் பின்னும் ஆச்சரியம் தொனித்தது.

"என்னவோ எல்லாரும் அப்படித்தான் அழைக்கிருர்கள்."

"எதற்காக?"

"விசாகநந்தர் அந்தக் கலிங்க நாட்டுச் சிம்மாசனத்தில் உட்கார்ந் திருப்பதளுல்தான்."

"ஆளுல்—ஆளுல்—இப்பொழுது அந்த அரியணை, மந்திரி விசாகநந்தருக்குச் சொந்தமா?" விமலை ஆமென்று தலையை அசைத்தாள். "மந்திரியாருக்குச் சிங்காசனம் எப்படிக் கிடைத்தது? அதில் அமர்ந்திருந்த அந்தச் சோதிமணி எங்கே போய் விட்டது?" இந்தக் கேள்வி மிகுந்த ஆத்திரத்துடன் தேவியின் வாயினின்றும் எழுந்தது.

"அம்மணி! சொல்லவும் வெட்கம் பிடுங்கித்தின்கிறது. தங்கள் மந்திரியே தங்களுக்குத் துரோகம் செய்துவிட்டார்.

பௌத்தர்களின் உதவியினால் நாடு அவர்கள் வசமாகிவிட்டது" என்றாள்.

துள்ளி யெழுந்தாள் இந்துமதி தேவி. "என்ன? என்ன சொன்னாய்? மந்திரி விசாகநந்தனா துரோகம் செய்துவிட்டான்? இந்த வார்த்தைகளை என் செவிகளே நம்பவில்லையே!"

மிகவும் துயரப்படுபவள்போல், "ஆனால் அம்மணி! உண்மையில் நடந்தது அதுதான். ஏதோ தர்மத்துக்குக் கட்டுப் பட்டு நான் அவருடைய கூட்டுறவை விட்டொழிக்க முடிய வில்லை. இல்லாவிட்டால் இந்த விமலை வெறும் விமலையாகத்தான் இருந்திருப்பாள். ஒரு நாளும் தேவியைப் போன்றவர்களால் அழகு செய்யப்பட்ட அந்த ஆசனத்தில் உட்கார ஆசைப்பட் டிருக்கமாட்டாள்" என்று பெருமூச்செறிந்தாள் விமலை.

"சரி, இது கிடக்கட்டும்; அவரைப்பற்றிய சங்கதியைச் சொல்லவில்லையே?" விமலை வாயே திறக்கவில்லை. "விமலா! சட்டென்று சொல்; அவர் எங்கே? க்ஷேமமாயிருக்கிறாரா?" பதிலே இல்லை.

"விமலா! ஏன் பேசாமல் இருக்கிறாய்? அவர் சௌக்கியந் தானே?" கற்சிலைபோல் அசையாமல் இருந்தாள் விமலை. "என்ன விமலா? உள்ள செய்தியைச் சொல்லத் தயங்காதே" என்றாள் தேவி.

கபட நாடகத்தில் கைதேர்ந்த விமலையின் உதடுகள் மெல்ல அசையத் தொடங்கின. மிகுந்த துக்கத்தினால் அவஸ்தைப் படு பவள்போல் நடித்து, "இந்த அசுப சமாசாரத்தைச் சொல்ல நானா ஆளானேன்?" என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டாள்.

இராணியின் ஆவல் அதிகரித்தது. "எதுவாயிருந்தாலும் தயங் காதே விமலா! சொல்லேன்!" என்றாள்.

"தங்களுடைய சௌபாக்கியமாகிய சூரியன் அஸ்தமித்து விட்டது! தங்களுடைய வாழ்விலே பேரிடி விழுந்துவிட்டது!" என்று சொல்லியவளாய் முன்றானையால் முகத்தை மூடிக்கொண் டாள் விமலை. தன் முகத்திலே ஆனந்தம் தோன்றுவதைத் தேவிக்கு மறைக்கும்பொருட்டே அழுவதுபோல் நடித்து, முகத்தை மூடிக்கொண்டாள். எவ்வளவோ மனத்தைத் திடப் படுத்திக்கொண்டும் துயரம் தாளாதவளாகத் தேவி, தடாலென்று

பூமியின்மேல் விழுந்து கதறலானாள். சாமசுந்தரனும் கதறலானான். விமலே, தேவியின் அருகில் உட்கார்ந்து ஆறுதல் சொல்லலானாள். நெடுநேரத்திற்குப் பிறகு தேவி, "என்றைக்கு மகாராஜா பரகதி யடைந்தார்?" என்றாள்.

இதற்கிடையில் விமலை தன் ஆட்களை ஏவி ஒரு பெரிய தீயை மூட்டச் சொல்லிவிட்டு, மறுபடி தேவியுடன் பேசத் தொடங்கினாள் "என்றைத்தினம் இந்திரபுரம் வசப்பட்டதோ அன்று காலையில்."

"சவம் கிடைத்ததா? அக்கினி காரியங்கள் சாஸ்திரோக்தமாக நடந்தனவா?"

"அவருடைய உடல் படுக்கையறை அருகிலேயே கிடைத்தது. அதை..."

"அங்கே உடல் எப்படிக் கிடைத்தது?"

"அவரைக் கொன்று அங்கேயே போட்டுவிட்டார்கள்."

"என்ன! கொலையா? போர்முனையில் அவருக்கு மரணம் இல்லையா? ஐயோ தெய்வமே! நான் மகா பாவி! இதுவரையில் அவர் போர்முனையிலே மடிந்து வீர சுவர்க்கம் அடைந்திருப்பார் என்றல்லவா இந்தத் துக்கத்திலும் ஆறுதல் கொண்டேன். அட, கொலையா? எந்தத் துரோகி, எந்த நீசன் இப்படிப்பட்ட கொலையைச் செய்ய முன்வந்தான்? அட பாவி!"

"அம்மா! அவருடைய பெயரைச் சொன்னால் அதில் தங்களுக்கு நம்பிக்கை ஏற்படாதே."

"விமலா! கூசாதே; சும்மா சொல்லு. நம்பிக்கை உண்டாகாத விஷயங்கள் நடந்திருக்கின்றன. மந்திரி விசாகநந்தர் துரோகம் செய்ததைவிட வேறொரு உதாரணம் வேண்டுமா? மந்திரி இந்த மாதிரி செய்துவிட்டாரென்று வேறு யாராவது சொல்லியிருந்தால் நான் ஒரு நாளும் நம்பவே மாட்டேன்."

"அந்தக் கொலைபாதகனுடைய பெயரைக் கேட்டால் பிறகு தெரியும். மந்திரியாருடைய துரோகம் அதற்கு முன் துரும்புக்குச் சமானம். அரசரைக் கொன்றவர் சிதானந்த சுவாமிதான்! வேறொருவரும் இல்லை."

"சிவ! சிவா!" என்று இரு கரங்களாலும் காதுகளை மூடிக்கொண்டாள். அடாடா! இனிமேல் நல்லவர்களுக்கு இங்கே இடமில்லை. கொலைபாதகர்களுக்கும் துரோகிகளுக்குந் தான் இது இடம். கூடிய சீக்கிரம் உலகத்திலிருந்து மாள்பவர்கள் தான் பாக்கியசாலிகள். இல்லாவிட்டால் இந்தத் துரோகிகளின் பெயர்களால் மக்கள் மகா பாபத்தைச் செய்ய முற்பட்டு விடுவார்கள்!" என்றாள் ராணி.

விமலையால் ஆத்திரத்தை அடக்க முடியவில்லை. தேவி, சதியாக உடன்கட்டையேற விரும்பித் தீக்குளித்துவிடுவாள்; தன்னுடைய வழியிலுள்ள ஒரு தடை நீங்கும் என்று எதிர்பார்த்தாள். இதற்காகச் சிதையையும் தயாரித்துவிட்டாள். தேவி, துயரம் தாளாமல் புலம்பினாளேயன்றிச் சதியாக மரிக்க வேண்டுமென்று குறிக்கவும் இல்லை. அந்த ராக்ஷஸியின் நெஞ்சு கொலைவெறி கொண்டு துடித்தது. எப்படியாவது தேவியை ஒழித்துவிட வேண்டும் என்ற எண்ணம் முகத்திலே பிரதிபலித்தது. மிகவும் விசனப்படுபவள்போல் நடித்து, கண்ணும் கண்ணீருமாக, "தேவி! இந்த அருமையான சந்தர்ப்பத்தை இழக்கலாகாது. அதிலும் தங்களைப்போன்ற உத்தமப் பெண்களா இழப்பது? கலிங்காதிபதி தங்களது வரவை எதிர்பார்த்து நிற்பார்" என்று சொல்லிப் பிரலாபிக்கத் தொடங்கினாள்.

துக்கத்தின் மிகுதியினால் தேவிக்கு இதுவரையில் இவளைப் பற்றிய எண்ணமே இல்லை. ஆனால் சாமசுந்தரன், "இது என்ன விமலாதேவி? உங்கள் வாயிலிருந்தா இந்த அசுபமான வார்த்தைகள்! வாயை மூடுங்கள்!" என்றான்.

ஆனால் விமலையின் கபட நாடகம் ஒரு சிறிதும் ராணி இந்துமதிக்குத் தெரியாது. தன்னிடம் வளர்ந்த பழைய விமலை, தன்னுடைய நன்மைக்காகப் பேசுகிறாள் என்று நினைத்தாள். சிறியவளாக இருந்தாலும் தன்னைப்போன்ற உத்தமிகள் எப்படி இருக்க வேண்டுமென்று தெரிந்துதான் சொல்லுகிறாள் என்றே நினைத்தாள். மிகவும் சோகமுற்ற குரலில் சாமசுந்தரனைப் பார்த்து, "சாமசுந்தரரே! அவள் சொல்வதிலே குற்றம் என்ன? துக்க மிகுதியினால் இனி என்ன செய்யவேண்டும் என்பதை நான் சிந்திக்கவில்லை. நல்ல சமயத்தில் அவள் நினைவூட்டினாள். நல்லதுதானே. அம்மா! நீ பெரிய உபகாரமே செய்கிறாய்.

சாமசுந்தரரே, மேல் நடக்கவேண்டியவைகளுக்கு ஆயத்தம் செய்யுங்கள்" என்றாள்.

"தேவி! எதற்காகச் சதியாக வேண்டும்? இது என்ன ஆசாரம்! ஹிந்து தர்மத்தில் இப்படிப்பட்ட ஒரு அவலட்சணம் எப்படி வந்து நுழைந்தது. அழகுதான்" என்று திட்டிக்கொண்டிருந்தான் சாமசுந்தரன்.

அந்தக் காலத்திலே சதியாக மரிப்பது புனிதமான ஒரு செயலென்று கருதப்பட்டது. அப்படிச் சதியாக வேண்டுமென்று விரும்புகிறவர்களைத் தடுப்பது மகா பாவம், இழிவு என்றும் நினைத்தார்கள். யாராவது மறுத்தாலும் மரிக்கும்படி ஹிதோபதேசம் செய்வதும் அந்தக் காலத்தில் சகஜம்.

ஆகவே அந்த அக்கினி குண்டம் நன்றாக எரியும்படி செய்துகொண்டிருந்தார்கள் சிலர். 'இந்த விமலையையே பிடித்து அதில் தள்ளிவிட்டால் என்ன?' என்று நினைப்பவன்போல் சாமசுந்தரன் அவளைக் குரூரமாகப் பார்த்துக்கொண்டிருந்தான்.

அக்கினி தேவன் சுடர்விட்டுச் ஜொலித்துக்கொண்டிருந்தான். தேவி இந்துமதி கரங்குவித்து அதன் எதிரே நின்றுகொண்டிருந்தாள். "நான் போவதைப்பற்றி என்ன? இந்த உயிர் ஒரு பொருட்டல்ல. இளங்கோ மகேந்திரனுடைய நிலைமை என்னவாகும்? குழந்தை ரோகிணி மிகவும் பெரிய படுகுழியில் காலை இட்டுக்கொண்டிருக்கிறாளே; அவள் கதி என்ன? மகேந்திரன் என் கண்மணி என்ன ஆனானோ? எங்கே இருக்கிறானோ? இனிமேல் அவனைத் தேடி மறுபடி இழந்த சுதந்தரத்தைப் பெற வேண்டுமென்று உற்சாக மூட்ட யார் இருக்கிறார்கள்? இல்லை. சதியாக வேண்டும் என்கிற கட்டாயம் என்ன? ஒரு க்ஷணத்திலே உலகையே துச்சம் என்று உதறித் தள்ளிவிட்டு, ஈசுவர சேவைசெய்யப் புறப்பட்டுவிட்டாளே, அந்தக் குந்தநந்தினி! அவளைப்போல் நாமும் ஏன் நம்முடைய மீதியுள்ள வாழ்நாளை நல்ல வழியில் செலவிடக்கூடாது? உயிரை இழப்பது சுலபம். ஒருவனைக் கொல்லமுடியும். ஆக்கமுடியுமா? இது என்ன அவிவேகம்? எதற்காக உயிரை விட வேண்டும்? நான் போய்விட்டால் நாற்புறத்திலும் துரோகிகளும் கொலைகாரர்களும் சூழ்ந்து, நடுவிலே என் குழந்தைகள் நிர்க்கதியாக நின்றால், 'இப்படித்தான் செய்யவேண்டும். அப்படித்தான் செய்ய வேண்டும்' என்று சொல்வதற்கு யார் இருக்கிறார்கள்? ஆனால் நான் சதியாக மரிக்காமல் பின்வாங்கினேன் என்றால் உலகம்

என்ன நினைக்கும்? "இவள் ராக்ஷஸி. இவள் கணவனுக்குப் பின் உயிர்வாழ விரும்புகிருள்" என்று என்னைச் சந்தேகக் கண்களுடன் பார்க்கும். கலிங்க ராஜவம்சத்தினுடைய பெருமை இந்த இந்து மதியால் களங்கமாகிவிடுமோ? ஆயுள் உள்ளவரையில் இருந்து, என் குழந்தைகளுக்கு நன்மையைத் தேடக்கூடாதா?' என் றெல்லாம் நூற்றுக்கணக்கான எண்ணங்கள் அவள் மனத்தில் மோதி மோதிச் சிதறுண்டு போயின. கூப்பிய கையுடன் சாட்சாத் பவானி தேவியைப்போல் நின்றிருந்தாள் இந்துமதி.

சதியாக மரிக்கும் இந்தச் சடங்கிற்கும் சில மந்திரங்கள் உண்டு. துயரம் நிறைந்த இதயத்துடன் அந்த மந்திரங்களை முணமுணுத்துக்கொண் டிருந்தான் சாமசுந்தரன். விமலை, 'இன்னும் சற்று நேரத்திலே இவள் சாம்பலாய் விடுவாள்; சனி தொலைந்தது! சங்கடம் விட்டது' என்று மனமகிழ்ச்சியுடன் இந்த மகா பயங்கரமான செயலை வேடிக்கை பார்த்துக்கொண் டிருந்தாள்.

இதே சமயத்தில் சமையலுக்கு வேண்டிய சாமான்களைக் கையிலே சுமந்துகொண்டு உபகுப்தர் அங்கே தோன்றினர். எரிகிற சிதையையும் தேவியையும் மற்றவர்களையும் ஒருமுறை பார்த்தார். "இதென்ன இது?" என்று பதறிய வண்ணம் கேட்டார்.

தேவி, கலிங்கநாட்டரசி என்று தெரிந்தவுடன் அவர் திகைத் துப்போனர். உடனே தடாலென்று தேவியின் பாதங்களில் விழுந்து, "தேவி! இது மகா பாப கிருத்யம். இது புனிதமானதன்று; தற்கொலை! ஆகவே நீங்கள் இப்படிச் செய்யக் கூடாது. நான் தடுத்தே தீருவேன்!" என்று உறுதியாகவும் அழுத்தமாகவும் கூவினர். விமலைக்கு அசாத்தியக் கோபம் வந்தது. செட்டியாரை அப்படியே எரித்துவிடலாமா என்று தோன்றிற்று. உடனே தன் சேவகர்களைக் கூப்பிட்டு, "யார் இவன்? இந்தத் தெய்விகமான காரியத்திலே தலையிட்டுத் தடுக்கிறவன்! துரத்துங்கள் இவனை!" என்று கூச்சலிட்டாள்.

உபகுப்தர் மிகவும் கம்பீரமான குரலில், "உங்கள் தர்மக் கிரியைகளிலே இடிவிழ! மத சம்பந்தமான சடங்கு என்று சொல்லிக்கொள்ள வெட்கமாக இல்லையா உங்களுக்கு! சதியாகச் சாவது தற்கொலைதான். இதில் சந்தேகமென்ன? தற்கொலையைப் புண்ணியம் என்று கருதுகிற சாஸ்திரம் இருந்தாலென்ன?

தொலேந்தாலென்ன ? தேவி ! நான் உங்களே இந்தப் பாபகரமான செயல் செய்ய விடமாட்டேன்" என்று உறுமினர்.

"அடே மூர்க்கா ! நீ யார் இந்தச் சமயத்தில் பேச. சேவகர்களே இவனேப் பிடித்துக் கட்டுங்கள்" என்ருள்.

"விமலா ! அவரை ஒன்றும் சொல்லாதே. அவர்மேல் உனக்கென்ன சீற்றம். அவர் வார்த்தைகளே நான் கேட்கத்தான் வேண்டும். அவர் யாரென்பது உனக்குத் தெரியாது. நீ நினேப்பதுபோல் அவர் சாமானியர் அல்ல" என்ருள் தேவி. சேவகர்கள் சிறிது முன்வது, வந்த இடத்திலேயே நின்றுவிட்டனர்.

"செட்டியாரே ! காலே விடுங்கள். தாங்கள் என் கால்களிலே விழவேண்டிய அவசியமில்லே. ஸதியாக மரிப்பது இந்துப் பெண்களின் தர்மந்தானே."

சாமசுந்தரனுக்குக் கொஞ்சம் துணிவு உண்டாயிற்று. "ஆனல் தேவி ! இன்று நீங்கள் சதியாவது எவ்விதத்திலும் ஒவ்வாதது. அவர் இறந்து, பதினேந்து நாட்களுக்கு மேல் ஆகிவிட்டது. அவருடைய உடல் அழிந்து மண்ணேடு மண்ணுகிவிட்டது. இன்று நீங்கள் சதியாவதில் என்ன புண்ணியம்? அதே சிதையில் சதியாவதுதான் வழக்கம்" என்ருன்.

"என்ன புண்ணியமென்ரு கேட்கிருய் ? நீ புராதன ஹிந்து தர்மத்தை அநுசரிக்கிறவனுயிருந்தும் இப்படிப் பேசுகிருயே ? அழகு ! தேவி ! இவர்களுக்கு நம்முடைய பழக்கவழக்கமும் தெரியாது; பாவ புண்ணியமும் தெரியாது. பெண்களுடைய மனப்பான்மையும் தெரியாது. இவர்களுடன் பேச்சென்ன ? தாங்கள் உலக ஆசையை ஒழித்து, மகாநுபாவனுகிய அரசரது சமூகம் சேருங்கள். அதுதான் நமக்கேற்பட்ட நியமம்" என்ருள் விமலே.

"ஏ மேதாவி ! நீ யார் ? மிகவும் சிறிய பெண்ணுய் இருக்கிருய். சொப்பு வைத்துக்கொண்டே விளேயாடுவதை நேற்றுத்தான் விட்டிருப்பாய்போல் இருக்கிறது. தர்ம நியாயம் பேச வந்துவிட்டாயே !"—என்று செட்டியார் சொல்லுகையில் இடைமறுத்து,

"நீர் வயதில் பெரியவர் என்று ஞானேபதேசம் செய்கிறீர்களாக்கும்" என்ருள் விமலே.

"உபகுப்தனுர் வயதில் இளையவராயிருக்கலாம். ஆனல் ஞானத்தில் முதிர்ந்தவர்தான்" என்ருள் தேவி.

"அம்மணி! என் வார்த்தைகளுக்குச் சற்றே செவிகொடுங்கள். சுவர்க்கத்தில் தங்கள் வரவை எதிர்பார்த்து, அரசர் பழியாகக் காத்திருப்பார் என்று இவள் பேசுகிருளே, இது வெறும் பிதற்றல். கணவனும் மனைவியும் மறுபடி இன்னேர் உலகில் சந்திப்போமென்று எண்ணி உயிர் விடுவது மிகவும் தவறு. யாருக்காவது மரணத்திற்குப் பின் என்ன என்று நிச்சயமாகத் தெரியுமா? கண்டு சொன்னவர்கள் உண்டா? இது வெறும் மூடநம்பிக்கை. மரணத்தினுல் பிரிந்தவர் ஒன்றுசேர்வது என்பது கிடையாது. இது கேவலம் நான் சொல்லுவதல்ல. பெரிய பெரிய மகாபுருஷர்கள் கண்டுபிடித்த உண்மை. அப்படி இருந்தும் நீங்கள் உங்கள் கணவரைச் சுவர்க்கத்தில் சந்திக்கலாமென்று உயிர் விடுகிறீர்கள். தர்ம சாஸ்திரத்தை விவாதம் செய்ய இது சமயம் அல்ல. தயவுசெய்து இந்தப் பாபச் செயலை விட்டுவிடுங்கள்" என்று கல்லும் கரைந்துருகக் கூறினுர் உபகுப்தர்.

"ஏனையா! எது எப்படி வேண்டுமானுலும் இருக்கட்டும். அதை வித்வத் சபைகளிலே பேசுங்கள். இங்கே இந்த விஷயத்தில் நீர் ஏன் தலையிடுகிறீர்? இந்த வழக்கம் இன்று நேற்று வரவில்லை. பரம்பரையாக வந்திருக்கிறது. மதத்திலே ஆதாரம் இருக்கிறது. பெரியவர்கள் அனுமதி கொடுத்திருக்கிருர்கள். ஆயிர ஆயிர வருஷங்களாக நடந்தும் வந்திருக்கிறது. இப்படி இருக்க நீங்கள் ஒரு எளிய பெண்பாலை இப்படிப்பட்ட உத்தமமான காரியத்தைச் செய்யாதே என்று சொல்வது என்ன நியாயம்?" என்று சீறினுள் விமலை.

"ஏ பேயே! சும்மாயிரு. உன் நெஞ்சு விஷம். தேவியை நீ தடுக்கவேண்டியது போக நீயே உற்சாகப்படுத்துகிருயா? சீ! சீ! நீலி! ராட்சஸி!" என்ருர் செட்டியார்.

"தேவியார் தம்முடைய கற்பைக் காப்பாற்றுவதற்கும் கலிங்க ராஜவம்சத்தின் பெருமைக்காகவும் உலக நிந்தைக்காகவும் சதியாகத்தான் வேண்டும்!" என்று கூவினுள் அந்தப் பேய்.

இந்துமதிதேவி துயரம் தோய்ந்த குரலில், "செட்டியாரே, நான் சதியாகத்தான் வேண்டும்" என்ருள்.

"தேவி! வீணாகப் பாபத்தை ஏற்வேண்டாம். இதில் ஒன்றும் புண்ணியமில்லை. தேவி! இந்தத் தற்கொலை வழக்கத்திற்கு இரையாக வேண்டாம்" என்று கெஞ்சினார் உபகுப்தர்.

விமலையின் முகம் கனல்போல் சிவந்தது. "யாரடா இவன்! மகா அதிகப்பிரசங்கித்தனமாய்ப் பேசுகிறது? சீ! சீ! சனியனே! தேவியே தன்னுடைய இஷ்டம் இதுதானென்று தெரிவித்திருக்க என்ன வேதாந்தம் பேசுகிறாய்? நீ மஹா ஞானஸ்தன் என்று விளம்பரப்படுத்திக்கொள்ள வேண்டுமென்று பிதற்றுகிறாயா?"

"விமலா! விவஸ்தையில்லாமல் பேசாதே. செட்டியாரே, நீங்கள் இந்த அசட்டுப் பெண்ணின் வார்த்தைகளைச் சட்டை செய்ய வேண்டாம். தாங்கள் எனக்குச் செய்யக்கூடியது, கண் மணி மகேந்திரனை அசோகனது பிடியிலிருந்து விடுவிப்பதுதான். சதியாவதென்றே நான் நிச்சயித்துவிட்டேன்" என்றாள். அந்த வார்த்தைகளிலே உறுதியும் கம்பீரமும் தொனித்தன.

"என்ன? யுவராஜன் பிடிபட்டுவிட்டானா!" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் விமலை.

"ஆமாம்."

இந்தச் சொற்களினால் அவள் முகம் மலர்ந்தது. அவள் முகம் மலர்ந்ததைக் கண்டு, தேவிக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. மந்திரோச்சாடனம் செய்தவண்ணம் உட்கார்ந்திருந்தான் சாம சுந்தரன். சிதை ஓங்கி எரிந்து, 'கணகண' வென்று கனிந்திருந்தது. தேவி கைகளைக் குவித்தவளாகத் தன் கணவனை மனத்தில் நினைத்துக் கண்களை மூடிக்கொண்டு ஓரடி வைத்துவிட்டாள். மற்றோரடி வைப்பதுதான் தாமதம்; அவள் அந்த ஆகுதியில் சாம்பலாகிவிடுவாள். அந்தச் சமயத்தில் விமலையின் சொற்கள் பின் வருமாறு அவள் காதில் விழுந்தன:

"அடி நீலி இந்துமதி! நீ சுவர்க்கத்தை அடைந்த பிறகு ஒன்று உன் வரவை எதிர்பார்த்து நிற்கும் கணவனைக் காண்பாய். இல்லாவிட்டால் உன்னைப் பின் தொடர்ந்து அவன் அங்கே வந்து சேருவான். அப்பொழுது அவனிடம், 'எந்த விமலையை நீ பரிகாசம் செய்தாயோ அதே விமலைதான், தன் சொந்தச் சாமர்த்தியத்தினால் கலிங்க ராஜவம்சத்தை அடியோடு ஒழித்துவிட்டுக் கலிங்கநாட்டிற்கு அரசியாய்விட்டாள்' என்று சொல்லு."

இந்த வார்த்தைகள் முழுவதும் செவிகளுக்குள் விழுமுன்னம் அவள் மற்ரோரடி வைத்து அதில் விழுந்துவிட்டாள். இப்பொழுது அதிலிருந்து வெளியே வந்துவிட வேண்டுமென்று முயன்ருள். உதறித் தள்ளிக்கொண்டு தாண்டி வரக்கூடிய சக்தியில்லை. "ஐயோ! என்னைக் காப்பாற்றுங்கள்!" என்று கூவிவிட்டாள்.

செட்டியாரும் சாமசுந்தரனும் அவளைத் தூக்க முன் வந்தனர். விமலை வாளை உருவி, "தூக்கக்கூடாது!" என்று சொல்லி, அவர்களைத் தடுக்கச் சேவகர்களை ஏவினுள். இரு திறத்தாரும் கை கலந்தனர். அவள் வேண்டியதும் அதுதான். இவர்கள் காப்பாற்றுமுன் தேவி எரிந்து போவாள்.

இங்கே இவர்களது சண்டை. அங்கே சிதை தனது வேலையைச் செய்துகொண்டிருக்கிறது. தேவி இந்துமதி மிகுந்த கஷ்டத்துடன், "ஐயோ! இப்பொழுதாவது என்னைக் காப்பாற்றுங்களேன்!" என்று கூவினுள். ஒரு க்ஷணம். எங்கிருந்தோ ஒரு பௌத்த பிக்ஷு அங்கே தோன்றினுன். மின்னல்போல் சிதையில் தாவினுன். மறு விநாடி எப்படித்தான் வந்தானே தெரியாது. தேவியை வெளியே கொணர்ந்துவிட்டான். அவளுடைய ஆடை கருகி, கால் கைகளும் வெந்து போயிருந்தன. ஆனுல் உயிருக்கு ஒன்றும் அபாயம் நேராது என்று தோன்றிற்று. இதுவரையில் இவ்வளவு ஆட்டம் ஆடிய விமலை அந்தப் பிக்ஷுவைக் கண்டதும் இமை கொட்டாமல் பார்த்து நின்ருள். அவனைத் தடுக்க வேண்டுமென்ற எண்ணமே அவளுக்கு உண்டாகவில்லை. வெளியே வந்ததும் தேவிக்குப் பிரக்ஞை தவறிவிட்டது. அருகில் இருக்கும் கிராமத்திற்குச் சென்று ஏதாவது சிகிச்சை செய்யலாம் என்று பிக்ஷு சொன்னுன். அருகே சென்று கொண்டிருந்த ஒரு பல்லக்கை அழைத்து, தேவியை அதிலே மெல்லக் கிடத்தினுன் அந்தப் பிக்ஷு.

பல்லக்குப் புறப்பட்டது. விமலை ஒன்றும் விளங்காதவள்போல் அந்த இளம் பிக்ஷுவின் செயல்களிலே ஈடுபட்டிருந்தாள். அதுகாறும் இல்லாத புதிய உணர்ச்சி ஒன்று அவள் உள்ளத்திலே தோன்றியது. பல்லக்கு மறையுமட்டும் அவனையே பார்த்து நின்ருள்.

மெல்ல மெல்லச் சாமசுந்தரன் அந்தப் பிக்ஷுவை நெருங்கி, "இளவரசே, தாங்கள்தானு?" என்ருன்.

"ஆம் நான்தான். ஆனால் மூச்சுவிடாதேயும். இந்த வேஷத்தில் என்னை ஒருவரும் கண்டுபிடிக்க மாட்டார்கள். நீர் குழந்தைப் பருவத்திலிருந்து பார்த்தவராகையால் கண்டு பிடித்துவிட்டீர்! நல்லவேளை! அந்தமட்டும் சரியான சமயத்தில் வந்தேன். இல்லா விட்டால் அம்மாவை இந்த உலகிலேயே காண முடியாது. விஷயம் இன்னதுதான் என்பது விளங்கிற்று. மகாராஜா கொலை செய்யப்பட்டாரென்பது வெறும் புரளி. ஏனென்றால் மகா ராஜாவின் சவம் என்று எதை அந்த விமலை குறித்தாளோ அதற்குத் தலையில்லை. ஆகவே அது யாருடைய சவமோ? அவர் இந்திரபுரத்தில் இல்லை என்று இவள் இப்படிக் கற்பித்துவிட்டாள். அவர் எங்கே? அதுதான் தெரியவில்லை. நான் வேறு விஷயமாக இந்தப் பக்கத்திற்கு வந்துகொண் டிருந்தேன். இவளும் பாடலி புரத்திற்குப் போகிறாள் என்று தெரியவந்ததும் அங்கே போனால் ஏதாவது விஷயம் தெரியும் என்று இவளைத் தொடர்ந்தேன்" என்றான்.

"நான் மறுபடி செல்லவேண்டும்; தேவிக்குச் சற்றே அநுகூல மானவுடன் நான் புறப்பட வேண்டும். இன்னும் சில நாட் களுக்குள் உண்மையைத் தெரிந்து வருவேன். இதற்கிடையில் அம்மாவைக் கவனிப்பது உங்கள் பொறுப்பு" என்றான் அந்தப் பிக்ஷு.

ஆச்சரியத்தினால் மலர்ந்த கண்களுடன் இவைகளைக் கேட்டுக் கொண்டே நின்றார் செட்டியார் உபகுப்தர்.

# 13

## ஏமாற்றம்

மௌரிய ஸம்ராட் அசோகன் மேல்தளத்தில் தனியே உட்கார்ந்திருந்தான். இளமையில் தக்ஷசீலத்தை வென்றதுமுதல் மேன்மேலும் வெற்றியேதான் அவனுக்குக் கிடைத்துக்கொண்டிருந்தது. அந்தப் பகுதி முழுமையும் அவனது வாழ்த்தொலியால் எதிரொலித்துக்கொண்டிருந்தது.

முதல்முதலாகத் தக்ஷசீலத்திலிருந்து வாகை சூடி வந்த பொழுது அவனை உஜ்ஜயினி நகருக்குச் சுபேதாராக்கிக் கௌரவித்தான் பிந்துசாரன். தன் மகனது புகழால் அவன் மனம் ஆனந்த வாரிதியில் மூழ்கித் திளைத்தது.

பிறகு படிப்படியாகத் தன் தோள் வலியைக் காண்பிப்பதற்குச் சந்தர்ப்பங்கள் ஒன்றன்பின் ஒன்ருக வந்துகொண்டிருந்தன. அடுத்தாற்போல் அவனே செங்கோலைத் தாங்கும்படி நேரிட்டது.

இதன் பயனுக அவன் மனம் எப்போதும் யுத்தத்திலேயே ஈடுபட்டிருந்தது. மகதநாட்டின் ஐசுவரியமாகிய அந்தச் சிங்காதனம் கிட்டிய பிறகும் அவன் சுகமாக உட்கார்ந்திருக்க விரும்பவில்லை. காடுகளையும் மலைகளையும் கடந்து, தனது பகைவரை வெல்லுவதிலேயேதான் அவன் மனம் சுழன்றுகொண்டிருந்தது.

இளவரசனுக இருந்தபொழுது தந்தையின் விருப்பப்படி நாட்டைப் பெருக்குவதிலேயே ஈடுபட்டான். பிறகோ ராஜமாதா புத்திமதி தேவியின் போதனையாலும் ஸம்புஷ்டாசாரியனது போதனையினுலும் தர்மப் பிரசாரம் என்ற பெயரால் யுத்தம் நடைபெற்றது. கலிங்க விஜயத்தின்பொழுதுதான் அவனுக்குக் கண் திறந்தது. நாடு வசமான பிறகு கண்திறந்து என்ன பயன்? எப்பொழுதும் யுத்தத்திலேயே உழன்றுகொண்டிருந்ததன் பயனுக அவன் இளமனத்திலும் ஒரு விதமான குரூரத்தின் சாயை படிந்திருந்தது. அன்பு செய்தல் என்னும் விஷயமே அவனுக்கு

மறந்து போயிருந்தது. அன்பு கருணை, வாத்ஸல்யம் இவைக ளெல்லாம் அவனுக்குப் புதியவைகளாகத் தோன்றிக்கொண் டிருந்தன. கலிங்க விஜயத்துக்குப் பிறகே அவனது அஞ்ஞானம் என்கிற திரை தூள்தூளாகக் கிழிந்தது. இந்தச் சம்பவத்தினுல் பாரதத் தாயின் பெருமை அதிகரிக்கத் தொடங்கிற்று.

தம் புதல்வன், மிகுந்த தயவுள்ளவனுய், பெயருக்கேற்பச் சோகமற்றவனுய், பிறரது சோகத்தைத் தீர்க்கின்றவனுய் அஹிம்சா தத்துவத்திற்கே உறைவிடமாக, ஒரு மகா புருஷனுக ஆகவேண்டுமென்று பாரதத் தாய் விரும்பினுள். இதன் பொருட்டு லக்ஷக்கணக்கான தன் மக்களைக் கூசாமல் அவன் எதிரே பலி கொடுத்தாள். இதன் பயனுக அவனுக்கு ஞாேதயம் ஆயிற்று.

சக்கரவர்த்தி என்ற பதவியை வகிக்குமுன் அவன் நற்குணங் களுக்கு உறைவிடமாக வேண்டுமென்றே பாரதத்தாய் நினைத்தாள். அன்பு என்னும் பொருள் அப்பொழுதே அவன் மனத்தில் குடி கொண்டது. குரூர குணங்கள் கொஞ்சங் கொஞ்சமாக மறைந் தொழிய, மாசற்ற தூய அன்பானது இதயத்தில் நிறைய ஆரம்பித்தது. அன்பின் வழியது உயிர்நிலை என்பதை அப் பொழுதே உணர ஆரம்பித்தான். இந்தத் தத்துவத்தின் பொருட்டு நாற்புறங்களிலிருந்தும் வாழ்த்தொலிகள் அவனை நாடி வந்துகொண்டே இருந்தன. அசோகனது குணத்தில் ஏற்பட்ட இந்த அற்புதமான மாறுதல் மக்களின் உள்ளங்களைக் கவரும் காந்தமாயிற்று. அசோகனை உள்ளன்புடன் நேசிக்கத் தொடங் கினர் குடிகள்.

இந்த நிலையில் மேல்தளத்தில் உட்கார்ந்திருந்த அவனது மனத்தில் மென்மையான இனிய எண்ணங்கள் உதித்ததில் ஆச்ச ரியம் என்ன? மேல்தளத்திலே அவனைத் தவிர வேறு ஒருவரும் இல்லை. சாயங்காலம் பட்சிகள் கலகலவென்று கூட்டைத் தேடிச் சென்றுகொண் டிருந்தன. நந்தவனத்திலிருந்து வரும் மெல்லிய காற்று நறுமணத்தைச் சுமந்து வந்து, வழியெங்கும் இறைத்துக் கொண்டிருந்தது. ஏதேதோ எண்ணமிட்டவனுக அங்கே ஒரு மேடையின்மீது விளையாடும் மயில்களை இமைகொட்டாமல் பார்த்துக்கொண் டிருந்தான் அசோகன்.

மயிலி கொத்த வருவதுபோல் நடித்தது. இந்த மாதிரியான அதிகப் பிரசங்கித்தனமான செயலின் பொருட்டுக் கோபிப்பது போல் அந்த மயிலன் வெகு தூரத்தில் போய் நின்றுகொண்டது.

இதற்குள் மயிலி இங்கும் அங்கும் ஓடித் தன் வணக்கத்தைத் தெரிவித்துக்கொண்டது. பிறகு இரண்டும் ஆடத் தொடங்கின. இந்த உணர்ச்சி மிகுந்த நடத்திலே அசோகனது மனம் லயித்தது. இந்த ஆனந்த நடனம் அவன் மனத்திலே ஓர் ஓவியம்போல் பதிந்தது.

'மயிலே! நீ மிகுந்த பாக்கியசாலி. உங்களுடைய ஆனந்த நடனத்தைப் பார்க்கும் எனக்கே இவ்வளவு ஆனந்தம் என்றால் மெய்ம்மறந்து அதிலே ஈடுபட்டு ஆடும் உங்களுக்கு எப்படிப் பட்ட ஆனந்தமாயிருக்குமோ? அதை என்னால் உணரமுடியுமா? சிலர் பணத்தைச் சேர்ப்பதைச் சுகம் என்று நினைக்கிறார்கள். அதிகாரத்தினால்தான் சுகம் என்கிறார்கள். உபசாரங்களினால் தான் சுகமடைகிறோம் என்கிறார்கள். ஆனால் சுகம் எங்கே? என்று யாராவது நிச்சயமாகச் சொன்னதுண்டா? எது உண்மை யான சுகம் என்று சொல்ல முடியுமா? மயிலே! நீதான் உண் மையான சுகத்தைத் தெரிந்து வைத்துக்கொண் டிருக்கிறாய். உன்னுடைய அபூர்வமான இந்த வித்தையை உலகத்திலுள்ள எல்லா மிருக ஜாதிகளுக்கும் பக்ஷி ஜாதிகளுக்கும் கற்றுக்கொடுத்து விடேன். உன்னைப்போல் அவைகளும் ஆனந்தம் அடையட்டும் என்று எண்ணியவனாகச் சற்று நேரம் மௌனமாகச் சிந்தனையில் ஆழ்ந்தான்.

அவன் அப்பொழுதே யௌவனம் என்கிற இனிமையான பூஞ்சோலையில் அடியெடுத்து வைத்திருந்தான். ஆனால் இன்று தோன்றுகிற இத்தகைய மென்மையான எண்ணங்கள் இது வரையில் அவன் மனத்தில் உதித்ததே இல்லை. இதுவரையில் யுத்த வீரனாக மட்டும் இருந்தான். இன்றோ பாடலிபுத்திரத்தின் நடுவில் சோதியாகத் திகழ்கிறான். எல்லோரிடத்தும் அன்பு செய்யவேண்டும் என்கிற பேரவாவினால் அவன் மனம் நாளுக்கு நாள் மிருதுவாகி, தயை நிரம்பியதாக இருக்கிறது. அவன் மேலும் சிந்திக்கலானான்.

'இந்த மயில்கள் எவ்வளவு ஆனந்தமாகத் திரிகின்றன. மனுஷ்ய ஜாதியிலே இப்படித் தன்னலமற்ற ஓர் அன்பு கணவ னுக்கு மனைவியிடம் இருக்குமா? மனைவிக்குக் கணவனிடம் இருக்குமா?' என்று மயிலைப்பற்றிய அந்த எண்ணங்கள் சுற்றிச் சுழன்று மீண்டும் மனித வர்க்கத்துக்கே வந்து சேர்ந்தன. மனிதன் பகுத்தறிவு உள்ளவன்தான். ஆனால் தன் பகுத்தறிவினால் அன்பு என்கிற பொருளை உடனே கண்டுகொள்ளத் தெரிகிறதா? தெரிந்து

ஒருவரை ஒருவர் அன்புசெய்து வாழ்வதென்ருல் 'உலகம் துக்கமயம்' என்று பெரியவர்கள் ஏன் சொல்லுகிருர்கள்...... எது எப்படியாவது போகட்டும். இவைகளைப்பற்றிச் சிந்திக்க நமக்கென்ன தெரியும்?

'நானே இப்பொழுது சக்கரவர்த்தி. சகல ஐசுவரியங்களும் என் காலடியிலே குவிந்து கிடக்கின்றன......இந்த மயிலியின் குதூகலத்தையும் ஆனந்தத்தையும் பார்க்கப் பார்க்க மனித வர்க்கத்தாரிலே இத்தகைய அன்பு உண்டா? என்று தோன்றுகிறது. ஆனல் இதுவரையில் என் அநுபவத்திலே இப்படிப்பட்ட ஒரு காதலி நமக்குக் கிடைப்பாளா என்று நான் ஏன் எண்ணவில்லை? இது எனக்குத் தோன்ருமலே இருந்தது ஏனே? ராஜமாதா புத்திமதி தேவி நரசிம்மவர்மனிடம் வீதசோகனுக்குப் பெண் பேசும்படி பணித்த பொழுதுகூட என்னைப்பற்றி நான் சிந்திக்கவே இல்லையே. இதென்ன ஆச்சரியம்?......ஆம்! இது வரையில் எந்தப் பெண்ணும் என் கண்களைக் கவர்ந்ததில்லை. விஜய ஸ்ரீயாகிய அந்த வெற்றித் தாயைத் தவிர என் நெஞ்சிலே வேறு எந்தப் பெண்ணுக்கும் இடமே இல்லை. இந்த நிலையிலே எந்த இன்பவல்லி வந்து என் நெஞ்சத்துள் புகமுடியும்?'...... என்று எண்ணுகையில் இளமுறுவலால் அவன் முகம் சற்றே மலர்ந்தது. 'என்மேல் அமுதமாரி பெய்யக்கூடிய ஒரு பெண்மணி பிறந்திருக்கிருளா?' என்று வாய்விட்டு மெல்லிய குரலில் தன்னைத் தானே கேட்டுக்கொண்டான் அவன்.

**இ**தே சமயத்தில் கலிங்கநாட்டு அரசிளங்குமரி ரோகிணி மகேந்திரனது வேஷத்தில் கைதியாக்கப்பட்டு அரண்மனையின் முன் வாயிலுக்கு வந்து சேர்ந்திருந்தாள்.

வெற்றியினல் மலர்ந்த முகத்துடன் சேனைவீரர்கள் அவளைச் சூழ்ந்து நின்று, அரசனது ஆணையை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். அரசனே மேல் மாடத்திலே தனக்கேற்ற ஓர் அழகிய காதலியின் சித்திரத்தை மனத்தினல் சித்திரித்துக்கொண் டிருந்தான். தான் மனத்தினல் நிருமித்த அந்த அற்புதமான சித்திரத்தின் பேரெழிலில் மூழ்கியவனுக இன்பக் கனவுகள் கண்டுகொண் டிருந்தான். அவன் கண்மூடி மௌனியாகி உட்கார்ந்திருந்ததையும் கவனியாதவனுக மோகனன் மெல்ல அருகே வந்து, "அரசர் பெரும! கலிங்கநாட்டு இளங்கோ மகேந்திரன் கைதியாகித் தங்கள் சமுகத்திற்கு வந்திருக்கிருர்" என்ருன்.

கனவு கலைந்தது. திடுக்கிட்டான் அசோகன். நிசப்தமே குடி கொண்டிருந்த அங்கே பேச்சரவம் கேட்டவுடன் மயில்கள் குதித்து ஓடின. அவைகள் விளையாட்டினால் ஏற்பட்ட அந்த உள்ளக் கிளர்ச்சி அவன் மனத்தைவிட்டு அகலவில்லை.

"சரி; வரச் சொல்" என்று சொல்லிவிட்டு மீண்டும் தன் கற்பனைக் காதலியைச் சித்திரிக்கத் தொடங்கினான். இந்தக் கலையிலே அவனுக்குப் பயிற்சி இல்லை. சித்திரக் கலையில் சிறிதும் பயிற்சியில்லாத இளங் குமரன் அசோகன் என்றைக்கோ கண்டு, மெல்லிய நிழல்போல் இதயத்தின் அடியில் உறங்கிக் கிடந்த ஒரு கற்பனை அழகியை எதிரே கொணர்ந்து, 'அவளுக்கு எத்தகைய அலங்காரங்களைச் செய்யலாம்?' என்று நினைக்கத் தொடங்கினான். அதே சமயம் அந்த எண்ணங்களின் தொகுதியே உருப்பெற்று எழுந்து நடந்து வருவதேபோல் ஆண் உடை தரித்த ரோகிணி அவன் எதிரே நின்றாள்.

ஆச்சரிய மிகுதியினால் திகைத்துப் போனான் அசோகன். தான் கற்பித்த அதே முகம், அதே தோற்றம், அதே காம்பீர்யம். "அடாடா! என்ன ஆச்சர்யம்?" என்று வாய்விட்டே சொல்லி விட்டான் அசோகன்.

என்ன செய்யவேண்டும், என்ன சொல்லவேண்டும் என்று ஒன்றுமே விளங்காதவனாக வைத்த கண் வாங்காமல் அந்த அரசிளங் குமரனையே பார்த்துக்கொண் டிருந்தான்.

ரோகிணியின் நிலையோ பரம சங்கடமாக இருந்தது. இதற்கு முன் அவள் அசோகனைப் பார்த்ததில்லை. இப்பொழுதுதான் முதல் முறையாகச் சந்திக்கும்படி நேர்ந்திருக்கிறது. அசோகன் மிகவும் கொடூர சிந்தையுள்ளவன் என்று அவன் செயல்களிலிருந்து ஒரு வாறு தீர்மானித்திருந்தாள். அவள் கற்பனையிலிருந்த அசோகன் பிரம்மாண்டமான ஒரு ராக்ஷஸன். ஆனால் இப்பொழுது நேரில் காண்கிற காட்சி அதற்கு நேர்மாறாக இருந்தது. அவள் திகைக் காமல் என்ன செய்வாள்! அழகும் கம்பீரமும் பொருந்திய அவனது வடிவம் அவள் மனத்தில் ஒருவகைக் குழப்பத்தை உண்டுபண்ணிற்று. அவனது தோற்றத்தையும் சாந்தமும் கருணையும் பொழியும் முகத்தையும் கண்டு அவள் திடுக்கிட்டாள். ஏன்? அவனது கொடுஞ் செயல்கள் அப்பொழுதும் அவள் கண்களை விட்டு அகலவில்லை. அவனைப் பார்க்கப் பார்க்க, 'தங்கக் கிண்ணியில் நிறைந்த விஷமோ?' என்று நினைத்தாள் அவள்.

அவள் மனத்தில் அலைகள்போல் ஒன்றன்பின் ஒன்ருகப் பல சிந்தனைகள் படுவேகத்துடன் மோதி மோதிச் சிதறிக்கொண் டிருந்தன. கடைசியாக, 'இது தங்கக் கிண்ணியிலே நிறைந்த விஷந்தான். உருவத்தைக் கண்டு ஏமாறக்கூடாது. மிகுந்த ஜாக்கிரதையுடன்தான் இருக்கவேண்டும்' என்று முடிவு செய்து கொண்டாள்.

சற்று நேரம் ஒரே அமைதி. அசோகனது வாயினின்றும் ஒரு வார்த்தையேனும் எழவில்லை. தான் வந்து நெடுநேரமாகியும் கடுமையான வார்த்தைகளைச் சொல்லவும் இல்லை; சிறைச்சாலைக் குப் போகும்படி உத்தரவு செய்யவும் இல்லை. அதற்கு நேர்மாருக முகத்திலே கருணை தோன்றுகிறதே, ஏன்? என்று விளங்காத வளாக, அவள் பேசாமல் இருந்தாலும், மரியாதைக்கு ஏதாவது சொல்லவேண்டுமென்று நினைத்தவளாக மிகவும் மெல்லிய குரலில், "சக்கரவர்த்திக்கு ஜயம் உண்டாகட்டும்" என்ருள்.

அவள் குரலின் இனிமை அவனைப் பின்னும் ஆச்சரியத்துள் ஆழ்த்தியது. அப்பொழுதே கனவிலிருந்து விழித்தவன்போல் திடுக்கிட்டு எழுந்தான் அசோகன். பிறகு சற்றுச் சமாளித்துக் கொண்டு, "அன்புடன் வாழ்த்தும் யுவராஜ! உன்னை நான் மனப் பூர்வமாக வரவேற்கிறேன்" என்று சொல்லியவனுக ஆசனத்தி லிருந்து இறங்கி, அவனை நெருங்கி, அவன் கைகளைப் பற்றி அழைத்து, தன் அருகில் உட்காரவைக்க விரும்பியவனுய்க் கரங்களை நீட்டிவிட்டான் அசோகன்.

ஒரே ஒரு கணம். மின்னல்போல் தட்டென்று இரண்டடி பின்னே நகர்ந்தாள் ரோகிணி. ஆனுல் அசோகனது அன்புமிகுந்த சொற்களையும், கைதியாக மதிக்காமல் தன்னைச் சமமாக எண்ணி எதிர்கொண்டழைக்க முற்பட்டதையும் கண்டு மிகுந்த ஆச்சரிய மடைந்தாள். 'ஒருவேளை தன்னுடைய உண்மையான நிலை தெரிந்திருக்குமோ?' என்று ஒரு சிறு சந்தேகம் அவள் மனத்துள் தோன்றி மறைந்தது.

'கடந்த பதினைந்து நாட்களாக எல்லோருடைய கண்களையும் ஏமாற்றியிருக்கிறேன். அவ்வளவு பழகிய சாமசுந்தரனே ஏமாந்து விடவில்லையா? இவர் கண்டுகொண் டிருக்க முடியாது.

'இருந்தாலும், வெட்கிப் பின்னடைந்தது பிசகு. வேஷம் போட்ட பிறகு நடிப்பதற்கு அஞ்சலாமா? இருந்தாலும் கைதி

யாக்கிய பிறகு இந்த அசோகர் இப்படி நடந்துகொள்வாரென்று யாருக்குத் தெரியும்?' என்று தன்னைத்தானே திடப்படுத்திக் கொண்டாள்.

'ஆனாலும் இந்த நிலையில் என்ன செய்வது? கைகளை நீட்டுவதா அல்லது என்ன பதில் சொல்லுவது? ஒருவேளை சரியாசனத்தில் அமரும்படி சொன்னால்?' என்று நினைக்கையில், அசோகன் அவன் பின்னடைந்ததைக் கண்டு புன்முறுவலுடன், "கலிங்க நாட்டு இளவரசே! நீ இவ்வளவு சங்கோஜப்படுகிறவன் என்று தெரிந்திருந்தால் அதற்கேற்றாற்போல் நானும் நடந்துகொண்டிருப்பேன். நீ ஏன் பயந்து ஒதுங்கவேண்டும்? இன்று நான் சக்கரவர்த்தியாகி விட்டதனால் என்ன? நானும் உன்னைப்போன்ற ஒருவன்தானே. என்னிடம் நீ சங்கோஜப் படவேண்டிய அவசியம் இல்லையே! வரும் வழியில் என் ஆட்கள் உன்னிடம் மரியாதையாக நடந்துகொண்டார்களா? அல்லது மரியாதைக் குறைவாக நடந்துகொண்டார்களா? இதைப்பற்றிக் கூசாமல் என்னிடம் சொல்லலாம்" என்றான்.

"சக்கரவர்த்தி! என்னை இப்படிக் கௌரவிப்பது தங்கள் பெருந் தன்மையைக் காட்டுகிறது. அதன் பொருட்டு என் நன்றி. தங்களது சைனிகர்கள் யாராரிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதை அறிந்தவர்கள்தான்" என்றாள்.

"யுவராஜ மகேந்திரா! உன் இனிமையான குரலையும் பேசும் திறனையும் கேட்கக் காந்தர்வ உலகிலிருந்து தவறிப் பூவுலகிற்கு வந்த உன்னை இவர்கள் பிடித்து வந்துவிட்டார்களோ என்று எனக்குத் தோன்றுகிறது. உன்னைக் கண்டவுடன் சற்று நேரம் நான் மெய்ம்மறந்து போனேன். அதனால்தான் உன்னை உடனே வரவேற்க முடியவில்லை. இப்பொழுது என்னுடைய ஆசனத்தில் உட்கார்ந்து சிரம பரிகாரம் செய்துகொள்" என்றான்.

அசோகனது சொல்லும் செயலும் அவளைப் பின்னும் ஆச்சரியத்துள் ஆழ்த்தின. திகைத்தவண்ணம், "சக்கரவர்த்தி அசோகர்தான் என்னை எதிர்கொண்டு அழைக்கிறாரா!" என்று திகைப்புடன் கேட்டான் வேஷதாரியான இளங்கோ.

"மகேந்திரா! உன்னை எதிர்கொண்டழைக்கும் நான் அசோகனேதான். அதைப்பற்றி நீ இவ்வளவு ஆச்சரியப்படுவானேன்? அசோகன் பகைவனிடத்திலும், பகைவன் மகனிடத்திலும் எப்படி

நடந்துகொள்ளுகிறான் என்பதை உலகத்துக்குக் காண்பிக்க வேண்டும். கலிங்க விஜயத்திலிருந்தே பகைமை என்கிற கொடிய பேய் என் மனத்தைவிட்டுப் போய்விட்டது. நீ என் வார்த்தைகளில் சந்தேகம் கொள்ளவேண்டாம். ஆகவே நீ களங்கமற்ற மனத்தோடு என் வரவேற்பை அங்கீகரிக்கவேண்டும்'' என்றான் அசோகன்.

அசோகனது இந்த வார்த்தைகள் அவள் மனத்துள் பெரும் புயலை எழுப்பின. அவன்மேல் இருந்த வெறுப்பும் துவேஷமும் மெல்ல மெல்ல மறையத் தொடங்கின. அதற்கு மாறாக அவனது பெருந்தன்மையும் கௌரவமும் அவள் உள்ளத்தே தோன்றி அவன்மீது அன்புகொள்ளச் செய்தன. இருந்தாலும் சக்கரவர்த்தியோடு சரியாசனத்தில் உட்காரத் துணியவில்லை அவளது மனம். தயக்கத்துடன் சுற்றிலும் ஒருமுறை பார்த்தாள்.

அசோகன் மிகவும் கனிந்த குரலில், "ராஜகுமாரா! என்ன யோசிக்கிறாய்? உன் அழகிய பாதங்கள் நடந்தும் நின்றும் நொந்து போயிருக்கும். இதோ இந்த ஆசனத்தின்மீது உட்கார்" என்றான்.

"சக்கரவர்த்தி! தங்களுடன் சரி ஆசனத்தில் உட்காருவதற்கு நான் அஞ்சுகிறேன். தாங்கள் கட்டளையிடும் பட்சத்தில் நான் இங்கேயே உட்காருகிறேன்'' என்றாள் ரோகிணி.

"மகேந்திரா! உன்னுடைய வணக்கமும் பணிவும் கண்டு எனக்கு எல்லையற்ற ஆனந்தம் உண்டாகிறது. நீ என்னுடன் சமானமாக உட்காரத் தகுந்தவன்தான்'' என்று சொல்லித் தன் கரங்களை நீட்டி நடுங்குகின்ற அவள் கரத்தைப் பற்றினான் அசோகன்.

அவளது கைகளைப் பற்றியபொழுது சற்றே திடுக்கிட்டான். 'வாள் பிடித்த வீரனுடைய கைகள், இவ்வளவு மென்மையா!' என்று நினைத்தான். இன்னதென விவரிக்க முடியாத ஒருவித உணர்ச்சியால் அவன் உடல் சிலிர்த்தது. தற்செயலாக அவனுடைய கற்பனைக் காதலியின் சித்திரம் நினைவில் எழுந்தது. சற்றே நிதானித்தவனாக யுவராஜனை ஏறிட்டுப் பார்த்தான். அப்பொழுதும் அவனது மலர்க்கரங்கள் அசோகனது கரங்களில் பிடியுண்டு கிடந்தன. பயத்தின் மிகுதியினால் அவனது நெற்றியிலே வேர்வை முத்துமுத்தாக அரும்பிநின்றது. அவன் இதயம் 'படீர் படீர்' என்று அடித்துக்கொண்டது.

அசோகன் தன்னை ஏறிட்டுப் பார்த்த பிறகே தன் நிலையை உணர்ந்துகொண்டாள் ரோகிணி. மெதுவாக அவன் கைகளி லின்றும் தன் கைகளை விடுவித்துக்கொண்டவளாகச் சற்றே தலை குனிந்தாள்.

"ராஜகுமாரா! என் பார்வை என்ன அவ்வளவு கடுமையாக இருக்கிறதா? நீ ஏன் அஞ்சுகிறாய்? இந்தக் குளிர்ந்த வேளை யிலே உன் நெற்றியிலே வேர்வை அரும்புவானேன்? வீணாக, பகைவனாயிற்றே என்று எண்ணி நீ ஏன் பயப்பட வேண்டும்? நானும் உன்னைப்போன்ற ஒரு மனிதன்தான் என்று உனக்குத் தோன்றவில்லையா? அப்படியிருந்தால் இதற்குள் உன் பயம் தெளிந்திருக்க வேண்டுமே" என்றான்.

ரோகிணி இனிமேலும் கேள்விக்கு இடம் வைத்துக்கொள் வது உசிதமல்ல என்று நினைத்தவளாக, "சக்கரவர்த்தி! தங்களைப் போன்ற பெரியார்களுக்குச் சமீபத்தில் உட்காரும்படியான பாக்கியம் இதற்குமுன் எனக்கு ஏற்பட்டதில்லை. ஆகவே பயந்து விட்டேன். இதை நீங்கள் குற்றமாகக் கொள்ளக்கூடாது" என்று பணிவுடன் சொன்னாள். அசோகனது மனம் ஆனந்தத்தி னால் நிறைந்தது.

"மகேந்திரா! உன்னுடைய கூட்டுறவினால் என் மனம் பூரிக்கிறது. நீ கைதியாக இங்கே வந்திருக்கிறாய். ஆகவே இதை நீ ஒரு துக்கமயமான தினமாகத்தான் நினைப்பாய். ஆனால் உன்னுடைய நட்பு இன்று எனக்குக் கிடைத்ததனால் இதை நான் நல்ல நாளென்றே நினைக்கிறேன்" என்றான் அசோகன்.

ரோகிணி தர்மசங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டாள். 'இவன் பேசுவது உண்மைதானா? கொடுங்கோலனான அசோக னது மனம் இவ்வளவு மெல்லியதா? அல்லது வேறு ஏதாவது உள் கருத்தை வைத்துப் பேசுகிறானா? பதில் பேசலாமா, கூடாதா?' என்று நினைத்து மௌனமாக உட்கார்ந்திருந்தாள்.

"மகேந்திரா! நீ ஒரு மனிதன், கலிங்கநாட்டு இளங்கோ! என்று எண்ணும்போது எனக்கு ஆச்சரியம் எல்லையை மீறி விடுகிறது. ஏனென்றால் உன்னைக் கந்தர்வன் என்று நினைத்து விட்டால் உன் குரல் இவ்வளவு மதுரமாக இருப்பதைப்பற்றி ஆச்சரியமில்லை. சூரியனைப்போல் உன் முகம் ஒளிர்கிறது. மின் னலின் ஒளி உன் கண்களிலே தோன்றுகிறது. நானும் எத்தனையோ ராஜகுமாரர்களைக் கண்டிருக்கிறேன். ஆனால் உன்னைப்போன்ற

கட்டழகனைக் கண்டதே இல்லை. இது உண்மை. வெறும் புகழ்ச்சியல்ல. உன்னைக் கைதுசெய்ய் வேண்டுமென்று தோன்றிய அந்தத் தினமே ஒரு சுதினம். இல்லாவிட்டால் ரூபசௌந்தரியத்திலும் குண சௌந்தரியத்திலும் நிகரற்ற ஒரு நண்பனை நான் அடைந்திருக்க முடியுமா? மகேந்திரா? நீ வருவதற்குச் சற்று முன்னே அதே உருவம் அதே சாயலில் ஒரு இன்பவல்லி..."

"யார்! இன்பவல்லியா?" என்று பதைபதைப்புடன் கேட்டாள் ரோகிணி.

"ஆமாம்; ஓர் அழகி, என் மனக் கண்களின் முன் தோன்றி..." என்பதற்குள்,

"எங்கே தோன்றினாள்?" என்று பதறிய வண்ணம் கேட்டாள் ரோகிணி. பயத்தினால் அவள் முகம் வெளுத்துப்போயிற்று.

அவள் நிலையைக் கவனியாத அசோகன் மேலும் பேசத் தொடங்கினான். "இதே மாடியில் இங்கேதான் தோன்றினாள். ஆனால் உன் வரவைக் கண்டதும்..." என்று சற்றே நிறுத்தினான் அசோகன்.

"உன்னைக் கண்டதும் என் கற்பனைக் காதலியும் நீயும் ஒரே உருவாக அமைந்திருப்பதை எண்ண எண்ண என் ஆச்சரியம் பன்மடங்கு அதிகரித்தது. இதுவும் ஒரு சுப சகுனமென்றே நினைத்தேன். இவை வெறும் கற்பனைதான் என்றாலும் நீ எனக்கொரு வாக்குறுதி தந்தால்..."

"அரசே என்னைப்போன்ற ஒரு எளியவன் தங்களுக்கு எதன் பொருட்டு வாக்குறுதி அளிப்பது? நானோ தங்கள் கைக்குள் அகப்பட்ட கைதி."

இந்த வார்த்தை வாயினின்றும் எழுந்ததோ இல்லையோ, அசோகன் இடைமறித்து,

"மகேந்திரா! நீ இப்படிப் பேசுவது அழகல்ல. நான் பகைவன் என்பதை மறந்து, ஆயுள் உள்ளளவும் நண்பனாக இருப்பதாக வாக்குறுதி அளிப்பாயா?" என்று கேட்டவனாக அன்பினால் மலர்ந்த கண்களுடன் அவனை ஏறிட்டுப் பார்த்தான்.

ரோகிணியின் ஆச்சரியத்துக்கு எல்லேயே இல்லே. அசோகன் தன்னைக் கைதுசெய்து, பிறகு தனது நட்பை யாசிப்பான் என்று கனவு கண்டிருந்தாலும் நம்பியிருக்க மாட்டாள். தான், மிகவும் கொடியவன், கொடூர குணமும் சிந்தையுமுள்ள துஷ்டன் என்று எண்ணியிருந்த ஆர்யாவர்த்தத்தின் முதல் சக்கரவர்த்தி இப்பொழுது நேரில் எதிரில் நின்று நட்பைக் கோருகிருன். அசோகனது இத்தகைய செயல்கள் எங்கே போய் முடிவடையும் என்று அவளுக்குத் தெரியவில்லே. கபடமாயிருக்குமோ என்று சந்தேகிக்கவும் முடியவில்லே. அன்புமிகுந்த அவனது சொற்கள் கள்ளங்கபடற்ற இளங் குழந்தையின் சொற் பெருக்கேபோல் தோன்றின. சரியான விடைகொடுக்க விரும்பாதவளாகப் பேச்சை மாற்றிக் கொள்ளும் பொருட்டு, "அரசே! வெற்றி வீரர்களான மௌரிய குலத்தின் தீபமாகிய தங்களது சிநேகமும் நட்பும் கிடைப்பதென்ருல் அது கலிங்க நாட்டிற்கே ஒரு சுதினம் என்று நினைக்கிறேன்" என்ருள்.

அசோகன் முன்னிலும் பன்மடங்கு அன்பு ததும்பும் குரலில், "மகேந்திரா! நீ என் பேச்சின் கருத்தை உணர்ந்துகொள்ளவில்லே. கலிங்கநாட்டு அரச வம்சத்துடன் நட்புரிமை இருக்க வேண்டுமென்று நான் நெடுநாட்களுக்கு முன்னமே தீர்மானித்துவிட்டேன். இப்பொழுது கலிங்கநாட்டைப்பற்றியாவது, குலத்தைப்பற்றியாவது கேட்கவில்லே. உன்னுடைய நட்பையே யாசிக்கிறேன். அதற்கு உனக்குச் சம்மதந்தாஞ? ஆயுள் முழுவதும் உனக்கு உற்ற நண்பஞக நான் இருக்க விரும்புகிறேன். உன்னுடைய நட்பிஞல் அடையும் ஆனந்தத்தையே விழைகிறேன். அதைக் கொடுப்பாயா?"

எந்தக் கேள்வி வேண்டாமென்று பேச்சை மாற்றிஞளோ அதே கேள்வி மறுபடியும் வந்துவிட்டது. அசோகன் மிகுந்த தயவுடன் அரசிளங்குமரனது நட்பை விரும்புகிருன். உண்மையான மகேந்திரன் இங்கே இருந்திருந்தால் தகுந்த பதிலும் கிடைத்திருக்கும். ஆஞல் பேதை ரோகிணிக்கு ஏதாவது புரிந்தால்தானே. ஆயுள் முழுவதும் உற்ற நண்பஞக இருக்கிறேனென்று எப்படிச் சொல்வாள்? சக்கரவர்த்தியோ பகைமையை மறந்து நட்புரிமை கோருகிருன். இல்லே என்று எப்படி மறுப்பது. மறுப்பதற்கும் அவள் மனம் இடந்தரவில்லே. மறுப்பதா, ஒப்புக்கொள்வதா? என்று விளங்காதவளாகத் தவித்தாள் ரோகிணி.

அசோகனே விடுவதாயில்லை. "என்ன, மகேந்திரா! ஒரு வார்த்தை சொல்வதற்கு இவ்வளவு சங்கோஜமா?" என்று முகத்திலே இளமுறுவல் தோன்றக் கனிவுடன் கேட்டான்.

மிகவும் தணிந்த குரலில், "அரசே! தங்களது நட்பைப் பெறுகின்ற இந்த நல்ல சந்தர்ப்பத்தை யாராவது இழப்பார்களா? ஆனால்..."

"ஆனால்...என்ன? இன்னும் என்ன தடை?"

"தங்களது நட்புடன் சுகமாக வாழ்நாளைக் கழிப்பது என்பது மிகச் சிறந்த பேறுதான். ஆனால் அதை அடைய நான் தகுதியானவனா என்பதைப் பற்றித்தான் சற்றே யோசிக்க வேண்டியிருக்கிறது."

"மகேந்திரா! தாராளமாக ஆற அமர யோசித்துப் பார். அவசரப்பட்டு வாக்களிக்கும்படி உன்னை நான் வற்புறுத்தவில்லை. அதுவரையில் கலிங்கநாட்டாருடன் நாங்கள் சம்பந்தம் செய்து கொள்வதைப்பற்றி யோசிக்கிறோம். ஆனால் அதுவரை நீ இங்கேயே இரு. இந்த அரண்மனையை உன்னுடையதென்றே கருது. கைதி, பகைவன் என்கிற எண்ணத்தை விட்டுவிடு."

"என்ன? இந்த அரண்மனையிலேயே இருப்பதா?" என்று மிகுந்த படபடப்புடன் கேட்டாள் ரோகிணி. அசோகன் புன்முறுவலுடன், "கலிங்கநாட்டு இளங்கோவுக்கு இப்படிப் பட்ட ஒரு கடுந்தண்டனைதான் விதிக்க வேண்டுமென்று முன்னமே தீர்மானித்துவிட்டேன்" என்றான். அவன் வார்த்தைகள் முடியு முன்னரே யாரோ வருவதுபோல் தோன்றிற்று.

திடுக்கிட்டாள் ரோகிணி. அப்பொழுது அங்கே தோன்றியது வேறு யாரும் அல்ல. சாக்ஷாத் புத்திமதி தேவிதான். தனது ரௌத்ர ரூபத்தைக் கொஞ்சம் ஒடுக்கிக்கொண்டு குழந்தை இருக்குமிடம் தேடிப் பரிவுடன் வரும் தாயைப்போல் நடித்த வண்ணம் வந்து நின்றாள். அசோகன் முன்பின் பரிச்சயமில்லாத அந்தக் கலிங்கநாட்டு இளங்கோவைச் சமமாக உட்கார வைத்துக் கொண்டு பேசுவது அவளுக்கு மிகுந்த வியப்பை அளித்தது. பெருமூச்சுடன், "கலிங்க நாட்டு இளங்கோ மகேந்திரன் இவன் தானே?" என்று மிகுந்த அலட்சியத்துடன் கேட்டாள். பார்க்கத் தகாத ஒரு பொருளையோ விஷ ஜந்துவையோ கண்டால் தோன்றுவதுபோன்ற ஒரு அருவருப்பும் அலட்சியமும் அவள்

முகத்தில் தோன்றின. அசோகன் மிகவும் பணிவுடன் கூடிய குரலில், "ஆமாம்; இவர்தான் இளங்கோ மகேந்திரன்" என்று சொல்லிவிட்டு அவனிடம், "இவர்தான் என் தாயார். ராஜ மாதா..." என்று சொல்லுகையில் மகேந்திரன் மிகவும் பணிவுடன் எழுந்து, கரங்குவித்தவனாய், "கலிங்கநாட்டு யுவராஜன் மகேந்திரன் வணங்குகிறேன்" என்று பணிந்தான்.

பெரு மிடுக்குடன் தலையை அசைத்தாள் புத்திமதிதேவி. பிறகு மிகவும் அமர்த்தலான குரலில் அவனை அலட்சியமாகப் பார்த்து, "ஏ மகேந்திரா! நீயோ கைதி! என்னைப் போன்றவர்களை வணங்குவதற்குக்கூட உனக்கு அதிகாரம் இல்லை. மேலும் கலிங்கநாடு இன்று மந்திரி விசாகநந்தனது கையில் இருக்கிறது. அவருடைய மூத்த குமாரனைத் தவிர வேறு ஒருவருக்கும் கலிங்க நாட்டு இளவரசு என்னும் பட்டத்தை வகிக்க உரிமையில்லை. நீ வெறும் மகேந்திரன் என்று சொல்லிக்கொள்" என்று சொல்லியவளாக அடுத்திருந்த பளிங்காசனத்தில் பொத்தென்று உட்கார்ந்தாள்.

"விசாகநந்தன் ஒரு நிபந்தனையின்பேரில்தான் அரசராயிருக்கிறார் என்பது தங்களுக்கு நினைவிருக்கலாம். இளங்கோ மகேந்திரனுக்குக் கலிங்கநாட்டின் மேலுள்ள அதிகாரம் கைவிட்டுப் போய்விட வில்லையே. ஆகவே இந்தச் சந்தர்ப்பத்தில் அவன் யுவராஜனென்று சொல்லிக்கொள்வதனால் தவறு ஒன்றும் இல்லை என்றுதான் என் புத்திக்குப் படுகிறது" என்று மிகவும் மெதுவான குரலில் சொன்னான் அசோகன்.

புத்திமதி சற்றே நிமிர்ந்து உட்கார்ந்தாள். "ஓஹோ! அப்படியா? உன் புத்திக்குப் புலப்படாவிட்டாலும் எனக்கு நன்றாகத் தெரிகிறது. தன்னுடைய மதத்தை விட்டு விட்டுப் பௌத்த தர்மத்தை ஏற்றுக்கொள்ள இவன் சித்தமாயிருக்கிறானா? அப்படியிருந்தால் கலிங்கநாடு இவனை வரவேற்கக் காத்திருக்கிறது. இல்லாவிட்டால் இளவரசன் என்று சொல்லிக்கொள்ளவாவது சிம்மாசனத்தைப்பற்றி நினைக்கவாவது இவனுக்கு அதிகாரம் ஏது?" என்று படபடவென்று பொரிந்தாள் புத்திமதி.

அசோகன் மிகவும் தணித்த குரலில், "அரசர் நரசிம்மன் இறந்து போயிருந்தால் இந்த மாதிரியான கேள்விக்கு இடம் இருக்கிறது. ஆனால் அவரே திரும்பி வந்துவிடும் பட்சத்தில் ஒருவிதமான நிபந்தனையும் இன்றியே அவருடைய ராஜ்யம்

அவருக்கே அளிக்கப்படும் என்று நாம் முடிவு செய்தது தங்களுக்கும் தெரியும். அதை மறுபடியும் ஞாபக மூட்டுகிறேன்'' என்றான்.

புத்திமதி மிகவும் ஏளனமாக நகைத்த வண்ணம், "ஓஹோ! அப்படியானால் அவர் சுவர்க்கத்திலிருந்து இறங்கி வரவேண்டும் போல் இருக்கிறது'' என்று சொல்லி, இளவரசனை ஏற இறங்க ஒருமுறை பார்த்தாள். அசோகன் அதைக் கவனிக்கவில்லை.

"அம்மா! அவர் உயிருடன் இருக்கிறாரா இல்லையா என்ற விஷயம் வெகு சீக்கிரத்தில் தெரிந்துவிடும். அவருக்கு இந்தச் சிதானந்தரிடம் உண்மையான பக்தியிருந்தால் சீக்கிரத்தில் வந்து, விஷயத்தைத் தெரிவிக்க வேண்டுமென்று மகத சாம்ராஜ்யம் முழுவதும் பறையறையும்படி சொல்லியிருக்கிறேன். ஆகையால் அவர் பிழைத்திருக்கிறாரா இல்லையா என்ற விஷயம் வெகு சீக்கிரத்தில் நமது ஒற்றர்கள் மூலம் வந்துவிடும். அதுவரையில் இந்த அதிதியைக் கலிங்கநாட்டு இளங்கோ என்று அழைப்பதில் ஆட்சேபம் என்ன? அழைப்பது மட்டும் அல்ல. அவருக்குரிய மரியாதைகளையும் செய்ய வேண்டியதுதானே. ஆகவே இந்த மாளிகையிலேயே என்னுடைய நண்பனாக, என்னுடைய அதிதியாக இருக்கலாமென்று சொல்லிக்கொண் டிருந்த சமயத்தில் தான் நீங்கள் வந்தீர்கள்'' என்றான்.

கண்களை மலர விழித்து, அசோகனை ஏற இறங்க, எரித்து விடுபவள்போல் பார்த்து, "உன்னுடைய அதிதியா? அரசாங்க விருந்தினர்கள், அவர்கள் இருக்கவேண்டிய இடத்தில்தான் இருக்கவேண்டும். சக்கரவர்த்தி ஆகிவிட்டாலும் இன்னும் உன் சிறுபிள்ளைத்தனம் போகவில்லை. இந்த மாதிரி விஷயங்களை நீயே தீர்மானித்து முடிவு செய்துவிடலாமா?'' என்று அதட்டிய குரலில் கேட்டாள்.

'அசோகன் இந்த மாதிரி அசட்டுத்தனமாக ஏதாவது செய்து விடப் போகிறானே என்றுதான் நான் ஓடோடி வந்தேன். அதற்குள் அவசரப்பட்டுவிட்டான். இருக்கட்டும்; இந்தப் புத்திமதி இப்படியே நடக்க விட்டுவிடுவாளா?' என்று நினைத்தவளாகக் கீழுதட்டைப் பற்களால் கடித்துக்கொண்டு தலையை அசைத்தாள்.

புத்திமதி தேவியின் எதிர்பாராத வருகையும் அவள் பேச்சும் அதிகாரமும் ரோகிணியைத் திகைக்கச் செய்தன. முதலில் சற்றே

தயங்கினாள். இருந்தாலும் சமாளித்துக்கொண்டு, 'இதுவும் ஒரு நன்மைக்கே' என்று நினைத்தவளாகத் தான் அவளுடைய வார்த்தையை ஆமோதித்துச் சிறையிலே வசிக்க விரும்புவதாகத் தெரிவித்துவிட்டாள். அதுவரையில் பரம சாந்தமாயிருந்த அசோகனது முகம் கோபத்தால் சிவந்தது. இந்த மாதிரி அசந்தர்ப்பமாகப் புத்திமதிதேவி பேசியதும் அதற்கு இந்தப் பைத்தியக்கார இளவரசன் ஒப்புக்கொண்டதும் அவன் கோபத்தை அதிகமாக்கின. இதற்குமேல் அவளுடன் வாதம் செய்தால் இளவரசனுக்கு எதிரில் தாறுமாறுகப் பேசவும் கூசமாட்டாள். பிறனுக்கெதிரில் இத்தகைய அசந்தர்ப்பத்திற்கு இடம் கொடுப்பதைவிட அப்பொழுதைக்கு ஒப்புக்கொள்வதே மேல் என்று நினைத்தவனாய் அசோகன், சிதானந்தரை அடைத்திருக்கும் நகரச் சிறைச்சாலையிலேயே இளவரசனையும் வைப்பது என்ற தீர்மானத்துக்கு ஒப்புக்கொண்டான். ஆனால் அவன் மனம் சொல்லமுடியாத வேதனையினால் துடித்துக்கொண்டிருந்தது.

## 14

# நிலவிலே

மலையும் காடும் சேர்ந்த இடங்களில் இயற்கையரசி தன் சௌந்தரியத்தின் மாட்சி தோன்றக் கொலு வீற்றிருக்கின்றாள். இவற்றில் சில, உடல் நலத்திற்கேற்ற வாசஸ்தலங்கள் என்பது தற்கால மக்களின் அநுபவம். நமது முன்னோர்கள் இத்தகைய பெருமையும் அழகும் ஒருங்கே வாய்ந்த தலங்களை மன நலத்திற்கும் ஆத்ம சுத்தத்திற்கும் ஏற்றவையாகவும் கருதினார்கள். இயற்கையின் பேரொளியிலே தெய்வத்தன்மையைக் கண்டு களித்தார்கள்.

எந்தக் காலத்திலும் இயற்கை அரசிக்கு ஏராளமான பக்தர்கள் உண்டு. அவளுடைய சௌந்தரியத்தைக் கண்டு களிக்கும் பொருட்டு, ஒரு பேராவலினால் தூண்டப்பட்டு அவர்கள் ஏதாவது செய்துகொண்டேதான் இருக்கிறார்கள். நாடுகளில் வசிப்பவர்கள், காடுகளின் சோபையையும் அதன் எல்லையற்ற அழகையும் காண ஆசை கொள்ளுகிறார்கள். அமைதியே குடி கொண்ட வனங்களிலே வசிப்பவர்கள் நகரங்களைக் காண ஆவலுறுகிறார்கள். நதிகளிலும் ஓடைகளிலும் மலைவீழ் அருவிகளிலும் அவளது பேரழகைக் கண்டு மகிழ்ந்தவர்களாக ஞான விருத்தர்களும் சில விருத்தர்களுமான தபோதனர்கள் அங்கங்கே தங்கி ஆத்மானந்தத்தை அநுபவிக்கிறார்கள்.

ஏதோ ஒருவிதமான காரணத்தைக் கற்பித்து, வேட்டைக்கென்றும் வனபோஜனத்திற்கென்றும் தீர்த்த யாத்திரைக்கென்றும் பல்வேறு பெயர்களுடன் அவளுடைய ஒப்புயர்வற்ற அந்த எழிலிலே மக்கள் மயங்கிக் கிடக்கிறார்கள். இப்படிப்பட்ட அழகிய வனங்களுள் ஒன்று கபிலவஸ்து என்ற நகரத்தை அடுத்து அமைந்திருந்தது. அந்த வனத்தின் ஒருபுறத்தில் ஓர் அழகிய தாமரைப் பொய்கை. அதன் கரையில், சிந்தையில் ஆழ்ந்தவனாய் மெய்ம்மறந்து உட்கார்ந்திருந்தான் ஒரு பிக்ஷு.

சந்திரன் தனது அமுதமயமான கிரணங்களால் அந்த வனத்தை அழகு செய்துகொண் டிருந்தான். அந்த நிலவொளி

யிலே எல்லையற்ற நீல வானையே பார்த்து, அதன் அழகிலே ஈடுபட்டு நிற்பவன்போல் மெய்ம்மறந்திருந்தான் அவன். அந்தக் குளத்திலே சூரியனைக் கண்டவுடன் முகம் மலரும் தாமரை, நாணிநிற்கும் மணமகள்போல் தலைகுனிந்து, தாயாகிய தண்ணீருடன் கொஞ்சிக்கொண் டிருந்தது. மற்றவளாகிய குமுதமோ தன் காதலனை வரவேற்று, இளமுறுவல் பூத்தவளாகச் செருக்குடன் நின்றிருந்தாள். தன் இரு குழந்தைகளின் எதிர்மாறான இந்தச் செயல்களினால் சலிப்பதுபோல் அந்த நீர்நிலை மெல்ல மெல்ல அசைந்து மின்னிக்கொண் டிருந்தது.

எங்கும் ஒரே அமைதி. நாள் முழுவதும் ஓடி ஆடிச் சலித்துப்போன மிருகக் கூட்டங்களை நித்திரா தேவி தன் முழு வன்மையுடன் தாலாட்டிக்கொண் டிருந்தாள். பட்சிக் கூட்டங்கள் கூட்டில் அடைந்து, நெடுநேரம் ஆகியிருந்தது. இருந்தாலும் நிலவின் இனிமையினால் வெறிகொண்ட இரண்டொரு பட்சிகள் இன்னிசை எழுப்பி வான வீதியிலே பறந்து சென்றன.

அந்த அற்புதமான மௌனத்தின் நடுவில் கால்களினால் மெதுவாகத் தண்ணீரை அலைத்த வண்ணம் கரையிலே உட்கார்ந்திருந்தான் பிக்ஷு. பிக்ஷு வேஷத்திலும் அவன் வடிவழகனாகக் காணப்பட்டான். எவ்வளவு நேரம் அப்படி மெய்ம்மறந்து உட்கார்ந்திருந்தானோ அவனுக்கே தெரியாது. யாரோ நடந்து வரும் காலடி ஓசைகேட்டுத் திடுக்கிட்டான் அவன். அவனுக்குப் பின்புறம் சர்வாபரண பூஷிதையாக அழகே உருவெடுத்து வந்ததுபோல் நின்றிருந்தாள் ஒரு பூங்கொடி.

அவன் நெஞ்சு படபடத்தது. தான் எப்பொழுதோ கேட்டிருந்த வனமோகினிகளின் கதைகள் அவன் நினைவில் எழுந்தன. மிகுந்த படபடப்புடன், "இந்த மனித சஞ்சாரமற்ற வனத்தில் நள்ளிரவில் திரியும் நீங்கள் யார்?" என்றான். அவன் குரலிலே வீரம் தொனித்தது.

பதில் சொல்லுவதற்குப் பதிலாக அந்த மயிலாள் இரண்டடி முன்னே நடந்து, தன் முகத்தை மூடியிருந்த மெல்லிய துணியைத் தள்ளினாள். திடுக்கிட்டான் பிக்ஷு. "யார்? விமலாதேவியா! இந்த நள்ளிரவில், சேடிகள் ஒருவரும் இல்லாமல்...இதென்ன?" என்ற வார்த்தைகள் மிகுந்த வேகத்துடன் அவன் வாயினின்றும் எழுந்தன.

"பிக்ஷு சிரேஷ்டரே! தாங்கள் ஏன் என்னுடைய சேவகர்களைக்கூட எழுப்பாமல் தன்னந் தனியாக இங்கே வந்து உட்கார்ந்திருக்கிறீர்கள்? தங்களுக்கு ஏராளமான சேவகர்களை நான் அனுப்பியிருந்தும் தாங்கள் தனியாகவே இங்கே வந்திருப்பது போல், எனக்கும் தனியாகவே வரலாமென்று தோன்றிற்று" என்றாள் விமலை.

"விமலாதேவி! தாங்களோ பெண்பால். அதிலும் கலிங்க நாட்டிற்கு அரசி. நானோ கேவலம் பிக்ஷு. எந்தச் சமயத்திலும் எங்கே வேண்டுமானால் போகக்கூடியவன். தங்களையும் என்னையும் நிகரென்று பேசவோ கொள்ளவோ முடியுமா? போகபாக்கியங்களை அநுபவிப்பதும் அதிகாரம் செய்வதும் உங்கள் கடமை. ஐசுவரியத்தையும் சுக சௌக்கியங்களையும் வெறுப்பதும் துறப்பதும் எங்கள் கடமை" என்றான்.

"அதிகாரம் செலுத்துவது கடமையா? அதிகாரத்தின் கட்டுத்திட்டங்களும் கடமையின் நிலைமையும் இப்பொழுது மிகவும் விபரீதமாகப் போய்க்கொண் டிருக்கின்றன. ஒரு மனிதன் தன்னுடைய கௌரவம், அந்தஸ்தின் நிலைமை இவைகளை அநுசரித்து ஒழுங்காக நடப்பதுதான் கடமையென்று நினைத்திருந்தால் உலகமே வேறுவிதமாக ஆனந்தம் நிரம்பியதாக இருக்கும். மனிதன் அதிகாரத்திற்கு ஆசைப்படுகிறானே தவிர கடமையைச் செய்ய வேண்டுமென்று எண்ணுவதே இல்லை. ஆனால் ஆழ்ந்து யோசித்துப் பார்த்தால் அதிகாரம் இருந்தால்தான் கடமையையும் ஒழுங்காகச் செய்யமுடியும் என்பதுதான் என் முடிவு. ஆனால் பலர் இதை அறிவதில்லை. நேர்வழியை விட்டுவிட்டுக் கரடுமுரடான பாதையில்தான் செல்லுகிறார்கள்..." என்பதற்குள் இடைமறித்து,

"விமலாதேவி! கடமை என்றால் என்ன? அதிகாரம் என்றால் என்ன? கடமையும் அதிகாரமும் ஒன்றுக்கொன்று துணையா? வெவ்வேறா? என்பதைப்பற்றி விவாதிக்கவா இந்த நள்ளிரவில் இங்கே வந்தீர்கள்?" என்றாள்.

விமலை அருகிலிருந்த கருங்கல்லின்மேல் மிகவும் ஒய்யாரமாக உட்கார்ந்தாள். பிறகு மிகவும் மெதுவான குரலில், "உங்களுடன் சில விஷயங்கள் பேச வேண்டுமென்றுதான் இங்கே வந்தேன்" என்றாள்.

பிக்ஷு திடுக்கிட்டான். "என்ன? என்னுடன் சில விஷயங்களா? இந்த நள்ளிரவில்...இதென்ன இது? நானோ பாடலிபுத்திரம் வரும் வரையில் தங்களுடன்தான் பிரயாணம் செய்துகொண்டு வந்திருக்கிறேன். தாங்கள் தெரிவிக்க வேண்டிய முக்கியமான விஷயங்கள் இருந்திருந்தால் எந்தச் சமயத்திலும் தெரிவித்திருக்கலாமே" என்றான்.

சந்தேகத்தினாலும், இன்னதென்று விளங்காத ஒருவகைப் பீதியினாலும் அவன் முகம் சுண்டிற்று.

விமலா புன்முறுவலுடன் மேலும் பேசத் தொடங்கினாள். "ஆம்; கடந்த இரண்டு நாட்களாக நானும் அப்படித்தான் நினைத்தேன். அந்தக் கிராமத்தில் முதல் முதலாகத் தங்களைத் தரிசனம் செய்தபொழுது எப்பொழுது தங்களுடன் சற்று நேரம் ஆனந்தமாகப் பேசப்போகிறோம் என்று என் நெஞ்சம் துடி துடித்துக்கொண் டிருந்தது. ஆனால் பேசுவதற்கு வேண்டிய தைரியமும் சந்தர்ப்பமும் கிடைக்கவில்லை."

"அதென்ன இப்படிச் சொல்லுகிறீர்கள்? சந்தர்ப்பங்கள் கிட்டாமல் என்ன? வரும்பொழுது பல விஷயங்களைப் பொறுத்த சிக்கலான பிரச்னைகளைப்பற்றிக்கூடத் தாங்கள் பேசவில்லையா?"

அவள் முகம் நாணத்தால் சிவந்தது. இதழ்க்கடைகளிலே இளமுறுவல் அரும்பிற்று. 'இவன் தெரிந்தும் வேண்டுமென்றே வாதிக்கிறானா? அல்லது விளங்காமலே பேசுகிறானா?' என்ற கேள்வி அவள் மனத்துள் எழுந்தது. மிகவும் அன்பும் கனிவும் கலந்த குரலில் கிள்ளை கொஞ்சுவதுபோல், "ஆனால் தனிமையைத்தான் நாடிக் காத்துக்கிடந்தேன்" என்றாள். அவள் குரல் காதலால் கூவும் மாடப்புறுவின் குரல்போல் இனிமையாக இருந்தது.

ஆச்சரியத்தினால் பிக்ஷுவின் கண்கள் மலர்ந்தன. "என்ன! தனிமையிலா! தனிமையில் எந்த ரகசியத்தை என்னிடம் கூற விரும்புகிறீர்கள்?" என்று படபடத்துக் கேட்டான்.

அவன் நெஞ்சு படீர் படீர் என்று அடிக்கத் தொடங்கிற்று. 'ஒரு வேளை என்னை இன்னானென்று அறிந்துகொண்டு, மன்னன் நரசிம்மனைப்பற்றிய செய்திகள் எதையாவது சொல்லப் போகிறாளோ? ஆனால் இவள் நம்மைக் கண்டதே இல்லையே! இவள் அரண்மனைக்கு வருவதற்கு முன்பே, ஏழு வயதிலேயே நான்தான்

சிதாநந்தரது ஆசிரமத்துக்கு வந்துவிட்டேனே? என்னை இன்னு னென்று எப்படி அறியமுடியும்? ஒருவேளை ரோகிணியின் சாயலிலிருந்து ஊகித்திருப்பாளோ? அதெப்படி முடியும்? அவளே —ரோகிணியே — இப்பொழுது எப்படி இருக்கிருளோ? யாருக்குத் தெரியும்?' என்று ஒரு நொடிக்குள் பலவாருக எண்ணமிட்டான் அந்தப் பிக்ஷு.

விமலை மிகவும் அழகாக, முத்திழைத்த தன் அணிகலன்கள் குலுங்க, மிகவும் அன்பும், பரிவும் கலந்த குரலில், "வேறென்றும் இல்லை! கடமையையும் அதிகாரத்தையும் பற்றித்தான் பேச விரும்பினேன்..."

பிக்ஷுவின் பாடு தடுமாற்றம் ஆகிவிட்டது. அப்பொழுதும் அவனுல் விஷயம் எதுவாக இருக்கக் கூடுமென்று ஊகிக்க முடிய வில்லை. மிகவும் கலக்கத்துடன் கூடிய குரலில், "விமலாதேவி! இதற்குத்தாஞ இந்த நள்ளிரவில் வந்திருக்கிறீர்கள்? பாகற்காயைப் பூனை கொண்டு போய்விட்டதென்ருல் கேட்பாருக்கு மதியில்லையா? இப்பொழுது நீங்கள் சொல்லுவதுபோல் கடமையும் அதிகாரமும் என்று பேசுவதன் பொருட்டு இந்த நள்ளிரவில் தனிமையாக இங்கே வந்திருக்கமாட்டீர்கள் என்பதை ஒரு சின்னஞ்சிறு குழந்தைகூடச் சொல்லிவிடுமே!" என்ருன்.

விமலை வேறு எதையோ கவனிப்பவள்போல், தன் முழு அழகையும் அவன் காண வேண்டுமென்று ஆசைகொண்ட வளாகச் சற்றே திரும்பி அவனை ஏறிட்டு நோக்கினுள். சந்திரனது நிலவொளியிலே அவளது பேரெழில் பன்மடங்கு சோபையுடன் பொலிந்தது. கணநேரம் அசைவற்று ஓவியம்போல் உட்கார்ந் திருந்தாள். எதைப்பற்றிப் பேசுவது? எப்படித் தொடங்குவது? என்று சிந்திப்பவள்போல், மருண்ட பார்வையுடன் நாற்புறமும் சுற்றி ஒரு முறை பார்த்துவிட்டு நெடுமூச்செறிந்தாள். அவள் மார்பு விம்மி விம்மி ஆழ்ந்தது. காற்றினுல் அலைக்கப்பெற்ற குழற் கற்றைகள் கன்னத்தை முத்தமிடும் காதணிகளோடு கூடிக் குலாவின. மலர்க்கரங்களினுல் முகத்தைத் தாங்கியவளாய் மிகவும் கனிந்த குரலில், "பிக்ஷு சிரேஷ்ட! இந்த இளவய திலே, உலகில் அடியெடுத்து வைப்பதற்கு முன்னரே தாங்கள் எப்படி உலகை வெறுத்துத் துறவறத்தை மேற்கொண்டீர்கள் என்பதை அறிந்துகொள்ள வேண்டுமென்கிற பேரவா வினுல்தான் தனிமையாக வந்தேன். இத்தகைய விஷயங்களை எப்படிப் பலர் முன்னிலையில் கேட்பது? தங்களுடைய பூர்வாசிரம

வரலாறுகளைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று கடந்த சில நாட்களாக என் நெஞ்சம் துடிக்கிறது. ஆனால்..." என்பதற்குள் அவள் குரல் கம்மிப்போயிற்று.

விமலையின் இந்த வார்த்தைகள் அவனைத் திடுக்கிடச் செய்தன. 'அவளுக்குத் தான் இன்னானென்று தெரிந்திருந்தால் இப்படிப் பசப்பிப் பேசத் தொடங்குவாளா? உடனே கைது செய்வதற்கு வேண்டிய வழியைத் தேடமாட்டாளா? ஆம்! நான் இன்னானென்று இவளுக்குத் தெரிந்திருக்க முடியாது. மதுரையில் இளங்கோ மகேந்திரன் கைது செய்யப்பட்டானென்று மிகுந்த பெருமையுடன் கூறிக்கொண்டாளே? ஆகவே என்னை இன்னானென்று தெரிந்திராது' என்று உறுதி செய்துகொண்டவனாய், "விமலா தேவி! என்னைப்போன்ற பாப ஜன்மங்களுக்குப் பூர்வ சரித்திரம் ஏது? ஏதோ பிறந்தேன்; வளர்ந்தேன்; குருகுலவாசம் செய்துகொண் டிருந்தேன். குருகுல வாசம் முடிவதற்குள் குலத்தின் மேலேயே இடி விழுந்தது. பிக்ஷுவானேன். அவ்வளவு தான்."

"ஆனால் தங்கள் பூர்வாச்ரமத்தில் தங்களது திருநாமம் எதுவோ? எந்தக் குலம் தங்களைப்போன்ற அருந்தவப் புதல்வர்களை அடைந்ததனால் பெருமை அடைகிறதோ? அந்தப் பெயரையாவது நான் தெரிந்துகொள்ளலாமல்லவா?" என்றாள்.

அபாயத்தை விளைவிக்கக்கூடிய இந்தமாதிரிக் கேள்விகளுக்குப் பதில் கொடுக்கக் கூடாதென்று நிச்சயித்தவனாய் மிகுந்த பணிவுடன், "விமலாதேவி! தங்களுடைய இந்த இரண்டு கேள்விகளுக்கும் நான் சரியான விடை அளிக்க முடியாதவனாக இருப்பதற்கு வருந்துகிறேன். ஏனென்றால் எங்கள் குலத்திற்கே களங்கம் ஏற்பட்டுவிட்டது. அது நீங்கும் வரையில் குலத்தையும் பெயரையும் வெளியிடக் கூடாது என்பது குருவின் கட்டளை."

"அது போகட்டும். இந்த ஆசிரமத்தில் தங்களுக்கு ஒரு பெயர் இருக்கும் அல்லவா? அதைத் தெரிவிப்பதில் தங்களுக்கு ஒன்றும் ஆக்ஷேபம் இல்லையே?" என்று அவன் கண்களையே உற்று நோக்கியவண்ணம் கேட்டாள்.

பிக்ஷுவின் முகம் அசடுதட்டிற்று. தன் வேஷத்துக்கு உரிய பெயர் ஒன்று இருக்கவேண்டும் என்பதைப்பற்றி அவன் சிந்திக்கவே இல்லை. என்ன சொல்லுவதென்றே விளங்காத

வளுக, "நான் பிக்ஷு; எனக்குப் பெயரே இல்லை" என்று சொல்லிவிட்டான்.

விமலையின் கண்கள் ஆச்சரிய மிகுதியினுல் மலர்ந்தன. "பிக்ஷு சிரேஷ்டரே! தங்களது மற்றச் செயல்களும் உடையும் தாங்கள் ஒரு சிறந்த பிக்ஷு என்பதை நிரூபிக்கின்றன. ஆனுல் பெயரே இல்லை என்பதைக் கேட்க எனக்கு ஆச்சரியம் உண்டாகிறது."

"இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமே விஷயம் இல்லையே. எனக்கு என் குரு கல்வி கற்பித்தாரேயன்றி தீக்ஷை அளிக்க வில்லை. நானே வலியத் துறவு பூண்டவன். ஆகவே எனக்குப் பெயர் இருக்கவேண்டிய அவசியம் இல்லை.

விமலை மிகவும் பரிகாசமாகச் சிரித்த வண்ணம், "ஓஹோ! அப்படியா? அப்படியானுல் எவ்வளவு காலம் வரையில் பெயரில் லாமலே காலம் கழிப்பதாக உத்தேசமோ?"

"சந்தர்ப்பம் ஏற்படாத பக்ஷத்தில் பெயர் இருக்கவேண்டிய அவசியம் என்ன? ஆயுள் முழுவதும் அல்லது இந்த ஆசிரமம் முடியும் வரையில் பெயர் இல்லாமலேயே இருந்துவிட்டால்தான் என்ன?"

"ஆனுல் இந்த ஆசிரமத்திற்கு முடிவுண்டா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் விமலை.

"ஆம்! சில கைங்கரியங்களின் பொருட்டுத் துறவு பூண்டேன். பகவான் ததாகதர் எந்த மனிதனையும் ஆயுள் முழுவதும் துறவியாகத்தான் இருக்க வேண்டுமென்று வற்புறுத்தவில்லையே. இப்பொழுது தொடங்கியிருக்கும் செயல்கள் முடிந்ததும் இந்த ஆசிரமத்தை விட்டுவிடும்படி நேர்ந்தாலும் நேரலாம்.

இந்த வார்த்தைகளினுல் அவளது ஆச்சரியம் இன்னும் பன்மடங்கு அதிகரித்தது. மிகுந்த உற்சாகத்துடன், "ஆனுல், எதுவரையில் இந்தப் பிக்ஷு ரூபத்தில் இருக்க வேண்டியிருக்கும்?"

அவன் பாடு தடுமாற்றம் ஆகிவிட்டது. முதலில் 'உடல் உள்ளவரை' என்று சொல்லிவிடலாமா என்று நினைத்தான். முன்னுக்குப் பின் முரணுகச் சொன்னுல் ஏதாவது புதிய ஆபத்

துக்கள் விளைந்துவிடுமோ என்ற பயம் ஒருபுறம். ஆகவே இன்னது சொல்வதென்று விளங்காதவனாய் அவளை ஏறிட்டுப் பார்த்தான்.

அவள் முகத்தில் ஆச்சரியமும் ஆனந்தமும் ஒருங்கே குடி கொண்டிருந்தன. அவளது அழகிய தாமரைக் கண்கள் அவனது ரூப சௌந்தரியத்திலே ஈடுபட்டுப் பாதி மூடியிருந்தன. இதழ்கள் சற்றே திறந்து, தனது முல்லைச் சிரிப்பினால் இதயத்துள் எழும் ஆனந்தத்திற்கு அணை கோலுவதுபோல் தோன்றின. அவளது கேள்விகளிலே ஒருவிதமான கபடமும் தோன்றவில்லை. சற்று நேரம் இருவரும் ஒன்றுமே பேசவில்லை.

பிறகு மிகுந்த சந்தேகத்துடன், "விமலாதேவி! எதற்காக இப்படிப் பேசுகிறீர்கள்?" என்று கேட்டான்.

விமலையின் முகம் காலைப் பிறைபோல் சற்றே வெளுத்தது. மிகவும் அன்பு ததும்பும் குரலில், "வேறொன்றும் இல்லை. என் உள்ளத்தில் எழுந்த சில சந்தேகங்களைத் தீரத் தெளிய விசாரிக்கும் பொருட்டுத்தான். முதல் முதலாக உங்களைக் கண்டபொழுதே உருவத்திற்கும் இளமைக்கும் சிறிதும் பொருத்தமில்லாத இந்தக் காவி உடையைப் பார்த்துத் திகைத்துப் போனேன். உலகிலுள்ள ராஜபோகங்களெல்லாம் உங்கள் காலடியிலே கைகட்டி நின்று என்ன பணிக்கிறீர்களோ என்று காத்து நிற்கக்கூடிய இந்தச் சுகுமாரமான சரீரத்துக்கு இந்தக் காஷாயம் எதற்கு என்று தோன்றிற்று. அதிலும் ஆசிரமத்துக்கு உரிய செயல்களைத் தாங்கள் இவ்வளவு நியமத்துடன் செய்வதைப் பார்த்து என் மனம் பின்னும் ஆச்சரியக் கடலுள் ஆழ்ந்தது.

"தங்களைக் கண்டது முதல் தங்கள் அழகிலேயே என் கண்களும் மனமும் ஈடுபட்டுவிட்டன. ஆனால் தங்கள் உடையையும் நியமங்களையும் கண்டவுடன் அவை வெட்கி ஓடுகின்றன. நானே இதைப்பற்றி ஆழ்ந்து சிந்தித்தது உண்டு. ஆனால் இதில் குற்றமென்ன? உலகத்தில் சிலர் ஏராளமான பொன்னையும் பொருளையும் குவித்து வைத்து, அதைப் பார்த்துப் பார்த்து ஆனந்திப்பதிலேயே காலங் கழித்துவிடுகிறார்கள். அவற்றைக் காப்பாற்றுவதே தங்கள் கடமையென்றும் நினைக்கிறார்கள். வேறு சிலர் தோன்றி ஊதாரித்தனமாக அந்தப் பொருளை வாரி இறைப்பார்கள். வேலை செய்ய வேண்டியவர்கள் பிறரிடம் வேலை வாங்க முற்படுகிறார்கள். இந்த உலகத்தின் சித்தாந்தமே தப்பு வழியிலே

சென்றுகொண் டிருக்கிறது. உங்களைப் பார்த்தவுடனே உங்களுடைய கொள்கைகளும் இப்படித் தப்பு மார்க்கத்திலேதான் சென்றுகொண் டிருக்கின்றன என்று தெரிந்துகொண்டேன். இதைப்பற்றித் தனிமையில் கண்டு கேட்க வேண்டுமென்றுதான் வந்தேன்'' என்றாள்.

மிகுந்த வெறுப்புடன், "போதும், போதும்; நிறுத்துங்கள் புராணத்தை!'' என்று கடுமையாகச் சொன்னான் பிக்ஷு. விமலை அந்த வார்த்தைகளைக் கவனியாதவள்போல், "தங்களுடன் பெயரில்லாமல் பேசவேண்டி இருப்பதால் நானே ஒரு பெயரை வைத்துவிடலாம் என்று இருக்கிறேன்'' என்றாள்.

பிக்ஷுவுக்கு எழுந்து ஓடிவிட வேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று. ஆனால் இவளுக்குப் பயந்து ஏன் ஓட வேண்டுமென்று நினைத்தவனாகச் சற்று நேரம் மௌனமாயிருந்தான்.

"பிக்ஷுசிரேஷ்டரே! நானாக ஒரு பெயரைத் தேர்ந்தெடுத்தால் அதை ஏற்றுக்கொள்வதனால் குற்றமென்ன? பிக்ஷுக்கள் பொன்னையும் பொருளையும் மலர்களையும் காணிக்கையாக ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். ஒரே ஒரு சிறு பெயரை என் அன்பின் காணிக்கையாக ஏற்றுக்கொள்ளத் தடையென்ன?'' என்றாள்.

அவன் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். பதிலே பேசவில்லை. அவள், "பிக்ஷுவே! தங்களுடைய ஆசார நியமங்களுக்கும் ஆசிரமத்துக்கும் பொருத்தமில்லாத பெயரைச் சொல்லிவிடுவேனோ என்று நினைக்கவேண்டாம். தங்களுக்கு மிகப் பொருத்தமான ஒரு பெயரையே தேர்ந்தெடுத்திருக்கிறேன்.''

பிக்ஷு, அப்பொழுதே தூக்கத்திலிருந்து விழித்தவன்போல், "கலிங்கத்து அரசி விமலாதேவி! எந்தப் பெயரைத் தேர்ந்தெடுத்திருக்கிறீரோ?'' என்று மிகவும் ஏளனமாகக் கேட்டான்.

"மிகவும் அழகான பெயர்! தர்மாநுஜன்!''

வேண்டா வெறுப்புடன், "தர்மாநுஜனா? தர்மம் என்ற சொல் சர்வவியாபி. தர்மாநுஜன் என்ற சொல் அறவழியில் நடப்பவன் என்று பொருள்படும்'' என்றான்.

"அறம் வளர்க்கும் கண்ணாளன்!'' என்று முணுமுணுத்துக் கொண்டாள் விமலை. பிறகு அவனைப் பார்த்து, "நீங்கள் சொல்லு

கிற கருத்து முற்றும் வேறு. சந்திர குலத்தில் தர்மன் என்ற ஒரு அரசன் இருந்தானல்லவா?" என்றாள்.

"ஆமாம்! பாண்டு புத்திரன்!"

"அவனுக்கு அநுஜன்!" என்றாள்.

"அப்படியும் பொருள் கொள்ளலாம்!" என்றான் அசுவாரசியமாக.

"ஆனால் உங்களைத் தர்மாநுஜன் என்று கூப்பிடும்பொழுது தர்மனுடைய தம்பிகள் நால்வரில் எவரது சித்திரம் என் கண் முன் எழும். சொல்லுங்கள் பார்க்கலாம்?"

இந்தக் கேள்வி அவனைத் திகைக்கச் செய்தது. "இதென்ன அர்த்தமற்ற கேள்விகளைக் கேட்டுக்கொண்டே போகிறீர்கள்? உங்களுக்கென்ன பைத்தியமா?" என்றான் சற்றே அதட்டலாக.

"பைத்தியம் யாருக்கு என்பதைப்பற்றிப் பின்னால் யோசிப்போம். ஆனால் அந்தப் பெயரை ஒட்டி அர்ஜுனனது மோகன வடிவந்தான் என் கண்களுக்குப் புலனாகிறது. அப்படி நினைப்பதைப்பற்றி உங்களுக்கு ஆக்ஷேபம் இல்லையே?"

அவன் நெடுநேரமாகவே ஏதோ ஒருவகையான சங்கடத்துள் ஆழ்ந்துகிடந்தான். அவன் மனம் முழுவதும் நெடுந்தூரத்திலுள்ள கலிங்கநாட்டிலும் இந்திரபுரத்துக் கோட்டையிலும் உலவிக் கொண்டிருந்தது. இன்னதுதான் விஷயம் என்று விளங்காது பேசிக்கொண்டே வந்துவிட்டான்: இந்த நிலையில் முன் பின் யோசனையின்றி, "அதெற்கென்ன ஆக்ஷேபம்" என்று கூறிவிட்டான். விமலையின் ஆனந்தம் கரைபுரண்டு ஓடத் தொடங்கிற்று. உடனே எழுந்து மிகவும் நடுக்கத்துடன் கூடிய குரலில், "ஆனால் அர்ஜுனன் என்றே அழைக்கலாமோ?" என்று கொஞ்சலாகக் கேட்டவளாக இரண்டடி முன்னே வந்தாள்.

அதுவரையில் கற்சிலைபோல் உட்கார்ந்திருந்த அவன் எழுந்து நின்றான். "போதும்! போதும்! நிறுத்துங்கள்! எனக்குக் குருகுலத்தைத் தவிர்த்து வெளியுலகத்தில் அதிகப் பரிச்சயம் இல்லாதபடியால் இதுவரையில் நீங்கள் நடித்த கபட நாடகம் எனக்குப் புரியவில்லை. இதுவரையில் உங்கள் பேச்சை நான் கவனிக்கவும் இல்லை. உங்களுடைய வார்த்தைகளைக் கேட்பது

பாபம்!' என்று இரு கரங்களாலும் செவிகளைப் பொத்திக் கொண்டான்.

"விமலே, கலிங்கநாட்டரசி! தங்களைப்போன்ற சாமான்ய னிடம் காதற் பிச்சை கேட்கிறுளே என்று நினைக்கிறீர்களா?"

"விமலாதேவி! நிறுத்துங்கள் பிரசங்கத்தை! ஒரு அரசியா யிருந்தும் இவ்வளவு தாழ்ந்த ஓர் எண்ணத்துக்கு நெஞ்சிலே இடம் கொடுத்தது ஒரு பெரும் பிழை. அதை வெளிப்படையாக என்னிடம் சொல்ல வந்ததைக் காட்டிலும் இழிவான செயல் வேறு இல்லை. இரண்டு நாளைக்கு முன் சதியாவதற்குச் சென்ற ராணி இந்துமதியின் பவித்திரமான நடத்தை, சிறந்த பதிபக்தி இவைகளை நீ உடனிருந்து பார்த்திருக்கிருய். அவளைப்போன்ற உத்தமிகளின் நற்குணங்கள்தாம் பெண்மையென்ற கொடிக்கு உயிரையும் உற்சாகத்தையும் கொடுத்துக்கொண்டே இருக் கின்றன. அதற்கு நேர்மாருக உன்னைப்போன்றவர்களுடைய துர்க்குணங்களிலிருந்து எழும் விஷம் அந்தக் கொடியை அப்படியே எரித்துவிடத் தக்கதாக இருக்கிறது, நீங்கள் கலிங்க நாட்டுச் சிம்மாஸனத்தில் இருந்தாலும் சரி; உலகத்துக்கே சக்கர வர்த்தினியாக இருந்தாலும் சரி; இத்தகைய நீசமான எண்ணங் களுக்கு இடம் கொடுக்கக்கூடாது" என்று சொல்லிவிட்டுச் சற்றே நிறுத்தினுன்.

"தர்மாநுஜா! என்னுடைய காதலுக்குத் தடையாக இந்த ராணி பதவி இருக்குமேயாயின் அந்தப் பதவியைக்கூடத் துச்ச மாகக் கருதி உதைத்துத் தள்ளத் தயாராக இருக்கிறேன். என் காதலை மெய்ப்பிக்க எந்தவிதமான தியாகத்தைச் செய்யச் சொன்னுலும் இதோ தயாராக இருக்கிறேன்!"

"ஏ! விமலாதேவி! காதல்! காதல்! என்ற உயர்ந்த பதத்தை உன் நாற்ற வாயால் சொல்லி அசுத்தமாக்காதே! உன்னுடைய மிருகத்தனமான இந்த ஆவலைத் தெய்விகக் காதல் என்று நீ சொல்லிக்கொள்வது தமையனைக் கொல்லுவதைச் சகோதர வாஞ்சை என்பது போலவும், உன்னைப்போன்ற பேய்களைக் கற்பரசிகள் என்று புகழ்வது போலவுந்தான். இப்படியெல்லாம் நீ பேசும்பொழுது கடவுள் முன்னிலையில் நீ விசாகநந்தனது தர்ம பத்தினி என்பதை மறந்துவிடுகிருய்!"

"புலன்கள் ஒடுங்கி வீட்டில் ஒரு காலும், காட்டில் ஒரு காலுமாக நிற்கும் கிழவனை மணந்துகொண்டது உண்மையான்

விவாகமாகுமா? அதை விவாகம் என்பதைவிடப் பலி என்று சொல்லலாம். பணத்திற்கு ஆசைப்பட்டுப் பெற்றோர்கள் அழகிய பெண்களைக் கிழங்களுக்குப் பலியிடுகிறார்கள். என்னுடைய நிலையும் ஏறக்குறைய அதே நிலைதான்.

"விமலாதேவி! வனத்திலே வசித்துவந்தாலும் நாட்டு நடவடிக்கைகளில் சிற்சில பகுதிகள் எனக்கும் தெரியும். விஷயங்கள் நீங்கள் சொல்லுவதுபோல் நடக்கவில்லை. நீங்களாகவே வலிய அவரை வரித்தீர்கள் என்பதும் எனக்குத் தெரியும்" என்றான்.

அவள் பாடு தடுமாற்ற மாகிவிட்டது. மேலும் ஏதோ பதறியவளாய் முன்னே இரண்டடி நடந்தாள் அவள். அவள் வார்த்தைகளைச் செவியில் ஏற்காமல் மௌனமாக நடந்து மறைந்தான் அந்தப் பிக்ஷு.

# 15

## பெரியார் வருகை

மகேந்திரன் சிந்தையில் ஆழ்ந்தவனாக மெல்ல மெல்ல நடந்துகொண்டிருந்தான். அவன் முகத்திலே கோபமும் வெறுப்பும் மாறிமாறித் தோன்றிக்கொண்டிருந்தன. அவன் மனம் நெடுந்தூரத்திற்கு அப்பால் சஞ்சரித்துக்கொண்டிருந்தது. இறந்தகால நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் இறகு முளைத்து எதிரே வந்துகொண்டிருந்தன. தாயின் உடல்நிலை இப்பொழுது எப்படி இருக்கிறதோ என்பதை நினைக்க நினைக்க அவன் கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்தோடியது. அம்மா! என்று பெருமூச் செறிந்தான் அவன். அதே சமயத்தில் அந்த நெடுமூச்சிற்கு விடையளிப்பதுபோல் அருகிலிருந்த புதரிலிருந்து ஒரு பெரியவர் தோன்றினார். அவரது ஒளியினால் அந்த ஆரண்யமே சோபை கொள்ளுவதுபோல் தோன்றிற்று. பார்த்தவுடனேயே அவர் ஒரு பௌத்த பிக்ஷு என்பது அவனுக்கு விளங்கிவிட்டது. அந்தத் தபஸ்வியின் தோள்களில் காவி நிறமுள்ள உத்தரீயம் தொங்கிக் கொண்டிருந்தது.

இவனோ ஹரித்வாரத்துச் சிதானந்தரது குருகுலத்திலே கல்வி பயின்றவன். புராதன ஹிந்து தர்மத்தின் ஆணிவேர் என்று போற்றப்பெற்ற கலிங்கநாட்டு இளவரசன். அப்பொழுது, பொதுவாகவே ஹிந்து தர்மத்தை அநுசரிப்பவர்களுக்குப் பௌத்தர்களிடம் ஒருவிதமான வெறுப்பு ஏற்பட்டிருந்தது. இருந்தாலும் மற்றவர்களிடம் இல்லாத ஏதோ ஒரு புதிய சக்தி அவரிடம் இருப்பதுபோல் அவன் உணர்ந்தான். சாந்தமும் கருணையும் பொழியும் அவரது கண்களும் தெய்வ ஒளி வீசும் முகமண்டலமும் சிதானந்தருக்குச் சமமான தவவலிமை உடையவர் அவர் என்பதை அவனுக்கு அறிவித்தன.

'பௌத்த மதத்தில் நல்லோர்கள் அழிந்துவிடவில்லை. எத்தனையோ மகாத்மாக்கள் மறைந்து வாழ்கிறார்கள். ஏதோ சில வெறியர்களைக்கொண்டு பௌத்த மதத்தையோ பகவான் ததாகதரையோ இகழ்வது அறிவற்ற செயல்' என்றும் சிதானந்தர் அடிக்கடி கூறுவது அவனுக்கு நினைவு வந்தது.

"இளங்கோ மகேந்திரன் பிக்ஷு வேஷத்தில் இருந்தாலும் இதுவரையில் எந்தப் பௌத்த ஆசாரியனையும் வணங்கியதில்லை. அவரைக் கண்டவுடன் தன்னையும் அறியாமல் எழுந்து வணங்கி, "ஆசாரிய! தங்களது தரிசனத்தால் நான் தன்யனானேன்" என்று கூறினான்.

"நற்குணமுள்ள மகனே! உனக்கு மங்களம் உண்டாகட்டும். உன்னைப்போன்ற குழந்தைகளைக் காண்பதனால் எல்லையற்ற ஆனந்தங்கொண்டு என் உடல் பூரிக்கிறது. நேற்றிரவு முதல் நெடுநேரமாகப் பகவான் ததாகதரது திருவடிகளைத் தியானம் செய்துகொண் டிருக்கிறேன். உங்களுடைய சம்பாஷணைகள் முழுவதும் என் செவிகளில் விழுந்தன. தியான நேரத்தில் இத்தகைய தடைகள் வந்து சேருவதைப்பற்றி முதலில் வருந்தினேன். ஆனால் உன் மன உறுதியை நோக்க என் தியானம் தடைப்பட்டதையும் மறந்து உள்ளம் பூரித்தேன். முற்றும் துறந்த முனிவரிடத்தும் யோகிகளிடத்துங்கூட எப்பொழுதேனும் காணக் கிடைக்கும் புலனடக்கத்தை உன்னைப்போன்ற அரசிளங் குமரனிடம் கண்டு என் மெய் சிலிர்த்தது. இன்றைய மகாயுத்தத்தில் நீ அடைந்த வெற்றிதான் மிகச் சிறந்ததும் போற்றத் தக்கதுமானது. முப்பகை வென்றவராலும் பெறுதற்கரிய மாபெரும் வெற்றியை நீ பெற்றுவிட்டாய். உலகம் முழுவதையும் உன் தோள்வலியால் வென்றாலும் அது இந்த வெற்றிக்குச் சமமாகாது. மேன்மேலும் நீ அடையப்போகின்ற வெற்றிக்கு இது ஒரு அறிகுறி என்று நினை. ஏ! அரசிளங்குமரா! உன்னை மனப்பூர்வமாக ஆசீர்வதித்து வாழ்த்தவே நான் புதரிலிருந்து வெளியே வந்தேன்" என்று கூறினார்.

"ஆசாரிய! தாங்கள் என்னை இன்னானென்று கண்டுகொண் டிருக்கிறீர்களா? எதன் பொருட்டு இந்தப் பிக்ஷு வேஷம் என்பதையும் தாங்கள் அறிந்துதான் இருப்பீர்கள். இருந்தாலும்..." என்று அவன் பேசுவதற்குள்,

"கலிங்கநாட்டு இளவரசே! உன் செயல்களின் கருத்தெல்லாம் எனக்குத் தெரியும்" என்றார்.

மகேந்திரனது கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன. இன்னதென்று விவரிக்கமுடியாத ஒருவகை உணர்ச்சியினால் அவன் மெய்ம்மறந்தான். பெரியவர் அன்பும் கருணையும் ததும்பும் குரலில், "மகேந்திரா! எனக்கு விஷயங்களெல்லாம் தெரியும்.

இந்தப் பிக்ஷு வேஷத்தின் பொருட்டு உன்னை நான் நிந்திக்க மாட்டேன். பௌத்த தர்மத்தின் பிரசாரம் என்ற பெயரால் எத்தனையோ அக்கிரமங்களும் அநீதிகளும் நடைபெறுகின்றன. அந்தப் பவித்திரமான வேஷத்தைத் தரித்துக்கொள்ளுகிறவர்கள் சிலர், அதற்கு எதிர் மாறான செயல்களிலே மறைமுகமாக ஈடுபடுகிறார்கள். தர்மகுருவின் தண்டத்தைக் கையிலே தாங்கி, தங்களால்தான் பௌத்ததர்மமே நிலைநிற்கிறது என்று பெருமையடித்துக்கொள்ளும் சில பிக்ஷுக்கள் துர் ஆசாரங்களிலும் பஞ்சமா பாதகங்களிலும் மூழ்கிக் கிடக்கிறார்கள். பிக்ஷுக்கள் என்ற வேஷத்தைத் தங்களுடைய தீய செயல்களுக்குப் போர்வையாக உபயோகித்துக்கொள்கிறார்கள் பிக்ஷுக்கள். பிக்ஷு, பிக்ஷுணிகள் இவர்களின் இன்றைய நிலையை நோக்கினால் வெகு சீக்கிரத்தில் அது ஒரு தொத்து நோய்போல் பரவிப் பரதகண்டத்தையே மூழ்கடித்துவிடுமோ என்றுகூடத் தோன்றுகிறது.

"சிலர் வயிற்றுப் பிழைப்புக்காகவும், வேறு சிலர் சோம்பலினாலும், மற்றும் சிலர் அதிகார வெறியினாலும் பிக்ஷுக்களாகி எளிய மக்களின்மேல் அதிகாரம் செலுத்திக்கொண்டு திரிகிறார்கள். இதுவரையில் அசோகனது வெற்றிகள் தோள்வலியாலும் வாள் வலியாலும் பெற்றவை. ஆனால் இப்பொழுது நடைபெறுவதோ கபடமும் சூழ்ச்சியும். மகேந்திரா! கலிங்கநாட்டின் வெற்றி எப்படி, யார்மூலம் என்பது எனக்குத் தெரியும். இது அசோகனது பெயருக்கே ஒரு களங்கத்தை உண்டுபண்ணும். மகேந்திரா! இந்தமாதிரி வெறும் பெயரளவில் பிக்ஷுக்களாக இருக்கும் பௌத்தர்களைவிட நீ பன்மடங்கு மேலானவன். உன்னைப் போன்ற நற்குணமுடையவர்கள் எந்தப் பதத்தில் இருந்தால் தான் என்ன? உயர்ந்த குணங்களும் அதற்கேற்ற நடவடிக்கைகளும் புலனடக்கமும் எவனிடம் குடிகொண்டிருக்கின்றனவோ அவன்தான் உண்மையான பிக்ஷு; பிக்ஷுக்களுள் சிரேஷ்டன்.

" ததாகதருடைய சித்தப்படி அவனே மேலானவன். எல்லா மதங்களும் அவனைத்தான் ஆரியன் என்றும் கர்மயோகி என்றும் புகழும். உன்னைப்போன்ற நிர்மலமான நடத்தையுள்ள இளம் பிள்ளைகள் பௌத்தமதத்தை ஏற்றுப் பிரசாரம் செய்ய முன் வந்தால் இந்தப் பரதகண்டத்தின் வடகோடி முதல் தென்கோடி வரை பௌத்தர்களாலேயே நிரம்பிவிடும். இப்பொழுதிருக்கும் பௌத்ததர்மம் வெறும் வெளிவேஷம். வாள் வலியினாலேயே பிரசாரம் நடைபெறுவதால் தர்மத்தின் உண்மையான தத்துவம்

பலருக்குத் தெரியாது. கத்தியின் கூர்மை கண்முன் நிற்கும்வரையில்தான் மதத்தைப்பற்றி அவர்கள் நினைப்பர். ஆனால் இப்பொழுது அசோகருக்குச் சக்கரவர்த்தி பதவி கிடைத்ததிலிருந்து சில மாறுதல்கள் ஏற்படத் தொடங்கியிருக்கின்றன. பயத்தினால் பக்தியைப் புகட்டுவதற்குப் பதில் பக்தியின் உண்மை வடிவத்தையும் 'ததாகதரது' அருள் மொழிகளையும் நல்ல முறையிலே மக்கள் மனமுவந்து ஏற்றுப் பின்பற்றும்படி செய்யவேண்டும் என்ற எண்ணம் சக்கரவர்த்தியின் மனத்திலும் ஏற்பட்டிருக்கிறது. அப்பா! குழந்தாய்! நீ பாடலிபுத்திர நகரத்திற்குப் போனவுடன் சக்கரவர்த்தியைக் கண்டு இந்த ஓலையை அவரிடம் கொடுத்துவிடு. நேரில் சக்கரவர்த்தியிடமேதான் கொடுக்கவேண்டும்" என்று சொல்லியவராய் அதுவரையில் தம் உத்தரீயத்துள் மறைத்து வைத்திருந்த ஓலைச் சுருளை அவனிடம் நீட்டினார்.

மிகுந்த பணிவுடன் இரு கைகளையும் நீட்டிப் பெற்றுக் கொண்டான் மகேந்திரன். பிறகு மிகவும் மெதுவான குரலில், "இந்த ஓலையை யார் கொடுத்தார்கள் என்று கேட்டால்" என்பதற்குள், "முங்கலீ புத்திரன் கொடுத்தான் என்று சொல்" என்றார் பெரியவர்.

"பகவான் முங்கலீ புத்திரருக்கு ஜயமுண்டாகட்டும்!" என்று சொல்லி, அவரை நோக்கி, "ஆசாரிய! தங்களைத் தரிசிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்ததுபற்றி பெருமகிழ்ச்சி அடைந்தேன். சிதானந்தர் அடிக்கடி தங்களைப்பற்றிச் சொல்லுவதுண்டு. தங்களது பாத தூளிக்காகப் பக்தர்கள் வருஷக் கணக்காகக் காத்திருப்பார்கள் என்றும் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்களுக்குக் கிட்டாத ஒரு பேறு இன்று எனக்குக் கிட்டியது ஒரு பெரும் பாக்கியமென்றே சொல்ல வேண்டும்."

"மகேந்திரா! நான் வந்ததைவிட உன் குணத்தைப் பரிக்ஷிக்க ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததைப்பற்றி மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். என்னுடைய அக்ஞாதவாஸம் இன்னும் முடிவடையவில்லை. வெகு சீக்கிரத்தில் வெளிப்பட வேண்டிய சந்தர்ப்பம் நேர்ந்தாலும் நேரலாம். மக்கள் ஸம்புஷ்டாசாரியனைப் பின்பற்றி படுவேகமாகச் சென்றுகொண்டிருக்கிறார்கள். மக்களுக்கு உதவி செய்யவேண்டியது மிகவும் அவசியமான ஒரு பணிதான். ஆனால் விஷத்தை அமுதமென்று மதிக்கும் இந்தக் காலத்தில் விஷவேகத்தினால் மயங்கியிருக்கும் மக்களுக்கு அமுதத்தைக் கொடுத்

தாலும் அதுவும் விஷமென்றே தோன்றும். கலிங்க விஜயத் துக்குப் பிறகு அசோகனுக்கு ஞாேேதயம் ஆகியிருக்கிறது. கூடிய சீக்கிரம் நான் வெளிவந்தே தீரவேண்டும்" என்று சற்றே நிறுத்தினுர்.

ஆச்சரியத்தில் ஆழ்ந்தவனுய் வைத்த கண் வாங்காமல் அவரையே ஏறிட்டுப் பார்த்தவண்ணம் நின்றிருந்தான் மகேந் திரன். ஏதேதோ கேள்விகள் கேட்கவேண்டுமென்று தோன் றிற்று. ஆனுல் கேட்கலாமா? கூடாதா? எதை எப்படிக் கேட்பது? என்று யோசிக்கும்பொழுது அவர் மீண்டும் கனிவான குரலில் பேசத் தொடங்கினுர்.

"அப்பா! என் பெயரைத் தகுந்த சந்தர்ப்பம் வரும் வரையில் யாரிடமும் சொல்லவேண்டாம். இன்று உன்னிடம் ஒப்பித் திருக்கும் இந்த ஓலைச் சுருளின் மூலமாக, பௌத்த மதத்திற்கு நேரிடப் போகிற ஒரு பெரிய விபத்தைப் போக்கடிக்கப் போகிருய்."

"என்ன! நாஞ பௌத்த மதத்துக்கு வரும் விபத்தைப் போக்கடிக்கப் போகிறேன்! ஆசாரிய! தங்களுடைய வார்த் தையை என்ஞல் நம்ப முடியவில்லையே! நானே புராதன ஹிந்து தர்மத்தைச் சேர்ந்தவன். ஹிந்து தர்மத்தைத் துறக்கவும் இல்லை. பௌத்த தர்மத்தைப் போற்றவும் இல்லை......".

"மகேந்திரா! பௌத்த தர்மத்திற்கு ஏற்படும் விபத்தை நீக்குவதற்கு நீயும் ஒரு பௌத்தனுகத்தான் இருக்கவேண்டும் என்பது அவசியமில்லையே!" என்ருர்.

"ஆனுல் நீங்கள் என்ன சொல்கிறீர்கள். ஹிந்து தர்மத்தில் இருந்துகொண்டே பௌத்த தர்மத்தைக் காக்கப்போகிறேனு!" என்று ஆச்சரியத்தினுல் மலர்ந்த கண்களுடன் கேட்டான் பிக்ஷு.

முங்கலீ புத்திரரின் முகத்தில் புன்னகை அரும்பிற்று. "ஆமாம், அப்படித்தான் நடக்கப்போகிறது. நீ நினைப்பதைக் காட்டிலும் பன்மடங்கு ஆச்சரியகரமான சம்பவங்கள் நடை பெறப் போகின்றன" என்ருர். அவர் குரலிலே உண்மையின் உறுதி தொனித்தது.

"ஆசாரிய! கலிங்க நாட்டிற்கு வந்த விபத்து நீங்குமா? புராதன ஹிந்து தர்மம் பௌத்தர்களிடமிருந்து காப்பாற்றப் படுமா? குருதேவர் சிதானந்தரின் விடுதலை என் முயற்சியாலேயே கிடைக்குமா?" என்று படபடப்புடன் கேட்டான்.

அவர் மிகவும் மெதுவான குரலில், "அப்பா! மகேந்திரா! உன்னால்தான் எல்லாம் நடைபெறப் போகிறது. கலிங்கநாடு மீட்சிபெற்று ஹிந்து தர்மத்திற்கே உறைவிடமாக ஆகப்போகிறது. இளங்கோவின் பெரு முயற்சியால் ஹிந்து தர்மம் என்கிற விருக்ஷம் நான்கு திசைகளிலும் பரவப்போகிறது. கலிங்கநாடு பௌத்தருடன் போரிட்டு, ஹிந்து தர்மத்தை நிலைநிறுத்தும். புராதன ஹிந்து தர்மந்தான் சூரிய சந்திரர்கள் உள்ளவரையில் நிலைத்திருக்கும். ஹிந்து தர்மத்திலிருந்து வேண்டாதவைகளை விலக்கி, புதியவைகளைச் சேர்த்து, காலப்போக்கை அநுசரித்து சமூகத்தைச் சீர்திருத்துவதற்குப் பகவான் ததாகதர் செய்த ஒரு மாறுதல்தான் பௌத்த மதம். தாம் தோன்றிய காரியம் முடிந்ததும் அஹிம்சா தத்துவம் பரதநாட்டு மக்களுடைய மனத்தில் படிந்ததும் இன்று பரதகண்டம் முழுவதும் கவிந்துகொண் டிருக்கும் பௌத்த தர்மம் தானாகவே குறைந்துவிடும். பாரத மக்களுடைய சிறந்த கொள்கைகளினாலும் ஒழுக்கத்தினாலும் ஹிந்து தர்மம் மறுபடி உலகத்தில் பிரகாசிக்கும். காலப்போக்கினால் ஹிந்து மதத்தின்மேல் ஏற்பட்ட வேண்டாதவைகளைத் துடைக்கவும் அழிந்துபோன பகுதிகளைப் புதுப்பிக்கவும் வந்ததுதான் பௌத்த மதம். இப்பொழுது பௌத்த தர்மத்தின் பெயரால் தகாத செயல்கள் நடைபெறுவதிலிருந்தே உண்மைத் தத்துவம் க்ஷீணித்துவிட்டதென்பது உனக்குப் புலப்படவில்லையா? அசோகன் சிறந்த ஞானி. அவனுடைய விடாமுயற்சியினாலும் ஒழுக்கத்தினாலும் அது ஓரளவு ஜீவித்திருக்கும். அவனுக்குப் பின் பௌத்த தர்மம் என்று சொல்லிக்கொண்டு மக்கள் மனம்போல் நடப்பார்கள். ஆனால், 'பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு மறுபடி பரதகண்டத்தை மிலேச்சர்கள் ஆளத் தொடங்குவார்கள். அப்பொழுது மறுமுறை நான் தோன்றுவேன்' என்று பகவான் கௌத்தம புத்தர் கூறியிருக்கிறார்" என்று சற்றே நிறுத்தினார் மூங்கலீ புத்திரர்.

வருங்காலத்தைப் பற்றிய இந்த வார்த்தைகளைக் கேட்டு அவன் மிகுந்த ஆச்சரியம் அடைந்தான். ஆனந்த மிகுதியினால் கண்களில் கண்ணீர் துளித்து நின்றது. தழுதழுத்த குரலுடன், "தாங்கள் இதுவரையில் சொன்ன எதிர்கால நிகழ்ச்சிகள் உண்மையில் தோன்றுமா?" என்றான்.

"ஆம் மகேந்திரா! இது என்னுடைய வாக்கல்ல. பகவான் ததாகதருடைய தீர்க்க தரிசனம். இதை உன் சொந்த அநுபவத்திலேயே வெகு விரைவில் காணப்போகிருய். மறுபடியும் ஒரு முறை நீ என்னைச் சந்திக்கும்படி நேரும். அப்போது இந்த வனத்திலேயே வந்து பார். வேறு எங்கே தேடினுலும் நான் கிடைக்கமாட்டேன்" என்ருர்.

"என்ன? தங்களது தரிசனம் வெகு சீக்கிரத்திலே எனக்கு இன்னொரு முறையும் கிடைக்கப்போகிறதா!"

"உன்னுடைய குணங்கள் கடவுளையே வசீகரிக்கத் தக்கன! குழந்தாய்! உனக்கு ஜயமுண்டாகட்டும்" என்ருர் அவர்.

நீர் நிறைந்த தன் கண்களைத் துடைத்துக்கொண்டு நிமிர்ந்து பார்த்தான் மகேந்திரன். முங்கலீபுத்திரர் காணப்படவில்லை.

# 16

## மூன்று துர்த்தேவதைகள்

அப்பொழுதுதான் விமலை பாடலிபுத்திர நகரத்தின் எல்லைக்குள் கால் வைத்திருந்தாள். அங்கே வந்ததுமுதல் அவள் மனத்தில் ஒருவிதமான குழப்பம் ஏற்பட்டுவிட்டது. இன்னதென்று விவரிக்க முடியாத ஒருவித உணர்ச்சியினால் அவள் மனம் கட்டுக்கடங்காமல் தவித்துக்கொண் டிருந்தது. தான் ஏற்கனவே அசோகனுக்கு வாழ்த்துரை கூறிய அந்த வாக்கியங்கள் அடிக்கடி அவள் மனத்துள் எழுந்தன.

'நிபந்தனை நீக்கப்படாவிட்டால், நிபந்தனை விதித்தவனையே ஒழித்துவிட மாட்டேனா?' என்று முணுமுணுத்தாள் அவள்.

'என்ன மதியீனம், நிபந்தனை விதித்தவனை ஒழிப்பது அவ்வளவு சுலபமானதா? இங்கே வந்தபிறகல்லவோ தெரிகிறது, அது எவ்வளவு கடினமென்று. விஷயங்கள் நாம் எண்ணியது போல் நடக்கக் காணோம். ராஜமாதாவும் ஸம்புஷ்டாசாரியனும் நமக்குத் துணை இருக்கையில் இந்த அசோகன் எம்மாத்திரம் என்றல்லவோ நினைத்தேன். குமார வீதசோகன் அசோகனுக்கு அநுகூலமாக இருக்கிறான். அவன் மனத்திலே பகைமையை விதைக்காவிட்டால் அசோகனை யாராலாவது அசைக்கமுடியுமா? அல்லது அவனிடம் அண்டமுடியுமா? ஆழம் அறியாமல் காலை யிட்ட கதைபோல் நிபந்தனை விதித்தவனை ஒழிப்பேன் என்று சபதமும் செய்துவிட்டேன்.

'ஆனால் நிபந்தனை நீக்கப்படாவிட்டால்தானே......ராதாகுப்தனைப்போன்ற சிறந்த அறிவாளியும் கடமை தவறாதவனுமான மந்திரி, மெய்யன்புள்ள பணியாள் மோஹனன், சாக்ஷாத் லக்ஷ்மணன்போல் வாஞ்சை மிகுந்த தம்பி, அரசனே உயிர் என்று எண்ணும் குடிமக்கள். இவ்வளவு பேர்களுடைய கண்களிலும் மண்ணைத் தூவி, அந்த அசோகனை ஒழிப்பது என்றால் சாமானியமா? இது நம்மால் முடியக் கூடியதா?......

'இந்த விமலை என்றைக்காவது முன்வைத்த காலைப் பின் வைத்த துண்டா? இருக்கட்டும். ஒரே இரவில் கலிங்கநாட்டு

மணிமுடியைக் கைக்கொண்ட இந்த விமலேக்கு இது பிரமாதமா? ராஜமாதாவை ஒரு பொம்மைபோல் ஆட்டிவைக்க என்னுல் முடியாவிட்டால் கலிங்கநாட்டுச் சிம்மாசனத்தில் உட்கார்ந்து கொள்வேனு? ...... பாவம்! இந்த ஸம்புஷ்டாசாரியன் வெறும் வெறி பிடித்தவன். இவ்வளவு கஷ்டப்படுகிருனே; இதில் இந்தக் கிழப் பிக்ஷுவுக்கு என்ன லாபம்? தான் பெரிய ராஜகுரு என்கிற ஆடம்பரத்தைத் தவிர வேறு என்ன தெரியும்? அடா மொட்டை பிக்ஷு! ஒரு சிறு பெண்ணின் மாத்திரைக் கோலின்கீழ் பாம்பு, பெட்டிக்குள் அடங்குவதுபோல் நீ அடங்கிக் கிடக்கிருயே, அட மூடமே! மதமாம், குருவாம்! எல்லாம் ஒரே ஒரு வார்த்தைக்குள் அடங்கிவிடுகிறது. பணம், பதவி, அதிகாரம் இதில் ஏதாவது ஒன்றுதானே உன் மகாமந்திரம். எது எக்கேடு கெட்டாலும் சரி, நிபந்தனே நீக்கப்படாவிட்டால் ஆர்யாவர்த்தத்தின் பிரதம சக்கரவர்த்தி அசோகன் விமலேக்கு இரைதான்' என்று தனக்குத்தானே எண்ணி, எண்ணிப் பெருமூச் செறிந்துகொண்டிருந்தாள் அவள்.

* * *

அவள் பாடலிபுத்திரத்திற்கு வந்து இரண்டொரு நாட்களே ஆயின. இதற்குள்ளேயே ஸம்புஷ்டாசாரியன் புத்திமதி தேவி இவர்களே ஓரளவு வசப்படுத்திபிருந்தாள். அவர்களது ரகசிய சங்கத்தில் இவளுக்கு ஒரு முக்கியமான பதவி என்பதைச் சொல்ல வேண்டியதில்லே. இவள் அவர்கள் கூட்டத்தில் புகுந்தவுடனேயே ராஜமாதா, அசோகனே ஒழிக்க விரும்புகிருள் என்பது புலனுயிற்று. தன்னேப்போலவே அவளும் காரியம் கைகூடாமல் சிந்திப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தாள். இருந்தாலும் இருவரும் ஒரே லக்ஷயத்தை நோக்கிச் செல்கிருேம் என்பதில் ஒருவகை ஆனந்தம். ராஜமாதா புத்திமதி தேவியை வசப்படுத்துவது மிகவும் கடினம் என்று நினேத்திருந்தாள் அவள். ஆனுல் நெருங்கிப் பழகப்பழகப் புத்திமதி தேவியின் எரிகிற நெஞ்சம் வெகு சீக்கிரத்திலேயே கொழுந்துவிட்டெரிவதைக் கண்டதும் அவள் மனம் உவகையினுல் பூரித்தது. மிகவும் கடுமையாகச் சுடர்விட்டெரியும் அந்தப் பொருமைத் தீயை ஸம்புஷ்டாசாரியன் தன் சொற்களாகிய நெய் ஆகுதியினுல் பின்னும் வளர்த்துக்கொண்டிருந்தான். அந்த அக்கினிக்கு அசோகனது பலி ஒன்றுதான் குறைவு.

அதி சாமர்த்தியசாலியான விமலேக்குக்கூட அந்தக் கடைசி ஆகுதி எப்படிவந்து முடியும் என்பது விளங்கவில்லே. தர்மப்

பிரசாரத்திற்கென்று சொல்லி, அரண்மனை நந்தவனத்தின் ஒரு மூலையில் ஒரு பர்ணசாலையை அமைத்திருந்தாள் புத்திமதி தேவி. அந்தப் பவித்திரமான பர்ணசாலையில்தான் அசோகனை எப்படி ஒழிப்பது என்பதைப் பற்றிய விவாதங்கள் ஓய்ச்சல் ஒழிவில்லாமல் நடந்துகொண்டே இருக்கும். விமலை வந்தவுடன் எரிகிற தீயை ஏறத் தள்ளியதுபோல் ஆயிற்று. விமலை வருமுன் ஸம்புஷ்டாசாரியன், குமார வீதசோகன் இவர்களைத் தவிர வேறு ஒருவரும் உள்ளே நுழைய முடியாது. கள்ளங் கபடற்ற அசோகனுக்கு அந்தப் பர்ணகுடியிலே விஷம் நிறைந்திருக்கிறது என்றுவது, விஷ விருக்ஷம் முளைத்தெழுந்து நிற்கிறது என்றுவது எப்படித் தெரியும்? அவன் தனக்குப் பிறர் கொடுமை செய்ய நினைக்கக் கூடும் என்று எண்ணியதும் இல்லை. ஆனால் இந்த விஷத்தின் வேகம் கொஞ்சம் கொஞ்சமாக வேலைக்காரர்களுக்குள் பரவத் தொடங்கிற்று. ஆனால் புத்திமதி தேவியின் கொடுங்கோன்மைக்கு அஞ்சி, தெரிந்தும் தெரியாதவர்போல் அவர்கள் நடிக்கலானார்கள். விமலையை அந்தப் பழம் பெருச்சாளிகளான வேலையாட்கள் எடைபோட்டுப் பார்த்துவிட்டார்கள்.

* * *

சாயங்காலம் பட்சிகள் கூண்டில் அடையும் சமயம். அந்தத் தர்மப் பிரசாரத்துக்கு உறைவிடமான பர்ணகுடியிலே மூன்று துர்த்தேவதைகளும் ஒன்றுகூடி உட்கார்ந்திருந்தனர். புத்திமதி தேவியின் முகத்தில் வெறுப்பும் கோபமும் குடிகொண் டிருந்தன. விமலையோ தன் வழக்கப்படி மணவறையில் இருக்கும் மணப் பெண்போல் அதி அற்புதமாகத் தன்னை அலங்கரித்துக்கொண்டு வெகு கம்பீரமாக வீற்றிருந்தாள். ஆனால் கவலைதோய்ந்த அவள் முகம் அவள் தோல்வியைப் பறையடிப்பதுபோல் காணப் பட்டது. ஸம்புஷ்டாசாரியனோ நிராசையுடன் கூடிய முகத் தோற்றத்துடன் நிமிர்ந்து, சூனியமான வெறும் வெளியைப் பார்த்துக்கொண் டிருந்தான்.

நெடுநேரம் இந்த அமைதி நிலைத்திருக்கவில்லை. மெதுவான குரலில் மெள்ளப் பேசத் தொடங்கினாள் ராஜமாதா.

"அம்மா! விமலா! நீயோ அபார சாமர்த்தியசாலி. மகா வீரனான நரசிம்மனைக்கூட உதட்டின் ஒரே ஒரு அசைவினால் வீழ்த்திவிட்டாய். அதன் பயனாக ஒரு நொடியிலே கலிங்க நாட்டுக்கு அரசியாகிவிட்டாய். அப்படிப்பட்ட சிக்கலான

விஷயங்களை ஒரு நொடியிலே தீர்த்த உனக்கு இதைப்பற்றி ஒரு நல்ல யோசனை தோன்றவில்லையா? மிகவும் கூர்மையான உன் அறிவிற்கு இதற்குள் ஒரு சிறந்த யோசனை தோன்றியிருக்க வேண்டுமே?" என்று சற்றே நிறுத்தினுள் ராஜமாதா.

"விமலா தேவி! கலிங்கநாட்டு அரசி! சந்தர்ப்பம் நேர்ந்தால் உயிருக்கு உயிர் கொடுத்துத் தங்களைக் காக்க அறுபதினுயிரம் வீர பிக்ஷுக்கள் தயாராயிருக்கிருர்கள். உங்கள் உதடு அசைந்தால் உலகமே அசையும். உங்கள் வாயிலிருந்து ஒரு வார்த்தை எழ வேண்டியதுதான் தாமதம். காரியம் பழம் என்று நினைத்துக்கொள் ளுங்கள். என்னுடைய வீர பிக்ஷுக்களின் அதி அற்புதமான திறமையைக் கலிங்க விஜயத்தின்போதே கண்கூடாகக் கண்டிருக் கிறீர்கள். எப்படிப்பட்ட அசாத்தியமான காரியத்தையும் சாத் தியம் என்று செயல் முன்னும் சொல் பின்னுமாகச் செய்துகாட்டக் கூடியவர்கள், என் பிக்ஷுகணங்கள்! இவைகளைப்பற்றித் திரும்பச் சொல்லவேண்டிய அவசியமே இல்லை" என்று பெரு மிதத்துடன் சொல்லிவிட்டு, தன் வாக்குவன்மை எவ்வளவு தூரம் பலித்திருக்கிறது என்பதை அறிந்துகொள்ளும் பொருட்டு அவளைக் கடைக்கண்களாற் கடாக்ஷித்தான் பிக்ஷு சிரேஷ்டன்.

"ஆசாரியரே! தாங்கள் சொல்லுவதும் ஓரளவு ஒப்புக் கொள்ளக் கூடியதுதான். தங்களது பிக்ஷுக்கள் உங்கள் ஆக் ஞையை நிறைவேற்றுகிருர்கள். அது எதுவரையில் செல்லும் என்பதற்கும் ஓர் எல்லை உண்டல்லவா? மனிதர்களைப் பலவந்தப் படுத்தி, தீக்ஷை கொடுப்பது, வீடுவாசல்களைக் கொள்ளையிடுவது, பௌத்த தர்மத்தை வற்புறுத்துவது முதலிய கொடுமைகள் செய்வதில் உங்கள் சீடர்கள் கைதேர்ந்தவர்கள்தான். ஆனுல் அசோகனைப்போன்ற மிகப் பெரியவனும் குடிகளால் நேசிக்கப் படுகின்றவனுமான ஒரு சக்கரவர்த்தியை ஒழிப்பது மிகவும் சுலப மான செயல் அன்று. உங்களுடைய வீர பிக்ஷுக்கள் இதை ஒப்புக் கொள்வார்களா? ஒரு நாளும் இல்லை. எதற்கும் ஒரு எல்லையுண் டல்லவா?" என்று சற்று நிறுத்தினுள் விமலை.

"ஆசாரியரே! சாப்பாட்டு ராமர்களான உங்கள் பிக்ஷுக் களால் அசோகனைத் தொடவும் முடியாது. வேண்டுமானுல் அவர் கள் போஜனசாலையிலே புகுந்து அன்னத்தைத் துவம்ஸம் செய் யட்டும்; ஊருக்குள் புகுந்து குடிகளைத் துன்புறுத்தட்டும். இந்த

இரண்டு செயல்களைத் தவிர அவர்களால் வேறு எதையும் செய்ய இயலாது" என்று ஏளனச் சிரிப்புடன் கூறினாள் புத்திமதி தேவி.

*    *    *

விமலையின் முகம் ஆனந்த மிகுதியினால் மலர்ந்தது. தேவியின் இந்த வார்த்தைகளின் உதவியினால் அவளது மனப்பான்மை தெளிவாகத் தெரிந்தது. மேலும் அவளது பொறுமையைக் கிளப்பி இன்னும் என்ன சொல்கிறார் கேட்போம் என்ற ஆவலால் தூண்டப்பெற்றவளாய், "தேவீ! அசோகனைப்போன்ற நல்ல சக்கரவர்த்தியைக் கொல்வதனால் என்ன லாபம்? இன்று அவன் இந்த ஆரியாவர்த்தத்தின் உயிர் நிலையாக இருக்கிறான். குடிகள் உயிரும் தான் உடம்புமாக எண்ணியே அவன் ஒவ்வொரு சிறு செயலையும் ஆறஅமர யோசித்துச் செய்கிறான். குடிகளும் அவனைத் தெய்வமாக வழிபடுகிறார்கள். பகவான் கௌதம புத்தர் விதைத்த அந்தப் பௌத்த தர்மம் பரதகண்ட முழுவதும், ஏன் உலகம் முழுவதும் பரவவேண்டும் என்றே இரவும் பகலும் பாடு படுகிறான்.

"தன்னுடைய குடிகள் அறநெறியிலேயே நடக்கவேண்டு மென்று எப்போதும் நீதியையும் நியாயத்தையும் போதிக்கிறான். இவ்வளவு நற்குணம் உள்ளவனாகவும் இருந்து குடிகளைப் பாலித்து அவர்களது அன்பைப் பெற்று நாளுக்குநாள் புகழ்பெற்று வருகிற அவனை நீங்கள் கொல்ல விரும்புவது எதற்காக என்றுதான் எனக்குப் புரியவில்லை" என்றாள்.

இந்த வார்த்தைகள் செவியில் விழுந்தனவோ இல்லையோ புத்திமதி தேவி சீறியெழுந்தாள். "அடி! விமலா! நீ விஷயமே தெரியாத சிறுபெண் என்று நான் நினைக்கவில்லை. அசோகன் இன்று மகதநாட்டுச் சிம்மாஸனத்தில் உட்கார்ந்து விட்டான். ஆரியாவர்த்தத்தின் முதல் சக்கரவர்த்தியென்று வாழ்த்தொலி கேட்கிறது. அழியாப் பெரும் புகழை அவன் சுலபமாகவே பெற்றுவிட்டான். இவைகளே அவனை ஒழிப்பதற்குப் போது மான காரணங்கள். அவுன் சக்கரவர்த்தியென்று அழைக்கப் படுவதே குற்றந்தான். என்னைப்போன்ற பட்டமகிஷியின்—க்ஷத்திரியப் பெண்ணின் — புதல்வனைப் புறக்கணித்துவிட்டுக் கேவலம் ஒரு வேலைக்காரிக்குச் சமமான அந்தப் பார்ப்பனப் பெண் சுபத்ராங்கியின் மகன் சக்கரவர்த்தியாவதா! காய்கறிகள் தின்னப் பிறந்தவன் அரசாள்வதா! என் கண்மணி வீதசோகனது

முழு உரிமையையும் இவனல்லவா கவர்ந்துகொண்டான். இந்தக் குற்றத்திற்கு மரணம் போதுமான தண்டனையன்று! அற்பமானது தான்!" என்று படபடவென்று பொழிந்தாள் புத்திமதி. கோபத்தின் மிகுதியினால் அவள் முகம் செக்கச் செவேலென்று சிவந்தது. உதடுகள் படபடத்தன.

"அம்மணி! தாங்கள் என்மேல் கோபப்படக் கூடாது. குமார வீதசோகனுக்கு இதைப்பற்றி எள்ளளவும் சிந்தையிருப்பதாகத் தெரியவில்லை. மேலும் அவன் சக்கரவர்த்தியிடம் மிகுந்த அன்பு பாராட்டுவதாகவல்லவோ ஊரார் சொல்லுகிறார்கள். இருவரது மனத்திலும் தூய்மையான சகோதர வாஞ்சை நிறைந்திருக்கும்போது வீணில் வாதத்தைக் கிளப்பி அவர்களது வாஞ்சையைக் களங்கப்படுத்துவது உசிதம் என்று எனக்குத் தோன்றவில்லை" என்று விஷமத்தனமாகச் சொன்னாள் விமலை.

அடியுண்ட வேங்கைபோல் சீறியெழுந்தாள் புத்திமதி. "உனக்குத் தோன்றாவிட்டால் போகட்டும்; எனக்குத் தோன்றுகிறது. இந்த விஷயத்தைப்பற்றி எத்தனையோ முறை யோசித்துப் பார்த்துப் பிறகுதான் ஒரு விதமான முடிவுக்கு வந்திருக்கிறேன். உன்னைப்போன்ற உலகமறியாத முட்டாள்களிடம் காரணத்தையோ அபிப்பிராயத்தையோ கேட்டுக்கொள்ள நான் தயாராயில்லை.

"வீதசோகன் சின்னஞ்சிறு குழந்தை. நேற்றுப் பிறந்தவன். ராஜநீதியின் தத்துவம் அவனுக்கென்ன தெரியும். அன்பு என்றால் என்ன? சகோதர வாஞ்சை என்றால் என்ன என்றுகூட அவனுக்குத் தெரியாது. அசோகன் தன்னிடம் காட்டும் பரிவு வெறும் வெளிவேஷம் என்று அவனுக்கு எப்படித் தெரியும்? தன்னிடம் உண்மையிலேயே அன்பாயிருக்கிறான் என்று எண்ணி அவன் இழுத்தபடியெல்லாம் போகிறான். அசோகனை ஒழித்தாலொழிய இவன் ஒழுங்காக இருக்கமாட்டான்!" என்று ஆவேசம் வந்தவள்போல் கூவினாள்.

"குமார வீதசோகனை வழிக்குக் கொண்டுவருவது தர்ம குருவாகிய என்னுடைய கடமை. அசோகனிடம் அன்பு பாராட்டுவதும், அவனுடைய வெற்றியே தன்னுடைய ஆனந்தம் என்று திருப்தி அடைவதும் சரியல்ல என்று பலமுறை வீதசோகனுக்குச் சொல்லிக்கொண்டே வந்திருக்கிறேன். இப்படியே இன்

னும் கொஞ்சம் உருவேற்றினுல் வீதசோகனது மனம் அசோகனைக் கொல்லக்கூடிய நிலைமையை அடைந்துவிடும்" என்று மிகுந்த மிடுக்குடன் சொன்னுர் பிக்ஷுசிரேஷ்டர்.

"ஆசாரியரே! தங்களைப்போன்ற முனிவர்கள் அசோகனைக் கொன்று வீதசோகனுக்கு முடிசூட்டுவதென்ருல் இதற்கு வீத சோகன் ஒருநாளும் உடன்பட மாட்டார் என்றே தோன்றுகிறது" என்ருள் விமலை.

"விமலா! உனக்கு என்ன வந்துவிட்டது? ஏன் வாயில் வந்தபடி பிதற்றுகிருய்? இரண்டு நாழிகை நேரம் முன்னே பிறந்தான். தற்செயலாக நேர்ந்த இந்தச் சம்பவத்தைப் பயன்படுத்திக் கொண்டு என் பட்டமகிஷி பதவியை இழிவுபடுத்த வேண்டுமென்ற நோக்கத்துடனேதான் அசோகன் மகதநாட்டு அரியணையில் ஏறினுன். ஒன்றுக்கும் உதவாத அந்தச் சுபத்ராங்கியின் மகன் சக்கரவர்த்தியாக இருப்பதைப் பார்த்துக்கொண்டு சும்மாயிருப்பவள் இந்தப் புத்திமதி அல்ல. இரண்டு நாழிகை நேரம் முன்னே பிறந்தான் என்பதற்காக ஒருவன் சக்கரவர்த்தியாவது, மற்றவன் பணியாள்போல் பணியாற்றி நிற்பதா? இதென்ன நியாயம்? இதென்ன நீதி? இதற்கு நாங்கள் சொல்வதும் செய்வதும் அநியாயமா? இன்று அசோகன் சக்கரவர்த்தி ஆகிவிட்டான். ஐசுவரியத்திலும் சுகபோகங்களிலும் புரளுகிருன். அவனுடைய புகழ் உலகம் முழுவதும் பரவிவிட்டது. வாழ்த்தொலி எட்டுத் திசையிலும் எதிரொலிக்கிறது. என் கண்மணி வீதசோகன் அவனுக்குச் சமானம். அதே மௌரியகுல தீபம். பிந்துசாரனின் புதல்வன். இரண்டு நாழிகை பிந்திவிட்டான். இந்த ஒரு அற்ப விஷயத்திற்காக வாழ்க்கையிலே எவ்வளவு மாறுதல்கள்! இவனோ அவன் கீழே கைகட்டி நிற்கிருன். தெருவில் போகிற ஒரு சாதாரண மனிதனுக்கும் என் வீதசோகனுக்கும் என்ன வித்தியாசம்! இதைப்பற்றி யார் என்ன சொன்னுல் என்ன? நான் இந்த அநீதியைப் பொறுத்துக்கொண்டு சும்மாயிருக்க முடியாது. ஒருநாளும் முடியாது! எனக்கும் என் குழந்தைக்கும் நேர்ந்த இந்த அவமானம் அசோகனை உலகத்திலிருந்து ஒழித்தாலொழிய ஒருநாளும் தீராது! அவனுடைய புகழையும் பெருமையையும் பார்த்துப் பார்த்து அதே ஏக்கத்தினுல் நான் இறந்தே போய் விடுவேன். பிறகு அலகையாக மாறி அவனையே வட்டமிடுவேன்.

"பார்க்கப் பார்க்க என் நெஞ்சு குமுறுகிறது. என்ன நேர்ந்தாலும் சரி! எப்படிப்பட்ட மகா பாபம் வந்தாலும் சரி!

அவனை ஒழித்துவிட்டு, என் கண்மணி வீதசோகனை மகதநாட்டு மணிமுடியோடு பார்த்தால்தான் என் நெஞ்சு வேகும்! ஆனால் எனக்குத் துணை சேர்ந்திருப்பவர்களோ, வெறும் கோழைகள். பாவம், புண்ணியம் என்று கதைப்பவர்கள். அரசியல் விஷயங் களில் தலையிடுவதற்குச் சிறிதும் தகுதியற்றவர்கள். அரசியலில் இப்படியெல்லாம் மீனமேஷம் பார்த்துக்கொண் டிருந்தால் காரியம் பலிக்குமா! முதுகெலும்பில்லாத பிக்ஷுக் கூட்டங்கள், கோழையிலும் கோழையான தர்மகுரு, ஒரு அசட்டுச் சிறு பெண் இவர்களைத் துணை சேர்த்துக்கொண்டு மகதநாட்டுச் சிம்மாசனத்தைப்பற்றி யோசிப்பதே தகாது. ராக்ஷஸன்—சந்திர குப்தனுக்கு எதிராக நந்தர்களுக்கு ராக்ஷஸன் வாய்த்ததுபோல் ஒரு மதியூகியான மந்திரி—அல்லது சாணக்கியனைப்போன்ற ஒரு சாமானிய மனிதன் கிடைத்திருந்தால் இந்தப் புத்திமதி இதற்குள் என்ன செய்திருப்பாள் தெரியுமா? ஒரு க்ஷணத்திலே இந்த அசோகனை ஊதி எறிந்திருப்பாள்!" என்று ஒரே மூச்சில் ஆத்திரத் துடன் கூவினாள் புத்திமதி.

அவளது முகத் தோற்றத்தையும் ஆவேசத்தையும் கண்டு விமலை அயர்ந்து போய்விட்டாள். மெல்ல மெல்லச் சமாளித்துக் கொண்டு மிகவும் அன்பும் பணிவும் கலந்த குரலில், "அம்மணி! நான் இதுவரையில் பேசியது உண்மையென்று நினைக்கிறீர்கள்? அவைகளை ஏதோ விளையாட்டாகச் சொன்னேன். அதன் பொருட்டு என்னை மன்னிக்கவேண்டும். இனிமேல் தங்க ளுடைய காரியங்களில் மனப்பூர்வமாக ஒத்துழைக்கச் சித்தமா யிருக்கிறேன்" என்றாள்.

"ஏ! பேதைப் பெண்ணே! நீ உதவி செய்தாலும் சரி; இல்லாவிட்டாலும் சரி; இந்தக் கூட்டில் உயிர் உள்ளவரையில் மனத்தில் உரம் உள்ளவரையில், எதுவரையில் இந்தக் கண்களில் ஒளியுண்டோ அதுவரையில், இந்த அசோகனை ஒழிக்க வழி தேடியே தீருவேன்! இது என் ஆயுள் முழுவதும் செய்ய வேண்டிய, செய்துகொண்டே இருக்கவேண்டிய ஒரு செயல்! இதை உயிருள்ள மட்டும் விடுவதில்லை என்று சபதம் செய்தாகி விட்டது!" என்று இடிக்குரலில் கூறினாள் புத்திமதிதேவி.

இந்த வார்த்தைகளைக் கேட்டு ஆனந்த மிகுதியால் விமலையின் முகம் மலர்ந்தது. அதே சபதத்தைத் தானும் வாய்விட்டுச் சொல்லவேண்டும் என்கிற எண்ணத்துடன், "நான்..." என்று

தொடங்கினளோ இல்லையோ அதே சமயத்தில் இளங்கோ வீதசோகன் அங்கே தோன்றினன்.

மூவரும் திகைப்பூண்டை மிதித்தவர்கள்போல் ஆனார்கள். ஆனல் வீதசோகன் இவர்களது நிலைமையையும் முகத் தோற்றத்தையும் கவனியாதவனய், "அம்மா? இங்கிருந்து இரண்டு மைல் சுற்றுவட்டாரத்திற்குள் மிகப் பெரிய சிங்கம் வந்து உலவுகிறதாம். நகரத்திற்கு அருகில் இப்படிப்பட்ட பயங்கர மான பிராணி வந்திருப்பது நகர மக்களுக்கே கெடுதியல்லவா? அதை வேட்டையாடுவதன்பொருட்டு நானும் இன்னும் சில வீரர்களும் நாளை அருணேதயத்தில் புறப்படுகிறேம். சக்கரவர்த்தியும் எங்களுடன் வருவதாக வாக்களித்திருக்கிருர்.

"தவிர, சிங்கம் காணப்பட்ட இடத்தில் பகவான் கௌதம புத்தர் நெடுநாள் நிஷ்டையில் இருந்ததாகச் சொல்லப்படுகின்ற போதிவிருக்ஷமும் மண்டபமும் இருக்கின்றன. இதை ஒட்டி அந்தப் பவித்திரமான இடத்தையும் தரிசனம் செய்துகொண்டு வரலாமென்று அண்ண அபிப்பிராயப்படுகிருர். இதன்பொருட்டு ஆச்சாரியர், தாங்கள், இன்னும் யாராவது வருவதாக இருந்தால் தெரிய வேண்டுமென்று தங்களிடம் தெரிவிக்கச் சொன்னர். கலிங்கத்து இளங்கோ மகேந்திரனுக்குத் தெரிவிக்கும்பொருட்டுத் தாமே நேரில் சிறைச்சாலைக்குச் சென்றிருக்கிருர். அவரையும் உடனே உடனழைத்துச்செல்ல விரும்புகிருர். வரும் வழியில் இந்திரையிடமும் தேவி சுபத்ராங்கியிடமும் தெரிவித்துவிட்டேன். ஆனல் அவர்கள், 'இப்பொழுது வரமுடியாது' என்று சொல்லி விட்டார்கள். தங்களது அபிப்பிராயம் தெரிந்தால் நலம். நாளைக்கு எங்களுடன் வருகிறீர்களா?" என்றன்.

இதுவரையில் தாங்கள் பேசிக்கொண் டிருந்ததிலே எது வரையில் அவன் செவிகளில் விழுந்திருக்குமோ? அவன் எதைப் பற்றிக் கேட்டுவிடுவானே என்ற யோசனையில் இருந்த புத்தமதி தேவி இந்த விஷயத்தைக் கேட்டதும் ஏதோ பளுவு குறைந்தது போல் ஒரு பெருமூச்செறிந்தாள். ஸம்புஷ்டாசாரியன் உள்ளூற எதையோ நினைத்துச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான்.

இந்தச் சிங்கவேட்டையின் விஷயம் காதில் விழுந்ததோ இல்லையோ விமலையின் மூளை யந்திரம்போல் பளிச்சென்று சுழல ஆரம்பித்துவிட்டது. ஏதோ ஒரு புதிய பொருளைப் பெற்றது

போல் அவள் முகத்திலே ஆனந்தம் தோன்றிற்று. மிகுந்த பணிவுடன் முகத்திலே முறுவல் தோன்ற இளங்கோ வீதசோகனை நோக்கி, "அந்தச் சிங்கத்தைக் காவற்காரர்கள் எங்கே கண்டார்கள்?" என்றாள்.

"இந்த நகரத்திற்கு மேற்கே கபிலவஸ்து நகருக்குச் செல்லும் பாதையில் இரண்டுமைல் விஸ்தீரணத்துக்கு ஒரு அடர்ந்த காடு இருக்கிறதாம். அதனருகிலே இந்தச் சிங்கம் உலவுகிறதாம். அவன் இதற்குமுன் சிங்கத்தையே கண்டதில்லை. நடுநடுங்கிவிட்டான்" என்றான் வீதசோகன்.

"அவன் முதல் முறையாக எப்பொழுது கண்டான், பிறகு எப்பொழுது கண்டான்? தெரியுமா?"

"மூன்று நாட்களுக்கு முன் ஒருநாள் சாயங்காலம் முதல் முறை கண்டான். பிறகு மறுநாள் காலை ஒருமுறை கண்டான். ஆகையால் அந்தப் பிரதேசத்திற்குள்ளேயே எங்கேயாவதுதான் ஒளிந்திருக்கும். விமலாதேவி! தாங்கள் இவ்வளவு ஆவலாக இதை விசாரிக்கிறீர்களே? தங்களுக்கு வேட்டையில் மிகுந்த விருப்பம்போலும்?"

விமலை சிந்தையில் ஆழ்ந்திருந்தாள். வீதசோகனது கடைசி வார்த்தைகள் அவள் செவிகளில் விழவே இல்லை. இதுவரையில் நிராசையினால் வாடியிருந்த அவள் முகம் நம்பிக்கையினால் மலரத் தொடங்கிற்று. சற்று நேரம் பேசவில்லை. பிறகு சற்றே தெளிந்த குரலில், "ஆனால் சக்கரவர்த்தியும் நாளைக்கு வேட்டைக்கு வருகிறாரா?" என்றாள்.

தன் கேள்விக்கு விடையில்லாமல் மேலும் அவள் தன்னைக் கேள்வி கேட்பதைக் கண்டு வீதசோகன் ஆச்சரியமடைந்தான். பதில் சொல்லாமல் இருப்பது மரியாதை அல்லவென்று எண்ணிய வனாக, "அசோகன் ஒருநாள் ஒரு வார்த்தை சொல்லிவிட்டால் மாற்றக்கூடியவர் அல்ல" என்றான்.

விமலை விஷமச் சிரிப்புடன், "ஓஹோ? அப்படியானால் அசோகரது வேட்டை நாளை நடைபெறும்!" என்று மிகவும் மெல்லிய குரலில் சொன்னாள். இந்த வார்த்தைகளை வீதசோகன் கவனிக்கவில்லை. சிங்கத்தைப்பற்றிய எண்ணத்திலும், நாளைக் குத் தான் செய்யவேண்டிய செயலிலும் அவன் மனம் ஊன்றி

யிருந்தது. சற்று நேரம் யோசித்துவிட்டு, புத்திமதிதேவியை யும் ஸம்புஷ்டாசாரியரையும் பார்த்து, "நீங்கள் வருகிறீர்கள் அல்லவா?" என்றான்.

புத்திமதி மிகவும் அலட்சியமாக "சுபத்ராங்கி வரவில்லையே! நான் மட்டும் ஏன் வரவேண்டும்? நாங்கள் வரவில்லை. நீங்கள் மட்டும் போய் வாருங்கள்" என்றாள்.

குமார வீதசோகன் பர்ணசாலையைவிட்டுக் கிளம்பினான். அவன் நாலடி நடந்திருப்பானோ இல்லையோ, விமலை அப்பொழுதே கனவுகண்டு விழித்தவள்போல், 'வேட்டைக்குச் செல்கிறவன் வேட்டையாடப் படுவான்!' என்றாள். ஸம்புஷ்டாசாரியனும் ராஜமாதாவும் தன்னை ஆச்சரியத்துடன் பார்ப்பதையும் இளங்கோ வீதசோகன் அங்கே இல்லை என்பதையும் அவள் அப்பொழுதே கண்டவள்போல் திடுக்கிட்டாள்.

"இளங்கோ இங்கிருந்து எப்பொழுது போனார்?" என்று மிகுந்த படபடப்புடன் கேட்டாள் அவள்.

"பத்து விநாடி ஆகியிராது!"

"நாளைக்குப் போவதைப்பற்றி என்ன சொன்னீர்கள்?"

"வேட்டைக்குப் போகும்போது யாத்திரை செய்வது உசிதமல்ல என்று சொல்லிவிட்டேன்!"

"அடடா! நாளைக்கு நாம் கட்டாயம் போய்த் தீரவேண்டும்! உடனே, அவரைக் கூப்பிட்டு நாமும் உடன் வருவதாகத் தெரிவி யுங்கள். எதன்பொருட்டு இப்படிச் சொன்னேன் என்பது பிறகு தெரியவரும்."

"விஷயம் தெரியாமல் வாக்களிக்கவோ புறப்படவோ நான் தயாராக இல்லை" என்று அமர்த்தலாகக் கூறினாள் புத்திமதி தேவி.

இந்த வார்த்தைகளை விமலை செவியில் ஏற்கவே இல்லை. ஒன் றையும் சட்டை செய்யாதவளாகப் பரபரவென்று எழுந்து வெளியேபோய், வீதசோகனிடம் தேவி அவனை அழைப்பதாகத் தெரிவித்தாள்.

குமார வீதசோகன் சிந்தையில் ஆழ்ந்தவனாக மெல்ல மெல்ல நடந்துகொண்டிருந்தான். விமலை கூப்பிட்ட உடனே அவளைப் பின்தொடர்ந்து பர்ணசாலையில் நுழைந்தான்.

மகனைக் கண்டு ராஜமாதா பேசத் தொடங்குமுன்னரே விமலை, "இளவரசே! ஆசாரியரும் ராஜமாதாவும் தங்கள் முதல் எண்ணத்தை மாற்றித் தங்களுடன் வருவதாகத் தீர்மானித்து விட்டார்கள். வேட்டை என்றால் எனக்கு உயிர். அதிலும் மிருகேந்திரனைச் சக்கரவர்த்தியே வேட்டையாடப் போகிறார். இந்த அற்புதமான காட்சியைக் காணவேண்டுமென்று யாருக்குத் தான் ஆசையிராது. நானும் அவர்களுடன் வரவேண்டுமென்று விரும்புகிறேன். இதில் உங்களுக்கு ஒன்றும் ஆட்சேபம் இல்லையே?" என்று சொல்லியவளாய் மிகவும் அன்புகனிந்த பார்வையால் இளங்கோ வீதசோகனை ஏற இறங்கப் பார்த்தாள் விமலை.

"தங்களைப்போன்ற வீரப் பெண்மணிகள் கட்டாயம் வர வேண்டியதுதான். எனக்கு மிகவும் சந்தோஷம். சக்கரவர்த்தியும் ஆனந்தப்படுவார்" என்று சொல்லியவண்ணம் வெளியே சென்றான் வீதசோகன்.

அவன் பத்தடிகூடச் சென்றிருக்க மாட்டான். உரத்த குரலில் பைத்தியக்காரிபோல் 'கலகல' வென்று சிரிக்கத் தொடங்கினாள் விமலை. ராஜமாதா சற்றே பொறுத்தாள். அவளுடைய சிரிப்பு ஓயவில்லை. பிறகு மெதுவாக அவள் கைகளைப் பற்றி, "விமலா! உனக்கு என்ன வந்துவிட்டது? என்ன சங்கதி? சொல்லேன். இவ்வளவு சிரிப்பிற்கும் குதூகலத்திற்கும் என்ன காரணம்?" என்றாள்.

"நாளை அசோகனது வேட்டை அல்லவா?"

"ஆம்! அதில் உனக்கு இவ்வளவு ஆனந்தம் என்ன?"

"இந்த வேட்டையைப்பற்றி என்னைக் காட்டிலும் நீங்கள் பன்மடங்கு ஆனந்தப்படப் போகிறீர்கள்!"

"இதென்ன விமலா! சிங்கத்தை அசோகன் கொன்றால் இதில் எனக்கு என்ன ஆனந்தம்?"

"தேவி! என் வார்த்தைகளை நீங்கள் யாருமே கவனிக்க வில்லை. நாளை நடைபெறப்போவது சிங்கவேட்டை என்று

நான் சொல்லவில்லை. அசோகனது வேட்டை என்றல்லவா நான் சொன்னேன். நாளை சூரிய அஸ்தமனத்திற்குள் வேட்டையாடப் போகிறவர் வேட்டையாடப்படுவார். சிங்கத்தின் சவத்திற்குப் பதிலாக அவனது சவத்தையே அவனது ராஜபக்தியுள்ள குடிகள் காண்பார்கள்" என்றாள்.

இந்தத் தீர்க்கதரிசனம் புத்திமதிதேவியின் முகத்திலும் ஆசாரியனது முகத்திலும் பிரதிபலித்தது. விமலையின் திறமையைப் பற்றியோ அவர்களுக்குச் சந்தேகமே இல்லை. ஆகவே அவளைப் பின்பற்றுவதே உசிதம் என்று தோன்றிவிட்டது.

விமலை மிகவும் தணிந்த குரலில் பேசத்தொடங்கினாள். "மூன்று நாட்களுக்கு முன் என் பரிவாரங்களுடன் பாடலிபுரத்திற்குப் புறப்பட்டபொழுது குமாரர் சொல்லுகிற அதே இடத்தில் சிரமபரிகாரம் செய்துகொள்ளும்பொருட்டுத் தங்கினேன். தர்மாநுஜன் என்ற பெயருள்ள ஒரு பிக்ஷு என்னுடன் வந்துகொண்டிருந்தான். அங்கே நடுவில் ஒரு பெரிய புதர். இரண்டு பக்கங்களிலும் இரண்டு சிறிய புதர்கள். இவற்றில் ஒன்றைத் தர்மாநுஜன் என்கிற அவர் தமது ஜபங்களுக்காக உபயோகப்படுத்திக்கொண்டார். அந்தப் புதருக்குள் நுழைந்து உள்ளே சென்றால் ஒரு பெரிய குகை. அதன் வாய் அகன்றிருந்தது. அதையடுத்து அதை மூடத் தகுந்ததாக ஒரு பலகைக் கல், கீழே, அதன் புறத்தை ஒட்டிச் சார்த்திவைக்கப்பட்டிருந்தது.

"அந்தப் பக்கத்தில் ஒரு சிங்கம் நடமாடுகிறது என்ற செய்தியைக் கொணர்ந்தான் ஒரு பீல் ஜாதிச் சிறுவன். வெயில் தாழ்ந்துவிட்டது. சிங்கத்தைப்பற்றிய பயம் ஒருபுறம். சீக்கிரமே அவ்விடத்தைவிட்டுப் புறப்பட வேண்டுமென்ற எண்ணத்துடன் தர்மாநுஜரைக் கூப்பிட நினைத்தேன். மெதுவாகப் புதருக்குள் நுழைந்து குகையை அடைந்தேன். வாயிலில் நின்று எட்டிப் பார்த்தேன். அங்கே நான் கண்ட காட்சி என் நெஞ்சை உலுக்கிற்று. மார்பு படீர் படீர் என்று அடிக்க ஆரம்பித்தது. அங்கே தர்மாநுஜராவது அருடைய தண்ட கமண்டலங்களாவது காணப்படவில்லை. மிகப் பயங்கரமான ஒரு சிங்கம், தன் முன் கால்களைத் தூக்கி என்மேல் பாய்வதற்குச் சித்தமாக நின்றுகொண்டிருந்தது. சிங்கத்தின் கண்கள் என் கண்களைச் சந்தித்தன. நான் நடுங்கினேன். 'சரி இன்றுடன் முடிந்துவிட்டது நம் உலக வாழ்வு; சிங்கத்திற்குப் பலிதான்!' என்று தீர்மானித்துவிட்டேன். இருந்தாலும் ஒரு கை பார்த்துவிடுவது என்று தீர்மானித்தேன்.

அந்த எண்ணத்திலிருந்து ஓர் ஆவேசம் உண்டாயிற்று. ஒரே ஒரு க்ஷணம்; எப்படிச் செய்தேனே எனக்கே தெரியாது. பலமற்ற இந்தக் கைகளால் பலகைப்பாறையைப் புரட்டிக் குகையை மூடிவிட்டேன். எப்படி மூடினேன் என்பதை நினைத்துப் பார்த்தாலே ஆச்சரியமாக இருக்கிறது. ஒரு கணத்திலே சிங்கம் சிறைப்பட்டது. இடிமுழக்கம்போல் கர்ஜித்தது. அந்தக் கர்ஜனையின் வேகத்தில் பாறை நகர்ந்துவிடுமோ என்று பயந்து ஒரு மரத்தில் ஏறிக்கொண்டேன். ஆனால் பாறை மூடியது மூடியதுதான். உள்ளிருந்து திறக்க முடியாது. வெளியிலிருந்து யாராவது முயன்றால் திறக்கலாம். சற்று நேரம் அங்கேயே இருந்தேன். பிறகு என் பரிவாரங்கள் தங்கியிருந்த இடத்தை நோக்கிப் புறப்பட்டேன். தர்மாநுஜர் எங்கிருந்தோ வந்து பிரயாணத்திற்குத் தயாராக நின்றுகொண் டிருந்தார். தேவி! இளவரசர் சொன்ன இடம் அதேதான். எந்தச் சிங்கத்தை வேட்டையாடப் போகிறார்களோ அதைத்தான் நான் குகையில் சிறைப்படுத்தியிருக்கிறேன். நான் மூடிவைத்து நான்கு நாட்கள் ஆகிவிட்டன. ஆகாரம் இன்மையால் அது வெறிகொண் டிருக்கும். அசோகனைப்போன்ற இனிமையான உணவு கிடைப்பதாயிருந்தால் சும்மா விடுமா?'' என்றாள்.

ஆசாரியனும் புத்திமதிதேவியும் ஆச்சரியத்தினால் விரிந்த கண்களுடன் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.

விமலை மறுபடி, "தேவி! ஆசாரியரே! நாளைய வேட்டையைப்பற்றி உங்களுக்கு விளங்கிற்றா? என் ஆனந்தத்தின் கருத்து எதுவென்று தெரிந்ததா?'' என்று சற்றே நிறுத்தினாள்.

அவளது அபாரமான புத்தி சாதுர்யத்தையும் முன்யோசனையையும் பற்றி அவர்கள் புகழத் தொடங்கினார்கள். 'அடடா! எப்படிப்பட்ட அருமையான சந்தர்ப்பம். இதைக்கொண்டு எவ்வளவு சுலபமாக—சந்திரகுப்தன் நந்தர்களை ஒழித்ததுபோல்—அசோகனை ஒழித்துவிட்டு ஒன்றும் அறியாதவர்கள்போல் சும்மாயிருக்கலாம்! என் கண்மணி வீதசோகன் மகதநாட்டு மணிமுடி புனைந்து...என் கண்மணியை அந்தக் கோலத்தில் நான் கண்டு ஆசிகூறி...சரி; இது கிடக்கட்டும். நாளை அசோகன் இறந்தவுடன் எப்படி நடிக்கவேண்டும்? மிகவும் துயரை வெளிக்காட்டி ...அது கிடக்கட்டும். இப்போது முக்கியமான சங்கதியல்லவா

பாக்கி? சிங்கத்திடம் அசோகனை எப்படிக் கொண்டுசேர்ப்பது?' என்று பலவாறு எண்ணமிட்டவளாக உட்கார்ந்திருந்தாள் ராஜமாதா.

"தேவி! எப்படிப்பட்ட அருமையான பொன்போன்ற சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. ஒருவிதமான முயற்சியும் இல்லாமல் சுலபமாகச் சிங்கம் குகைக்குள் கிடைப்பதென்ன? அதே சமயத்தில் வனபாலன் வந்து செய்தி தெரிவித்திருக்கிறன். அதையொட்டி இளங்கோவும் சக்கரவர்த்தியும் வேட்டையாட விரும்பியிருக்கின்றனர். இவைகளெல்லாம் சொல்லிவைத்தாற் போலவும் கோவையாகவும் எவ்வளவு அழகாகவும் வந்து கூடி எதிர்நிற்கின்றன. ஆராய்ந்துபார்த்தால் அது சிங்கம் அல்ல; சாக்ஷாத் காலனே சிங்க ரூபமாக அசோகன் வரவுக்குக் காத்திருக்கிறன் என்பது தெரியவில்லையா? அசோகனை அங்கே சந்நிதிக்கு வரவழைக்க வனபாலனைத் தூதாக அனுப்பியிருக்கிறன். இப்பொழுது நாம் செய்யவேண்டியது, சக்கரவர்த்தியை அழைத்துப் போய்ச் சிங்கராஜனுடைய ஆஸ்தான மண்டபத்தில் சேர்த்துவிட வேண்டியதுதான்."

"விமலா! உனக்கு அதைப்பற்றிக் கவலையே வேண்டாம். அதை என் பொறுப்பில் விட்டுவிடு. சிங்கமோ குகைக்குள் இருக்கிறது. நான் இவர்களைச் சுற்றியடித்துக் களைப்படையச் செய்து, புதருகில் வரும்படி செய்துவிடுகிறேன். பிறகு சமயம் பார்த்து, அசோகனைக் குகையருகில் போகும்படி செய்துவிடு கிறேன்" என்றுள் ராஜமாதா.

"தேவி! இன்னொரு சிறு விஷயம். பிறர் உதவிக்கு வரமுடியாமலும் நிராயுதனுகவும் இருக்கும்படி செய்துவிட்டால் விஷயம் பின்னும் சுலபமாகிவிடும்" என்றுள் விமலை.

"அதற்கென்ன பிரமாதம். நான் கவனித்துக்கொண்டு அவனையே தூண்டிக் கல்லைத் திறக்கச் செய்துவிடுகிறேன். அவ்வளவுதான்! பசியால் வாடிக்கிடக்கும் அந்த வனவிலங்கு, ஒரே பாய்ச்சலில்..."

"இப்படிச் செய்வதில் உங்களுக்கும் ஆபத்தல்லவா?" என்றுர் ஸம்புஷ்டாசாரியர்.

"ஆசாரிய! என் உயிரைப்பற்றி எனக்குத் தெரியும். அவன் திறக்கும் வரையில் நின்று வேடிக்கை பார்ப்பேனென்று

நினைக்கிறீர்களா? அசோகனது கடைசிக் கூச்சலைக் கேட்டுவிட்டுப் பின் சாவதானமாக வருவேன்!"

"தேவி! அவருடன் நிழல்போல் வருகிறுனே மெய்காப்பாளன்; அவனைப்பற்றி என்ன?" என்ருர் ஆசாரியர்.

"ஓஹோ! அந்த மோகனனு? அவனுக்கு ஏற்ற மருந்து தேவியாரிடம் இருக்கிறது. வனமாலை என்று ஒரு பணிப்பெண் இருக்கிருளே, அவள் கடைக்கண் பணித்தாற் போதும். மோகனனை நெடுந்தூரம் அனுப்பிவிடலாம்" என்ருள்.

"நல்ல மருந்துதான்! அவளே என்னிடம் மோகனனை மணந்துகொள்ள அனுமதி கேட்டாள். நாளைக் கட்டாயம் வருவாள்" என்ருள் புத்திமதிதேவி.

"அப்படியானுல் எல்லாம் இனிது முடியும்! நல்ல வேட்டைதான்" என்ருள் விமலை.

"இந்த வார்த்தையின் கருத்து மூவருக்கும் தெரிந்திருந்தனுல் மூவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு பயங்கரமாகச் சிரித்தனர். யாராவது வேற்று மனிதர்கள் இந்தப் பேய்ச் சிரிப்பின் ஒலியைக் கேட்டிருந்தால் நடுநடுங்கிப் போயிருப்பார்கள்.

## 17

## வேட்டை

விடியற்காலை. மெல்லிய காற்று நறுமணத்தைச் சுமந்து வந்து, போகும் இடமெல்லாம் இறைத்துக்கொண் டிருந்தது. கதிரவன், தன் பொன்மயமான கரங்களை நீட்டி, உலகிலுள்ள சகல சீவராசிகளையும் செல்வமாகத் தொட்டுத் தடவி எழுப்பிக் கொண்டிருந்தான். அந்தப் பாலசூரியனது கிரணங்களினால் அந்த அரண்மனை முழுவதும் புதுமையான அழகும் பொலிவும் பெற்றுக் காணப்பெற்றது. பட்சிக் கூட்டங்கள் கலகலவென்ற மங்கள கீதத்தினால் தங்கள் குதூகலத்தை வெளிப்படுத்திக்கொண் டிருந்தன. பூமிதேவியைச் சூழ்ந்திருந்த இருள் போர்வை, மெல்ல மெல்ல நழுவிக்கொண் டிருந்தது. சலசலவென்று ஓடிக்கொண் டிருக்கும் சிறிய நீரோடைகளின் மெல்லொலியும் மரங்களும் பூஞ்செடிகளும் காற்றினால் அலைக்கப்பெறும் ஓசையும் ஒன்று பட்டு இனிய கீதம்போல் அந்த வனப்பிரதேச முழுவதும் நிறைந் திருந்தது.

இயற்கை அரசியின் ஒப்புயர்வற்ற சௌந்தரியத்திலே ஈடு பட்டவனாக மெய்ம்மறந்திருந்தான் ஸம்ராட் அசோகன். வேட்டைக்கு உரிய உடைகளுடனும் படைக்கலங்களுடனும் அவன் அம்பாரியின் மேல் அமர்ந்திருந்த காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான் போலி இளவரசனான மகேந்திரன். அவன் ஏறி யிருந்த அழகிய பெண் யானை கம்பீரமாக அசைந்து அசைந்து நடந்துகொண் டிருந்தது. அதை அடுத்த மற்றொரு யானையின்மீது தான் குமார வீதசோகனும் இளங்கோ மகேந்திரனும் அமர்ந்திருந் தனர். அந்தக் காலைக் காட்சியிலே ஈடுபட்டிருந்த மூவரும் அந்த வனத்தின் பேரெழிலைப் பற்றியும், காலை இள வெயிலில் அது புதிய ஒளியும் உயிரும் பெற்றிருப்பதைப் பற்றியும் வியப்புடன் பேசிக் கொண்டிருந்தனர்.

வானை அளாவி நிற்கும் உயர் மரங்களும் புதர்களும் செறிந்த அந்த வனம் பலமுறை வந்து பழகியிருக்கும் அசோகனுக்கே அன்று புதிய சோபையுடன் திகழ்வதுபோல் தோன்றிற்று. அன்று வழக்கம்போல் வேட்டைக்காரர்களும் சிப்பந்திகளும்

அதிகம் இல்லே. மிகவும் அழகாக அலங்கரிக்கப்பட்ட வெள்ளே யானையின்மேல் ராஜமாதா புத்திமதிதேவி வெற்றித் தெய்வத்தின் பிம்பம்போல், முகத்திலே பெருமிதம் பொங்க வீற்றிருந்தாள். அதே அம்பாரியில் அவளே அடுத்து ஸம்புஷ்டாசாரியனும் விமலா தேவியும் உட்கார்ந்து, ஆனந்தமாகப் பேசிக்கொண் டிருந்தார்கள். குமார வீதசோகனது ஆட்கள் தங்கள் தங்கள் தரத்திற்கு ஏற்ப உடைதரித்துப் பழைய வேட்டை நினைவுகளைப்பற்றிப் பேசியவர் களாக நடந்து வந்துகொண் டிருந்தனர்.

அசோகனது மெய்காப்பாளன் மோகனன், அழகிய வெண் புரவியின் கடிவாளத்தைப் பற்றி நடத்தியவனுக மெல்ல மெல்ல நடந்து வந்துகொண் டிருந்தான். அவனே நிறுத்தி அவ னுடன் பேசவேண்டும் என்னும் ஆவலுடன் ஒரு பணிப்பெண் ஓட்டமும் நடையுமாகத் தன் குதிரையை வெருட்டியவளாக அவனே நெருங்கி வந்துகொண் டிருந்தாள். அவன் மிகவும் மெதுவாக நடப்பதையும், இந்தப் பணிப்பெண் அவனே நெருங்கிப் பேச வேண்டும் என்ற எண்ணத்துடன் பின் தொடர்வதையும் ராஜமாதாவின் கழுகுக் கண்கள் ஒரு நொடியில் கண்டுபிடித்து விட்டன. அவளும் கருத்துடன் கூடிய ஒரு பார்வையைப் புத்திமதிதேவியின்மேல் வீசிவிட்டு, கீழே விழுந்த ஏதோ ஒரு பொருளேத் தேடுவதுபோல் நடித்து, சற்றே பொழுதைப் போக்கினுள். யானேயும் மற்றப் பணிப்பெண்களும் அவளுக்காகக் காத்திருப்பார்களா? அவள் இழந்த பொருளேத் தேடி முடியுமுன் அவர்கள் நெடுந்தூரம் முன்னேறிச் சென்றுவிட்டனர்.

அவள் இதுவரை நடித்த நாடகத்தை நிறுத்தி, மெதுவாகக் குதிரையில் ஏறுமுன் மோகனன் அவளருகே வந்து நின்றுன். இதுவரையில் அடிமேல் அடிவைத்து நடந்த குதிரைகள் இப் பொழுது நின்றுவிட்டன. கூட வந்தவர்களோ தங்களேக் கடந்து போய்விட்டார்கள். 'அருகேயுள்ள இந்தச் சிறு குன்றிலே சற்று நேரம் தங்கலாமே' என்று இருவரும் நினைத்தார்கள். அழகிய அந்தப் பசுங்குன்று தங்களுக்கென்றே ஏற்பட்ட ஓர் இன்ப உலகமாகத் தோன்றிற்று அவர்கள் கண்களுக்கு.

"வனமாலே! இன்று சூரியோதயமும், இந்த வேட்டைக்குப் புறப்பட்டதும் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறது, பார்த்தாயா? இந்தக் காலே நேரம் முழுவதும் ஆனந்தமாக உன்னுடன் இருப் பதைவிட்டு எந்த மடையனுக்குத்தான் வேட்டை ரஸிக்கும்!"

என்ருன் மோகனன். காதலால் உருகிக் கூவும் மாடப்புருவின் குரல்போல் இனிமையாக இருந்தது அவன் பேச்சு.

அவள் வாய்திறந்து பதில் சொல்லவில்லை. நீண்ட கயல் விழிகள் அவன் கேள்விகளுக்குப் பதில் அளித்துவிட்டன. அவன் தன் குதிரையையும் அவள் குதிரையையும் ஒன்ருகப் பிணைத்து அந்த மரத்தடியிலே நிறுத்தினுன்.

"எப்படியாவது ஒரு காரணம் கற்பித்து என்னை வந்து பிடித்துவிடுவாய் என்று தெரியும்" என்று மிகுந்த உற்சாகத்துடன் கூறினுள் அவள்.

"ஆமாம்! நீயும் ஏதாவது சந்தர்ப்பத்தை உண்டுபண்ணிக் கொண்டு என்னைச் சந்திப்பாய் என்று எனக்கும் தெரியும்" என்று சொல்லியவனுகச் சுற்றிலும் ஒரு முறை தன் கண்களை ஓட்டிவிட்டு, அவள் மலர்க்கரங்களைப் பற்றினுன் மோகனன்.

"உஸ்! தள்ளி நில்!" என்று புருவத்தை நெரித்துக் கோபிப்பதுபோல் நடித்தாள் வனமாலை.

"சமூகத்தில் இப்படிக் கோபிப்பது நியாயமில்லை. மந்திர பூர்வமாக உன் கைகளைப் பற்றவேண்டிய நாள் நெடுந்தூரம் இல்லை. இது ஒரு ஒத்திகையாக இருக்கட்டுமே, இந்த வன தேவியின் சந்நிதியில், என்று பற்றிப் பார்த்தேன்" என்று முகத்திலே முறுவல்தோன்றச் சொன்னுன் மோகனன். இருவரும் சற்றே நடந்து அந்தப் பசுங்குன்றின் அடியில் உட்கார்ந்தனர்.

உட்காரும் முன்பே, வனமாலை மிகவும் மிருதுவான குரலில் நம்முடைய நாடகமும் ஒத்திகையும் நிற்கட்டும். இதைவிட முக்கியமான விஷயம்..." என்று சற்றே நிறுத்தினுள் அவள்.

"ஓஹோ! அப்படியா? நானும் அதேபோல் உன்னிடம் சொல்லவேண்டிய விஷயமும் உண்டு" என்ருன் அவன்.

"நீசொல்லுவது நம்மைப்பற்றியது; நான் சொல்லப் போவது அதுவல்ல!" என்ருள்.

"அப்படியா? அதென்ன விஷயம்? யாரைப்பற்றியது?" என்று மிகுந்த ஆவலுடன் கேட்டான் அவன்.

"நீ முதலில் சொல்; நான் பிறகு சொல்லுகிறேன்!"

"நீதான் முதலிலேயே சொல்லிவிட்டாயே, அது நம்மைப் பற்றித்தான் இருக்கும் என்று. ஸம்ராட் உன்னை மணந்து கொள்ள உத்தரவு கொடுத்துவிட்டார்!"

"ஐயையோ! ஏமாற்றிவிட்டேனே! ராஜமாதா எனக்கும் உத்தரவு கொடுத்துவிட்டார்!"

"இதைப் பேசவா இவ்வளவு அலைக்கழித்தாய்? நான் போய்க் கோஷ்டியோடு சேர்ந்துகொள்ளுகிறேன். மறுபடி நீ எப்பொழுது என்னைச் சந்திக்க முடியும்? வேட்டைக்கென்று குறிப்பிட்ட இடம் போய்ச் சேர்ந்துவிட்டால் பகல் முழுவதும் ஓய்வு இராது. மூன்றும் ஜாமத்தில் வேட்டை முடிந்தபின் சிரமபரிகாரம் செய்து கொள்வதற்கும், புத்தபகவானது பாததூளியால் பவித்திரமான தபோவனத்தைத் தரிசனம் செய்வதற்குந்தான் நேரம் இருக்கும். ஸம்ராட் புதருக்குள் புகுந்து அந்தப் பிரதேசத்திற்குப் போய் விடுவார். அங்கே போய்விட்டால் திரும்ப மனமே வராது. அவ்வளவு அற்புதமான தபோவனம் அது. குறைந்தது இரண்டு ஜாமமாவது அங்கே தங்குவார். அப்பொழுது நாம் கங்கையில் இறங்கி ஸ்நானம் செய்யலாம். பூக்களைக் கொய்து, மாலைகட்டி, உன் கழுத்தில் இட்டு, 'இந்த வனமாலை உயர்வா? அந்த வனமாலை உயர்வா?' என்று பார்க்கலாம்" என்று மோகனன் சொல்லிவரக் குதிரைகளை நெருங்கினர்கள் இருவரும்.

வெயில் கடுமையாவதற்கு முன்னமே இருவரும் மற்றவர்களுடன் போய்ச் சேர்ந்துகொண்டார்கள். தீர்த்தயாத்திரையின் பொருட்டு வந்திருந்தவர்களும் குறிப்பிட்ட இடத்திற்கு வந்து சேர்ந்துவிட்டார்கள். ஒரு நொடிக்குள் விமலை அந்தப் புதருக்குள் நுழைந்து, தான் வைத்த கல் சரியாக இருக்கிறதா என்பதைத் தெரிந்துகொண்டு வெளியே வந்தாள். ராஜமாதாவை நெருங்கி அவள் செவிகளுள் ஏதோ முணுமுணுத்தாள்.

நடக்கப்போகிற நிகழ்ச்சிகளைப்பற்றி மனத்துள் கற்பனை செய்து, ஒத்திகை பார்த்துக்கொண் டிருந்தாள் ராஜமாதா. ஸம்புஷ்டாசாரியனும், ஈமக்கடன்களில் ஜபிப்பதற்கு உரிய மந்திரங்களை நினைவு மூட்டிக்கொண்டான். பகற்பொழுது ஏறிக் கொண்டே வந்தது. அரணியம் முழுவதும் தேடியாயிற்று. சிங்கத்தைக் காணேம்; அதன் அடிச்சுவடுகூடக் காணப்பட வில்லை.

"வேட்டையை நிறுத்திவிடுவோம்! சிங்கமும் இல்லை, புலியும் இல்லை!" என்று சலிப்புடன் கூறியவனாகப் புதரை நோக்கி நடந்தான் ஸம்ராட் அசோகன். அவனைப் பின்தொடர்ந்து குமார வீதசோகனும் இளங்கோவும் வந்தனர். களைப்படைந்த சிப்பந்திகளுக்குள் சிலர் சற்று எட்டியே நின்றுவிட்டனர். மோகனன் அங்கே வந்ததும் அவன் அருகே ஓடிவந்தாள் வனமாலை.

மெல்ல மெல்ல ஓர் ஓரமாக வந்து, அவனைத் தன்னுடன் வரும்படி அழைத்தாள் அவள். பிறர் அறியாவண்ணம் மெல்ல அக்கூட்டத்திலிருந்து நழுவினான் அவன்.

தன் அரசனது உயிருக்கு ஆபத்தான நிலையில் தன்னுடைய கடமையையும் மறந்து அந்த வனமாலையுடன் சென்றான் மோகனன். விஷயம் அவனுக்குத் தெரியாதா, என்ன? ராஜமாதாவின் நெஞ்சு படபடவென்று அடித்துக்கொண்டது. இன்னதென்று விவரிக்க இயலாத ஒரு நிலையில் தவிக்கலானாள் அவள். அசோகன் எப்பொழுது தொலைவான் என்று யாரோ அவள் காதுகளுள் புகுந்து சொல்வதுபோல் தோன்றிற்று. குமார வீதசோகனோ வெகு சீக்கிரம் ஆகாரத்தை முடித்துக்கொண்டு, "மறுபடியும் தேடிச் சிங்கத்தைக் கண்டுபிடித்து விடுகிறேன்" என்று கிளம்பினான். சக்கரவர்த்தி, தம் புதிய நண்பனுடன் இந்திரபுரத்தை ஒட்டிய வனப்பிரதேசங்களையும் மகதநாட்டு இயற்கை அற்புதங்களையும் சீர்தூக்கிப் பார்த்து வர்ணித்துக் கொண்டிருந்தான்.

அந்தப் போலி இளவரசனான மகேந்திரன் எதிலேயோ ஆழ்ந்த மனத்துடன் கேட்டுக்கொண்டே வந்தான். அசோகனது முகம் அந்த இயற்கை அழகைச் சொல்லுவதனால் ஏற்பட்ட ஆனந்தத்தினால் மலர்ந்திருந்தது. 'வேட்டையில் களைத்திருக்க வேண்டிய முகத்திலேதான் என்ன ஆனந்தம்!' என்று பற்களைக் கடித்தாள் விமலை.

திடீரென்று இளங்கோவின்மேல் பதிந்தன அந்தக் கண்கள். 'இவன்! இவன்! எங்கேயோ பார்த்த சாயலாக அல்லவா தோன்றுகிறான்' என்று எண்ணமிடலானாள் அவள். சந்தேகக் கண்களுடன் அவனை விழுங்கிவிடுவதுபோல் பார்த்தாள்.

'என் தோழி என்னை ஏன் இப்படி வெறித்துப் பார்க்க வேண்டும்? ஒருவேளை என் நிலைமையைத் தெரிந்துகொண்டிருப்பாளோ?' என்று தயங்கினாள், ராஜ வேஷதாரியான ரோகிணி.

ஆனால் அவளுடைய பார்வையின் கருத்து வேறுவிதமாக இருக்குமோ என்ற சந்தேகமும் கூடவே எழுந்தது. இருந்தாலும் நெடுநேரம் அவள் தன்னைப் பார்க்கும்படி விடுவது அபாயம் என்று கருதுபவள்போல் தலையணியைச் சரிசெய்துகொள்வதாக நடித்து, மறுபுறம் திரும்பி உட்காந்துகொண்டாள் அவள்.

தன்னுடைய பார்வையினாலேயே யுவராஜன் திரும்பி உட்கார்ந்துகொண்டான் என்னும் விஷயம் அவளுக்குப் புரிந்துவிட்டது. 'இதே சிங்கம் ஒரே தடவையில் இருவரையுமே ஒழித்துவிட்டால்...?' என்று எண்ணியபொழுது அவள் முகம் சந்தோஷத்தினால் மலர்ந்தது. 'ஒரே கல்லினால் இரண்டு பட்சிகள்' என்று முணுமுணுத்தாள் அவள்.

'மற்றவர்கள் எல்லோரும் போய்விட்டார்களா? அசோகன் தனித்திருக்கிறானா?' என்பவற்றைக் கவனித்துக்கொண்டு, மெல்ல மெல்ல அசோகனை நெருங்கிவந்தாள் ராஜமாதா. அசோகனைக் குகைக்கு அழைத்துச் செல்லவேண்டும் என்று நினைத்தபொழுது மகா பாதகியாகிய அவள் நெஞ்சமும் சற்றே சலித்தது. ஆனாலும் விமலை, ஸம்புஷ்டாசாரியன் இவர்களுடைய பார்வை தன் மீது இருக்கிறது என்கிற தைரியத்தினால் அசோகனை நோக்கிச் செல்லலானாள்.

"அப்பா, அசோகா! இந்தப் புதரை அடுத்த, மற்றப் புதர்களையும் பார்க்க வேண்டுமென்று எனக்கு மிகவும் ஆவல்!" என்றாள்.

உடனே மிகுந்த வணக்கத்தோடு எழுந்தான் அசோகன். "இதுதானா பிரமாதம்! வேட்டைக்குத்தானே வந்திருக்கிறோம். இதோ வருகிறேன் அம்மா!" என்று சொல்லியவனாக யுவராஜனைத் திரும்பிப் பார்த்து, "மகேந்திரா! நீ இங்கேயே இரு! நான் இதோ ஒரு நொடியில் சிங்கத்தைக் கண்டுபிடித்துக் கொன்றுவிட்டு வருகிறேன்" என்று சொல்லியவனாக நடந்தான் அசோகன்.

அவன் புதருக்குள் நுழைந்தானோ இல்லையோ, ஆவலினால் துடிதுடித்துக்கொண்டிருந்த விமலை, "இதோ அசோகனே வேட்டையாகப்போகிறான்" என்று உரத்த குரலில் கூவிவிட்டாள். இந்த நெருக்கடியான சமயத்தில் இளங்கோ மகேந்திரன் அங்கே இருக்கிறான் என்கிற விஷயம் அவளுக்கு மறந்தே போயிற்று. 'நிபந்தனை விதித்தவனே ஒழிந்து போகிறான்!' என்று பேய்ச்சிரிப்புச் சிரித்தாள் மீண்டும்.

போலி யுவராஜன் திடுக்கிட்டான். தன் இதயத்தை யாரோ கசக்கிப் பிழிவதுபோல் தோன்றிற்று. 'இந்த வார்த்தைகளுள் மறைந்திருக்கும் பொருள்தான் என்ன?' என்று கலங்கத் தொடங்கியது அந்தப் பெண்மனம். ஆனால் ஏதோ தவறான விஷயம் என்றுமட்டும் ஒரு சிறு குரல் தெளிவற்றுக் கேட்டது.

அசோகனுடன் கிழக்குப் புதருக்குள் நுழைந்த ராஜமாதா இங்கும் அங்கும் பார்ப்பதுபோல் நடித்தாள். பிறகு அப்பொழுதே அந்தக் குகையைக் கண்டுபிடித்தவள்போல், ஆச்சரியத்துடன் விழித்துப் பார்த்து, "இதென்ன இது!" என்றாள்.

"ஏதாவது சாதுக்கள் வசிக்கும் குகையாக இருக்கலாம். கதவுக்குப் பதில் கல் பலகையை மூடியிருக்கிறார்கள்போல் இருக்கிறது" என்றான் அசோகன்.

"ஓஹோ! இந்தக் குகையா? ஒருவேளை பகவான் ததாகதர் இதற்குள்ளும் ஒருநாள் தியானம் செய்திருப்பார். எனக்கு உள்ளே போய்ப் பார்க்கலாமென்று தோன்றுகிறது! அடடா! எவ்வளவு பவித்திரமான இடம்!" என்று பக்தி ததும்பும் குரலில் சொன்னாள் ராஜமாதா.

"பகவான் கௌதமபுத்தர் அமர்ந்து தியானம் செய்திருக்கலாம். ஆனால் உள்ளே புகுந்து பார்ப்பதற்கு என்ன இருக்கப் போகிறது."

"என்ன அப்படிச் சொல்லுகிறாய். அந்தப் பவித்திரமான இடத்தைக் கண்களால் தரிசிக்க வேண்டாமா?"

அசோகன் பரிகாசக் குரலில், "அம்மா! பவித்திரமான தன்மை கண்களுக்குப் புலப்படுமா, என்ன?" என்றான்.

"கண்களால் பார்க்க முடியாவிட்டாலும், பவித்திரமான அந்தப் பூமியின் தூளியைத் தலையிலாவது தரித்துக்கொள்ளலாமல்லவா? உன்னைப்போன்ற வீரனுக்கு இந்தக் கற்கதவைப் புரட்டுவதுதானா ஒரு பிரமாதம்!"

அன்பும் கனிவும் கலந்த குரலில், "அம்மா! உங்களுக்குப் பார்க்கவேண்டும் என்ற ஆவல் இருந்தால் நான் கட்டாயம் திறந்துவிடுகிறேன்" என்று சொல்லியவனாக அந்தக் கல்லைப் புரட்ட முயன்றான் அசோகன்.

மறு விநாடி, கல்லைக் கீழே தள்ளிவிடுவான் என்று தோன்றிய உடனே தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும் என்ற ஆசையினால் அந்தப் புதரைத் தாண்டி வெளியே ஓடினாள் ராஜ மாதா புத்திமதி தேவி.

அவள் புதரின் வெளிப்புறம் காலை வைத்ததுதான் தாமதம். அந்த வனப்பிரதேசம் முழுமையும் எதிரொலிக்கும்படி மிகவும் கம்பீரமாக ஒரு கர்ஜனை கேட்டது. குகையின் வாயில் திறக்கப் பட்டு, அந்தக் கொடிய வனவிலங்கு அசோகன்மேல் பாய்வதைக் கண்டாள் அவள். ஓடமுடியாமல் கால்கள் தள்ளாடின. அவள் ஓட்டத்தின் வேகத்தையும் முகத்தோற்றத்தையும் கண்ட விமலையும் ஸம்புஷ்டாசாரியனும் கூடவே ஓடத் தொடங் கினார்கள்.

போலி ராஜகுமாரனை ரோகிணி அசோகன் புதரில் நுழையும் பொழுதிலிருந்தே பார்த்துக்கொண்டுதான் இருந்தாள். ஆனால் உள்ளே நடந்தவைகள் அவளுக்கு என்ன தெரியும்? திடீரென்று பாறை புரண்ட ஓசையும், அதையடுத்துப் புத்திமதிதேவியின் ஓட்டமும், சிங்க கர்ஜனையும், விமலையும் ஸம்புஷ்டாச்சாரியனும் ஓடுவதும் தெரிய, இன்னதென்று விளங்காதவளாக அவள் புதருக்குள் புகுந்தாள்.

ஸம்ராட் அசோகன்!—தோல்வியே இன்னதென்று அறியாத அந்த வெற்றிவீரன்!—தரையிலே கிடக்க, சிங்கம் அவன்மேல் பாயப் பதுங்கி நின்றது. அந்த நிலையிலும், "நில்! நில்! இங்கே வராதே!" என்ற வார்த்தைகள் உடைந்த சொற்களாக அவன் வாயினின்றும் வெளிவந்தன.

"இந்தமாதிரி சந்தர்ப்பத்தில் உதவாமல் நான் இருந்தென்ன, போயென்ன? உயிரைக் கொடுத்தாவது நண்பனைக் காப்பாற்ற வேண்டியதுதான் க்ஷத்திரிய தர்மம். உங்களைவிட என் உயிர் அருமையா? தங்கள் உயிர் எனக்குமட்டும் அல்ல. இந்தப் பவித்திரமான பாரதபூமிக்கே விலையுயர்ந்த செல்வம்! உங்களுக் காக நான் யமனுடன்கூடப் போர்செய்வேன்! கேவலம் இந்த வனவிலங்கு ஒரு பொருட்டா?" என்று சொல்லிக்கொண்டே அவனை நெருங்கினான் இளங்கோ?"

"ஓடிப்போ! ஓடிப்போ!" என்று அசோகன் உரத்த குரலில் கூச்சலிட்டுக்கொண்டே இருக்கையில் அவனை முழுவதும் மறைத் தவளாகச் சிங்கத்திற்கும் அவனுக்கும் இடையில் வந்தாள் அவள்.

'இந்த வனராஜன் என்னைத் தின்னுமுன் நீங்கள் தப்பிவிட லாம். அப்படித் தப்பினால் உங்களுக்காக உயிரைக் கொடுத்த இந்தப் பேதையை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். கலிங்க நாட்டுப் பழைய ராஜகுலத்தாருடைய ரத்தத்தை வீணாகச் சிந்து வானேன். உண்மையான யுவராஜனைக் கண்டுபிடித்து அவனுக்கு ஒருவிதமான தீங்கும் வராமல் முடி சூட்டவேண்டியது உங்கள் கடமை. இதுதான் என்னுடைய கடைசி வேண்டுகோள்' என்று சொல்ல நினைத்தாள்.

ஆனால் உணர்ச்சி வசப்பட்டிருந்த அவளால் ஒரு வார்த் தையும் சொல்ல முடியவில்லை. இப்படிச் சிந்திப்பதற்குள் சிங்கம் அவ்விருவர் மீதும் பாய்ந்தது. இன்னதென்று விவரிக்க முடியாத ஒரு பயங்கரமான குரலொலி அந்த வனப்பிரதேசம் முழுவதும் எதிரொலித்தது. எதையோ முணுமுணுத்தது அசோகனுடைய வாய்.

ஒரே ஒரு நொடி. பாய்ந்த சிங்கம் சட்டென்று தன் கைகளை இழுத்துக்கொண்டது! மெல்ல மெல்லப் பின்னே நகர்ந்து, தரையில் உட்கார்ந்துவிட்டது. படிப்படியாக அதன் முகத்தி லிருந்த குரூரம் மாறி, அமைதியான கண்களுடன் இளங் கோவையே அது உற்றுப் பார்க்கத் தொடங்கிற்று. ஆச்சரியத் தினால் திகைத்துப் போனான் அசோகன். இவளோ, 'அசோக சக்கரவர்த்தி சகல கலாவல்லபர்தாம். ஆனால் மிருக வசியங்கூட இவருக்குத் தெரிந்திருக்குமோ? இல்லாவிட்டால் வெகு கோபத் தோடு பாய்ந்த சிங்கம், பளிச்சென்று நகங்களை உள்ளே இழுத்துக் கொண்டு கீழே இறங்குமா?' என்று நினைத்தாள்.

மறு விநாடி, 'ஐயோ இவர்களுக்குத் தீங்கிழைத்து விட் டோமே!' என்று வருந்துவதுபோல் எழுந்து நின்று, வாலைக் குழைத்துக்கொண்டு ஒரு நாய்க் குட்டியைப்போல் அந்தப் போலி ராஜகுமாரனை நெருங்கி உறவு கொண்டாடத் தொடங் கிற்று அந்த வனவிலங்கு.

ஆச்சரிய மிகுதியினால் இன்னதுதான் செய்கிறோமென்று புரியாதவனாக அசோகன் விலையுயர்ந்த தன் பட்டு வஸ்திரத்தினால் சிங்கத்தின் கண்களிலிருந்து பெருகும் கண்ணீரைத் துடைத்தான். சிங்கம் நாய்க்குட்டிபோல் படியும் என்று கதைகளில்தான் கேட்டதுண்டு. ஆனால் இன்று கண்ட காட்சி அவனை ஆச்சரி

யத்துள் மூழ்கடித்தது. அவள் அதன் முதுகைத் தொட்டுத் தடவிக்கொண் டிருந்தாள். அமைதியாக நிற்கும் பசுங்கன்று போல் அந்தச் சிங்கம் அவளை ஒட்டிக்கொண்டு நின்றது.

* * *

வெளியே ராஜமாதா தன்னுடைய சோக நாடகங்களுக்கு வேண்டிய தயாரிப்புகளைச் சிந்தித்துக்கொண்டும் ஸம்புஷ்டா சாரியன் சரம ஸ்லோகங்களைச் சொல்லுவதன் பொருட்டும் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்குச் சற்று முன்னே ஈட்டி, வேல் முதலிய ஆயுதங்களுடன் சிப்பந்திகள் அவசரமாகப் புதருக்குள் நுழைந்துகொண் டிருந்தார்கள்.

ராஜமாதா, முகத்தில் துக்கத்தை வரவழைத்துக்கொண்டு உள்ளே நுழைந்தாள். ஆனால் அவள் கண்ட காட்சி அவளைத் திடுக்கிடச் செய்தது. சிப்பந்திகள் ஆயுதங்களை ஏந்தி அசைவற்று நின்றார்கள். அசோகனும் மகேந்திரனும் சிங்கத்தோடு நெருங்கிப் பழகிய நண்பர்கள்போல் நிற்பதைக் கண்டதும் அவள் முகம் வெளுத்தது; கைகால்கள் வெலவெலத்தன.

அசோகன் மிகவும் அமைதியான குரலில், "யாரும் பயப்பட வேண்டாம். இது என்னைக் கொல்லவேண்டும் என்றே செய்தி ருக்கும் ஒரு சூழ்ச்சி. இந்தச் சதி செய்தவருக்குத் தகுந்த தண்டனை விதிக்க எனக்கு அதிகாரம் உண்டு; தடையும் இல்லை. ஆனால் தண்டனை விதிப்பது என்ற விஷயத்தில் இந்த வனராஜன் தான் எனக்குக் குரு. பசியால் அடைபட்டிருந்தும் இது எப்படித் தன் பிறவிக் குணத்தையே மாற்றி நம்மை மன்னித்து விட்டதோ அதுபோல நானும் இந்தச் சூழ்ச்சி செய்தவர்களை மன்னித்து விடுகிறேன்" என்று சொல்லியவனாக ராஜமாதாவையும் ஸம்புஷ்டாசாரியனையும் ஏற இறங்கப் பார்த்தான் அசோகன்.

விமலை, தன் கொடிய விஷக் கண்களால் போலி ராஜகுமாரனைச் சுட்டு விடுபவள்போல் பார்த்தாள். அசோகன் பின்னும் அழுத்த மான குரலில், "இந்த வனராஜன் எனக்குமட்டும் குருவல்ல. அஹிம்சை என்னும் ஒரு தத்துவத்தை நம் நாட்டிற்கே போதித்த ஒரு குரு. இந்த மறக்கமுடியாத சந்தர்ப்பத்தை மனத்தில் இருத்தி, என் குடிகள் இந்த அஹிம்ஸா தத்துவத்தைப் பின்பற் றட்டும். இனி என் அரசியலிலும் சரி, மற்றச் சிற்றரசர்களின் செயல்களிலும் சரி; வேட்டையைப் போன்ற அர்த்தமற்ற செயல்

களில் ஈடுபடக் கூடாது. அப்படிச் செய்தால் கொலை செய்த வனுக்கு என்ன தண்டனையோ அதே தண்டனை அவர்களுக்கும் விதிக்கப்படும். சிங்கத்தைப்போன்ற ஒரு கொடிய மிருகமே தன் பிறவிக் குணத்தைத் துறந்து நம்மை மன்னித்து விடுகிறது என்றால் ஆறறிவு படைத்த நாம் எதற்கு வேட்டையாட வேண்டும்?" என்று சொல்லியவனாய் அதன் முதுகைத் தொட்டுத் தடவிக் கொடுத்தான்.

இதற்குள் அருகில் நிற்கும் இளங்கோவின் மேல் அவன் பார்வை சென்றது. 'அடாடா, சிங்கத்தையே சொல்லுகிறோமே. இவனைக் கண்டதும் அல்லவா சிங்கத்தின் கோபம் குறைந்தது. நண்பன் பகைவனாவதைப் பார்த்திருக்கிறேன். ஆனால் பகைவன் நண்பனானதை இந்தச் சந்தர்ப்பத்தில்தான் பார்த்தேன்' என்று நினைத்தவனாக மகேந்திரனைக் குறித்து, "இவன் மகாபுருஷன். இவனுக்கு நான் ஆயுள் உள்ளவரையிலும் கடமைப்பட்டிருக்கிறேன். கலிங்க நாட்டு இளங்கோ இப்படிப்பட்ட பரம உபகாரத்தை—உயிரையே எனக்காகக் கொடுக்கும் ஓர் ஆச்சரியமான செயலைச்—செய்ததற்கு முன்பு இவனுக்கு நான் என்ன செய்திருக்கிறேன்! கலிங்க நாட்டைப் பிடித்துக்கொண்டு சிதற அடித்தேன். மஹா சாத்வியான மன்னரை இழக்கும்படி செய்தேன். என் கொடுஞ் செயல்களினால் என் நாட்டில் என்னிடமே இவன் கைதியாக இருக்கிறான். இந்த நிலையிலும் என்னைக் காப்பாற்றுவதன் பொருட்டுத் தன் உயிரையே இழக்கத் துணிந்த இவன்தான் உண்மையான கர்மவீரன்! மகேந்திரா! சபாஷ்! சபாஷ்!" என்று சொல்லுகையில், ஆனந்த மிகுதியினால் அசோகனது குரல் தழுதழுத்தது. சந்தோஷம் தாங்காமல் அவன் நெஞ்சு படீர் படீரென்று அடிக்கத் தொடங்கிற்று.

மிகவும் கனிவான குரலில், "பிரபு! என் செயலில் என்ன இருக்கிறது? எல்லாம் வனராஜன் செய்த உதவி! அவன் கருணைதான் இதில் முக்கிய அம்சம்" என்றான் மகேந்திரன்.

அசோகனது கண்களில் ஆனந்தபாஷ்பம் ததும்பி நின்றது. "அன்பனே, மகேந்திரா! நான் அரசன் என்ற முறையில் உன்னைக் கேட்கவில்லை. உயிர்த் தோழனாகவே கருதிக் கேட்கிறேன். இந்த அருமையான செயலுக்காக, இந்த மகாத் தியாகத்தின் பொருட்டு, நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்! எதைச் செய்தாலும் அது மிகவும் சொற்பமே. ஆனாலும் இந்தச்

சமயம் என்னிடம் ஏதாவது கேட்க விருப்பம் இருந்தால் கேள்" என்றான்.

மகேந்திரனது முகம் நாணத்தால் சிவந்தது. தன் நிலையை அவன் கண்டுகொள்ளா வண்ணம் தலையைக் குனிந்து மிகவும் இனிமையான குரலில், "மன்னர்பெருமானது இதயத்தின் ஒரு சிறு பகுதியை ஆயுள் முழுவதும் எனக்கு இடமாக அளித்தால் போதும்" என்றான்.

கள்ளங் கபடற்ற அசோகன், "அப்பா! மகேந்திரா! என் இதயத்தை என்றைக்கோ உனக்குக் கொடுத்துவிட்டேனே! உயிரையே துச்சமாக மதிக்கக்கூடிய ஒரு உத்தம நண்பன் எனக்குக் கிடைத்தது என்னுடைய மகாபாக்கியம்!" என்று சொல்லியவனாய் அவனைத் தழுவிக்கொண்டான்.

இந்த அற்புதமான காட்சியைக் கண்டு அங்கே கூடியிருந்தவர்களின் கண்களில் கண்ணீர் நிறைந்தது. தனக்கு மிகவும் பழக்கமான ஒரு சம்பவத்தை ஆனந்தமாக ரஸித்துப் பார்ப்பது போல் வைத்தகண் வாங்காமல் பார்த்து நின்றான் வனராஜன். தம்மையும் மீறி ராஜமாதாவின் கண்களும், ஸம்புஷ்டாசாரியன் கண்களுங்கூட நீர்மல்கி நின்றன.

ஒரே ஒரு க்ஷணம்தான். மறுவிநாடி அவர்கள் உண்மைக் குணம் மேலிட, தாங்கள் எதிர்பாத்ததற்கு நேர்மாறாகவே எல்லாம் நடந்து வருவதை எண்ணிக் குரோதமும் எரிச்சலும் குமுறி எழுந்தன. மனத்தில் அடக்கமுடியாத ஆங்காரத்தினால் ராஜமாதாவின் நெஞ்சு கொந்தளித்தது. 'அடாடா! இவனுக்கு இவ்வளவா! இருக்கட்டும்!' என்று மனத்துள் எண்ணமிட்டவளாய், முகத்தைப் பிறர் கவனிக்காவண்ணம் திரும்பிப் பற்களைக் கடித்தாள் ராஜமாதா.

* * *

வெளியே குதிரையின் காலடி ஓசை; புதர்களின் சலசல சப்தம். மறுவிநாடி, "அண்ணா என்று ஆவலுடன் கூவியவனாய் உள்ளே நுழைந்தான் வீதசோகன். அன்புமிகுந்த தம்பியை மார்புறத் தழுவிக்கொண்டான் அசோகன். சற்றுமுன் போலி மகேந்திரனது பரிசத்தினால் தனக்கு ஏற்பட்ட ஓர் உணர்ச்சியும், இப்பொழுது அருமைத் தம்பியின் பரிசத்தினால் தோன்றும்

உணர்ச்சியும் மாறுபட்டுத் தோன்றுவதுபோல் ஒரு சிறு சாயை அவன் மனத்தில் தோன்றியது.

'ஏன்? மாறுபட்டுத் தோன்றுவானேன்?' என்று யாரோ கேட்பதுபோல் தோன்றிற்று.

* * *

சற்று நேரத்திற்கெல்லாம் வேட்டைக்கு வந்த கூட்டம் நாட்டை நோக்கித் திரும்ப ஏற்பாடாயிற்று. வரும்பொழுதிருந்த உற்சாகமும் கலகலப்பும் அந்தக் கூட்டத்தில் இப்போது இல்லை. வரிசைப்படி யானைகள் முன்னும், குதிரைகள் பின்னுமாக அணி வகுத்துப் புறப்பட்டன. நெடுநேரம் ஒருவரோடு ஒருவர் பேசவே இல்லை. நடு வழியில் அசோகன் மிகவும் மெல்லிய குரலில் அன்பும் வாத்ஸல்யமும் ஒருங்கே ததும்ப, "மகேந்திரா! மறுபடி உன்னைச் சிறையில் இட்டால் அது எனக்குப் பெரிய களங்கம். ஆகவே மீண்டும் நீ சிறை செல்வது முடியாது. இன்றுமுதல் என்னுடன் அரண்மனையிலேயே தங்கிவிடு" என்றான்.

மகேந்திரனது கண்களில் ஒளி வீசின. மிகவும் அமைதியான குரலில், தங்களது பெருந்தன்மைக்கு நன்றி. இருந்தாலும் இப்பொழுது நீங்கள் சொல்வதுதான் எனக்கு உண்மையான தண்டனை. நான் சிறையில் இருப்பதுதான் நலம். பல காரணங்களை முன்னிட்டு, தங்களது வருங்கால நன்மையையும், கலிங்க நாட்டின் நிலைமையையும் கருதும் நான் மறைவில் இருப்பதுதான் உசிதம். அரசர் பெரும! தாங்கள் இந்த ஒரு காரியத்தில்மட்டும் என்னை நிர்ப்பந்திக்கக் கூடாது" என்று வேண்டினான்.

அதற்குமேல் அசோகன் வற்புறுத்தவில்லை. இதற்குள் யானை, சிறைச்சாலையின் எதிரே வந்து நின்றது. யானையினின்றும் இறங்கினான் போலி ராஜகுமாரன். இறங்கிய பிறகே அந்த வனராஜன் தங்களைத் தொடர்ந்து நகரத்துக்கே வந்துவிட்ட விஷயம் தெரிய வந்தது. இளங்கோ ஆச்சரியத்துடன் அதை நெருங்கினான். அதுவோ அசையாமல் அந்தச் சிறைச்சாலையின் கதவின் அருகே முன் கால்களை ஊன்றி உட்கார்ந்து விட்டது.

இன்னது செய்வது என்று அறியாமல் விழித்த அசோகன், "மகேந்திரா! இந்த வனவிலங்கு உன் சொற்களுக்குக் கீழ்ப்படிகிறது. தயவு செய்து இதை என்னைத் தொடரும்படி செய்.

அரண்மனை நந்தவனத்தை அடுத்த புதரிலாவது வசிக்கட்டும்" என்ருன்.

அவள் மெள்ள மெள்ள அதனருகில் நெருங்கி, நாய்க்குட்டிகளுக்குச் 'சமிக்ஞை' செய்வதுபோல் கைகளினுல் சுட்டி, அந்த யானைகளைத் தொடர்ந்து போகும்படி சொன்னுள். ஆனுல் அது போகுமோ? போகாதோ? என்பது சந்தேகந்தான்!

அந்த வனராஜன் என்ன நினைத்ததோ! எழுந்து நின்று ஒருமுறை உடலைத் தூக்கி நெளித்துச் சோம்பல் முறித்தது. பிறகு தினந்தோறும் சர்வ சாதாரணமாகச் செய்து வழக்கப்பட்ட செயல் போல், அழகிய யானைகளுடன் தானும் அடியிட்டு நடந்து, அசோகனைப் பின்தொடர்ந்தது. சற்று நேரத்திற்கு ஒருமுறை தன்னைத் திரும்பித் திரும்பிப் பார்த்துச் செல்லும் அந்தச் சிங்கத்தை ஆச்சரியத்தால் மலர்ந்த கண்களுடன் பார்த்து நின்ருன் போலி இளவரசன்.

*   *   *   *

மகேந்திரன் சிறைக்கூடத்துக்குள் சென்ருன் என்பதை அந்தச் சிறைச்சாலைப் பெரிய கதவுகளின் சத்தம் அறிவித்தது. ஏதேதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்த அசோகன், குதிரையின் காலடிகளைக் கேட்டுத் திடுக்கிட்டான். அந்த வெண்புரவியின் மேல் வந்துகொண் டிருந்த இந்திரை, "அண்ணு! இதென்ன? இந்தச் சிங்கம் ஏது?" என்று சொல்லிக் கீழே இறங்கி, அதைத் தொட்டுத் தடவினுள். அசோகனது ஆச்சரியம் அதிகமாயிற்று.

"இந்திரே, உனக்கு இந்தச் சிங்கம் யாருடையதென்று தெரியுமா? இது வளர்க்கிற சிங்கம்போல்தான் தோன்றுகிறது?" என்ருள். அதைச் செவியில் வாங்கிக்கொள்ளாமலே, "அண்ணு! இதை எங்கே பிடித்தீர்கள்?" என்ருள்.

"ஹரித்வாரத்துக்கு அருகில் உள்ள காட்டில்."

## 18

## சிதானந்தர்.

இரவு நடுநிசி; பாடலிபுத்ர நகரம் முழுவதும் அமைதியில் ஆழ்ந்திருந்தது. பகற்பொழுதிலேயே அமைதி நிலவும் சிறைச்சாலை இரவில் எப்படியிருந்தது என்பதைச் சொல்லத் தேவையில்லை. வெளியே ஒரே கன்னங்கரிய இருள். சற்று நேரத்துக்கு ஒருமுறை எங்கேயோ மரக்கிளையில் பதுங்கி இருக்கும் கோட்டான் பயங்கரமாக அலறும். சில பறவைகள் படபடவென்று சிறகை அடித்துக்கொள்ளும். மதிற் சுவரிலே தங்கியிருக்கும் புருக்கூட்டங்கள் 'குடுகுடு' வென்று முனகிவிட்டு மறுபடி நித்திரையில் ஆழ்ந்துவிடும்.

அங்கங்கே காவலாளிகள் நித்திரையில் ஆழ்ந்திருந்தனர். ஆனல் ஒரே ஒரு ஜீவன்மட்டும், அந்த அமைதியிலும் தூங்க முடியாமல் புரண்டு புரண்டு படுத்துக் கண்களை மூடி, நித்ரா தேவியை வேண்டி வரங்கிடந்தது. 'சிறை' என்பதைத் தவிர அதற்கு ஒருவிதமான குறையும் இல்லை. தேவானும்பிரிய ஸம்ராட் அசோகன், தானே நேரில் கவனித்து, ஆகார விஷயத்தையும், மற்றவைகளையும் விசாரிக்கிருன்! ஆனுலும் அவன் கைதிதானே!

அன்றுகாலை ராஜகுடும்பத்தோடு அவனுந்தான் வேட்டைக்குப் போயிருந்தான். வேட்டையின் களைப்பினல் அயர்ந்து தூங்கி விடுவோம் என்றுதான் நினைத்தான். தூக்கம் வந்தால்தானே! ஒரு வேளை துன்ப மிகுதியினுல் தூக்கம் பிடிக்கவில்லையோ என்று தோன்றுகிறது. ஆனல் அவன் முகத்திலே துயரத்தின் குறிகளுக்குப் பதிலாக எல்லையற்ற ஆனந்தமல்லவா குடிகொண்டிருக்கிறது. ஆம்! ஆனந்த மிகுதியினுலும் தூங்கமுடியாமல் தவிப்பது உண்டல்லவா?

அவன் உள்ளம் கரைகடந்த ஆனந்தத்தினுல் பொங்கிக் கொண்டிருந்தது. விதவிதமான கற்பனைகளின் பயனுகச் சற்று நேரத்திற்கு ஒருமுறை அவன் அழகிய கன்னங்கள் குழியும். இதழ்க்கடையிலே இளமுறுவல் அரும்பும். சற்றே எழுந்து உட்காருவான்; மீண்டும் படுப்பான். இப்படித் தவித்துக்கொண்டிருந்தான் அவன்.

திடீரென்று அவன் முகம் ஆச்சரியத்தினுல் மாறுதல் அடைந்தது. விளக்கை அடுத்த அந்தச் சுவர் அசைவதுபோல் தோன்றிற்று. அருகிலிருந்த உடைவாளைக் கையில் எடுத்தவனுய்க் கட்டிலைவிட்டு எழுந்தான். அவன் எழுந்து நிற்கவும், சுவரிலிருந்து ஒரு வெண்மையான உருவம் இறங்கவும் சரியாயிருந்தது. "நில்! அங்கேயே! ஓர் அடி முன்னே வந்தால் கத்திக்கு இரையாவாய்!" என்று கூவினுன் கைதி.

தலைமுதல் கால்வரை வெண்மையான துகிலால் தன்னை மறைத்திருந்தான் வந்தவன். கைதியின் குரலைக் கேட்கவும் ஆச்சரிய மிகுதியினுல் திகைத்துப்போய் அவனை ஏற இறங்கப் பார்த்து நின்றுன்.

"இந்த நிசியில் இங்கே வந்திருக்கும் நீ யார்? உண்மையைச் சொல்லிவிடு!" என்று கம்பீரமாகக் கேட்டான் கைதி. ஆனுல், 'இவனுக்குப் பின்னுல் இன்னும் சிலர் இருக்கக்கூடுமோ' என்ற சந்தேகமும் மனத்துள் எழுந்தது.

வந்தவன் மிகவும் அமைதியான குரலில், "யாராயிருந்தால் என்ன? வந்த உத்தேசம் நிந்திக்கத்தக்க தல்ல. என் கண்களே என்னை ஏமாற்றுகின்றனவோ என்று தெரியவில்லை. யாரை எதிர்பார்த்து வந்தேனே அவன் உருவம் கண்களுக்குத் தெரிகிறது. ஆனுல் குரலோ முற்றும் வேறு. இந்தச் சந்தர்ப்பத்தில் கண்களை நம்புவதா? காதுகளை நம்புவதா? என்பதுதான் தெரியவில்லை" என்றுன். அந்தக் குரலில் அன்பும் பரிவும் ஒருங்கே தொனித்தன.

கைதியின் கையிலிருந்த கத்தி மெத்தையின்மேல் விழுந்தது. "நீ யாரைத் தேடி வந்தாய்?" என்று மிகுந்த பரிவுடன் கேட்டான் கைதி.

மிகவும் மெதுவான குரலில், "கலிங்கநாட்டு இளங்கோ மகேந்திரன் சிறையில் இருப்பதாக நினைத்து வந்தேன். ஆனுல்—நீ அவனைப்போல் இருக்கிருய். ஆனுல் அவனல்ல, நீ யார்? நீதானு மகேந்திரன்?" என்றுன்.

"அது சரி, இளங்கோவை, இந்த நிசியில் சிறையில் சந்திக்க வந்த நீ யார் என்பது முதலில் தெரியவேண்டும். உன் போர்வையைத் திறந்தால் நிரம்ப உதவியாக இருக்கும்" என்று வணக்கத்துடன் கேட்டான் கைதி.

'நீ மகேந்திரனுக இருக்கலாமென்ற உத்தேசமும் இல்லே. மறுக்கவும் முடியவில்லே' என்று சொல்லியவண்ணம் போர் வையை எடுத்தான் வந்தவன்.

கைதி திடுக்கிட்டான். வெண்மையான அந்தப் போர்வைக் குள்ளிருந்து மகா தேஜஸ்வியான ஒரு துறவி, தண்டத்துடன் நிற்பதைக் கண்டதும் கைதியின் முகம் ஆனந்த மிகுதியினுல் மலர்ந்தது. "ஆ, ஸ்வாமி சிதானந்த மகாராஜ்!" என்று கூவினுன் அவன். மறு விநாடி சிதானந்தரது அடிகளில் வீழ்ந்து வணங் கினுன் கைதி.

"ஓ! அப்படியானுல் நீதான் என் மகேந்திரனு? கண்கள் சொன்னவைதான் உண்மை. அப்பா! எழுந்திரு! வத்ஸ! உனக்கு ஸர்வமங்களங்களும் உண்டாகட்டும்" என்று சொல்லிய வண்ணம் அவன் முதுகைத் தொட்டு எழுந்திரு! என்ருர்.

"நான் மகேந்திரன் அல்ல. தங்கள் செவிகள் சொன்னவை தான் உண்மை."

"என்ன? மகேந்திரன் அல்லவா? ஆனுல்....ஆனுல்...என்று சற்றே தயங்கினுர் ஸ்வாமி சிதானந்தர்.

"நான்தான் ரோகிணி."

"என்ன? ரோகிணியா? இந்தப் பயங்கரச் சிறையில்! ஏன்?" என்ருர். அவர் குரலில் ஆச்சரியமும் சந்தேகமும் தொனித்தன.

"ஆம், ஸ்வாமி! ரோகிணியேதான் நான்."

"சரி! இதென்ன வேஷம்?"

"ஸ்வாமி, உங்களிடம் சொல்லலாமென்று உள்ளதைச் சொன்னேன். ஸம்ராட்டும் மற்றவர்களும் என்னே இளவரசன் மகேந்திரன் என்றே நம்பியிருக்கிருர்கள்."

"இந்தப் பௌத்தர்கள் உன்னே யுவராஜன் என்று எண்ணியா இங்கே வைத்திருக்கிருர்கள்?"

"ஆம்."

"உண்மையைச் சொல்லி நீ ஏன் விடுதலே பெறக்கூடாது?"

"இந்தப் பௌத்தர்களின் எண்ணங்கள் இன்னும் சிறிது காலம் இதே நிலையில் இருந்தால்தான் மகேந்திரனுக்கு நன்மை. ஆகையால் நானே வலிய வந்துதான் இவர்களிடம் கைதியாகி இருக்கிறேன்."

"சரி; உன்னுடைய எண்ணந்தான் என்ன? விளங்க வில்லையே".

"ஸ்வாமி, கலிங்கத்தின் எழுச்சிக்காகவும், சநாதன தர்மத்திற்குப் புத்துயிர் கொடுப்பதற்காகவும் இளங்கோ மகேந்திரன் வெளியில் இருப்பதுதான் நன்மை. அவனை இவர்கள் பிடிக்காதிருக்கும்பொருட்டு நானே இந்தச் சூழ்ச்சியைச் செய்தேன்."

"அம்மா! ரோகிணி! உன் செயல் போற்றத்தக்கது! விஷயம் தெரிந்துகொண்டேன். சகோதர வாஞ்சைக்கும் தேச பக்திக்கும் நீ சிகரமாகிவிட்டாய். எதுவரையில் உன்னைப்போன்ற பெண்மணிகள் நற்குண நற்செய்கைகளாலும் தியாகத்தாலும் வீரத்தாலும் பணிசெய்ய முன் வருகிறார்களோ அதுவரையில் சநாதன தர்மத்திற்கு அழிவேது? அம்மா! குழந்தாய்! உன் மலர் மேனிக்கு இந்தச் சிறைவாசம் எவ்வளவு கொடுமையானது! அதைச் சகித்துவருகிறாயே!"

"ஸ்வாமி! சிறைச்சாலையின் அறையைப் பாருங்கள்! மிகவும் உயர்வாகவேதான் வைக்கப்பட்டிருக்கிறேன். ஸம்ராட் என்னைக் கைதியாக நடத்தவில்லை!"

"சக்கரவர்த்தி, உண்மையிலேயே உயர்ந்த குணங்கள் உள்ளவன் அம்மா! இந்த வார்த்தைகளைக் கேட்கும்பொழுது உன் குழந்தைப் பருவம் நினைவுக்கு வருகிறது. நீ பிறந்த பொழுது நான் இந்திரபுரத்தில்தான் இருந்தேன். உனக்கு ஜாதகம் கணிக்கும்பொழுது, நீ சக்கரவர்த்தினி ஆவாய் என்றும், சநாதன தர்மத்திற்கு உன்னால் அநுகூலம் ஏற்படும் என்றும் சொன்னேன். இங்கு நீயே வலியவந்து கைதியாகி இருப்பதையும், அசோகர் உன்னைக் கைதிபோல் நடத்தாமல் இருப்பதையும் பார்த்தால்... அது சரி; நீ ஸம்ராட் அசோகனைக் காதலிக்கிறாயா?" என்று கூறிப் புருவத்தைச் சுருக்கி அவளைக் கூர்ந்து பார்த்தார் சிதானந்தர்.

"ஸ்வாமி! அவர் என்னை யுவராஜனாகவே மதித்து அன்பு செய்கிறார். தமக்குச் சமமான ராஜனிடம் பாராட்டும் மெய்

யன்பு அது. நிஜ யுவராஜன் என்றே நினைத்து, எனக்கு அவர்மேல் உள்ள அன்பு என்றென்றும் குறையாமல் இருக்க வேண்டும் என்றும், தாமும் அவ்வாறே என்னைப் பரம மித்திரனுகப் பாவிக்க வேண்டும் என்றும் வேண்டினுர். ஆனுல் இன்று காலையில்தான் நான் அந்த வார்த்தைகளை அங்கீகரித்தேன்" என்று சொல்லும் பொழுது அவள் முகம் நாணத்தால் சிவந்தது.

"அம்மா! ஜோதிடம் பொய் சொல்லாது. நீ ஒரு பெண் என்று தெரிந்தவுடன் அந்த நட்பு, காதலாக மாறிவிடும். உடன் பிறந்தானுக்காக நீ செய்யும் அற்புதமான தியாகத்திற்கு விலை மதிக்கமுடியாத வெகுமதி அல்லவா உன்னைத் தேடி வருகிறது. இதைவிட வேறென்ன வேண்டும்! குழந்தாய்! கடவுளின் அருளினுல் உனக்குக் கிடைக்க இருக்கும் இந்தப் பாக்கியத்திற்கு நான் மிகவும் ஆனந்தப்படுகிறேன்" என்ருர். உணர்ச்சி மிகுதியினுல் அவர் குரல் தழுதழுத்தது. கைகளை உயரத் தூக்கி ஆசீர்வதித்தார் அவர்.

அவரது வார்த்தைகள் அவள் செவிகளுள் இன்பத் தேனுக வந்து பாய்ந்தன. 'கலிங்கநாடு சநாதன தர்மத்தைக் காப்பதில் பெயர்பெற்றது. அசோகனே பௌத்தன். இந்த நிலையில் 'காதலாவது, கல்யாணமாவது!' என்றுதான் நினைத்தது அவள் நெஞ்சம். இன்று சிதானந்தர் தைரியமாகப் பேசுவதைக் கண்டதும் தன் தகப்பனுர் இருந்தாலும் அவரைப் பெண் கொடுக்கும்படி செய்யும் சக்தி சிதானந்தருக்கு உண்டு என்று நம்பத் தொடங்கினுள். பிரசித்திபெற்ற சநாதன ரக்ஷகரே, தான் ஒரு பௌத்தனை மணக்கச் சம்மதிக்கிருர் என்பதை நினைக்க நினைக்க ஆனந்த மிகுதியினுல் அவள் மனம் பூரித்தது.

சற்று நேரம் இருவரும் ஒன்றுமே பேசவில்லை. பிறகு மிகவும் மெதுவான குரலில், "அம்மா! குழந்தாய்! கலிங்கநாட்டு அரசன் நரஸிம்மன் விஷயம் ஏதாவது தெரியுமா? இந்தப் பௌத்தர்கள் இந்திரபுரத்தில் நுழைந்தபொழுது நானே அவனுக்குப் பிக்ஷு உடைகொடுத்து வெளியே அனுப்பினேன். பிறகு இன்றுவரை ஒரு செய்தியும் தெரியாது?"

"ஸ்வாமி! அப்பாவை நீங்கள்தான் கொன்றுவிட்டதாக இங்குள்ளவர்கள் நம்பும்படி செய்திருக்கிருள் விமலாதேவி. ஆனுல் மந்திரி ராதாகுப்தர் மட்டும் இதை நம்பவே இல்லை. அசோகரும் தாங்கள் நிரபராதி என்றே நம்புகிருர்."

" அம்மா சக்கரவர்த்தியின் இந்த எண்ணம் நெடுநேரம் நிலைக்காது. கபட நாடகத்தில் கைதேர்ந்த விமலைக்கு இவரை ஏமாற்றுவது ஒரு நொடி வேலை. இந்திரபுரத்து வீரர்களின் கண்களில் பொடி தூவி, ஏதோ ஒரு தலையற்ற முண்டத்தைக் காட்டி, 'இதுதான் அரசன் நரஸிம்மன்!' என்று எண்ணும்படி செய்திருக்கிறாள். நடுநிசிவரையில் அவன் படுக்கை அறையில் நானும் அவனும் மட்டும் பேசிக்கொண்டிருந்ததென்னவோ உண்மைதான். இந்த ஒரு காரணத்தை வைத்துக்கொண்டு, நான்தான் கொன்றேன் என்று சாதிக்கிறாள். தானே நேரில் கண்டதாகச் சாதித்தால் ஜனங்கள் நம்புவதற்குத் தடை என்ன? சமய சந்தர்ப்பங்களினால் பொய் மெய்யாகிறது; மெய் பொய்யாகிறது. இதுதான் இன்றைய உலகத்து நிலை. சக்கரவர்த்தி எவ்வளவுதான் முயன்றாலும், ராகு, கேது, சனீச்சரன் இந்த மூன்றும் கூடினால் அவர்வரையில் ஒன்றையுமே எட்டவிட மாட்டார்கள். இவர்களது கபட நாடகத்திற்குமுன் சக்கரவர்த்தி எம்மாத்திரம்?"

"ஸ்வாமி! இன்று காலையிலே வேட்டைக்குச் சென்றபொழுது அவர்களுடைய கபடநாடகம் ஓரளவு வெளியாகி விட்டது. ஒரு சிங்கத்தைச் சிறைசெய்து சக்கரவர்த்தியை அதற்கு இரையாக்கவேண்டும் என்று திட்டம் போட்டிருந்தார்கள். ஆனால் எதிர்பாராதவிதமாக அசோகர் தப்பினார். அது தெய்வச் செயல் என்றேதான் கருதுகிறேன். அவனன்றி ஓரணுவும் அசையாது..." என்று சற்றே நிறுத்தினாள். மறுபடி, "இந்த அபாயகரமான சம்பவத்தை ஒட்டி அவர்கள் கபடநாடகங்கள் எல்லாம் வெட்ட வெளிச்சமாகிவிடும்!" என்றாள்.

" அது எப்படியானால் என்ன? என்னுடைய விசாரணைக்குப் பின் விமலையின் இந்தச் செயல் ஒன்றும் பயனளிக்காது. ஏனென்றால் என்மேல் சுமத்தப்பட்டிருக்கும் கொலைக்குற்றம் சந்தர்ப்ப சாட்சியங்களாலேயே நிரூபிக்கப்படும். அதற்கு வேண்டிய சாட்சியை இந்தத் 'தேவதைகள்' சரியானபடி தயாரித்து அரசனது கண்முன்னே கொணர்ந்து நிறுத்திவிடுவார்கள். அப்பொழுது அவன் தான் என்ன செய்ய முடியும்? எதிரில் தோன்றும் பிரத்தியக்ஷப் பிரமாணத்தை அநுசரித்துத்தானே தீர்ப்புச் சொல்லவேண்டும்?"

அவள் மௌனத்தில் ஆழ்ந்தாள். சற்று நேரம் அமைதி. சிதானந்தர் மீண்டும் மிகவும் தணிந்த குரலில், "என் விஷயம் கிடக்கட்டும்; நேற்று அசோகன் தப்பியது எப்படி?" என்றார்.

அவள் மிகவும் சுருக்கமாக விஷயத்தைச் சொன்னாள்.

அவர் முகத்திலே குறுநகை தோன்றிற்று. "அடடா! என்னைப்போலவே இந்த வனராஜனும் ஏமாந்து போய்விட்டான். இந்த வனராஜன் மகேந்திரனது தோழன். அவன் ஹரித்வாரத்தை விட்டு வந்தபொழுதுதான் இந்த வனராஜனும் வந்திருக்கவேண்டும். கிழவனான நானே ஏமாறும்பொழுது அவன் எம்மாத்திரம்!" என்று சொல்லியவராக எதையோ கூர்ந்து செவிகொடுத்துக் கேட்டார்.

மெல்ல மெல்ல அடிமேல் அடிவைத்து மூலையிலுள்ள சிறு பலகணியின் வழியே பார்த்தார்.

சிறைச்சாலையின் மதிற்சுவரின் புறம் ஏதோ ஒருவிதமான ஓசை. அவள் நெஞ்சும் மார்பும் படீர் படீர் என்று அடித்துக் கொண்டன. அவரும் கைதிதான்! இருந்தாலும் அவருக்கு ஏதாவது விபத்து வந்துவிடுமோ என்ற பயத்துடன் அவரைப் பார்த்தாள்.

"அம்மா! குழந்தாய்! என் விசாரணை நிரூபிக்கப்படாது. உன் தந்தையே வந்து நின்றாலும் நிற்கலாம். அவர் க்ஷேமமாக இருக்கிறார். இப்பொழுது என் அறையில் காத்திப்பார்."

"ஸ்வாமி! நான் அவரைச் சந்திக்க முடியுமா?"

"கூடவே கூடாது! நீ சிறையில் இருப்பது தெரிந்தால் தன் நிலைமையையும் மறந்து உன்னை விடுவிக்க முயலுவார். அது பெரிய அமர்க்களமாகி விஷயத்தையே கெடுத்துவிடும். உனக்கு மிகவும் ஆவலாக இருந்தால் இந்தப் பலகணியையே பார்த்திரு" என்று சொல்லிக்கொண்டே மறைந்துவிட்டார் சிதானந்தர்.

அவர் எப்படி வந்தார்? எப்படி வெளியே போனார் என்பதைச் சிந்தித்தவளாக ஆச்சரியத்தினால் மெய்ம்மறந்தாள் அவள்.

அதுதான் சிதானந்தரின் அறை. முணுக் முணுக்கென்று எரியும் அகல்விளக்கு மெல்லிய காற்றினால் அசைந்துகொண்டிருந்தது. இரண்டொரு காவிவஸ்திரங்கள் ஒரு கொடியில் தொங்கின. கமண்டலமும் இரண்டொரு புஸ்தகங்களும் ஓரமாக வைக்கப்பட்டிருந்தன. சுவரிலிருந்த ஆணியில் தர்ப்பாசனம் தொங்கிக்கொண்டிருந்தது.

அவர் உள்ளே நுழைந்ததும், "ஸ்வாமி!" என்று ஆவலோடு அவரைத் தழுவின, இரு வீரக்கைகள். அவனைச் சாந்தப்படுத்தி உட்காரும்படி செய்ய நெடுநேரம் ஆயிற்று.

அவன் கலிங்கநாட்டரசன். மிகவும் மெதுவான குரலில் பேசத்தொடங்கினன். "ஸ்வாமி! எதிர்கொண்டு மரியாதை செய்து வரவேற்கவேண்டிய தங்களை, நானும் திருடன்போல் வந்து பார்க்கவா நேரவேண்டும்! என்பொருட்டு வலியவந்து கைதியாகி, இது என்ன கோலம்! சீடனுக்காகச் சிறைபுகுவது உண்டா!" என்று திணறினன்.

அவர் மிகவும் பரிவுடன்கூடிய குரலில், "அப்பா! குழந்தாய்! எனக்குச் சிறையும் வெளியும் ஒன்றுதான். எங்கே எந்த நிலையில் இருந்தால் புராதன சநாதன தர்மத்திற்குத் தீங்கு வராதோ அந்த இடந்தான் நான் விரும்பும் இடம். அதனல்தான் இது சிறைச் சாலையா? தவச்சாலையா? என்ற பேதமே எனக்கு ஏற்படவில்லை" என்ருர்.

இதன்பின் நெடுநேரம் இருவரும் விவாதித்துக்கொண்டிருந்தனர். அருணேதயத்தைக் குறிக்கும் மலர்கள் மலரத் தொடங்கின. அந்தச் சுகந்தத்தைத் தாங்கிவரும் காற்றை நுகர்ந்த ரோகிணி, 'அடடா! என்ன பேசுகிருர்களோ? விடிந்து விடப்போகிறதே!' என்று கவலை கொண்டாள்.

நரஸிம்மன் கடைசியாகச் சிதானந்தரை வணங்கி, "ஸ்வாமி, தங்கள் கட்டளைப்படியே மற்ற யாவரும் நடப்பர்; நானும் அப்படியே பின்பற்றுகிறேன். இருந்தாலும் நாளை விசாரணையில் நீங்கள் குற்றவாளி என்று தீர்ப்பளித்தால், 'இன்னும் ஒரு மாதத்தில் அவனைக் கொண்டுவந்து நிறுத்திவிடுகிறேன்' என்று தவணை கேளுங்கள்" என்ருன்.

சிதானந்தரது கண்கள் கலங்கின. அருமைச் சீடனை மார்புறத் தழுவி விடை கொடுத்தார். நரஸிம்மன் மெல்ல மெல்ல நடந்து அந்தச் சிறையின் மதில்களிலிருந்த சிறு வெடிப்புகளிலே கால்களை வைத்து வெகு லாகவமாக ஏறினன்.

இரு நீலமணிக் கண்கள் அன்புமிகுந்த பார்வையை அவன் மீது பொழிந்தன என்பது அவனுக்கு எப்படித் தெரியும்?

## 19

## விசாரணை

அரண்மனை நியாய விசாரணை மண்டபம், வழக்கம் போலவே நேர்த்தியாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. தேவானும்பிரிய அசோகனது ஆசனம் முக்கியமான உயர்ந்த பீடத்தின்மேல் போடப்பட்டிருந்தது. அதை அடுத்த ஒரு பளிங்காசனத்தில் யுவராஜன் மகேந்திரன் அமர்ந்திருந்தான். மனு ஸ்மிருதியிலும் பௌத்தர்களது தர்ம சாஸ்திரத்திலும் நிபுணர்கள் என்று பெயர் பெற்ற பலர் சூழ ஸம்புஷ்டாசாரியன் அக்ர ஸ்தானத்தில் உட்கார்ந்திருந்தான். விசாரணை சமயத்தில் பொதுவாக ஏதேனும் சிக்கல்கள் ஏற்பட்டால் தீர்த்துவைக்கும் பொருட்டு நகரத்திலுள்ள பெரியோர்கள் பலரும் கூடியிருந்தனர்.

இதே விதமான அலங்காரங்களுடன் கூடிய அந்த மண்டபத்தின் இன்னொரு புறத்திலிருந்து கலிங்கநாட்டுப் புதிய அரசி விமலாதேவியும் ஸ்வாமி சிதானந்தரும் வந்துகொண்டிருந்தனர். அவரது முகத்தைக் கண்ட ஜனங்கள் ஆச்சரியத்தால் திகைத்தனர். ஏன்? அந்த மகா தேஜஸ்வியின் முகத்திலே, கோபமோ வெறுப்போ பயமோ ஒன்றுமே இல்லை. குழந்தையின் மாசற்ற சோதிவதனம்போல் இருந்தது அந்த முகமண்டலம்.

அவரை அடுத்து மிகவும் அழகாக மயில்போல் ஆடி, அசைந்து, ஒயிலாக வந்துகொண்டிருந்தாள் விமலை. மெல்லிய திரையினால் முக்காடிட்டிருந்த அவள் முகத்திலே, கோபமும் பொருமையும் வெறுப்பும் சொட்டிக்கொண்டிருந்தன.

சக்கரவர்த்தி, சிதானந்தருக்கு ஆசனம் அளிக்கும்படி கட்டளையிட்டு விமலையைக் கூப்பிட்டு விசாரிக்க ஆரம்பித்தார்.

"அம்மணி, தங்களது விஷயத்தைத் தெரிவித்துக்கொள்ளலாம்" என்று மிகவும் விநயமாகச் சொன்னார் அசோக சக்கரவர்த்தி.

அவள் மிகுந்த ஆவேசத்துடன் பேசத் தொடங்கினாள். "தேவானும்பிரிய சக்கரவர்த்தி! இதோ இங்கே உட்கார்ந்திருக்கும் சிதானந்தன் என்னும் பெயரை உடைய இந்தச் சந்நியாசி, பகவான்

கௌதம புத்தரது கொள்கைகளுக்குத் துரோகம் செய்து கொண்டும், தன்னைப்போலவே மற்றவர்களையும் துஷ்டர்களாகச் செய்துகொண்டும் ஹரித்வாரத்தில் ஒரு குருகுலம் வைத்து ஜீவிக்கிறான்'' என்று படபடவென்று ஆவேசம் பிடித்தவள் போல் பேசினாள். அரசன் இடைமறித்து, "விமலாதேவி! இது நியாயஸ்தலம். இங்கே தாறுமாறாகப் பேசுவதற்கு அதிகாரம் இல்லை. நீங்கள் சொல்ல வேண்டியவைகளைப் பிறர் மனம் நோகாமல் விநயமாகச் சொல்லுங்கள். அதுபோலவே நரஸிம்மனது மரண சம்பந்தமாகவும் எவைகளைச் சொல்லவேண்டுமோ அவைகளை மட்டும் சொல்லுங்கள்'' என்றார்.

அவள் மறுபடி தொடங்கினாள்.

"இந்தச் சிதானந்த ஸ்வாமியும் கலிங்க மன்னனும் ஆரம்பத்தில் நண்பர்கள். நரஸிம்மனது மரணத்திற்கு ஒரு மாதம் முன்புதான் அரசனுக்கும் இவனுக்கும் மனத்தாங்கல் ஏற்பட்டது. நரஸிம்மன் தன் குமாரனது குருகுல வாசத்தைக்கூட நிறுத்தி இவனிடமிருந்து பிரித்துவிட வேண்டும் என்று எண்ணினார். அரசனுக்கும் பைராகிக்கும் என்ன மனத்தாங்கல் என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. மகதாதிபதியுடன் அவர் சண்டையிட்டுக் கொண்டிருந்தார்.

"அரசருக்கு அசாத்தியப் பணமுடை. அதனால் இந்தப் பைராகிக்கு வேண்டியபோதெல்லாம் வாரி வாரிக் கொடுக்க முடியவில்லை. ஆகவே இருவருக்கும் விரோதம் முற்றிக்கொண்டே வந்தது. நரஸிம்மனைக் கொன்றுவிட்டுத் தன் சீடனாகிய மகேந்திரனுக்கு முடிசூட்டி வைத்தால், புதிய அரசனைத் தன் இஷ்டப்படி ஆட்டிவைக்கலாம் என்னும் உத்தேசத்துடன்தான் இவன் இந்திரபுரம் வந்தான். சண்டை மும்முரத்தில் உள்ளே புக முடியவில்லை. நான்கு நாள் முயன்று எப்படியோ உள்ளே வந்துவிட்டான். கொலை செய்தபிறகு தன்னை ஒருவரும் கண்டுகொள்ளாதிருப்பதன் பொருட்டு ஒரு பிக்ஷு உடையையும் கையில் கொண்டுவந்திருந்தான்.

"அந்தச் சமயத்தில் மன்னன் அமைதியாகத் தூங்கிக்கொண்டிருந்தான். சூரனான மெய்காப்பாளன், வாயிலில் பாராக் கொடுத்துக்கொண் டிருந்தான். முன்பு அரச குடும்பத்தில் இந்தப் பைராகிக்கு இருந்த செல்வாக்கினால் அரசனது சயனக்கிரகத்தில் நுழைவதற்குத் தடை ஒருவரும் சொல்லவில்லை. உள்ளே நுழைந்ததும்

தன் பிக்ஷு உடையில் மறைத்துக் கொண்டுவந்த கட்டாரி யினுல் இவன் அரசனை ஓங்கிக் குத்திவிட்டான். அருகில் வெளியே நின்றிருந்த மெய்காவலன் அரசனது கூக்குரலைக் கேட்டு ஓடி வந்தான். அவனைக் கண்டதும் கட்டாரியைக் கீழே போட்டு விட்டு இந்தப் பைராகி, "இந்தச் சவத்தை மறைக்க ஏதாவது ஒரு வழி செய்! இல்லாவிட்டால் நீயே கொன்றுவிட்ட தாக அரசனிடம் சொல்லுவேன்!" என்றான்.

"இந்த வார்த்தையைக் கேட்டு நடுநடுங்கிப் போன அவன் இவனுக்குப் பயந்து அந்தச் சவத்தின் தலையை வெட்டி எடுத்து வெடிமருந்துச் சாலையிலே போட்டுவிட்டான். இவனே தன் காரியங்கள் யாதொரு தடையும் இல்லாமல் நடைபெற்றதனுல் மகிழ்ந்து, அந்த அறையிலிருந்து வெளியேறினுன். இவன் வெளி யேற முயன்ற அதே சமயம் நான் அந்தச் சயனக்கிரகத்தை அடைந்தேன். இவன் முகத்தைப் பார்த்த உடனே எனக்குச் சந்தேகம் உண்டாகவே, 'அரசர் எங்கே?' என்றேன். இவன் முன்னுக்குப்பின் முரணுக ஏதோ பிதற்றினுன். அரசர் அங்கே இல்லாததையும் இவன் செயலையும் கண்டு இவனை உடனே கைது செய்த விஷயம் முன்பே தங்களுக்குத் தெரியும். பிறகு நான் உண்மையைக் கண்டுபிடிக்க வெகு பாடு பட்டேன். நெடுநேரம் தேடி அலைந்தபிறகு அரசனது தலையற்ற உடல்மட்டும் கிடைத்தது. சிதானந்தனது துரதிருஷ்டமாக அது அரசனது உடையுடனேயே கிடைத்துவிட்டது. இதுதான் நடந்தது. சமூகத்தில் தெரிவித்து விட்டேன்" என்று சொல்லி உட்கார்ந்தாள் அவள்.

மிகவும் அமைதியான குரலில், "சிதானந்தரே! இதுவரை விமலாதேவி சொன்னவைகளைக் கேட்டீர்கள். இதற்குமேல் தாங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?" என்ருர் சக்கரவர்த்தி.

சிதானந்தர் எழுந்து நின்ருர்; சபை முழுவதையும் ஒருமுறை சுற்றிப் பார்த்தன அவர் கண்கள். மிகவும் கம்பீரமான குரலில், "சக்கரவர்த்தி! நான் விஷயங்களை ஏற்கனவே தெரிவித்தாய் விட்டது. இப்பொழுது மறுபடியும் அவைகளையேதான் சொல்ல வேண்டும். என் சீடன் நரஸிம்மன் சாகவும் இல்லை, நான் கொலை செய்யவும் இல்லை. விமலாதேவி சொல்வதெல்லாம் வெறும் பச்சைப் புளுகு. பணம் எனக்கு என்றைக்குமே தேவையில்லை. அதன்பயனுக எங்களுக்குள் மனஸ்தாபம் ஏற்படுவதற்கும் இட மில்லை. அன்றும் இன்றும் என்றும் அவன் என் அந்தரங்க

சிஷ்யன். அவனை இப்பொழுதும் மனமார நேசிக்கிறேன்" என்று நிறுத்தினர்.

மேல்நடந்த விசாரணையில் தலையற்ற அந்த உடல் அரசனது தான் என்று ஆணையிட்டுச் சொன்னான் ஒரு தலைவன். அப்படியே சிதானந்தருக்கும் அரசனுக்கும் ஏற்பட்ட பண விஷயமான தகராறுகள் தனக்குத் தெரியுமென்று சாதித்தான் இன்னொருவன்.

இப்படியே படிப்படியாக, கொன்றபொழுது நேரில் பார்த்ததாகவும் சாட்சிகள் சொல்லிக்கொண்டே வந்தார்கள். அசோகனது மனம் தத்தளித்தது. இந்த விவகாரங்களுக்கு ஏற்றபடி அவன் முகமும் மாறுதலை அடைந்தது. சிதானந்தர், தாம் இருந்த இடத்திலிருந்தே வெகு அமைதியாக இந்த நாடகத்தை ரஸித்துக்கொண் டிருந்தார்.

விசாரணையின் ஆரம்பத்தில் பக்தியோடு அவரைப் பார்த்த அசோகனது கண்கள் இப்பொழுது மாறி வருவதையும் அவன் முகத்திலே சாட்சிகளை நம்பும் சின்னங்கள் தோன்றுவதையும் கவனித்தார். இந்த மாறுதல்களைத் தானும் பின்பற்றியே வந்தாள் விமலை. பெரும்பான்மையான சாட்சிகள் ஆயிற்று. அப்பொழுது, அரசன் மனம் நெகிழ்ந்திருக்கும் பொழுதே தன் காரியத்தைச் சாதித்துக்கொள்ள வேண்டும் என்று விரும்பிய விமலை எழுந்து நின்று, "தேவானும்பிரிய சக்கரவர்த்தி! இதுவரையில் இவர்கள், 'கலிங்க மன்னர் எப்படிக் கொல்லப்பட்டார்? ஏன் கொலை நடந்தது. கொன்றவர்களின் நோக்கம் என்ன? தலை எப்படி மறைக்கப்பட்டது?' என்பவைகளை யெல்லாம் சமூகத்தில் உள்ளது உள்ளபடி விளக்கிவிட்டார்கள். இன்னும் சாட்சிகள் வேண்டுமானால் கலிங்கநாட்டுப் பழைய வேலைக்காரர்களைக் கொணர்ந்து நிறுத்துகிறேன்" என்றாள்.

அசோகன் சற்றுக் கடுமையான குரலில், "இதற்குமேல் ஒரு விதமான சாட்சியும் வேண்டியதில்லை. மற்றும் சாட்சிகள் இருந்தால் போகலாம்; தீர்ப்பு இன்றைக்கேதான். ஏ! சிதானந்தா! இதுவரை சாட்சிகள் உன்மீது கொணர்ந்த குற்றச்சாட்டைக் கேட்டாய்; மேலும் ஏதாவது சொல்லவேண்டுமானால் சொல்லலாம்" என்றான்.

"இப்பொழுது சொன்ன சாட்சிகள் எல்லாம் வெறும் பொய். அவர்கள் தங்கள் கண்களில் மண்ணை வாரிப் போட்டுக்கொள்ளு

கிறார்கள். நான் உண்மையில் நிரபராதி. கலிங்கநாட்டு அரசன் நரஸிம்மன் உயிருடன் இருக்கும்பொழுது நான்தான் கொன்றேன் என்பது வெறும் பொய்; வடிகட்டிய பொய்!" என்று கோபத்துடன் சொன்னார் சிதானந்தர்.

"இதைத் தவிர வேறு ஏதாவது விஷயம் உண்டா? இவ்வளவு தானா?" என்று மிகுந்த அலட்சியத்துடன் கேட்டான் அசோகன்.

"இல்லை. வேறொன்றும் இல்லை."

அசோகன் பஞ்சாயத்தாரைப் பார்த்து இதுவரையில் இங்கே நடந்த விஷயங்கள் உங்களுக்குத் தெரியும். அரசன் இறந்தது உண்மையா? பொய்யா? கொலை உண்மையானால் இந்தச் சிதானந்தர் எப்படிக் கொலை செய்தார் என்பதை ஆழ்ந்து யோசித்து முடிவு சொல்லவேண்டியது உங்கள் பொறுப்பு. இந்த விசாரணையில் பெரியோர் சிறியோர் என்ற பேதமோ மத பேதமோ பாராட்டாமல் நடுநிலைமை வகித்துத் தீர்ப்புச் செய்ய வேண்டும்" என்றான்.

பஞ்சாயத்தார்கள் எழுந்து ஒரு தனி அறைக்குச் சென்றனர். அரசன் இருக்கிறான் என்பதையும் மறந்து, சபை முழுவதும் 'கச முச' என்ற பேச்சொலி. காவற்காரன் கூவுவதன் பொருட்டு எழுந்து நிற்கவும் அவர்கள் பேச்சின் சப்தம் குறைந்தது. பஞ்சாயத்தார் ஐவரும் ஒருமனதாகச் சிதானந்தர் குற்றவாளியே என்று தீர்மானித்தனர். சபை முழுவதும் ஒரே நிச்சப்தம்.

"சரி! சரியாக யோசித்துத்தான் முடிவு செய்திருக்கிறீர்கள். பணம்! பணத்தாசையினால்தான் இந்தப் பக்கிரி கலிங்கநாட்டு மன்னனைக் கொலை செய்திருக்க வேண்டும்!" என்று சொல்லி, "ஆசாரியரே! இந்த மாதிரி சாதுவேஷம் பூண்டு ஊரை ஏமாற்றிக் கொலைக்கும் அஞ்சாத பாதகனுக்கு எத்தகைய தண்டனை விதிக்கலாம்!" என்றான் அசோகன்.

இந்த வார்த்தை அவன் வாயினின்றும் எழுந்ததோ இல்லையோ, ஸம்புஷ்டாசாரியன் முகமும் அகமும் குளிர எழுந்து, "இந்த மாதிரி, நண்பனென்று நடித்துக் கொலைபுரிந்த நயவஞ்சகனைச் சித்திரவதை செய்வதுதான் தகும். இருந்தாலும் நமது நரகத்தின் முக்கிய அதிகாரியைக் கலந்து தீர்மானிப்பதுதான் நல்லது" என்றான்.

சிதானந்தரது முகம் இப்பொழுதும் சலனமற்று இருந்தது. நேற்று வனத்தில் நடந்த விஷயங்களும், அசோகன் ஓரளவு விமலையையும் ஸம்புஷ்டாசாரியனையும் சந்தேகித்தான் என்று ரோகிணி சொன்னதையும், இன்று இந்த விசாரணையில் அவள் ஏற்றுக்கொண்ட பங்கும், அதை அப்படியே சத்தியம் என்று அரசன் நம்பித் தீர்ப்பளிப்பதையும் எண்ண எண்ண அவர் அசோகனது குணத்தையும் போக்கையும் நிர்ணயிக்கமாட்டாதவராகத் திகைத்தார். இந்தக் கபடநாடகத்தின் திறமையை நினைக்க நினைக்க அவர் முகத்திலே இளமுறுவலின் ரேகைகள் படர்ந்தன.

உடனே ஸம்புஷ்டாசாரியனது முன்னேற்பாட்டின்படி நரகத்தின் அதிகாரி அரசனை அணுகி நின்றான். சில நிமிஷங்கள் கழிந்தன.

அசோகன் பேசத் தொடங்கினான். "ஏ! சந்நியாசி! உன் நடை, உடை, பாவனைகளைக் கண்டு மயங்கி, நீ நிரபராதியாக இருக்கக்கூடுமென்று ஆசை வைத்திருந்தேன். அரசனுக்கே குலகுருவானபடியால் உன்னுடைய சீடன்மீது அன்புள்ளவனாக இருப்பாய் என்றும் நம்பினேன். ஹரித்வாரத்திலுள்ள ஆசிரமத்தைப் பற்றியும் கேள்விப்பட்டிருக்கிறேன். இந்துக்கள் அதை மிகவும் கௌரவிக்கிறார்கள் என்பதும் தெரியும். கலிங்காதிபதி ஒவ்வொரு சின்ன விஷயத்திலும் உன்னைக் கேட்டு, உன் ஆலோசனையைக் கலக்காமல் செய்யவில்லை என்றும் தெரியும். தன் மகனையும் உன்னிடம் குருகுலவாசம் செய்யும்படி விட்டிருந்தார். பரத கண்டத்திலுள்ள எல்லா மக்களுக்கும் குருவாக உன்னை நினைத்துக் குருபக்தியின் கௌரவத்தை உலகம் உனக்கு அளித்தும் நீ அதைக் காப்பாற்றிக்கொள்ளத் தகுதியற்ற நீசனாகிவிட்டாய்! உன்னையே குருவாக நம்பிய அரசனைக் கேவலம் பண ஆசையினால் நீ கொன்றாய்! அந்தப் பேராசை என்னும் வெறியினால் இது துரோகம், விசுவாசகாதகம், கொலை என்பதெல்லாம் தோன்றவில்லை. உன்னைத் தண்டிக்காமல் விடுவது மனிதவர்க்கத்திற்கே கெடுதி என்பதற்காக உனக்குத் தகுந்த சிக்ஷை விதிக்கப்போகிறேன்" என்று அசோகன் பேசிக்கொண்டே போனான்.

அதுவரையில் மௌனமாக இருந்த போலி மகேந்திரன், "ஐயோ! இந்த அநீதி வேண்டாம். இது வெறும் அக்கிரமம். சிதானந்தரைப்போன்ற மகாத்மாவின்மீது இந்த நிந்தைகளைச் சுமத்துவது மிகக் கொடிய பாவம்! ஸ்வாமிஜி பணத்தாசை கொண்ட பேயர் அல்ல. அவர் பெயரை உச்சரித்தவர்கள் மனத்தில்கூட

பேராசை அண்டாது. அவர் குற்றவாளியே அல்ல. இதுவரை நடைபெற்றவைகள் எல்லாம் புதிய ராணியின் கபடநாடகம். உண்மையின் ஒரு தூசிகூட அந்த நாடகத்திலே கலப்பில்லை. என் தந்தை உயிரோடுதான் இருக்கிறார். இது நிச்சயமாக எனக்குத் தெரியும். அவர் கொலை செய்யப்பட்டாரென்று கற்பித்து, அந்தக் குற்றத்தை இவர்மீது சுமத்தித் தண்டிப்பது மிகவும் அநீதி! இன்னும் சற்று நிதானித்து ஆற அமர யோசியுங்கள்" என்றான்.

அவன் குரல் கோபத்தால் சீறும் பெண்சிங்கத்தின் குரல் போல் அந்த மண்டபம் முழுவதும் எதிரொலித்தது.

"யுவராஜா! இதென்ன வார்த்தை! உன் தகப்பனாரை இவனேதான் கொன்றிருக்கிறான் என்பதற்கு இத்தனை ஆதாரங்களுடன் விசாரணை நடந்து நிரூபிக்கப்பட்டது. இந்த நிலையில் நீ அவனுக்குப் பரிந்து பேசுகிறாய்! அது உன்னுடைய தனிப்பட்ட குருபக்தியாக இருக்கலாம். ஆனால் மகதநாட்டு வீரர்கள் இத்தகைய கொடுஞ் செயலை, ராஜகுடும்பங்களுக்கு ஏற்பட்ட கொடிய அவமானத்தைப் பொறுக்கமுடியாது!"

"சக்கரவர்த்தி அவர்களே! இந்த வார்த்தை தங்களது வாயிலிருந்து வருவது அழகல்ல. மகதநாடுதான் கௌரவத்தை இழக்காது என்று அர்த்தமா? இது கலிங்கநாட்டை இழிவுபடுத்துவதாகும். கலிங்கநாட்டு இளைஞர்கள் எப்படிப்பட்டவர்கள், எப்படி நடந்துகொள்வார்கள் என்பது சமீபத்தில் தங்களுக்கும் தெரியவந்திருக்கிறது. தகப்பனார் கொலை செய்யப்பட்டார் என்ற வார்த்தைகள் உண்மையானால் இந்த இளவரசன் சுகமாக, அசோகருக்கு விருந்தாளியாக இங்கே உட்கார்ந்திருக்க மாட்டான். தங்களது கையை எதிர்பாராமல், தானாகவே சென்று பழிக்குப் பழி வாங்கியிருப்பான். ஆனால் என் தந்தை - கலிங்க மன்னர் - உயிருடன் இருக்கிறார். அது எனக்கு நிச்சயமாகத் தெரியும்" என்று ஆவேசத்துடன் கூறி நிறுத்தினான் இளங்கோ.

அதுவரையில் கோபத்தினால் சிவந்திருந்த அசோகனது முகம் ஆச்சரியத்தால் மலர்ந்தது. 'ஆம்! உண்மைதான். மதுராபுரியில் பிடிபடுமுன் அவன் பழிவாங்கியிருக்கவும் கூடும்' என்று ஒரு சிறுகுரல் அவன் செவிகளுள் சொல்லுவதுபோல் கேட்டது.

"என்ன! கலிங்காதிபதி உயிருடன் இருக்கிறாரா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் அசோகன்.

"ஆமாம்! உயிருடன் இருப்பது மட்டும் அல்ல. இன்று காலையில் அவரைக் கண்ணாலேயே கண்டேன்.'!

"யுவராஜா! கனவிலே தோன்றுபவைகள் நியாயஸ்தலத்திலே தீர்ப்பளிக்க உதவா. இந்த மாதிரியான கற்பனைகளினால் ஸ்வாமியை விடுதலை செய்ய முடியாது" என்று நகைத்தவண்ணம் சொன்னான் சக்கரவர்த்தி.

"சக்கரவர்த்தி! நான் கண்டது கனவல்ல. உண்மையிலேயே இன்று சூரியோதயத்துக்குமுன் இந்தப் பாடலிபுரத்திற்கு அவர் வந்திருந்தார்."

"இவைகளெல்லாம் வீண் பிரமை. அவர் உண்மையில் இந்தப் பாடலிபுரத்திற்குள் வந்திருந்தால் தன் குருவின் விடுதலைக்காக ஓடிவந்திருக்கமாட்டாரா? யுவராஜ்! வீணில் என் நேரத்தை ஓட்டிவிடாதே" என்று சொல்லிவிட்டுத் தீர்ப்புக் கூறத் தொடங்கினான்.

"ஸ்வாமி சிதானந்தன் என்ற இந்தக் கபட சந்நியாசியைக் கலிங்காதிபதியைக் கொன்றதன்பொருட்டு இந்தப் பாடலிபுரத்தில் உள்ள பூலோக நரகத்திற்கு அனுப்பி வைக்கிறோம். அங்கேயுள்ள எண்ணெய்க்கொப்பரையில் போட்டு உயிர் போகும்வரை..."

"இதென்ன இது! மனிதத்தன்மையற்ற நீசமான தண்டனை! ஏ! சக்கரவர்த்தி! நேற்றுத் தங்களைச் சிங்கத்தின் வாயிலிருந்து காப்பாற்றியபொழுது, 'உனக்கு எது வேண்டுமானாலும் கேள்; கொடுக்கிறேன்' என்று வாக்களித்தீர்கள் அல்லவா? அந்த வரத்தை நான் இப்பொழுது, இங்கே கேட்கிறேன். எனக்கு ஸ்வாமிஜியின் உயிரைக் கொடுங்கள். அவருக்கு உயிர்ப்பிச்சை அளியுங்கள்!" என்று ஆவேசத்துடன் கூவினான் யுவராஜன்.

யுவராஜனது இந்த வார்த்தைகளைக் கேட்டு, விமலையும் ஸம்புஷ்டாசாரியனும் திடுக்கிட்டார்கள். எவ்வளவோ முயற்சி செய்து கைகூடும் பொழுதிலிருந்த இந்த விஷயம் நீர்க்குமிழி போல் தடாலென்று வெடித்துவிடும் என்று அவர்கள் நினைக்கவே இல்லை.

அசோகனும் திகைத்துப்போனான். யுவராஜனது சமயோசிதமான புத்தி கூர்மையின் பெருமையை நினைத்து ஆனந்தமடைந்தான். ஆனால் தர்மசங்கடமான இந்த நிலையிலே இன்னது செய்வதென்று அறியாதவனாகத் தயங்கினான்.

சிதானந்தரது நெஞ்சம் வாத்ஸல்யத்தினால் நிறைந்திருந்தது. உண்மையில் பெண்மணியான அவளுடைய ஆவேசம் மிகுந்த வார்த்தைகளினால் அவர் நெஞ்சம் சலித்தது. கண்களில் கண்ணீர் துளித்து நின்றது. விம்மலும் நடுக்கமும் கலந்த குரலில், "யுவராஜ, எனக்கு இரங்கும்படி கேட்கவேண்டாம். இந்த உயிர் இருந்தால் என்ன? போனால் என்ன? ஆத்மா, நித்யவஸ்து. கொலை செய்ததாக ஒரு கொடிய சூழ்ச்சிசெய்து என்மேல் குற்றம் சுமத்தியிருக்கிறார்கள். நான் நியாயத்தைத்தான் வேண்டுகிறேனே யன்றி உயிரை வேண்டவில்லை."

"இன்னும் நியாயத்தைப்பற்றி உங்களுக்குச் சந்தேகம் இருக்கிறதா?" என்றான் அசோகன்.

"உலகத்தின் ஞானம் எவ்வளவுதான் உன்னத நிலையை அடைந்திருந்தாலும், நாகரிக முன்னேற்றங்கள் ஏற்பட்டிருந்தாலும் நியாயம் என்ற பெயரால் அநியாயங்கள் நடந்துகொண்டே தான் இருக்கின்றன. நமக்குக் கிடைத்திருக்கும் ஞானமோ வெகு சொற்பம். அந்தச் சொற்ப ஞானத்தை வளர்க்க எவ்வளவோ பாடுபடுகிறோம். ஆனால் அது சில சமயங்களில்தான் பூரணத்வம் அடைகிறது. தாங்கள் என்பொருட்டு மிகுந்த சிரமப்பட்டு விசாரித்திருக்கிறீர்கள். சரியான நியாயம் வழங்கப்படவில்லை என்று தங்களையாவது நியாய ஸ்தலத்தையாவது குறை கூறுகிறேன் என்று நினைக்கவேண்டாம். என்மேல் பகைமை கொண்டவர்கள் தங்களை வெகு சுலபமாக ஏமாற்றிவிட்டார்கள். அதன்பொருட்டு வருந்துகிறேன். இந்தப் பூவுலகில் கொடுக்கப்படும் தீர்ப்பு, சில சமயங்களில் அநீதியாக முடிகின்றது. நெடு நாட்களுக்குப் பின் உண்மை வெளியாகும்பொழுது பச்சாத்தாபப்படும்படி நேருகின்றது. இப்படிப்பட்ட ஒரு களங்கம்—ஆற அமர விசாரியாமல், மகதாதிபதி ஸம்ராட் அசோகர் குற்றம் செய்தாரென்ற ஓர் இழிவு—தங்களுக்கு ஏற்படக்கூடாதென்று யுவராஜர் விரும்புகிறார். ஆகவே, ஒருவருடைய மனமும் சங்கடம் அடையாமல் என் தண்டனையை இன்னும் ஒரு மாதம்-இன்று முதல் ஒரு மாதம்-ஒத்திவைக்கும்படி, தவணை கேட்கிறேன். இப்படிச் செய்வதனால், தாங்கள் நேரில் கலிங்காதிபதியைச் சந்திக்கும்பொழுது ஒரு துறவியைக் கொன்றோமே என்று பச்சாத்தாபப்படாமல் இருக்கலாம்" என்று நிறுத்தினார் சிதானந்தர்.

"சக்கரவர்த்தி! ஸ்வாமியின் விருப்பப்படி ஒரு மாதத் தவணை கொடுங்கள். நான் இன்று காலையில் என் தகப்பனாரைக்

கண்டது உண்மை. ஏதோ சில முக்கியமான காரணங்களினுல் அவர் தங்கள்முன் வராமல் இருக்கலாம். கூடிய சீக்கிரம் இவரை விடுவிப்பதன் பொருட்டே தங்கள் முன் வந்தாலும் வரலாம்'' என்முன் யுவராஜன்.

''ஏ சந்நியாசி! இந்த ராஜகுமாரனுடைய வார்த்தைகளின் பொருட்டு என் சொந்த விருப்பத்திற்கும் மாருக ஒரு மாதம் தவணை கொடுக்கிறேன். இந்த ஒரு மாதத்தில் நீ செய்த பாபச் செயல்களுக்காக வருந்திப் பிராயச்சித்தம் செய்துகொள்'' என்று சொல்லியவனுக ஆசனத்தைவிட்டு எழுந்தான் அசோகன்.

* * *

கூட்டம் கலையும்வரையில் இடத்தைவிட்டு அசையாமல் அங்கேயே உட்கார்ந்திருந்தாள் விமலே. ஸ்ம்புஷ்டாசாரியன் அவள் என்ன செய்யப்போகிருளோ என்று வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்துக்கொண் டிருந்தான். மேடையின் மேலி இருந்தவர்கள் எல்லோரும் முன் வாயிலேத் தாண்டிவிட்டார்களா என்று அறிய விரும்பி அவள் கண்கள் அந்த மண்டபம் முழுவதையும் ஒருமுறை வட்டமிட்டன.

மெல்ல எழுந்து அசோகன் உட்கார்ந்திருந்த ஆசனத்தை நெருங்கினுள். மிகவும் சுவாதீனமாக அங்கே வைத்திருந்த ஓலேச் சுவடிகளை ஒன்று சேர்த்தவண்ணம், 'அடடா! சக்கரவர்த்தியின் கையெழுத்துத்தான் என்ன அழகு!' என்று எடுத்துப் பார்க்கத் தொடங்கினுள். அந்தச் சுவடிகளை எடுத்துவைக்கும் உத்தியோகஸ்தன் இவளது முகத்தையே பார்த்து நிற்கிருன் என்பதைத் தெரிந்துகொண்டு, அவனுடன் பேச்சுக் கொடுத்துக்கொண்டே சிதானந்தரது குற்றச்சாட்டு எழுதியிருந்த ஓலேயைத் தன் மடியிலே விழும்படி செய்து ஒளித்துக்கொண்டாள். தன் புன்னகையினுல் மயங்கிநின்ற அவனே மீண்டும் ஒரு புன்சிரிப்பினுல் கடாட்சித்தவளாக அன்ன நடை நடந்து மேடையினின்றும் இறங்கினுள். இந்தச் சூழ்ச்சிகளை எல்லாம் கண்கொட்டாமல் பார்த்து நின்ற ஸம்புஷ்டாசாரியனும் மந்திரத்தாற் கட்டுண்டவன்போல் அவளைப் பின் தொடர்ந்தான்.

# 20

## ஓலை

மண்டபத்திலிருந்து புறப்பட்ட அவள், முக்கியமான வாயிலின் வழியாக வெளியே வராமல், மற்ெறாரு கள்ள வழியை நாடிச் செல்லலானாள். நேரே வேறெங்கே போவாள்? ராஜமாதாவின் பர்ணகுடிக்குத்தான் போவாளென்றுதான் முதலில் நினைத்தான் ஸம்புஷ்டாசாரியன். ஆனால் அங்கேயும் போகாமல் தன் வழக்கமான ஆடம்பரங்கள், பரிவாரங்கள் ஒன்றும் இன்றி, ராஜ வீதியிலுள்ள சந்து பொந்துகளிலெல்லாம் புகுந்து புகுந்து போவதைக் கண்டு அந்தப் பௌத்த பிக்ஷுவுக்கு அவள்மேல் சந்தேகம் உண்டாயிற்று.

'அந்த ஓலைச்சுவடி மிகவும் முக்கியமானதாகத்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால்?......எனக்காவது, ராஜமாதாவுக்காவது தெரிவிக்காமல் இவளுக்குமட்டும் அவ்வளவு முக்கியமான விஷயம் என்ன? கட்டாயம் இதை அறிந்தேதான் தீரவேண்டும். நம்மிடங்கூட ஒளிக்கும்படி அதென்ன அவ்வளவு ரகசியம்!" என்று எண்ணமிட்டான் பிக்ஷு சிரேஷ்டன்.

ஒரு விஷயம் எவ்வளவு உயர்ந்ததாக இருந்தாலும், அதை வெளிப்படையாகச் செய்தால் ஒருவரும் சட்டைசெய்ய மாட்டார்கள். அதேபோல், ஒரு சிறு விஷயத்தை மூடிவைத்துச் செய்தோமானால் அதை எப்படியாவது அறிந்துகொள்ள வேண்டுமென்னும் ஆவல் அதிகரிக்கும். இது உலக இயல்பு.

'இந்த ஓலை நறுக்கென்ன, அதை இந்த விமலை இவ்வளவு சாமர்த்தியமாக எடுத்ததென்ன? தன்னுடன் ஒத்துழைக்கும் ஸம்புஷ்டாசாரியன், புத்திமதிதேவி இவர்களிடங்கூட ஒன்றும் சொல்லாமல் இருப்பானேன்? அதுமட்டுமன்றித் தன் ஆடம்பரங்கள், பரிவாரங்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டுச் சந்திலும் பொந்திலும் புகுந்து போவானேன்?' என்று எண்ணியவனாய், அவளைப் பின்தொடர்ந்து, எப்படியாவது விஷயத்தைக் கிரகித்துவிடுவதென்று நினைத்து, அவளுக்குத் தெரியாமல் பின்தொடரலானான் அவன்.

ஆனால் அவள் போக்கோ ஏதோ ஒரு குறிப்பிட்ட இடத்திற்குப் போவதாகத் தோன்றவில்லை. எங்கேயோ நுழைந்து எங்கேயோ புறப்பட்டுப் போய்க்கொண்டே இருந்தாள். ஜன சந்தடியுடன் கூடிய அந்த நகரிலே அமைதியான ஓர் இடம் அவளுக்குக் கிடைக்கவில்லை. கடைசியில் ஊருக்கு வெளியே வந்து, கங்காநதியின் கரையில் சுற்றிலும் மனிதர் நடமாட்டம் இருக்கிறதா இல்லையா என்று நிச்சயப் படுத்திக்கொண்டு ஒரு சிலாதலத்தின் மேல் உட்கார்ந்தாள்.

அந்த அழகிய பாறை, கங்கையின் கரையை அடுத்து அகன்று நீண்டு, ஒரு பெரிய விசுப் பலகைபோல் சமமாக இருந்தது. அந்தப் பாறையின் இடதுபுறம் கங்கையின் நிர்மலமான பிரவாகம் அமைதியாக ஓடிக்கொண் டிருந்தது. இயற்கையாகவோ நீர்ப்பெருக்கின் வேகத்தினலோ அந்த அகன்ற உயரமான பாறையின் மறுபுறத்தில் சிறு சிறு மாடங்கள்போல் பொந்துகள் இருந்தன. அவள் பிரவாகத்தை நோக்கி உட்கார்ந்து சற்றே நிதானித்தாள். அவளுக்குத் தெரியாமல் பின்புறம் வந்து, எந்த இடத்தில் பதுங்கினால், அவள் செயல் தனக்குத் தெரியுமோ அங்கே பதுங்கி உட்கார்ந்தான் ஸம்புஷ்டாசாரியன். அங்கிருந்து அவளது சிறு அசைவும் அவனுக்கு நன்ருகத் தெரிந்தது.

அவள் முகம் ஆனந்த மிகுதியினல் மலர்ந்திருந்தது. மெல்ல மெல்லச் சுவடியை வெளியில் எடுத்தாள் அவள். ஆனால் இவ்விரு வரையும் தவிர ஏற்கனவே ஒரு மனிதன் வேருெரு பொந்தில் உட்கார்ந்திருந்தது, ஆசாரியனது கழுகுக் கண்களுக்கும் புலப் படவில்லை.

அவள், சுவடியைத் திரும்பத் திரும்பப் பன்முறையும் படித்தாள். படித்துவிட்டு மறுபடியும் கையில் வைத்துக்கொண் டாள். எத்தனை முறை படித்தும் திருப்தி அடையாதவளாக மறுபடி ஒருமுறை படித்தாள்.

ஆசாரியனுக்குக் கோபம் கோபமாக வந்தது. 'சின்ன ஓலை நறுக்கு. அதிலே அப்படி விழுந்து விழுந்து படிக்கும்படி என்ன பரம ரகசியம் புதைந்து கிடைக்கும்? நான் இவ்வளவு வேண் டியவன். என்னிடங்கூட ஒளித்துவைக்கும்படி அப்படி என்ன ரகசியமோ! இருக்கட்டும் இருக்கட்டும்; தீட்டிய மரத்திலேயே பதம் பார்க்க ஆரம்பித்துவிட்டாளா! எதிரில் போய் நிற்கிறேன்;

என்னதான் செய்கிருளோ பார்த்துவிடுகிறேன்' என்று எழுந்து அவள் எதிரிலே வந்துநின்ருன் ஸம்புஷ்டாசாரியன்.

அவள் ஆச்சரிய மிகுதியினுல் திகைத்துப் போனுள். "யார்? ஆசாரியரா?" என்ற வார்த்தைகள் மிகுந்த சிரமத்தோடு அவள் வாயினின்றும் வெளிவந்தன. "எங்கே இப்படி? இந்தச் சமயத் தில்!" என்று மீண்டும் கேட்டாள்.

"விமலாராணி, இந்தக் கேள்விக்கு நீ விடை சொல்வதுதான் பொருந்தும். என்னைப்போன்ற துறவிகளுக்கு ஏற்ற இடம் இது. உன்னைப்போன்ற ஓர் அரசி, அதிலும் கலிங்கநாட்டு அரசி, இங்கே எதற்கு வரவேண்டும்? அதுதான் விளங்கவில்லை."

"ஆசாரியரே! உங்களைப்போன்ற துறவிகளை, தர்மத்திலேயே எப்பொழுதும் ஆழ்ந்திருப்பவர்களை எனக்கு நன்ருகத் தெரியும். அப்படியே உங்களைப்போன்ற பெரியவர்கள் தன்னலத்தை விட்டு வேறெரு செயலிலும் ஈடுபடமாட்டீர்கள் என்பதும், நீங்கள் தியானம் செய்யும்பொருட்டு இந்தக் கங்கா தீரத்துக்கு வர வில்லை என்பதும் எனக்கு நன்ருகத் தெரியும். என் யோசனை யையும் தனிமையையும் வீணுகக் கெடுத்தீர்கள்!" என்று பட படத்துச் சொன்னுள்.

"விமலாராணி! என்னுடைய வரவு உன் சிந்தைகளுக்குத் தடையாக ஏற்பட்டுவிட்டதா? இதுவரையில் நான் செய் திருக்கும் உதவிகளை இதற்குள் மறந்துவிட்டாயா? கலிங்கநாட் டுக்கு அரசியாக இருக்கிருய். ஆனுல் அந்தப் பதவியை எவர் உதவியால் அடைந்தோம் என்பது அதற்குள் மறந்துவிட்டதா?"

"ஆசாரியரே! நான் எந்த விஷயத்தையும் மறக்கவில்லை. விஸ்தாரமான கலிங்கநாட்டுக்கு அரசியானது, எந்த உபாயத்தினுல் என்பது எனக்கும் தெரியும்."

"இல்லை! விமலாராணி! இன்று அரசியாகிவிட்டாய். ஐசுவரி யத்தின் பெருமையினுலும் பதவியினுலும் நான் செய்த உதவிகளை நீ மறந்துவிட்டாய்."

"ஆசாரியரே! உங்களுடன் வாதாட நான் விரும்பவில்லை. இருந்தாலும் நீங்கள் எண்ணுவது பிசகு என்பதை நான் நிரு பிக்க வேண்டும். நீங்கள் அடிக்கடி, நான் அரசியானது உங்க ளுடைய தயவினுல்தான் என்று பெருமை யடித்துக்கொள்ளு

கிறீர்கள். அது மிகவும் தவறு. நீங்கள் உண்மையாகவே எனக்கு ராணி என்ற பதவி கிட்டும்படி செய்திருக்கிறீர்கள். இருந்தாலும் அந்த விஷயத்தில் நீங்கள் வெற்றி பெறவில்லை. ஏனென்றால் அசோகரது நிபந்தனைக்கு உட்பட்டு ஏற்றுக்கொண்டிருக்கும் இந்த ராணி என்னும் பதவி ஒரு நொடியில் அழிந்துபோகக் கூடியதுதானே. மூன்றேமுக்கால் நாழிகை, செப்பிடுவித்தை போல் கிடைத்திருக்கும் இந்த ராணி பதவியினால் ஏமாந்துபோகக் கூடியவள் அல்ல இந்த விமலை!" என்று வெகு அமர்த்தலாகக் கூறினாள் அவள்.

ஆசாரியரின் கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன. "என்ன! மூன்றேமுக்கால் நாழிகை ராணி பதவியா! அசோகர் விதித்த நிபந்தனையில் இவ்வளவு சூட்சுமம் இருக்குமென்று எனக்குத் தோன்றவில்லை. கலிங்கநாட்டு மக்களுக்கு ராஜபக்தி ஏற்பட வேண்டுமென்று கருதி நிபந்தனை விதித்திருக்கலாமென்றே நான் இதுவரை நினைத்திருந்தேன்" என்று தன் அறியாமைக்காக வருந்துபவர்போல் பேசினார்.

அவள் மிகவும் அழுத்தமான குரலில், "அந்த நிபந்தனையின் அந்தரங்கம் எனக்கு மிகவும் நன்றாகத் தெரியும். கலிங்காதிபதி இருக்கிறானா இல்லையா என்பது வேறு விஷயம். அப்படியே அவன் இல்லையென்றே வைத்துப் பேசினாலும், இளவரசன் மகேந்திரன் தான் கொட்டாப்புளி மாதிரி உட்கார்ந்திருக்கிறானே! அவனை என்ன செய்வது?" என்று எரிச்சலுடன் சொன்னாள்.

ஆசாரியன் புருவத்தை நெறித்தவண்ணம், "நிபந்தனையில் ஒரு சிறு விஷயம் நீ மறந்துவிட்டாய்போல் இருக்கிறது. இளங்கோ மகேந்திரன், சிதானந்தனின் சீடன். கேவலம் ராஜ்யத்திற்காகப் பௌத்த மதத்தில் சேருவானென்று நினைக்கிறாயா?" என்று மிகவும் அமைதியாகச் சொன்னான்.

"அவனை நீங்கள் உள்ளபடி தெரிந்துகொள்ளவில்லை. சக்கரவர்த்திக்காக, பௌத்த மதத்தைப் பின்பற்றுவதுமட்டும் அல்ல; வேறு எந்தச் செயலை வேண்டுமானாலும் செய்ய அவன் தயங்கவே மாட்டான். நேற்றுச் சிங்க வேட்டையில் தன் உயிரையே கொடுக்க முன்வந்ததை நேரிலேயே பார்த்தோம். பகைவன் உயிரைக் காப்பாற்றும் விஷயத்திலேயே அப்படி நடந்துகொண்ட அவன், சக்கரவர்த்தி ஒரு வார்த்தை சொன்னால் பௌத்த மதத்தில் சேர்ந்துவிடுவான். இதில் ஆச்சரியம் என்ன? சக்கரவர்த்தியும்

அவன் வார்த்தைகளைக் கௌரவிக்கிறார். பரஸ்பரம் ஒருவருக் கொருவர் அப்படியே.

"சற்றுமுன் தர்பாரில் நடந்த சம்பவங்கள் இதைக் காட்டப் போதுமானவை. அசோகருக்குச் சிதானந்தர்மேல் ஏற் பட்டிருந்த கோபம், அவனுடைய ஒரே வார்த்தையினால் மாறி விட்டது. இருவருடைய நட்பும் நாளுக்குநாள் வளர்ந்து, வேரூன்றி வருகிறது. இவைகளை யெல்லாம் பார்த்தால் என் னுடைய பெரிய பதவி என்ன சாசுவதம்? ஆசாரியரே! இப் பொழுது புரிகிறதா, என்னுடைய ராணி பதவி நீர்மேல் குமிழி என்பது?" என்று படபடவென்று சொல்லி ஒரு நெடுமூச்செறிந் தாள்.

"விமலா தேவி, நீ சொல்வது உண்மைதான். இருந்தாலும் சோர்ந்துபோய் உட்கார்ந்திருப்பது நம் கடமையல்ல............" என்பதற்குள் இடைமறித்து, — "ஆசாரியரே! இந்தப் பதவி க்ஷணபங்குரம் என்று தெரிந்ததல்லவா?"

"ஆமாம்."

"ஆகவே, நான்தான் இந்த அருமையான பதவியை வாங்கி வைத்தேனென்று தம்பட்டம் கொட்டிக்கொள்வதும், அதையே ஒரு பெரிய விஷயமாக வைத்துத் தாக்கித் தாக்கிப் பேசுவதும் எதற்கு? நீங்கள் எவ்வளவு செய்திருக்கிறீர்களோ அதைப் போலப் பத்து மடங்கு நான் உங்களுக்குச் செய்திருக்கிறேன் என்று தெரிந்தும் மறந்துவிட்டேனென்று தூஷிக்கிறீர்கள்" என்று வெகு கர்வத்துடன் சொல்லி அவனை ஏறிட்டுப் பார்த்தாள் விமலை.

"விமலாதேவி! உன் கையிலுள்ள ஓலைதான் என்னை அப்படி நினைக்கத் தூண்டியது."

"என்ன? ஓலையா? அதென்ன ஓலை?" என்று ஒன்றுமே அறியாதவள்போல் கேட்டாள் அவள்.

"ஓகோ! தெரியவில்லையா? இவ்வளவு நேரம் உன் கையில் இருந்து, உன் கண்முன்னே தாண்டவமாடிக்கொண் டிருந்த ஓலை. ஊரைவிட்டு நிர்ஜனமான இந்த இடத்திற்கு இழுத்துவந்த அதே ஓலை!" என்று சிரித்துக்கொண்டே சொன்னான் ஸம்புஷ்டா சாரியன்.

"என்ன! என்ன சொல்லுகிறீர்கள்? ஓலையைப் படித்துக் கொண் டிருந்தேனா? இதென்ன கதை!" என்றாள்.

"விமலா! யாரிடம் இந்தக் கபட நாடகம்? ஸம்புஷ்டாசாரியனிடம் உன் கைவரிசை செல்லாது. இதுவரையில் ஸம்புஷ்டாசாரியன் செயல்களும் சரித்திரமும் உனக்கு நன்ருகத் தெரியும். கபடத்திலும் சூழ்ச்சியிலும் நீ அவனை வெல்லவே முடியாது. அப்படி இருக்க இந்த ஓலை விஷயத்தில் நீ ஏன் அவனைத் துணை கோரவில்லை."

இந்த வார்த்தைகள் காதில் விழுந்ததாகவே பாவியாமல், "ஆசாரியரே! என்ன ஓலை? நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையே!" என்ருள்.

"ஓகோ! அப்படியா? நீ சபாமண்டபத்திலிருந்து ஓலையை மறைத்து வைத்துக்கொண்டு, சந்திலும் பொந்திலும் புகுந்து வந்ததுமுதல் இந்த க்ஷணம்வரை உன் ஒவ்வொரு சிறு அசைவும் எனக்குத் தெரியும்" என்று கம்பீரமாக மொழிந்தான் ஆசாரியன்.

அவள் முகம் வெளுத்தது. "ஆசாரிய! உங்கள் வார்த்தை உண்மைதான். உங்களைப்போல் வேறு யாராவது பார்த்திருப்பார்களோ?"

"இல்லை, வேறு ஒருவரும் பார்த்திருக்க முடியாது.?"

"அப்படியானல் சரி. உங்களிடம் சொல்லாமல் இருந்தது வேருரு காரணத்தாலும் இல்லை. விஷயத்தைச் சாமர்த்தியமாகச் செய்து முடித்துவிட்டுத் திடீரென்று சொல்லித் திகைக்க வைக்க வேண்டுமென்றுதான் இப்படிச் செய்தேன். ஆனல் ஆசாரியரது கூரிய புத்திபலத்தின் முன் நான் எம்மாத்திரம்! இப்பொழுது எல்லாவற்றையும் உடைத்துச் சொல்லி, நீங்கள் எப்படித் தீர்மானிக்கிறீர்களோ அப்படி நடந்துகொள்வதாக முடிவு செய்துவிட்டேன். ஆனல் இந்த விஷயத்தைப்பற்றி ஒருவரிடமும் மூச்சுக்கூட விடுவதில்லை என்று ஆணையிட்டுக் கொடுக்க வேண்டும்."

"விஷயத்தை ரகசியமாக வைத்துக்கொள்ள என்னிடமிருந்துகூடவா ஆணை வேண்டுமென்று நினைக்கிருய்?"

"ஆமாம்! தங்களுக்கு மிகவும் வேண்டியவர்களுக்குக்கூடத் தெரியக்கூடாது. ராஜமாதா புத்திமதி தேவிக்குக்கூட நாம் வெற்றி பெறும்வரை விஷயம் தெரியவே கூடாது."

"சரி! அந்த ஓலையை என்னிடம் கொடு. ராஜமாதாவுக்குத் தெரியலாமா கூடாதா என்று யோசிக்கலாம்."

"ஓகோ! அப்படியா? அது ஒருநாளும் முடியாது. இந்த விஷயத்தைப்பற்றி வாக்குறுதி அளித்தாலொழிய ஓலையைப் பார்க்க முடியாது!" என்று கண்டிப்புடன் சொன்னாள் அவள்.

ஆசாரியன் பாடு தடுமாற்றம் ஆகிவிட்டது. ஆவல் மிகுதியினால் ஆணையிட்டுவிட்டான்.

"இன்னும் ஒரே ஒரு வார்த்தைதான் பாக்கி. அதாவது இந்த ஓலையை எப்படி உபயோகிக்க வேண்டுமென்று எனக்குக் கட்டளையிடக் கூடாது. என் இஷ்டம்போல் உபயோகித்துக் கொள்ளுவேன். அதற்கும் உடன்படுவதானால் இந்த ஓலையை நீங்கள் படிக்கலாம்."

ஓலையின் பொருட்டு அவள் இவ்வளவு கண்டிப்பாக நடந்து கொள்வது அவனுக்கு ஆச்சரியத்தையும் விசனத்தையும் உண்டு பண்ணிற்று. வேறு வழியின்றி அதற்கும் உடன்பட்டான் அவன். பிறகு ஓலையை ஆசாரியன் கையிலே கொடுத்தாள் விமலை.

ஓலையைத் திருப்பித் திருப்பிப் பலமுறை படித்தான் ஆசாரியன். விஷயம் விளங்கினால்தானே! "விமலாராணி! இந்த ஓலையில் என்ன இருக்கிறது? இதில் என்ன பிரமாதமான புதைபொருள் இருப்பதாக நினைத்தாய்?" என்றான்.

"இன்னும் விளங்கவில்லையா? சிதானந்தருக்கு எத்தகைய தண்டனை விதிக்கவேண்டும் என்று அசோகர் நரகாதிபதிக்கு எழுதினது. இதுகூடவா புரியவில்லை?"

அவன் மறுபடி உரத்த குரலில் அந்த ஓலையைப் பாராயணம் செய்யலானான். "கட்டளை என்பதைத் தவிர வேறொன்றும் தெரியவில்லையே" என்றான்.

"மிகவும் நல்லது! உங்கள் இஷ்டப்படி ஓலையைக் காண்பித்தாயிற்று. அதில் உங்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை. என்னிடம் ஆணையிட்டபடி பிறரிடம் கொட்டி அளக்காமல் இருந்தால் போதும்!"

"ஓஹோ! அவ்வளவு சுலபமாக நான் விட்டுவிடுவேனா? இப்பொழுது எனக்கு அது விளங்காமல் இருந்தாலும், நீ காரியம்

இல்லாமல் அதை இவ்வளவு தூரம் கொண்டுவந்ததையும், அதைக் காண்பிப்பதற்கு ஆணையிடும்படி வற்புறுத்தியதையும் நினைக்க அதில் ஏதோ பெரிய விஷயம் அடங்கியிருக்கிறது என்பதில் சந்தேக மில்லை. விஷயம் எனக்குத் தெரிந்துதான் ஆகவேண்டும்!"

இவளால் என்ன கெடுதி நேரிடக்கூடும் என்று நினைத்தவளாக மறுபடி ஒருமுறை அந்தக் கடிதத்தைப் படிக்கும்படி சொன்னாள். ஆசாரியர் படிக்கலானார்.

'நரகாதிபதி அவர்களுக்குத் தேவாளும்பிரிய ஸம்ராட் அசோக சக்கரவர்த்தி அளித்த கட்டளை. இந்தக் கடிதத்தை எடுத்து வரும் குற்றவாளியை, நமது பூலோக நரகத்தில் உயிர்போகும் வரையில் எண்ணெய்க் கொப்பரையில் போட்டுவிட வேண்டும். அதற்கு முன்பு ஈசுவரத்தியானம் செய்யவும், குற்றங்களை நினைத்துப் பிராயசித்தம் செய்துகொள்ளவும் நான்குஜாம நேரம் அவகாசம் கொடுக்கவும்!'

இதுதான் ஓலை நறுக்கிலுள்ள விஷயம். அடியில் அரசர் பெருமானின் முத்திரை. அதன் கீழே கையொப்பம். ஆசாரியர் விஷயம் விளங்காதவராக அவளை ஏறிட்டுப் பார்த்தார்.

அவள் மிகவும் பரிகாசக் குரலில், "இது கண்ணில்லாத கபோதிகளுக்குக்கூட வெட்ட வெளிச்சமாகத் தெரியும் விஷய மாயிற்றே! உங்களுக்கு இன்னுமா விளங்கவில்லை!" என்றாள். அவள் முகத்திலே வெற்றியின் பெருமிதம், ஸம்புஷ்டாசாரி யனைக்கூடத் திணற அடித்துவிட்டோம் என்ற பெருமை படர்ந்தது.

உண்மையில் இந்த ஓலையை வைத்துக்கொண்டு என்ன செய்வது என்று அவருக்கு விளங்கவே இல்லை. கண்களைக் கொட்டையாக விழித்து அவளைப் பார்த்தார்.

"இந்தக் கடிதம் ஓர் உயிரை இந்த நரகத்தின் மூலம் போக் கடிக்கும்!"

"ஆமாம்! அதுதான் தெரிகிறதே. சிதானந்தனுக்கு என்ன தண்டனை என்பதைச் சக்கரவர்த்தி நரகாதிபதிக்குத் தெரிவித் திருக்கிறார். ஆனால் இது நமக்கு என்ன பலன் தரும்? அதுதான் வேறுவிதமாக முடிந்துவிட்டதே? தண்டனை மாறிவிட்டபடியால்

இந்தக் கடிதம் வெறும் குப்பைதானே. இதில் என்ன சூட்சுமம் இருக்கிறது?"

"ஆனால் குப்பையைக்கூட விலை மதிப்புள்ள பொருளாக்கிப் பலன் பெறக்கூடிய சக்தி என்னிடம் இருக்கிறது" என்று மிகுந்த கர்வத்தோடு சொன்னாள் அவள்.

சற்றுநேரம் அமைதி. மீண்டும் மிகுந்த அமர்த்தலோடு, "இந்த ஓலையிலே சிதானந்தன் என்ற பெயர் இருக்கிறதா? அல்லது குற்றவாளியின் அங்க அடையாளங்கள் இருக்கின்றனவா? கண்ணை நன்றாகத் திறந்து பாருங்கள். இந்த ஓலை எவன் கையில் இருந்தாலும் அவனுக்குக் கொஞ்சமாவது சாமர்த்தியம் இருந்தால் அவனுக்கு வேண்டாத எந்த மனிதனையும் நரகத்தில் தள்ளமுடியும்!"

இப்பொழுதுதான் ஸம்புஷ்டாசாரியனுக்கு ஞானோதயம் ஆயிற்று. இதுவரையில் 'விளங்காத விடுகதை'யாக இருந்த அந்த ஓலை விஷயம் இவ்வளவு பெறுமானமுள்ளது என்று தெரிந்ததும் ஆச்சரியத்தினால் அவன் கண்கள் விரிந்தன. "விமலா ராணி! உன் சாமர்த்தியம் அபாரம்! இந்த ஓலையின் உதவியால் எவனை நரகத்தில் தள்ள நிச்சயித்திருக்கிறாய்? கட்டளை இட்டவனையேகூட நரகத்தில் தள்ளிவிடுவாயா?" என்றான்.

"என் வழியில் இருக்கும் முள்ளை அகற்ற இந்த ஓலை பயன்படும். போதாதா! கலிங்கநாட்டு இளங்கோ, அவனிடம் அபரிமிதமான அன்புகாட்டும் சக்கரவர்த்தி அசோகனின் கட்டளைப்படி எண்ணெய்க்கொப்பரைக்கு இரையாகிவிடுவான்!" என்று சிரித்தாள் அவள். ஆசாரியனும் சிரித்தான். ஆனால் இந்த ஆனந்தம் நெடுநேரம் நீடிக்கவில்லை. விமலையின் கடைசி வார்த்தை முடிந்ததோ இல்லையோ, அருகிலிருந்த ஒரு குகையிலிருந்து மற்றொரு மனிதன் தன்னையும் மீறி, "ஐயையோ!" என்று கூவிவிட்டான்.

சப்தம் காதில் விழுந்த உடனே திடுக்கிட்டாள் விமலை. மிகுந்த பீதியுடன் சப்தம் வந்த திசையை நோக்கி ஓடித் தேட ஆரம்பித்தார்கள். இவர்களைக் கண்டதும் அதுவரையில் அந்தப் பாறையின் பொந்திலேயே ஒளிந்திருந்த மனிதன் எழுந்து வெளியே வந்தான்.

"எங்களுடைய அந்தரங்கமான வார்த்தைகளை ஒளிந்து கேட்டுக்கொண் டிருக்கும் நீ யார்?" என்று அவன்மேல் பாய்ந்தாள் விமலை.

"விமலாதேவி! நான் தங்களுக்கு முன்னமே அறிமுகம் ஆனவன்தான். சமீபத்தில் சிலநாட்களுக்குமுன் 'சதி' நடந்ததே அந்தச் சம்பவத்தை யோசித்தால் நான் யார் என்பது தங்களுக்கே விளங்கலாம்!"

அவள் முகம் கோபத்தால் பின்னும் அதிகமாகச் சிவந்தது. ஆவேசத்துடன் கூடிய குரலில், "அன்று என் காரியங்களிலே குறுக்கிட்டுக் கெடுத்தவன் நீதானா?" என்றாள்.

அவனோ மிகவும் அமைதியான குரலில், "ஆமாம்! ராணி இந்துமதிதேவி தற்கொலை செய்துகொள்ளக் கூடாதென்று முயன்றவன் நான்தான்!" என்றான்.

"என்ன? மதுராபுரியில் இருக்கும் உபகுப்தனா?" என்று மிகுந்த வெறுப்போடு கேட்டாள் அவள்.

"ஆமாம்! என்னைத்தான் உபகுப்தன் என்கிறார்கள்" என்றார் சாவதானமாக. அவளுக்குக் கோபம் பொங்கி எழுந்தது. சுட்டு விடுபவள்போல் பார்த்தாள். அப்பொழுதும் உபகுப்தர் மிகவும் அமைதியான குரலில், "ஏ! ராட்சஸ ராணி! நீ அன்று செய்ததை விட இன்று செய்ய இருப்பது இன்னும் பயங்கரம். சின்னஞ்சிறு குழந்தை, அந்த ராஜகுமாரன் உனக்கு என்ன குற்றம் செய்தான்?"

"குற்றமா? என்ன குற்றம் என்று கேட்கிறாய்! அவன் கலிங்கநாட்டு இளவரசனாகப் பிறந்ததே குற்றந்தான். அது கிடக்கட்டும்; நீ ஒளிந்திருந்து எங்கள் வார்த்தையை ஒன்று விடாமல் கேட்டிருக்கிறாய் அல்லவா?"

"அம்மணி! நான் உங்களைப்பற்றி நினைக்கவும் இல்லை. உங்கள் பேச்சைக் கேட்பதற்காக வரவும் இல்லை. பகவத்தியானம் செய்ய இந்த நதிதீரம் வந்தேன். குகையிலே உட்கார்ந்தேன். நீங்கள்தான் நான் இருக்கும் இடம் தேடிவந்து உட்கார்ந்திருக்கிறீர்கள். உங்கள் பேச்சைக் கேட்கும்படி நேரிட்டது."

"சட்! வாயை மூடு! என்னவானால் என்ன? எங்கள் ரகசியத்தை நீ அறிந்துவிட்டாய். அதற்கான தண்டனையைப்

பெறத்தான் வேண்டும். யுவராஜனை நரகத்தில் தள்ளத்தான் போகிறேன். ஆனால் படித்த முட்டாளான நீ அவனுக்குச் சிபாரிசு செய்ததனால் நீ வேண்டுமானால் முன்னேபோய் அவனை வரவேற்கத் தயாராக இருக்கலாம்!" என்று சொல்லியவளாக ஸம்புஷ்டாசாரியனுக்குக் கண்களால் சமிக்ஞை செய்தாள் அவள்.

ஒரே ஒரு க்ஷணம். இருவரும் ஒரே பாய்ச்சலில் உபகுப்தரைச் செங்தூக்காகத் தூக்கி நதியில் தள்ளிவிட்டார்கள். ஒரு பயங்கர மான சலசல சப்தம் கங்கா நதியிலிருந்து கிளம்பிற்று. அதனி டையே ஓர் இனிய குரலில், 'நமோபுத்தாய' என்ற மகா மந்திரம் காற்றுடன் கலந்து நாற்புறமும் ஒலித்தது.

மூழ்கிய தலை வெளியே வரும் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால் கங்காதேவி ஒன்றுமே அறியாதவள்போல் சாந்தமாகச் சென்றுகொண் டிருந்தாள். சற்று நேரம் இருவரும் நதியையே பார்த்தவண்ணம் நின்றிருந்தனர். பிறகு ஆசாரியன் மிகவும் மெதுவான குரலில், "நாளை நடைபெறப்போகும் மகாயக்ஞத் திற்கு இது ஒரு சுபசகுனம்!" என்றார்.

"ஆமாம்! நாளைய மகாயுத்தத்திற்கு இவன் களப்பலி" என்றாள்.

"விமலாதேவி! இந்த அருமையான சம்பவத்தை ராஜ மாதாவிடம் சொல்வதில் ஆட்சேபம் என்ன?"

"ஆசாரிய! ஆத்திரப்பட வேண்டாம். இந்த விஷயத்தை அவளிடம் சொன்னால் நாளைய சங்கதி அடியோடு கெட்டுப் போய் விடும். நரகாதிபதிக்கு எழுதிய அந்த ஓலையை நான் எவ்வளவோ சாமர்த்தியமாக எடுத்துவந்திருக்கிறேன். மற்ற ஓலைகளுடன் இருந்த இது காணமல் போயிற்றென்றால் அசோகனுக்கு ராஜ மாதாவின் மீதுதான் சந்தேகம் ஏற்படும். ஆகவே அவள் இந்தக் காரியத்தை அநுமதிக்கமாட்டாள். நம்முடைய எல்லா விவகாரங் களும் முடிந்த பிறகு திடீரென்று சொல்லித் திகைக்கவைக்கலாம்" என்றாள் அவள்.

## 21

### நரகம்

**விடி**யற்காலை. மனோகரமான மந்தமாருதம் மல்லிகை மலர்களின் வாசனையைச் சுமந்து பாடலீபுரத் தெருக்களில் இறைத்துக் கொண்டிருந்தது. கிழக்கென்னும் பெண்மணி கதிரவனை வரவேற்கும் பொருட்டுத் தன் வாயிலிலே வண்ணக்கோலங்கள் இழைத்துக் கொண்டிருந்தாள். உழவர்கள் தோளிலே கலப்பையைத் தாங்கியவர்களாக எருதுகளை முன்னேவிட்டுப் பின்னே மெல்ல நடந்து சென்றனர்.

பாடலீபுரத்தின் தெற்கு வாசலின் சமீபம் ஓர் அழகிய ரதம் வெண்புரவிகளால் இழுக்கப்பட்டு வந்துகொண்டிருந்தது. உள்ளே உட்கார்ந்திருந்த இளைஞனது முகத்தில் இளமுறுவல் அரும்பிநின்றது. சற்று நேரத்திற்கு ஒருமுறை சாரதியை நோக்கி, "சூர்யோதயம் ஆகிவிட்டதே. சக்கரவர்த்தி காத்திருப்பார். சீக்கிரம், சீக்கிரம்" என்று சொல்லிக்கொண்டிருந்தான்.

சாரதியோ அவனைச் சிறிதும் சட்டை செய்யாதவனாக ஓட்டிக்கொண்டே இருந்தான். இளைஞனுக்குக் கோபம் பொங்கி எழுந்தது. வழக்கமாகச் செல்லும் பாதையின்றி வேறுவழியே வருகிறோம் என்பதும் அப்பொழுதே தெரிந்தது. சாரதியைத் திட்ட வாயெடுத்தானோ இல்லையோ போர்வையினால் தன்னை முழுவதும் மூடியிருந்த ஒரு பெண்மணி ஓர் ஓலைத்துண்டைச் சாரதியிடம் கொடுத்துவிட்டு, இவனையும் முறைத்துப் பார்த்துவிட்டு நொடியில் மறைந்துபோனாள். மறுவினாடியே அவள் விமலைதான் என்ற விஷயம் தெரிந்துவிட்டது இளைஞனுக்கு.

'அடடா! நாம் எங்கே வந்திருக்கிறோம். இதென்ன விஷயம்? அந்த ஓலையில் என்ன எழுதியிருக்கிறது. அதை இந்த விடியற்காலையில் இவள் இங்கே கொண்டுவருவானேன்?' என்று சிந்தித்தவனாய், "சாரதி! நேரமாகிறது. சக்கரவர்த்தி எனக்காகக் காத்திருப்பார். அப்படியிருக்க நீ வெகு நிதானமாக இஷ்டப்படி நிறுத்துகிறாயே?" என்றான்.

சாரதி ரதத்தை நிறுத்திவிட்டு இவனைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தான். இளைஞனுக்குக் கோபம் பொங்கிற்று.

"இருக்கட்டும்; இதற்குத் தகுந்த வழி நாளைக்குச் சொல்லு கிறேன்" என்றான். இதற்கும் அதே சிரிப்பினாலே விடையளித் தான் சாரதி.

ரதம் மீண்டும் சில நிமிஷங்கள் ஓடி, அழகிய ஒரு பூஞ் சோலையின் அருகே வந்து நின்றது. 'ஒருவேளை சக்கரவர்த்தி தன்னை இங்கேதான் எதிர்பார்க்கிறாரோ?' என்று நினைத்தவனாக இளைஞன் அவசரமாக ரதத்திலிருந்து இறங்கி, உள்ளே நுழைந் தான்.

"நில்லுங்கள்! உள்ளே செல்வதற்கு இவ்வளவு அவசரம் என்ன? நீங்கள் வந்திருக்கிறீர்கள் என்று முன்னதாகத் தெரிவிக்கா விட்டால் தங்களைச் சரியானபடி வரவேற்கமாட்டார்கள்" என் றான் சாரதி.

"இதென்ன இது! முன்னே போய்ச் சொல்லவேண்டிய அவசியமே இல்லை. கலிங்கநாட்டு இளவரசனுக்குச் சக்கரவர்த்தி யிடம் செல்ல ஒருவிதமான முன் ஏற்பாடும் அவசியமே இல்லை."

"நீங்கள் எந்த நாட்டு இளவரசனாக இருந்தாலும் சரி; இங்கே எல்லோருக்கும் ஒரே மரியாதைதான். அரசனானாலும் ஆண்டி யானாலும் கிழவனானாலும் குமரனானாலும் ஒரே சமம்தான். ஆனால் உள்ளே நுழைவதற்கு மட்டும் அநுமதிச் சீட்டு வேண்டும். அதைப் பெறுவது என்பது அவரவர்கள் சாமர்த்தியத்தைப் பொறுத்தது. ஆனால் இந்த இளம் வயதில் இத்தகைய பாக்கி யம் கிடைத்ததும் உங்கள் சொந்த சாமர்த்தியமாகத்தான் இருக்கவேண்டும்!" என்று சொல்லி ஒரு கேலிச் சிரிப்புச் சிரித்தான்.

பிறகு அந்தக் காவலாளியை நெருங்கித் தன் கையிலிருந்த ஓலையை அவனிடம் நீட்டினான். அவன் ஓலையைப் படிக்கு முன்பே, "மகாராஜ்! சீக்கிரம் உத்தரவாகவேண்டும். என்னோடு வந்திருப்பவர் சீக்கிரம் உள்ளே போகவேண்டுமென்று ரொம்பவும் ஆவலாகக் காத்திருக்கிறார்!" என்று சாவதானமாகச் சொன்னான் சாரதி.

கடிதத்தையும் வந்திருக்கும் அதிதியையும் ஏற இறங்கப் பார்த்தான் காவலாளி. அவன் முகத்திலே வியப்புக் குறியும்

சந்தேகமும் ஒருங்கே தோன்றின. ஏதோ சந்தேகிப்பவன்போல், "சாரதி! இந்த ஓலே இவருக்கா?" என்ருன்.

"ஆமாம்!" என்ருன் சாரதி மிகவும் அமைதியாக. 'சரி' என்று உள்ளே போஞன் அவன். இளவரசன், விஷயம் விளங்காமல் விழித்து நிற்கையிலே, மறுபடி வெளியே வந்து தன்னுடன் வரும்படி சமிக்ஞை செய்தான் காவற்காரன்.

உள்ளே அழகிய சோலே. பல்வேறுவிதமான பழ மரங்கள் பழுத்துக் குலுங்கிக்கொண் டிருந்தன. மல்லிகை, சண்பகம், மகிழ் முதலியவைகளின் சுகந்தம் அந்த இடம் முழுவதும் நிறைந்திருந்தது. அங்கங்கே அழகிய பூஞ்செடிகள் வரிசையாகவும் ஒழுங்காகவும் வைக்கப்பெற்றிருந்தன. மனேரஞ்சிதம், சுகந்தராஜம் முதலிய மலர்கள் கொத்துக்கொத்தாகக் கண்ணேயும் கருத்தையும் பிணித்து மெய்ம்மறக்கச் செய்தன. அங்கங்கேயுள்ள அழகிய கொடிவீடுகள் இளந்தளிர்களின் சோபையிஞல் மிகவும் வசீகரமாகக் காணப்பட்டன. செயற்கை ஊற்றுக்களினின்று சிதறும் நீர்த்திவலேகள் அந்த இளந்தளிர்களின்மேல் விழுந்து, விதவிதமான வர்ணஜாலங்களே எழுப்பிக்கொண் டிருந்தன. இந்த அழகிய பூம்பொழிலின் எழிலால் மயங்கிய இளவரசன் மிகவும் ஆனந்தத்துடன் காவற்காரனேப் பார்த்து, "இந்த அழகிய சோலேக்குப் பெயர் என்ன?" என்ருன்.

காவற்காரனுக்கு உண்மையிலேயே திகைப்பு உண்டாயிற்று. 'கபடமற்ற இந்தச் சிறுவனே வகைமோசமாக யாராவது தண்டனேயடையும்படி செய்துவிட்டார்களோ?' என்று எண்ணியவஞக, "இதன் பெயர் நரகச்சோலே" என்ருன்.

"என்ன! நரகச்சோலேயா? என்ன ஆபாசமான பெயர். இவ்வளவு அழகிய சோலேக்கு, 'பண்பொழில்' அல்லது 'பூம்பொழில்' என்றல்லவா பெயர் வைத்திருக்கவேண்டும். அதை விடுத்து, 'நரகம்' என்று வைத்திருப்பானேன். இதென்ன இது! அது கிடக்கட்டும்; பெயர் எப்படி இருந்தாலும் சரி. இவ்வளவு அழகான இந்த இடத்திற்குச் சக்கரவர்த்தி என்னே ஏன் கூட்டி வரவே யில்லே! சக்கரவர்த்தி எங்கே இருக்கிருர்?"

"இந்த நந்தவனத்தில் நரகத்தை ஏற்படுத்திய பிறகு சக்கரவர்த்தி இங்கே வருவதே இல்லே."

"நரகமா? அதென்ன!" என்று மிகுந்த ஆச்சரியத்துடன் கேட்டான் மகேந்திரன்.

"பூலோகத்தில் குற்றம் செய்பவர்களைத் தண்டிப்பதற்காகச் சக்கரவர்த்தி இதை இங்கே ஸ்தாபனம் செய்தார்."

"இவ்வளவு அழகான இந்தச் சோலைக்கு நரகம் என்று பெயரிடுவானேன்?"

"நரகம் இன்னும் கொஞ்ச தூரத்தில் இந்தத் தோப்பின் மத்தியில் இருக்கிறது. அது உனக்குச் சீக்கிரத்திலேயே தெரிய வரும்."

"இதைப்போலவே மனோரம்மியமாக இருந்தால் அதையுந் தான் பார்த்துவைப்போமே. சக்கரவர்த்தி ஏன் இன்னும் வர வில்லை? என்னைச் சீக்கிரமாக வரச்சொல்லிவிட்டு அவர் இன்னும் வராத காரணம் என்ன?"

காவற்காரன் இன்னதென்று விவரிக்கமுடியாத சங்கடத்தில் ஆழ்ந்தான். "சக்கரவர்த்தி, சக்கரவர்த்தி என்கிறாயே அந்தச் சக்கரவர்த்தி யார்?"

"இதென்ன கேள்வி! நான் ஸம்ராட் அசோகரைப்பற்றித் தான் கேட்கிறேன்."

"அசோக சக்கரவர்த்தியா! அவர் ஏன் இங்கே வரப் போகிறார்!"

"ஆனால் இந்தச் சாரதி என்னை இடம் மாற்றி எக்கச்சக்க மான இடத்தில் விட்டுவிட்டானா என்ன?"

"இல்லை, இல்லை; சாரதி சரியான இடத்திற்குத்தான் கொண்டு வந்து விட்டிருக்கிறான்."

"அது எப்படியானாலும் சீக்கிரமே சக்கரவர்த்தியைப் பார்க்க வேண்டும்" என்று வாயிலை நோக்கித் திரும்பினான் இளவரசன்.

"நீ வெளியே போகமுடியாது. நில்" என்று தடுத்தான் காவலாளி.

"ஏன்?"

"இந்த நரகத்திற்குள் நுழைந்தவர்கள் யாரும் வெளியே போகக்கூடாது."

"என்னைத் தடுப்பதற்கு யாருக்கு அதிகாரம் உண்டு!" என்று மிகுந்த கோபத்தோடு சொன்னான் இளவரசன்.

"அதிகாரமா? யமதர்மராஜனுக்கு இந்த எல்லைக்குள் நுழைந்த ஒவ்வொருவரின்மேலும் அதிகாரம் செலுத்த உரிமை உண்டு."

"ஆனால் நான் எதுவரையில் இங்கே இருக்க வேண்டும்?"

"இனி முடிவுவரையில் இங்கேயேதான்."

யுவராஜன், கோபிப்பதில் பயனில்லை என்று கண்டுகொண்டான்.

சரி, நயமாகவே பேசுவோம் என்று எண்ணியவனாய், "இடம் அழகாகத்தான் இருக்கிறது. ஆனாலும் ஆயுள் முழுவதும் இங்கேயே அடைபட்டுக் கிடக்க எவனுக்குத்தான் பிடிக்கும்?" என்றான்.

"இங்கே வருகிறவர்களின் ஆயுள் வெகு சொற்பம். ஆகவே அவர்களுக்கு இந்த மாதிரியான சிந்தனைகள் ஏற்படுவதற்கு இடமே இல்லை."

"சரி சரி!" என்று சொல்லியவனாய் வாயிலை நோக்கிப் பின்னும் இரண்டடி எடுத்துவைத்தான் இளவரசன். ஒரு பயங்கரமான இடிக் குரல் அவனைத் திகைத்து நிற்கச் செய்தது.

"நில்! வெளியே காலடி வைக்கும் ஆசையை விட்டுவிடு. நீ எவ்வளவு முயற்சி செய்தாலும் அவைகளெல்லாம் வீணே! இந்த எல்லைக்குள் காலை வைத்தவன் மறுபடி வெளி உலகத்தைப் பார்ப்பதில்லை. அந்த யமதர்மனாவது சில சமயங்களில் மறந்து, மன்னிப்பானோ என்னவோ? இந்த நரகத்திலிருக்கும் யமன் மறக்கவும் மாட்டான். மன்னிக்கவும் மாட்டான். இந்தப் பூவுலக வாசியான 'யமன்' தன் கடமைகளில் துளிகூடத் தவறவே மாட்டான்; 'உன் வேலை முடிந்தது, நீ போகலாம்' என்று காவலாளியைக் கட்டளையிட்டது அந்தப் பயங்கரமான குரல்.

தானே வலியப் புகுந்து சிங்கத்துக்கு இரையாக இருந்த அவள் பயத்தால் நடுநடுங்கினாள். கால்கள் வெடவெடத்தன. நிற்கவும் சீவனற்று, அங்கிருந்த கற்பலகையிலே வீழ்ந்தாள். மருண்ட கண்களால் நாற்புறமும் சுற்றிப் பார்க்கலானாள். அங்கே மிகவும் பயங்கரமான ரூபத்தையுடைய ஒருவன் நின்றிருந்தான். குலை நடுங்கக் கண்களை இறுக மூடிக்கொண்டாள்.

"குற்றவாளியே! கேள். நீ செய்திருக்கும் கடுமையான குற்றத்தின் பொருட்டு தேவானும்பிரிய அசோக சக்கரவர்த்தி தண்டிக்கும் பொருட்டு இங்கே அனுப்பியிருக்கிறார். எண்ணெய்க் கொப்பரைதான் தண்டனை. அந்த உத்தரவு நிறைவேற இன்னும் நான்கு ஜாமம் அவகாசம் இருக்கிறது. அதற்குள் இந்த வனத்தைச் சுற்றிப் பார்ப்பதானால் பார்க்கலாம், அல்லது அமைதியாக ஓரிடத்தில் உட்கார்ந்து நீ செய்த பாபங்களைச் சொல்லிக் கடவுளை வழிபடலாம்" என்றது குரல்.

அவன் திடுக்கிட்டான். "என்ன, சக்கரவர்த்தியின் கட்டளையா! எங்கே? காண்பி பார்க்கலாம். ஒருநாளும் அவர் இப்படிக் கட்டளையிட்டிருக்கவே முடியாது!" என்று உரத்த குரலில் சொன்னான் இளவரசன்.

"நீ நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி. கட்டளை வந்திருப்பதென்னவோ உண்மைதான். இதைப் படித்துப் பார்" என்று மிகுந்த எச்சரிக்கையோடு அவன் முன்னே ஓலையை நீட்டினான் நரகாதிபதி.

போலி மகேந்திரனது கண்கள் முதலில் ஆச்சரியத்தால் மலர்ந்தன. ஆனால் அந்த வாசகம் முழுமையையும் படித்ததும் அவன் முகத்தில் சந்தேகத்தின் ரேகைகள் படர்ந்தன. சற்றே நிதானித்துவிட்டு மிகவும் மெல்லிய குரலில், "இந்த ஓலை பொதுவாக இருக்கிறதே தவிர, குற்றவாளியின் பெயரோ அங்க அடையாளமோ குற்றத்தின் பாகுபாடோ ஒன்றும் காணோமே" என்றான்.

"இந்த மாதிரி ஒரு கேள்வியை எழுப்பினால் நீ தப்பிவிடலாமென்று நினைக்கிறாயா? அது ஒருநாளும் முடியாது."

"தப்பிச் செல்வது கிடக்கட்டும். நான் என்ன குற்றம் செய்தேன்? எதன் பொருட்டு இந்தக் குரூரமான எண்ணெய்க் கொப்பரைத் தண்டனை என்பதையாவது சொல்ல முடியுமா?"

"அவைகளை யெல்லாம் விசாரிக்க வேண்டியது எங்கள் கடமை அல்ல. தண்டனை விதிக்கப் பெற்ற குற்றவாளிகள்தான் இங்கே வருவார்கள். நிறைவேற்ற வேண்டியது எங்கள் பொறுப்பு" என்று சொல்லியவனாக நடந்தான் வந்தவன்.

* * *

அவள் மனநிலை எப்படி இருந்தது என்பதை விவரிக்கவே முடியாது. இன்னது செய்வதென்று அறியாதவளாய்த் தவிக்கலானாள். 'இந்தத் தண்டனை விஷயம் எப்படி நேர்ந்திருக்கும்? உண்மையில் வெளிப் பார்வைக்கு அன்புள்ளவன்போல் நடித்துப் பிறகு இப்படி எழுதியிருப்பானோ? ஆனால் எந்த நாட்டிலும் ஆளின் அங்க அடையாளமோ சிறை எண்ணிக்கையோ இல்லாமல் தீர்ப்புப் பத்திரிகை எழுதுவதில்லையே! ஸம்ராட் அசோகபூபதி பகைவனை ஒழிக்க இப்படி ஒரு தந்திரம் செய்திருப்பாரா?' என்று எண்ணியபோது, 'அசோகனா! ஒருநாளும் இப்படிப் பகை முடிக்கமாட்டான். அவன் காலடி மண்ணை மிதித்தவர்களுக்குக் கூட அந்த நீச புத்தி வராது' என்று ஒரு சிறு குரல் அவள் இதயத்தே எழுந்தது.

தான் இதுவரையிற் கட்டியிருந்த மனக்கோட்டைகள் எல்லாம் ஒரே கணத்தில் தூள் தூளாகச் சிதறியதை எண்ண எண்ண அவள் கண்களிலே நீர் ஆறாகப் பெருகி ஓடிற்று. தன் தந்தையின் இனிய சொற்கள், தேவி இந்துமதியின் ஆசீர்வாதங்கள், தமையன் பிரிந்தது இவைகளெல்லாம் ஒவ்வொன்றாக இறகு முளைத்து எதிரே வந்தன. உலகம் எவ்வளவு மாயம்! நேற்றிரவு சிதானந்தரையும் தந்தையையும் பார்த்து மகிழ்ந்ததென்ன? கட்டிய ஆகாயக் கோட்டைகள் என்ன? இன்று இங்கே இந்த எண்ணெய்க் கொப்பரைக்கு இரையாக......... அடாடா! இந்த அசோகருக்கு ஏன் இத்தனை துர்ப்புத்தி! நரகமாம்! பூலோக நரகமாம்!......... இதென்ன அவிவேகம்? இத்தனை நாளாகக் கேள்விப்படவில்லையே.........' என்று சிந்தித்தவளாக எவ்வளவு நேரம் மெய்ம்மறந்திருந்தாளோ தெரியாது.

திடீரென்று அருகிலுள்ள புதரிலிருந்து யாரோ கிளம்புவது போல் சல சலத்தன இலைச்சருகுகள். அவள் கனவு கலைந்தது. நிமிர்ந்தாள் அவள். அங்கிருந்து எழுந்த மனிதனது கண்களில் கண்ணீர் பெருகிக்கொண்டிருந்தது.

அவள் திடுக்கிட்டாள். அந்த நிலையிலும் அவனை யமதூதன் என்றே எண்ணியவளாய், "யமதூதனே! சற்றே நில்! சக்கரவர்த்தியை என் கற்பனையிலாவது மறுபடி ஒரு முறை தரிசிக்கிறேன். அவரிடம் விடை பெற்றுக்கொள்ளுகிறேன்.

'பகவானே, எங்கள் இவ்வுலகத் தொடர்பு இன்றுடன் முடிந்தது. இனி பரலோகத்திலாவது அவரது திவ்ய தரிசனம் எனக்குக் கிடைக்கும்படி அனுக்கிரகம் செய்யவேண்டும். குற்றமற்ற நான் இப்படி இறந்தேன் என்பது அவருக்குத் தெரியும்படி செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்கையில் அவள் குரல் கம்மிப் போயிற்று. கண்களினின்றும் கண்ணீர் தாரை தாரையாகப் பெருகி ஓடிற்று.

"யுவராஜா! நான் யமதூதன் அல்ல! உன்னை விடுவிக்க வந்திருக்கிறேன்" என்ற வார்த்தைகள் தெளிவாக அவள் செவிகளில் விழுந்தன.

நிமிர்ந்து பார்த்தாள். இருந்தாலும் அவள் மருண்ட கண்களுக்கு அவரும் நரகத்தைச் சேர்ந்தவர்தாமோ என்று தோன்றிற்று. அவரை ஏறிட்டுப் பாராமலே, "விடுதலையா! எனக்கா! இனி ஒரேயடியாக எண்ணெய்க் கொப்பரையில்தான்!" என்று வெறுப்புடன் கூறினாள்.

"ராஜகுமாரா! வெறுத்துப் பேசாதே. நிச்சயமாக நீ விடுதலை அடையப் போகிறாய். உனக்குக் குறித்த நேரத்தில் இன்னும் மூன்று சாமம் இருக்கிறது. அதற்குள் விடுதலையடைவாய்!" என்று மிகவும் கருணையும் வாத்ஸல்யமும் ததும்பக் கூறினார் வந்தவர்.

அன்பு மிகுந்த அந்தக் குரல் எங்கேயோ எப்பொழுதோ கேட்டதுபோல் தோன்றவே அவள் நிமிர்ந்தாள். ஆசாரிய உபகுப்தனார் அவள் எதிரே நின்றார். "ஆசாரிய உபகுப்தனாரா?" என்று உரத்த குரலிற் கூவி விட்டாள் அவள்.

அவர், வாயின்மேல் கையை வைத்து மெல்லப் பேசும்படி சொல்லவே, "நீங்கள் எப்படி இந்த நரகத்துக்குள் அகப்பட்டுக் கொண்டீர்கள்?" என்று தணிந்த குரலில் கேட்டாள் அவள்.

"யுவராஜா! நானே வலிய, காவலர் கண்களுக்கு அகப்படாமல் இதற்குள் நுழைந்திருக்கிறேன்."

"இந்த மனோகரமான வனத்தைக் கண்டு ஏமாந்து விட்டீர்களோ?"

"இல்லை. இதன் விவரங்கள் முழுவதும் தெரியும். தெரிந்தும் உன்னைக் காப்பாற்றும்பொருட்டேதான் வந்திருக்கிறேன். மதுரையில் நான் கடன்காரர்கள் வசம் அகப்பட்டிருந்தபொழுது, குந்தை உன்னை அரசாங்கத்திற்குக் காட்டி என்னை மீட்டாள். அந்தக் குற்றத்திற்குப் பிரதி செய்ய எப்பொழுது சமயம் வருமென்று காத்திருந்தேன். உரிய சமயம் இப்பொழுது நேர்ந்திருக்கிறது. உன்னை விடுதலை செய்து, குந்தையின் பாபத்திலிருந்து மீட்சி அடைவேன்" என்று மிகவும் அன்பு கனிந்த குரலில் சொன்னார் உபகுப்தர்.

"அவள் எழுந்து அவர் பாதங்களைத் தொட்டு வணங்கினாள்.

"அது சரி! என்னை விடுதலை செய்த பிறகு தாங்கள் எப்படி விடுதலை யடைவீர்கள்" என்று மிகவும் மெதுவான குரலில் கேட்டாள் அவள்.

"யுவராஜா! உனக்காக, உன் நன்மையின் பொருட்டு என் உடலை இந்த நரகத்திற்குக் கொடுத்துவிடுகிறேன்."

"என்ன! எனக்காக நீங்கள் உயிரைக் கொடுப்பதா? முடியாது. முன் ஜன்மாவில் என்ன பாபம் செய்தோ இந்தத் தண்டனை வந்திருக்கிறது. இப்போது உங்களைப் பலியிட்டு நான் மீளவா! முடியாது!" என்று கூவினாள் அவள்.

"உஸ்! யுவராஜா! மெதுவாகப் பேசு. உன் நெஞ்சு எப்படிப்பட்டதென்பது எனக்குத் தெரியும். தெரிந்தேதான் உன்னைப் பலவந்தமாகவாவது மீட்க வேண்டுமென்று இங்கே வந்திருக்கிறேன். அன்று மதுரையில் குந்தை உன்னைக் கைதியாக்கி நான் கைதியாவதினின்று மீட்டாள். இன்று அதற்குப் பிரதி செய்துதான் என் பாபத்தைப் போக்கடித்துக்கொள்ள வேண்டும். எழுந்திரு, அப்பா, யுவராஜா! எழுந்து, அதோ தெரிகிறதே அந்த லதா மண்டபத்தின் அருகில் ஒளிந்திரு. நான் உனக்குப் பதிலாக ஆட்களுடன் போன பிறகு, இருள் நன்றாகச் சூழ்ந்த பிறகு அதோ தெரிகிற மரத்தின்மேல் ஏறினால் மதில் சுவரைக் கடந்து, நதிக் கரையில் இறங்கலாம். நீந்தத் தெரியுமானால் நீந்தி அக்கரை சேர். இல்லாவிடில் நதிக்கரையோடு ஒரு குரோசம் போனால் ஊருக்குள் புகுந்துவிடலாம். இங்கே கைதி

களின் எண்ணிக்கையும் தண்டனையுந்தான் தெரியுமேயன்றி ஆள் அடையாளம் தெரியாது" என்பதற்குள், போலி ராஜகுமாரன் இடைமறித்தான்.

"ஸ்வாமி, தங்களைப் போன்ற மகானைப் பலியிட்டு நான் வாழ ........." என்பதற்குள் உபகுப்தனுர் மிகவும் திடமான குரலில், "பேசுவதற்கு இது சமயமல்ல. நான் துறவி, கிழவன், இனி இறைவனடி சேரவேண்டியவன். நீயோ ஒரு சாம்ராஜ் யத்தையே கட்டி ஆளக்கூடியவன். இருவரது உயிர்களுக்கும் விலைமதிப்பு வெவ்வேறு. பாரத பூமி உன்னைப்போன்ற வீரர்களை இழக்கக் கூடாது. போ, ஓடி ஒளிந்துகொள். வீணில் பேசிப் பேசி விபத்தை அதிகரிக்கச் செய்யாதே ......... தவிர நீ இந்த மாதிரி வருத்தப்படவேண்டிய அவசியமே இல்லை. பஞ்ச பூதங் களையும் வென்றவன் நான். நேற்று அவர்களுள் ஒருவனேடு யுத்தம் சேய்து மீண்டு வந்திருக்கிறேன். இன்று இன்னெருவன். ஆனல் இவைகளால் என்னை ஒன்றுமே செய்யமுடியாது. நீ இங்கே நிற்பது பிசகு! குழந்தாய், உனக்கு ஸர்வ மங்களமும் உண்டாகும்" என்ருர்.

அதுவரையில் திகைத்து நின்ற போலி யுவராஜன், "உப குப்தனுரே. தங்களைப் பலியிட்டு நான் மீளுவேனென்று நினைக்கி றீர்களா? அப்படிப்பட்ட அதமன் கலிங்கநாட்டுக்கே ஒரு களங்கமல்லவா? நான் போகமாட்டேன். நீங்கள் தப்பிச் செல் லுங்கள்" என்ருன் கோபத்துடன்.

"அப்பா! குழந்தாய், பொறுத்துக் கேள். வாதவிவாதங்கள் பேச இது நேரமும் அல்ல; இடமும் அல்ல. இந்தப் பஞ்சபூதங்கள் என் உடலை ஒன்றும் செய்யா. செய்தாலும் பிரமாதமான நஷ்டம் ஒன்றும் இல்லை. சில நாட்கள் கழித்து அழியவேண்டியதுதானே. நீ செய்யவேண்டிய செயல்கள் காத்து நிற்கின்றன. அசோகனது புகழுக்கே களங்கமாக நிற்கிறது இந்த நரகம். இதை ஒழித்து விடு. உங்கள் ஸநாதன தர்மத்தின்மேல் ஆணை. நீ போய் ஒளிந்துகொள்" என்று சொல்லிவிட்டு அவள் படுத்திருந்த அந்தக் கல் பலகையில் உட்கார்ந்து தியானம் செய்யத் தொடங்கினுர் உபகுப்தர். வேறு வகையின்றி அவர் குறித்த அந்தக் கொடி வீட்டை நோக்கி நடந்தான் போலி ராஜகுமாரன்.

* * *

தியானம் செய்யக் குறித்த நேரம் கழிந்த உடன் அங்கே தோன்றினன் யமதூதன். அவனுடன் வந்திருந்த மற்றவர்களும், அங்கே தியானம் செய்யும் அவரே குற்றவாளி என்று கருதி அழைத்துப் போகலானார்கள்.

அந்தச் சோலையின் அழகிய காட்சிக்கு எதிர்மாருக அந்த நரகம், பார்க்கும்போதே நடுங்கத் தக்கதா யிருந்தது. ஏற்கனவே தண்டிக்கப்பட்டவர்களின் கூக்குரலும் அர்த்தமற்ற வேதனை யோடு கூடிய புலம்பல்களும் சேர்ந்து அந்தப் பயங்கரத்தைப் பின்னும் பன்மடங்கு அதிகரிக்கச் செய்தன. ஆசாரிய உபகுப்த ருரது பண்பட்ட நெஞ்சு, அந்தப் பயங்கரத்தைச் சகியாமல் துடித்தது. ஆயிற்று; இன்னும் சில நிமிஷங்கள்தான். எண்ணெய்க் கொப்பரை காய்கிறது. விறகை ஏறத் தள்ளினன் தூதன்.

"நமோபுத்தாய! நமோபுத்தாய!" என்ற மகாமந்திரம் அந்த நரகத்தின் பயங்கரத்தின் நடுவிலும் ஒலித்தது. அவ்வளவு தான்! எங்கிருந்தோ குளிர்ந்த காற்று நீர்த்திவலைகளை வீசவும் உப குப்தரை எண்ணெயில் தள்ளவும் சரியாயிருந்தது. ஒரே ஒரு நொடி. அக்கினி முழுவதும் சில்லென்று குளிர்ந்தது. எண்ணெயும் காய்ந்த நிலையின்றி அமைதி யடைந்தது. திறந்த கண் திறந்தபடி எண்ணெய்க்குள் நின்ருர் அவர். அவர் முகத்திலே ஒரு மாறு தலும் இல்லை. உதடுகள் மட்டும், 'நமோபுத்தாய' என்ற வார்த்தை களை முணுமுணுத்த வண்ணம் இருந்தன. அவர் வீழ்ந்தவண்ண மின்றி எழுந்து நின்றதும், அடுப்பும் அவிந்து எண்ணெயும் குளிர்ந்ததும் திகைத்துப் போனுன் நரகத் தலைவன். அவர், தம் காலின் கீழே தேங்கி நிற்கும் எண்ணெயிலே குந்தை அன்று— அரசிளங்குமரன் சிறைப்பட்ட அன்று-செய்த பாபங்கள் கழுவப் படுகின்றனவென்றே நினைத்தார்.

"அக்கினி பகவான் இந்த மகாத்மாவை வரவேற்கக் குளிர்ந்து போய்விட்டார். இவர் யாரோ பெரிய சித்த புருஷர்; தபஸ்வி. ஓடுங்கள், சக்கரவர்த்தியிடம்!" என்று ஆத்திரத்துடன் கூச்ச லிட்டான் நரகாதிபதி.

ராஜமாளிகைக்கு ஆள் பறந்தது. நரகந் தொடங்கியது முதல் இதுவரை இத்தகைய அற்புதம்—தீயும் சுடாத அற்புதம்— அவர்கள் கண்டதும் இல்லை, கேட்டதும் இல்லை. அசோக சக்கர வர்த்தி ஓடோடி வந்தார். அவர் வந்து பார்வையிடும் வரையில் அதிலேயே நின்ற உபகுப்தர் அரசனைக் கண்டதும் முகமலர்ந்தார்.

"அநீதி! அநீதி! இதென்ன!" என்று கூவியவனாக அவருக்குக் கை கொடுத்து வெளியே எடுத்தான் அசோக சக்கரவர்த்தி. இன்னதென்று விவரிக்க முடியாத ஒருவித வேதனையால் அவன் மனம் தவித்தது. அவருடைய ஒவ்வொரு அங்கங்களையும் பாதந் தொடங்கிக் கைகளினால் தடவிப் பார்த்தவனாய், மிகுந்த கோபத்தோடு, "யாருடைய உத்தரவினால் இவரை எண்ணெயில் இட்டீர்கள்?" என்றான் அசோகன்.

நரகாதிபன் மிகவும் பயந்த குரலில், "பிரபுவின் கைப்படவே ஓலை வந்திருந்தது. மகான் என்று தெரியவில்லை" என்று தயங்கினான்.

உபகுப்தனரது உடலில் ஒருவிதமான மாறுதலும் இல்லாதது கண்டு அசோகனது முகமும் அகமும் ஒருங்கே மலர்ந்தன. இது தான் சமயமென்று ஓலையை எடுத்து வந்தான் நரகாதிகாரி. அதைக் கையில் வாங்கியதும் திடுக்கிட்டான் அவன். அடாடா! இந்த ஓலை, சிதானந்தரது குற்றச்சாட்டில் சேர்ந்ததல்லவா? இதை இப்படி மாற்றி! இது யார் செய்த வேலை? உண்மையை ஒப்புக் கொண்டால் மன்னிப்பேன்!" என்று சீறினான் அசோகன்.

உபகுப்தனரது முகத்தில் இளநகை அரும்பிற்று. மிகவும் அமைதியான குரலில், "சக்கரவர்த்தி, இப்பொழுது இவர்கள் செய்தது பெரிதல்ல. இதைக் காட்டிலும் கொடிய செயல் நடைபெற இருந்தது."

"என்ன? இதைக் காட்டிலும் கொடிய செயல் இன்னொன்று இருக்கிறதா? நிரபராதியான ஒரு மகாத்மாவை எண்ணெய்க் கொப்பரையில் போடுவதைவிட அதிகக் குரூரமான செய்கை வேறென்ன?"

"வேறென்ன கொடுமையென்று நினைக்கிறாய்? நீ அன்பு பாராட்டும் கலிங்கநாட்டு இளவரசன் இந்த ஓலையின் பெருமையால் எண்ணெயில் பொறிக்கப்பட்டிருப்பான்!" என்றார்.

துள்ளிக் குதித்தான் அசோகன். "என்ன, மகேந்திரன் தண்டனை அடைய இருந்தானா! இதென்ன? ஆச்சரியத்தின்மேல் ஆச்சரியமாக இருக்கிறதே! அவனைக் காப்பாற்றி நீங்கள் பதில் வந்தீர்களா! ஏ மகா புருஷரே, அவன் எங்கே? தயவு செய்து அவனைக் கூப்பிடுங்கள்" என்றான் அசோக சக்கரவர்த்தி.

இருவரும் வெளியே வந்து, போலி ராஜகுமாரன் இருக்கும் இடத்தை அடைந்தனர். ஏதேதோ சிந்தையில் ஆழ்ந்திருந்த ரோகிணி திடுக்கிட்டாள். ஆசாரிய உபகுப்தரும் அரசனும் ஒன்ருக வருவதைக் கண்டு அவள் ஆச்சரியம் பன்மடங்கு அதிகமாயிற்று. ஒளிந்திருந்த அவள், சக்கரவர்த்தியின் குரல் கேட்டுத் தைரியம் அடைந்தவளாய் எழுந்து வெளியே வந்து உபகுப்தஞரது காலடியில் வீழ்ந்தாள். ஐந்துவித பூதங்களுள் மற்ருென்றை இன்று வென்ருர் என்பதை அவர் முகமே காட்டிவிட்டது.

பேச வாயெழாமல் நின்ற அவரை நோக்கி, "ஏ மகாத்மா, எனக்கு உயிர்ப்பிச்சை யளித்தவன் இந்த மகேந்திரன். பகைவனைக் காத்த அவனை இன்று நீங்கள் காப்பாற்றி விட்டீர்கள். அது மட்டும் அல்ல. இன்று தங்களது அருளால்தான் எனக்குக் கண் திறந்தது. தாங்கள்தான் என் குருநாதர். என்ஞல் கற்பிக்கப் பட்ட இந்த நரகத்தின் கொடுமைகளை என் கண்ஞரக் கண்டு உணரும்படி செய்துவிட்டீர்கள். என் பதவிக்கே ஏற்பட்ட ஒரு குரூரமான களங்கத்தைக் கருணையினல் துடைத்துவிட்டீர்கள். இந்தச் சீடனுடைய முதல் வணக்கத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும்" என்று அந்த மண் தரையிலேயே அவர் பாதங்களில் விழுந்து பணிந்தான் தேவானும்பிரிய ஸம்ராட் அசோகன்.

* * *

அரசனும் உபகுப்தரும் மீண்டும் வாயிலுக்கு வர நெடு நேரம் ஆயிற்று. கைகட்டி வாய் புதைத்து நின்ற காவலாளரை நோக்கி, "இன்று சூரியாஸ்தமனத்திற்குள் இந்த நரகம் அழிக்கப் படவேண்டும். மேலும், இந்த ஓலை விஷயமாகச் சூழ்ச்சி செய்தது யாரென்று கண்டுபிடித்து அவர்களுக்கும் கடுமையான சிட்சை விதிக்கவேண்டும்" என்று கட்டளையிட்டான் அசோகன்.

உபகுப்தர் மிகவும் அமைதியான குரலில், "சக்கர்வர்த்தி! யார் செய்தார்கள் என்பது எனக்கு நன்ருகத் தெரியும். ஒருவேளை யுவராஜனுக்கும் தெரிந்திருக்கலாம். ஆஞல் அதை இப்பொழுதே தெரிந்துகொள்ள வேண்டும் என்பதில்லை. உரிய காலம் வரும் பொழுது நானே தெரிவிக்கிறேன். சற்றுமுன்தான் தண்டனை களின் கொடுமையை உணர்ந்தாய். மேலும் தண்டனைகளை விதிப் பானேன். பொறு, பதருதே!" என்று சொல்லி நடக்கலாஞர் அவர்.

அரசனும் இளவரசனும் பின் தொடர்ந்தனர்.

# 22

## அவனும் அவளும்

சூரியனது தாபத்தினால் சோர்ந்து வாடிக்கிடந்த மலர்கள் தங்கள்மேல் மிகவும் அன்புகொண்டுள்ள வண்டுகளிடம் தங்களுக்கு இன்னும் முதுமை வந்துவிடவில்லை என்று ஆனந்தத்துடன் சொல்லிக்கொண் டிருந்தன. பேசத் திறமையற்ற மொட்டுகள், அந்தப் பூங் கொத்துக்களுடன் அசைந்தாடி, தங்களது சகோதரிகளின் அதிகப்பிரசங்கித் தனத்தை வெட்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தன. அந்தி என்னும் பெண்மணி சூரியனால் அலங்கரிக்கப்பட்ட கிரணங்களையே அணிகலன்களாக அணிந்துகொண் டிருந்தாள். ஆனால் அவளுக்கு இந்த அணிகலன்களின் உதவி தேவையே இல்லை. இந்த மாதிரியான அலங்காரங்கள் அவளுடைய உண்மையான சௌந்தரியத்தை மறைத்துவிடுகின்றன என்ற கர்வத்துடன் கூடிய ஒரு கற்பனை அவள் மனத்துள் இருந்தது.

அவளுடைய கர்வத்தை அடக்குவதே போல் தன்னுடைய தமையன் கொடுத்திருந்த அணிகலன்களை எல்லாம் களைந்துவிட்டு மெல்லிய பூந்துகில் உடுத்து, தனிமையாக அந்தப்புரத்தை அடுத்த நந்தவனத்துள் நுழைந்தாள் இந்திரை.

அழகில் ஒருவருக்கொருவர் சளைத்தவர்கள் அல்ல. ஒளிமயமான அந்தச் சந்தியாதேவி இந்திரையைக் கர்வமாகப் பார்ப்பதும் இந்திரை அவளைக் கனிவாகப் பார்ப்பதுமாக இப்படியே நேரம் சென்றுகொண் டிருந்தது; கடைசியில் இந்திரைதான் வெற்றி பெற்றாள். 'நீ தோற்று ஓடுகிறாயா?' என்று கேட்பவள் போல் அஸ்தமனத்தின் சாயையை ஏறிட்டுப் பார்த்தாள் இந்திரை. அவளுக்குப் பின்னால் யாரோ பேசும் குரல் அவள் செவிகளில் விழுந்தது.

"இந்திரே! நிறுத்து உன் சண்டையை. ஐயோ பாவம்! உன்னுடைய அழகுதான் மேலென்று அவள் ஒப்புக்கொண்டு ஓடுகிறாளே. நீயேன் அவளையே பின்பற்றி ஓடவேண்டும். பார், அவளுடைய சிவந்த கபோலங்கள் எப்படி வெண்மையாக மாறிக்

கொண்டே வருகின்றன. இனிமேலாவது நீ அவளைப் பார்ப்பதை நிறுத்து. இப்படி ஓடி ஒளிகிறவளைத் துரத்திக்கொண்டு ஓடினால் தேசத்தையே விட்டு ஓடி விடுவாள்."

அவள் திடுக்கிட்டுத் திரும்பினாள். அருகில் நின்றிருந்தான் பௌத்த பிக்ஷு. முன்பு சந்தித்த பழைய நினைவுகள் அவள்முன் தோன்றலாயின. பேச வாயெழாதவளாக நாணத்தால் தலை குனிந்துகொண்டாள்.

"இந்திரா! இன்னும் திருப்தியாகவில்லையா? எவ்வளவு நேரந்தான் அவள் போன தடத்தையே பார்த்துக்கொண் டிருப்பாய்,"—இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அவள் புருவத்தை நெறித்து, "பிக்ஷு! இவ்வளவு நேரமாகச் சந்தியாதேவியின் அழகைக் காட்டிலும் என்னுடைய அழகே மேலென்று புகழ்ந்து கொண்டிருந்தது நீர்தாமா?"

அதற்குப் பதிலாகக் கிடைத்தது ஒரு புன்னகைதான்.

இந்திரையின் கன்னங்கள் புன்முறுவலினால் சற்றே குழிந்தன. "பிக்ஷு, உலகத்தையே துறந்ததுபோல் தோற்றும் தங்களது வேஷத்திற்கு இந்த மன அடக்கம் புதியதான ஒரு அலங்காரமோ?"

"இந்திரையைப் போன்ற நற்குணத்தால் மலர்ந்த மலரை அடைய எவன்தான் ஆசைப்பட மாட்டான். அடைகிற வரையில் மட்டுமன்று, அடைந்த பிறகுங்கூட அந்த மலரின் குண சௌந்தரியத்திலேயேதான் ஈடுபட்டுக் கிடப்பான். இந்திரே! உன்னை ஹரித்துவாரத்தில் கண்டது முதல் கங்காதேவியின் சாட்சியாக என் மனப் பீடத்தில் இருத்திவிட்டேன். என் எண்ணங்கள் உன்னையே வட்டமிட்டுக்கொண் டிருக்கின்றன. உன் உருவெளித் தோற்றம் அடிக்கடி என் கண்களின் முன் தோன்றிக் கொண்டேதான் இருக்கிறது. இதைக் குற்றம் என்றாவது வேஷத்திற்குப் பொருந்தாது என்றாவது நான் நினைக்கவே இல்லை. எனக்குத் தோன்றவும் இல்லை. ஏனென்றால் நான் உண்மையான பிக்ஷு அல்ல!"

"ஓஹோ! அர்ச்சுன சந்நியாசி வேஷமோ? அல்லது மகத நாட்டு ராஜகுமாரியை அபகரிப்பதற்காகப் போட்ட வேஷமோ?"

"இல்லை இல்லை; அப்படி அபகரிப்பதற்காக வேஷம் போட வேண்டிய அவசியமில்லை. க்ஷத்திரியன் தோள் வலியைத் தவிர வேறு உபாயங்களை இதுவரை நாடியதில்லை."

"அப்படியானால் அர்ச்சுனன் க்ஷத்திரியனல்லவோ?"

"அர்ச்சுனனைப்பற்றி இங்கே நமக்கு அவசியமில்லை. எதிர் பாராத ஓர் ஆபத்தினால் என் சொந்த நன்மையைக் காட்டிலும் சிறந்த ஒரு கடமையைச் செய்ய ஏற்றுக்கொண்டேன். அது வரையில்தான் இந்த வேஷம். உன்னை அடைவதற்குப் பிக்ஷு வேஷம் போடுவானேன்?" என்று கேட்டவன் பேச்சை அத்துடன் நிறுத்தி, "அதோ தெரிகிறதே அந்தப் பர்ணகுடியைப் பார்" என்று காட்டினான்.

"அதுவா? அது ராஜமாதாவின் பர்ணகுடி. அங்கே என்ன? எனக்கொன்றும் தெரியவில்லையே!" என்று நாற்புறமும் சுற்றிப் பார்த்தாள் அவள்.

"என்ன! உனக்கு ஒன்றுமே தெரியவில்லையா? அந்தப் பல கணியிலிருந்து பொறாமையினால் எரியும் இரண்டு கொள்ளிக் கண்கள் நம்மையே பார்க்கின்றனவே! அதுகூடத் தெரியவில்லையா? அதுயார் தெரியுமா? கலிங்கநாட்டுப் புதிய அரசி விமலாராணி. நானும் எத்தனையோ பெண்களைப்பற்றிப் படித்தும் கேட்டும் இருக்கிறேன். ஆனால் இவளைப்போன்ற ஒரு ராக்ஷசியைக் கண்டதும் இல்லை; கேட்டதும் இல்லை. அவளால் முடியுமானால் ஒரு பார்வையினாலேயே நம்முடைய அன்பைக்கூட எரித்து விடுவாள். அப்பேர்ப்பட்ட கால கூட விஷம். மென்மையான உன் ஹிருதயத்தைக்கூட அது விஷமாக அடித்துவிடும்" என்று சொல்லிவிட்டு அருகிலுள்ள கொடிப்பந்தலை நோக்கி நடந்தான் பிக்ஷு.

அந்தக் குடிசையைத் திரும்பிப் பார்க்கவும் அஞ்சினவளாக நடுங்கும் நெஞ்சுடன் அவனைப் பின்தொடர்ந்தாள் இந்திரை. கொடிவீட்டிலே கிடந்த ஒரு பளிங்காசனத்தில் உட்கார்ந்தான் பிக்ஷு. புற்கள் அடர்ந்த அந்தத் தரையிலேயே உட்கார்ந்து விட்டாள் இந்திரை. இன்னதென்று விவரிக்கமுடியாத ஒருவகைப் பயத்தால் அவள் உடலும் உள்ளமும் நடுங்கிக்கொண் டிருந் தன. மிகவும் மெல்லிய குரலில், "விமலைக்கு நம்மிடம் இவ்வளவு பொறாமை ஏற்படவேண்டிய காரணம் என்ன?" என்றாள்.

"அவளுக்குக் காரணம் வேண்டுமா? அவளைப்போன்ற ராக்ஷசிகளுக்குத் தொட்டதெல்லாம் காரணந்தான். அவள் எக்கேடோ கெட்டுத் தொலையட்டும். இன்று நான் வந்த விஷயம் முக்கியமானது."

இந்திரையின் முகம் ஆனந்தத்தால் மலர்ந்தது. "ஆனால் என்னைப் பார்க்கவேண்டும் என்பதுதான் மிகவும் முக்கியமான விஷயமா?" என்று அன்பு ததும்பும் குரலில் கேட்டாள் இந்திரை.

"இந்திரே! நீ உலகம் தெரியாத சிறு பெண். உன் மனம் காதல் வனத்திலேயே சுழன்றுகொண் டிருக்கிறது. அதுதவிர வேறு விஷயங்களை ஏற்க உன் நெஞ்சில் இடமில்லை. நானும் ஏறக்குறைய உன் நிலைதான். என்றாலும் காதலைவிடக் கடமை தான் முக்கியம். அதுதான் பெரிது. கடமையை முடித்த பிறகுதான் என் மனம் சமநிலையை அடையும். இன்று சக்கர வர்த்தியைக் கண்டு முக்கியமாகச் சில விஷயங்கள் பேசவேண்டும் என்றுதான் வந்தேன். ஆனால் அதற்குப் பதிலாக உன்னைக் காண நேரிட்டது" என்றான்.

இந்திரை முகம் சுண்டினாள். தன்னைப் பார்ப்பதற்காகவே அவன் வந்ததாகச் சொல்லியிருந்தால் அவளுக்குத் திருப்தியாக இருந்திருக்கும்.

"ஆனால் என்னைச் சந்தித்தது தற்செயல்தானா? என் விஷ யத்தில் உங்களுக்கு ஒருவிதமான கடமையும் இல்லையா? எனக்கு உங்கள் ஹிருதயத்திலே இடமில்லையா?" என்று படபடத்த குரலில் கேட்டாள் அவள். துயரத்தால் உருகிக் கூவும் மாடப் புறாவின் குரல்போல் அவள் குரல் இனிமையாக இருந்தது.

"என்ன இந்திரை! நீயா இப்படிப் பேசுகிறாய்? சற்று முன் தான் சொன்னேன், உன்னுடைய உருவமே என் மனப்பீடத் தில் இருக்கிறதென்று. அதற்குள் இப்படிப் பேசுகிறாயே; இதன் கருத்தென்ன...? உன்னை மறக்கவாவது நிராகரிக்கவாவது முடியுமா? ஆனால் வாழ்க்கையில் ஒரு க்ஷத்திரியனுக்கு முக்கிய மானவை எவை? என் சொந்த ஆனந்தத்தைவிடத் தேசபக்தி, மதபக்தி, பித்ருபக்தி, குருபக்தி இவைகள்தாம் முக்கியமானவை என்று நான் கருதுகிறேன். இன்று எங்கள் நாடு இருக்கும் நிலையில் இவைகளுக்கான செயல்களை ஓரளவு பூர்த்திசெய்த பிறகுதான் என் சொந்த விஷயங்களைப்பற்றி நினைப்பது என்று சபதம் செய்திருக்கிறேன்?' என்றான்.

இந்திரையின் முகத்தில் சோகத்தின் அறிகுறிகள் தோன்றலாயின.

"இந்திரே! இந்த அற்ப விஷயத்துக்காக நீ ஏன் வருத்தப்பட வேண்டும்? காதலன் இத்தகைய மகாகைங்கரியத்தில் ஈடுபட்டிருப்பதைக் கண்டு நம் நாட்டு வீரப்பெண்கள் ஆனந்தமடைவதுதான் வழக்கம். அதை விடுத்து, தேசத்தையும் கடமையையும் தள்ளிவிட்டுச் சுகமாகக் கல்யாணம் செய்துகொண்டு மனைவியுடன் உட்கார்ந்திருப்பவனைக் கண்டால் நீ கௌரவிப்பாயா...? இந்திரே! உன் சொந்த ஆனந்த அநுபவத்தைச் சற்று ஒதுக்கி வைத்துவிட்டு, என்னுடைய கடமையை நான் செய்வதைப்பற்றிப் பெருமைப்படு. உரிய காலம் வரும்வரையில் எனக்காகக் காத்திரு. அதுதான் நீ எனக்குச் செய்யக்கூடியது."

"காத்திரு! இது யார் யாருக்குச் சொல்லுகிற வார்த்தை? மௌரியகுலத்திலே இதுவரையில் சொன்ன சொல்லைக் காப்பாற்றாதவர்கள் பிறந்ததே இல்லை. நீங்கள் என்னைச் சோதிக்கிறீர்களா? மௌரியகுலத்தின் உறுதியைச் சோதிக்கிறீர்களா? நான் உங்களை முதல்முறையாகக் கண்டதுமே என் ஹிருதயத்தைத் தங்களுக்கே அளித்துவிட்டேன். ஹரித்துவாரத்துக் குருகுலத்திலுள்ள ஒரு மாணவர் என்று மட்டுந்தான் தெரியும். நீங்கள் யாராயிருந்தாலும் சரி. எதன் பொருட்டு எந்த வேஷத்தில் இருந்தாலும் சரி, அதைப்பற்றி எனக்குக் கவலையே இல்லை. மௌரிய குலப் பெண்களிடம் காத்திரு என்ற வார்த்தையைச் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை."

"இந்திரே! அப்பொழுது நான் இருந்த நிலையிலும் ஆகட்டும், இப்பொழுதுதான் ஆகட்டும்; நான் யார் என்று நிர்ணயிக்கவும் உன்னால் முடியாது. உலகறிய ஒருநாள் உன் கைகளை நான் பற்றும்பொழுது நான் யாரென்று தெரிந்துகொள்வாய். இன்றைக்கு நான் வந்த விஷயத்தின் பொருட்டுச் சக்கரவர்த்தியை இப்பொழுது பார்க்க முடியுமா?"

"அண்ணாவைப் பார்ப்பதற்கு இது நேரம் அல்ல. அவர் தியானம் செய்துகொண்டு போதிவிருக்ஷத்தடியில் நிஷ்டையில் இருப்பார்."

"எப்படியிருந்தாலும் இன்று கட்டாயம் அவரைப் பார்த்தே தீரவேண்டும்."

"என்ன செய்யலாம்? என்னைத் தவிர அந்தப் போதி விருக்ஷத் தடியில் யாரும் போகக்கூடாது. இது அண்ணாவின் கண்டிப்பான கட்டளை."

"ஆனால் ஒன்று செய்யலாமே? எனக்கு விஷயந்தான் முக்கியமே தவிர நான் அவரை நேரில் சந்திக்கவேண்டும் என்பதில்லை. விஷயத்தைக் கவனித்துக்கொள்; சொல்லுகிறேன். இன்று நடு நிசியில் நகரச் சிறைச்சாலையில் உள்ள மகேந்திரன் என்ற பெயர் கொண்ட ராஜகுமாரனையும் பிரதான மந்திரி ராதாகுப்தனையும் கொன்றுவிடுவதென்று தீர்மானித்திருக்கிறார்கள்!"

"யார்? யாருக்கு அவ்வளவு தைரியம்?" என்று படபடப் புடன் கேட்டாள் இந்திரை.

"வேறு யார் செய்வார்கள்? கலிங்கநாட்டு விமலையும் அவளைச் சேர்ந்தவர்களுந்தான். இரண்டு நாட்களுக்கு முன்பு செய்த சூழ்ச்சி பலிக்கவில்லை என்ற ஆத்திரந்தான் காரணம். இதுவரையில் பிறரை ஏவிச் செய்ததனால் காரியம் கெட்டுவிட்டது என்பதும் தாங்களே நேரில் நின்று முடித்தால்தான் காரியம் முடியும் என்பதும் அவர்கள் நம்பிக்கை. அதன்படி விமலை, மகேந்திரனை யும், பௌத்ததர்ம பரமகுருவான ஸம்புஷ்டாசாரியன், ராதா குப்தனையும் முடித்துவிடுவதாக ஏற்பாடு. ஆகையால் இந்த விஷயம் சக்கரவர்த்தி அவர்களின் காதுக்கு எட்டவேண்டும். நிரபராதியான இருவர் உயிர் இழப்பதை எப்படியாவது தடுக்க வேண்டும். தடுப்பதற்கு அரசரைத் தவிர வேறு யாராலும் முடி யாது. இந்திரே! இந்தச் செயல் உன்னால்தான் முடியவேண்டும்."

பயத்தினால் இந்திரையின் முகம் வெளுத்தது. "அடடா! என்ன பயங்கரமான செயல்? தர்மகுரு கொலைகாரரா! இத் தகைய பாவிகளை இனிமேல் ஒருநாளும் நமஸ்கரிக்கமாட்டேன். இந்த விமலை இவ்வளவு பரம ராக்ஷசியா! கொலை என்பது அவ ளுக்கு இவ்வளவு சகஜமான ஒரு காரியமா? இது சரி; விஷயம் உங்களுக்கு எப்படித் தெரிந்தது?"

"நான் பாடலீபுரத்திற்கு வரும்பொழுது வழியில் ஆசாரிய முங்கலீபுத்திர திஷ்யரது தரிசனம் கிடைத்தது."

"என்ன! ஆசாரிய திஷ்யரா? அவரது தரிசனம் கிடைத் ததா? என்ன பாக்கியம்! என்ன பாக்கியம்!"

என்னுடைய பாக்கியத்தைப்பற்றி நீ பெருமைப்படாதே. அதில் பாதி உன்னுடையதுதான். மேலும் அந்த மகாத்மா சீக்கிரத்திலேயே ஜனங்களுக்கு எதிரில் வரப்போவதாகவும் சொல்லியிருக்கிருர். அப்பொழுது அவரை நேரில் காணும் பாக்கியம் தாஞகவே உனக்கும் கிடைக்கும். நான் பாடலீபுரத்திற்கு வருகிறேன் என்ற விஷயம் தெரிந்து, அவர் சக்கரவர்த்தியிடம் கொடுக்கும்படி ஒரு கடிதத்தைக் கொடுத்தார். அதை எடுத்துக் கொண்டு அரண்மனையை நோக்கிப் புறப்பட்டேன். வழியில் விமலே கண்டு, தான் அரசரிடம் அழைத்துச்செல்வதாகச் சொல்லிப் பர்ணகுடியின் அருகில் உட்காரவைத்தாள். தான் மட்டும் பர்ணகுடியின் உள்ளே போய்க் கதவைத் தாழிட்டுக் கொண்டாள். உள்ளே ராஜமாதாவும் ஸம்புஷ்டாசாரியனும் பேசுவது கேட்டது. ஆரம்பத்தில் பேச்சு வெகு மெதுவாகக் கேட்டது. வரவர ஸ்தாயி உயர்ந்து, உரத்த குரலில் பேச ஆரம்பித்தார்கள். வெளியிலே நான் இருப்பதை மறந்தோ இந்த வார்த்தைகளுக்கும் எனக்கும் ஒருவிதமான தொடர்பும் இல்லே என்ற காரணத்தாலோ பேச்சு, வெகு சுவாரஸ்யமாகப் போய்க்கொண் டிருந்தது. வார்த்தைகள் தெளிவாக என் செவிகளில் விழுந்தன. இந்த இருவரையும் பிழைப்பிக்க வேண்டும் என்றும் நானே நேரில் சக்கரவர்த்தியிடம் கடிதத்தைச் சேர்ப்பித்துவிடலாம் என்றும் எண்ணியே எழுந்து வந்துவிட்டேன். இந்திரே! இந்த ஓலேயை எடுத்துக்கொள். நான் உன்னிடம் சொன்ன எல்லா விஷயங்களேயும் சக்கரவர்த்தியிடம் சொல்லி, அந்தப் பிசாசுகளின் கையிலிருந்து அவர்களே மீட்க முயல்'' என்று சொல்லியவனுகப் போகப் புறப்பட்டான்.

"இதற்குள் போகவேண்டுமா? இன்னும் எவ்வளவோ பேச வேண்டுமே!'' என்று கெஞ்சும் குரலில் கேட்டாள் அவள்.

"என்ன சொல்லவேண்டும். அதைச் சொல்லிவிடேன்!''

"பேசவேண்டும் என்று ஆவலாயிருக்கிறது. ஆனல் என்ன பேசவேண்டும் என்று தெரியவில்லே!''

பிக்ஷுவின் முகத்தில் இளநகை அரும்பிற்று. உன்னுடைய பேச்சுக்களேக் கேட்டுக்கொண்டே இருக்கவேண்டிய சமயம் சமீபத்தில்தான் இருக்கிறது. இப்பொழுது நேரமாகிறது. நான் வருகிறேன்'' என்று சொல்லியவனுக இரண்டடி நடந்தான் அவன்.

"கொஞ்சம் நில்லுங்கள்!' இவைகளையெல்லாம் உனக்குச் சொன்னது யார்? என்று சக்கரவர்த்தி கேட்டால் என்ன பதில் சொல்லட்டும்?"

"அவர் என் பெயரைப்பற்றிக் கேட்கமாட்டார். யாரோ ஒரு பிக்ஷு என்று சொல்லிவிடு."

"என்ன! முன்பின் தெரியாத யாரோ ஒரு பிக்ஷு என்று சொல்லச் சொல்லுகிறீர்கள்? பொய்யா சொல்வது? நீங்கள் பிக்ஷு அல்ல என்பது எனக்குத் தெரியும். ஆனால் அதை எப்படிச் சொல்வது?"

ஆனால் உன் தமையனரிடம் நிஜத்தையே சொல்லவேண்டும் என்பது உன்னுடைய உத்தேசமா?"

இந்திரை மௌனமாக உட்கார்ந்திருந்தாள்.

"சக்கரவர்த்தியைச் சாக்கு வைத்துக்கொண்டு என்னுடைய பெயரை நீ அறியவேண்டும் என்று துடிக்கிறாய் என்று தோன்றுகிறது. அந்த ஆவலை இன்னும் கொஞ்ச நாள் அடக்கி வைத்துக்கொள். ஒன்று மட்டும் நிச்சயமாக நினைத்துக்கொள். நான் யாரென்பது உன் தமையனுக்குத் தெரியும்பொழுது தடைகள் நேருமோ என்று தயங்காதே. இதுமட்டும் நிச்சயம். தடைக்குப் பதில் அவர் ஆனந்தப்படுவார். இந்திரே! இப்படிப் பேசிக்கொண்டிருந்தால் நேரமாகிவிடும். குற்றமற்ற அந்த இருவரும் இந்தப் பேய்க்கூட்டத்திற்குப் பலியாகிவிடுவார்கள். ஆகையால் ஒரு க்ஷணங்கூட வீணாக்காமல் உன் தமையனிடம் போ. அவர் தியானத்தில் இருந்தாலும் அவரை எழுப்பி இந்த விஷயத்தைத் தெரிவித்துவிடு" என்று சொல்லியவனாக விடுவிடென்று நடந்து மறைந்துபோனான் பிக்ஷு. இந்திரை கண்கொட்டாமல் அவன் போவதையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

## 23

## விமலையும் இந்திரையும்

அந்தப் பிக்ஷுவின் தலை மறையுமட்டும் பார்த்துவிட்டு இந்திரை பெருமூச்சுடன் தமையனிடம் புறப்பட்டாள். இதற்குள் விமலையின் குரல் அவள் செவியில் விழுந்தது. "இந்திரா தேவி! கொஞ்சம் நில்லுங்கள்; உங்களுக்கு இரண்டு வார்த்தைகள் புத்திமதி சொல்லவேண்டி யிருக்கிறது."

"இப்பொழுது அவசரமாகப் போய்க்கொண் டிருக்கிறேன். இன்னொரு சமயம் சாவகாசமாகக் கேட்கிறேன்."

"இல்லை, இல்லை; இந்தமாதிரியான விஷயங்களில் காலதாமதம் செய்வது அழகல்ல. அதைச் சொல்லிச் சீக்கிரமே உன்னை எச்சரிக்க வேண்டும் என்றுதான் நான் ஓடிவந்தேன்."

"அடடா! என்மேல் எவ்வளவு கருணை! என்மேல் இவ்வளவு அன்பு உங்களுக்கு உண்டென்று எனக்கு முன்னமே தெரியாது. மாதாஜி புத்திமதிதேவிக்கும் உங்களைப்போலவே என்னிடம் அன்பு சுரந்திருப்பதாகத் தெரிகிறது. இருவருடைய அன்பும் இருக்கும் பொழுது என்னுடைய க்ஷேமத்திற்கு என்ன குறைவு!" என்று குத்தலாகச் சொன்னாள் இந்திரை.

ஆனால் விமலை அதைப் பொருட்படுத்தாதவளாக, "ஆமாம், அதை உத்தேசித்துத்தான் உனக்கு இரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்பினேன்."

"ரொம்ப சந்தோஷம்! அப்படிப் புத்திமதி சொல்லி எனக்கு உதவி செய்யவேண்டும் என்று விருப்பம் இருந்தால் அந்த இரண்டு வார்த்தைகளை இரண்டு நாள் தள்ளி வைத்துக்கொள்ளுங்கள். அதுதான் பெரிய உதவி" என்றாள்.

"இந்திராதேவீ? நான் சொல்லப்போவதைத் தடைசெய்யாதே! என்னுடைய வார்த்தைகளை நீ கேட்டே தீரவேண்டும்!"

"இது என்ன பலவந்தம்! நீங்கள் சொல்லும் வார்த்தையைக் கேட்பதும் கேட்காததும் என் இஷ்டம். இப்படிப்

பிறரால் வற்புறுத்தப்பட்டு வார்த்தைகள் கேட்டு வழக்கமில்லை'' என்று சொல்லி, அவ்விடத்தைவிட்டு நடந்தாள் இந்திரா.

விமலையின் முகம் கோபத்தால் சிவந்தது. ''இந்திரே! நில்! நான் சொல்லப்போவதைக் கேட்டுவிட்டுப் பிறகு போ! கொஞ்ச நேரத்துக்கு முன் உன்னுடன் ஒரு பிக்ஷு பேசிக்கொண்டிருந்தானே, அவனுக்கும் உனக்கும் எத்தனை நாளாக இந்தச் சிநேகம்?''

''இந்த வார்த்தைகளைக் கேட்க நீ யார்? உனக்கு நான் பதில் சொல்லவேண்டியதில்லை.''

''உனக்கும் அவனுக்கும் நட்பு உண்டென்று எனக்கு நிச்சயமாகத் தெரியும். சக்கரவர்த்தியின் தங்கை இந்தமாதிரிச் செயல்களில் ஈடுபடுவது அவளுடைய கீர்த்திக்குக் களங்கமல்லவா?''

''இந்திரையின் கண்கள் கோப மிகுதியினால் சிவந்தன. எரித்து விடுபவள்போல் அவளைப் பார்த்து, ''இதுதான் உன்னுடைய உபதேசமோ? என் நடத்தையிலே நீ என்ன குற்றத்தைக் கண்டாய்?''

''நந்தவனத்திலே, ஓர் இளைஞன்-பிக்ஷு-ராஜகுமாரியுடன் மணிக்கணக்காகப் பேசிக்கொண்டிருந்தால் பார்ப்பவர்கள் வேறு என்னதான் எண்ணமுடியும்? அது மௌரிய குலத்திற்கே களங்கமல்லவா?''

''போதும் போதும் நிறுத்து! உன்னை இங்கே யாரும் கூப்பிடவில்லை. மௌரிய குலத்தின் பெயரை எப்படிக் காப்பாற்ற வேண்டும் என்பது எனக்குத் தெரியும். மௌரிய குலத்தின் பெண்களுக்கு மட்டும் அன்று. பாரதவர்ஷத்துப் பெண்களுக்கே தங்களது சீலத்தை எப்படிக் காப்பாற்றிக் கொள்வதென்பது தெரியும். உன் மனம் எப்போதும் கெடுதலையே எண்ணுவதால் எதைப் பார்த்தாலும் கெடுதலாகவே தோன்றுகிறது. எங்களுடைய நடத்தை உனக்கு விபரீதமாகத் தோன்றுகிறது. அந்தப் பிக்ஷு என்னைத் தனிமையில் சந்திக்க விரும்பி இங்கே வரவும் இல்லை. நானும் அவரை வழிபார்த்துக் காத்திருக்கவும் இல்லை. இது எதிர்பாராதபடி நேர்ந்தது.''

''அப்படியானால் மறைவான கொடி வீட்டில் போய் ஒளிந்து பேசுவானேன்?''

இந்திரைக்குக் கோபம் பொங்கி எழுந்தது! "உன் கொள்ளிக் கண்ணுக்குப் பயந்துதான் ஒளிந்து போனேன்."

"என் கண்களுக்கே நீ பயப்படுவதானால் என்னுடைய வாயிலிருந்து உதிரும் சொற்களுக்கும் என்னுடைய சாபத்திற்கும் நீ பயந்துதான் ஆகவேண்டும்!" என்று வெறி கொண்டவள்போல் கூவினாள் விமலா.

இந்திரை பயந்து போனாள். கண்களைக் கைகளால் மூடிக்கொண்டு, "விமலா ராணி! நீ இப்படி ஆத்திரப்பட்டு எரிந்து விழும்படி உனக்கென்ன குற்றம் செய்தேன்?"

"ஓஹோ! என்ன செய்தேனென்று கேட்கிறாய்? அந்தப் பிக்ஷுவை நீ வசப்படுத்தி விட்டாய். அதுதான் நீ செய்த பெரிய குற்றம். அவனை நீ புறக்கணித்து விட்டால் நாம் எப்போதும் போல் சிநேகமாக இருக்கலாம்."

"ராணீ, உன்னுடைய சிநேகமும் வேண்டாம். அதற்காக அவரைப்பற்றி நீ பேசவேண்டிய அவசியமும் இல்லை."

"ஓஹோ! மயிலே மயிலே இறகு போடென்றால் முடியுமா? உன்னுடைய இந்த நடத்தையை நாலு பேர் முன்னிலையில் சொல்லி, உன் தமையனிடமும் சொல்லி, காரி உமிழச் செய்தால் அப்பொழுதுதான் தெரியும் உனக்கு."

"விமலா ராணி, தயவு செய்து அப்படியே செய். விஷயம் எப்பொழுது எல்லோருக்கும் தெரியப்போகிறதோ என்றுதான் காத்துக்கொண்டிருக்கிறேன். இந்தச் சமாசாரத்தை நேரில் நானே அண்ணாவிடம் தெரிவிப்பதைவிட உன்னைப்போன்ற ஒரு சகி தெரிவிப்பது ரொம்பவும் நல்லதாயிற்று. இந்தப் பரம உபகாரத்தை நான் என்றைக்கும் மறக்க மாட்டேன்."

விமலை திடுக்கிட்டாள்! "என்ன, அந்தப் பிக்ஷுவையா கல்யாணம் செய்துகொள்ளப் போகிறாய்?"

"அதைப்பற்றி நீ கவலைப்பட வேண்டாம். அவர் காரியார்த்தமாகத்தான் பிக்ஷுவாக இருக்கிறார்."

"ஓஹோ! அதுவும் உனக்குத் தெரியுமோ!" என்று மிகுந்த ஆச்சரியத்துடன் கண்களைக் கொட்டையாய் விழித்தாள் விமலா.

"ஆச்சரியப்படுவானேன். பிக்ஷு ஆவதற்கு முன்பே அவரை எனக்குத் தெரியும்."

"ஓஹோ அப்படியா? ஆனால் இது வெகு நாளை உறவோ!" என்று கேட்டுவிட்டு, 'அடடா, இந்தச் சனியன் எங்கே வந்து முளைத்தாள்? இவளை எப்படித் தொலைப்பது?' என்று எண்ணமிடலானாள்.

'சரி, இந்த அப்பாவிப் பெண்ணைப் பயப்படுத்தித்தான் ஆக வேண்டும்' என்று நினைத்தவளாக, "ஏ இந்திரா, என்னைக் கேலியா செய்கிறாய்? உனக்குக் கல்யாணம் ஆகவேண்டும் என்று நான் முயல்கிறேன் என்று நினைத்தாயா? நீ அவனை மறந்துவிட வேண்டும். வீணாக இந்த விமலையின் கோபத்துக்கு ஆளாகதே!" என்று உறுமினாள்.

விமலையின் இந்த உக்கிர சுருபத்தைப் பார்த்து இந்திரை நடுங்கினாள். "அவரை மறந்து விடு என்று சொல்வதற்கு நீ யார்! அழகுதான்!" என்றாள்.

"ஏ இந்திரே! விஷயம் தெரியாமல் பிடிவாதம் செய்கிறாய். உன்னுடைய இந்தப் பிடிவாதம் உன் வாழ்க்கையையே கெடுக்கும். இது மௌரிய குலத்துக்கே தீராத ஒரு களங்கம். இதை உன் தமையனோடு சொல்வதுமட்டும் அல்ல; ஊர் முழுவதும் பறை சாற்றுவேன்!" என்று வெறி கொண்டு கூச்சலிட்டாள் விமலை.

"என்ன வந்தாலும் சரி; உன் பேச்சை நான் சட்டை செய்யப் போவதில்லை" என்றாள் இந்திரை.

கடைசி வார்த்தையைக் கேட்டதும் விமலையின் கோபம் கரைகடந்தது. "நாளை உதயத்துக்குள், 'சக்கரவர்த்தியின் தங்கை வேசி, கற்பிழந்தவள்' என்று ஊர் முழுவதும் பறை சாற்றி விட்டால்" என்று சொல்லிக்கொண்டே அவளைத் தள்ளி விடுப வள்போல் பாய்ந்தாள் விமலை. இரண்டடி பின்னடைந்தாள் இந்திரை; பின்னடைந்த வேகத்தில் கால் தடுக்கித் தடாலென்று விழுந்துவிட்டாள்; விழுந்த வேகத்தினால் மூர்ச்சையடைந்தாள். ஒரே ஒரு க்ஷணம். அப்படியே கழுத்தை நெரித்துவிடலாமா என்று குனிந்தாள் விமலை. "இந்திரே! எங்கிருக்கிறாய்?" என்ற குரல் தெளிவாக அவள் செவிகளில் விழுந்தது. 'இன்றைக்கு இது போதும். வழிக்கு வராவிட்டால் ஆயுதம் எங்கே போயிற்று?' என்று எண்ணியவளாக அருகிலிருந்த புதரில் நுழைந்து மாயமாக மறைந்து போனாள் அவள்.

* * *

இந்திரை கண்ணை விழித்தாள். தான் தன் படுக்கையில் இருப்பதையும், தன் தாயும் வீதசோகனும் சக்கரவர்த்தியும் அருகில் இருப்பதையும் கண்டு திடுக்கிட்டாள். நாற்புறமும் மருண்ட பார்வையுடன் பார்த்து, "அவள் இங்கே இல்லையே?" என்று பயமும் சந்தேகமும் கலந்த குரலில் கேட்டாள்.

"அவள் என்றால் யாரம்மா?" என்று மிகுந்த பரிவுடன் கேட்டார் சக்கரவர்த்தி.

"அவள்தான் கலிங்கநாட்டு ராணி விமலா. அவள் இங்கே இல்லையே?" என்று மறுபடியும் கேட்டாள்.

"அவள் இங்கே இல்லை. ஆனால் அவளிடம் உனக்கென்ன பயம்?"

இந்திரை அரசரின் கேள்விகளுக்குப் பதில் சொல்லாமலே, "இரவு, நேரம் என்ன ஆயிற்று?" என்றாள்.

"இரண்டு சாமம் இருக்கும்" என்றாள் சுபத்திராங்கி.

தன் மடியிலே கடிதம் இருக்கிறதா என்று தடவிப் பார்த்துக் கொண்டாள் இந்திரை. இருக்கிறது என்று தெரிந்தவுடன், 'நல்ல வேளை; இதை அவள் எடுத்துக்கொள்ளாமல் விட்டாளே!' என்று நினைத்தவளாக, எல்லா விஷயங்களையும் சுருக்கமாகச் சொல்லிக் கடிதத்தையும் கொடுத்தாள். பிறகு, "அந்தப் பிக்ஷு இந்தக் கடிதத்தைத் தங்களிடம் சேர்ப்பித்து, தாமே நேரில் எல்லாவற்றையும் தெரிவிக்க வேண்டுமென்று வந்திருந்தார். தாங்கள் அப்பொழுது தியானத்தில் ஆழ்ந்திருந்ததால் அந்த வேலையை நான் ஏற்றுக்கொண்டேன். இடையில் மூர்ச்சித்து விட்டதால் விஷயத்தை முன்னதாகத் தெரிவிக்க முடியவில்லை. உடனே அவர்களைக் காக்க வழி தேடுங்கள்" என்றாள்.

"அடாடா, முன்பே தெரிந்திருந்தால் தகுந்த ஏற்பாட்டுடன் பிடித்திருக்கலாமே. ஆனால் இனிமேல் பேசி என்ன பிரயோசனம்? குமாரா, நான் மோகனனோடு நகரச் சிறைச்சாலைக்குப் போகிறேன். நீ சிலரை அழைத்துக்கொண்டு ராதாகுப்தரின் மாளிகைக்குப் போ. தகுந்த ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு போ" என்று சொல்லிவிட்டு, வேகமாக எழுந்து வெளியே சென்றான் அசோகன்.

# 24

## மீட்சி

சிறைச்சாலையின் இருண்ட அறை. ரோகிணி தன்னுடைய படுக்கையில் படுத்து நித்திரையில் ஆழ்ந்திருந்தாள். சாளரத்தின் வழியே புகுந்த குளிர்ந்த சந்திர கிரணங்கள் அவளது மலர் மேனியைத் தடவிக் கொடுத்துக்கொண் டிருந்தன. சுருண்டு அடர்ந்த கருங் குழல் கற்றைகள் தோள்களின் மேல் புரண்டு கொண்டிருந்தன. அந்த நித்திரையிலுங்கூட அவள் முகத்தில் புன்னகை தவழ்ந்துகொண் டிருந்தது. ஒரு கையினால் முகத்தைச் சிறிதளவு மறைத்துக் கண்களை மூடிக்கொள்வதைப் போல் வைத்துக்கொண் டிருந்தாள். இந்த நிலையில் அவளை ஒரு கவி பார்த்திருந்தால், 'கைவண்ணம் தாமரை, வாய் கமலம் போலும்' என்று பாடியிருப்பான். ஆனால் அந்தப் பாக்கியம் யாருக்கும் கிடைக்கவில்லை. கலிங்ககுல தீபம் அசோகனுக்கே கிடைக்கக் காத்திருந்தது. இந்த விஷயம் அவனுக்கு முன்னமே தெரிந் திருந்தால், 'யுவராஜனுடைய சங்கத்தினால் தனக்கு விசேஷமான ஆனந்தம் உண்டாவானேன்......?' இம்மாதியான பல கேள்வி களுக்கு விடை கிடைத்திருக்கும்.

ஆனால் அதைப்பற்றி இப்பொழுதென்ன? சிறைச்சாலை வாச லிலே வேர்க்க விறு விறுக்க ஓடிவந்த குதிரையை நிறுத்தினான் அசோகன். மோஹனனிடம் குதிரையை ஒப்பித்து, வெளியே காவல் இருக்கும்படி சொல்லி, யுவராஜனது அறையை நெருங் கினான். அறையில் ஒரே நிசப்தம். வெளிச்சமும் இல்லை. அவன் மனம் சஞ்சலப்படத் தொடங்கிற்று. 'ஒருவேளை விமலை வந்து...' என்று எண்ணினான். மிகுந்த கலக்கத்துடன் கதவின் அருகே சென்று கூர்ந்து கவனித்தான். தூங்குகின்றவனது மூச்சின் ஒழுங்கான சப்தம் அவன் செவிகளுக்குப் புலனாயிற்று. அவன் முகம் மலர்ந்தது, கைகளால் தடவிக் கள்ளக் கதவின் ஆணியைக் கண்டுபிடித்து அறைக்குள் நுழைந்தான்.

'ஐயோ பாவம்! ஒன்றுமே தெரியாதுபோல் இருக்கிறது. எப்படித் தெரியும்? நிச்சிந்தையாக அயர்ந்து தூங்கிக்கொண்

டிருக்கிருனே' என்று எழுப்புவதன் பொருட்டு அவன் படுக்கையைச் சமீபித்தான்.

அவ்வளவுதான்! அப்படியே திகைத்துப் போனுன், அசோகன். இதை எதிர்பாராததனுல் அவன் ஹிருதயம் தடதடவென்று அடித்துக்கொண்டது. அயர்ந்து தூங்கிக்கொண்டிருக்கும் அந்தப் பேரழகியைக் கண்கொட்டாமல் பார்ப்பது அவமரியாதை என்று தோன்றவே நாலடி பின்னே நகர்ந்தான் அசோகன்.

'இதென்ன அதிசயம்? இந்தக் கட்டழகி சிறைக்குள் எப்படி வந்தாள்! ஒருவேளை அறை தவறி வந்துவிட்டேனே? இல்லை இல்லை! அதே அறை. அதோ நேற்று நான் அவனுக்களித்த பூங்கொத்து; அதே உடை; அறை தப்பிவிடவில்லை. இதே அறைதான்' என்று நினைத்தான்.

இப்பொழுது, முதல்முறை வரவேற்ற பொழுது அவன் பின்னடைந்ததும், அரண்மனையில் வசிக்கும்படி சொன்னபொழுது மறுத்ததும் நினைவுக்கு வர ஆரம்பித்தது. 'சரி! எதற்கும் நாம் அவன் இன்னுனென்று தெரிந்ததாகக் காண்பித்துக்கொள்ளாமல் இன்றைய விபத்திலிருந்து கரையேற்றி விட்டால் பிறகு சமயோசிதமாக நடந்துகொள்ளலாம் என்று நினைத்தவனுக அறையின் கதவை அடுத்து வெளியே நின்று ஒரு பூங்கொத்தை எடுத்து வீசி எறிந்தான். அவள் திடுக்கிட்டுக் கண்விழித்து அவசரமாக உத்தரீயத்தை எடுத்துப் போர்த்துக்கொள்ளவும், அசோகன் அந்த அறையில் நுழையவும் சரியாக இருந்தது.

"ஏ யுவராஜா! எழுந்திரு! உன் தலையின் மேல் ஆபத்து நின்றுகொண்டிருக்கிறது. இவ்விடத்தை விட்டுக் கிளம்பு!" என்று அதிகாரத்தோடு கூறினுன் அசோகன்.

அவன் மனம் ஆனந்தத்தால் நிரம்பி இருந்தது. அந்த யுவராஜனே விஷயம் விளங்காதவனுக, அடுத்தடுத்துக் கடந்த சில நாட்களாகத் தன்னைத் துரத்தித் துரத்தி ஒட்டங் காட்டும் விதியை நினைத்தவனுக, "அடாடா! யார் சக்கரவர்த்தியா? சக்கரவர்த்தி! இன்று, இந்த நள்ளிரவில் இதென்ன!" என்ருன். பயத்தினுல் அவன் குரல் நடுங்கிக்கொண்டிருந்தது.

அசோகன் அவனை ஏற இறங்கப் பார்த்தவனாய், "மகேந்திரா! உன்னை இனி இந்த மாதிரியான இடங்களில் வைப்பது பிசகு. வா என்னுடன். இங்கே இருக்கும் ஒவ்வொரு விநாடியும் உன் உயிருக்கு ஆபத்து; எழுந்திரு! புறப்படு என்னுடன்! பிறகு ஆற அமர விஷயங்களைச் சொல்லுகிறேன்" என்று சொல்லியவனாய், மகேந்திரன் பின்தொடர முன்னே நடந்தான் அசோகன். இரவின் இரண்டாம் ஜாமத்தைக் குறிக்கும் பறை ஒலி கோட்டையி னின்றும் முழங்கத் தொடங்கிற்று.

## 25

## தர்மாநுஜன்

அசோகன் சென்று அரை நாழிகை ஆகியிருக்கும். விமலா ராணி தனது கூட்டாளிகளுடன் கையில் வாளேந்தி வந்து சேர்ந்தாள். இன்று இந்தச் செயலுக்கு விசேஷமான உதவி வேண்டியிருக்கும் என்று அவள் நினைக்கவில்லை.

'தர்பார் சிறைச்சாலை என்றால் என்ன பிரமாதம். நம்மை யார் உள்ளே விடமாட்டேன் என்று சொல்ல முடியும்?' என்று நினைத்தாள். உண்மையிலேயே தர்பார் சிறைச்சாலையில் விசேஷமான கட்டுத் திட்டங்கள் கிடையாது. அரசியல் கைதிகள் மட்டுமே அதில் வைக்கப்பட்டிருந்தனர். பாராக்காரர்கள் அவர்களுடைய நன்னடக்கைதான். சிறந்த குணமுள்ள ஒரு பெரிய மனிதர், அருகிலேயே உள்ள ஒரு வீட்டில் பெயரளவில் காவலாளியாக இருந்தார்.

சிறைச்சாலையின் கட்டிடமோ பிரம்மாண்டம். ஆனால் உள்ளேயிருக்கும் கைதிகளின் தொகையோ வெகு சொற்பம். கைதியே இல்லாமல்கூட பல வருஷங்கள் இருந்ததாம்! எப்பொழுதாவது சிலர் தண்டிக்கப்பட்டாலும் அவர்கள் பூர்வ சரித்திரங்களை அலசிப் பார்த்து, இங்கே வசிக்கத்தக்கவனா என்று தேர்ந்தெடுத்துத்தான் அனுப்புவார்கள். இந்த விஷயங்களெல்லாம் விமலைக்கு நன்றாகத் தெரியும்.

'யுவராஜனைக் கொல்வது என்ன பிரமாதம்? சின்னப் பையன்; அதிலும் நல்ல தூக்கத்தில் இருப்பான். ஒரே ஒரு நொடிதான். இந்த விமலைக்கு இது ஒரு பிரமாதமா? இந்தக் கலிங்க நாட்டு முளையையே வேரோடு பிடுங்கி எறிந்துவிட வேண்டும். இவன் தொலைந்தானானால் பிறகு, விமலை கலிங்கத்து அரசிதான். சந்தேகமென்ன? யார் என்னை அசைக்க முடியும்?' என்று எண்ணியவளாய் யுவராஜனது அறையின் வாயிற்படிக்கு வந்தாள். கதவின்மேல் கை வைத்தாளோ இல்லையோ கதவு தானாகவே திறந்தது. 'யுவராஜன் கதவைத் தாழிட மறந்துவிட்டான்போல்

இருக்கிறது. இதுவும் ஒரு நல்ல சகுனந்தான்' என்று நினைத்த வளாக உள்ளே சென்றாள்.

உள்ளே காலடி வைத்ததும் ஆச்சரியத்தினால் திடுக்கிட்டாள். படுக்கை சூனியமாகக் கிடந்தது. அறை முழுவதும் தேடினாள். தேடுவதற்கு என்ன இருக்கிறது? பெட்டி பேழைகளைக்கூடத் திறந்து தேடினாள். பலமுறை தேடிக் களைத்து, கட்டிலுக்கு அடியில் குனிந்து பார்த்தாள். அப்பொழுது அறைக்குள் யாரோ வருவதுபோல் காலடி ஓசை கேட்டது. ஏதோ காரியமாக வெளியே போயிருந்த யுவராஜன் இப்பொழுதுதான் திரும்பி வருகிறதாக நினைத்து, "கடைசியில் வந்தாயா? வா வா!" என்றாள்.

"ஆமாம்! வந்தேன்."

பதில் கிடைத்தது. ஆனால் எதிர்பார்த்தவரிடம் இருந்தல்ல. அந்தக் குரல் அவளுக்கு மிகவும் பரிச்சயமான ஒரு குரல். மிகுந்த ஆச்சரியத்துடன், "தர்மாநுஜா, இந்த நள்ளிரவில்,......இந்தச் சிறையில் எப்படி வந்தாய்!"

"உன்னைப்போல் பெண்கள், பெண் தன்மையை விட்டு, பேயாகி, இந்த நள்ளிரவில் கொலை செய்யப் புறப்பட்டால், என்னைப் போன்ற புருஷர்கள் அதைத் தடுக்கப் புறப்படுவதில் ஆச்சரியம் என்ன?" என்று சொல்லுகையில் அவனுடைய பார்வை படுக்கையின்மேல் விழுந்தது. மறு விநாடி அவள் கையில் இருந்த வாளையும் பார்த்தான்.

"ஏ ராணி, கடைசியில் அந்த நிரபராதியைக் கொன்று விட்டாயல்லவா? அற்பமான பேராசை, மண்ணாசைக்காகக் கொலையும் செய்து விட்டாயல்லவா?"

"அது சரி, உனக்கு அவன்மேல் இவ்வளவு கருணை ஏற்படுவதற்கு அவனுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்?"

"அவனும் மனிதன்! நானும் மனிதன்! இதுதான் அவனுக்கும் எனக்கும் உள்ள சம்பந்தம். எவனுக்கு மனத்தில் தயையில்லையோ அவன் மனிதனா? ஏ பிசாசே! நிஜத்தைச் சொல்லிவிடு. அந்த நிரபராதியைக் கொன்றுவிட்டா யல்லவா?"

"இல்லை! இல்லை! நான் கொல்லவில்லை. நான் வருவதற்கு முன்பே அவன் போயிருக்க வேண்டும். நான் வந்தபொழுது

கதவு திறந்திருந்ததனுல் அவன் இங்கேதான் அருகில் எங்கேயாவது இருக்கவேண்டுமென்று நினைத்தேன்" என்று ஆத்திரத்துடன் சொன்னுள் அவள்.

"ஏ, ராணீ, அவனைக் கொல்லலாம் என்கிற எண்ணத்தை விட்டுவிடு. யுவராஜன் அசோகனது அன்பின் கீழ் இருப்பதனுல் உன்னைப் போன்றவர்களால் அவனுக்கு ஒருவிதமான கெடுதியும் செய்யமுடியாது. தனக்குத் தானே மெதுவான குரலில், 'அசோகா! நீதான் நிஜமான கர்மவீரன். உன் அன்பு, கடலைப் போன்றது. அந்தக் கருணைப் பெருக்கினுல் ஆர்யாவர்த்தம் முழுவதும் உன் அன்புக்கு வசப்படுவதில் ஆச்சரியமென்ன? பகைவன் மகன் மீதும் உனக்கு எவ்வளவு வாத்ஸல்யம். அசோகா, நீ தான் மனிதன்!' என்று சொல்லிக்கொண்டே போகையில், அவள் அங்கிருப்பது நினைவு வந்ததும் அவன் நா தடைப்பட்டது. இதற்குள் அவன் சொற்களைக் கவனித்த விமலை, "அப்படியானுல் அசோகர்தாம் அவனை அழைத்துப் போனுரா?" என்று கேட்டாள். அவள் குரலில் ஏமாற்றம்.

"விமலா ராணீ, உங்களுடைய சூழ்ச்சி முழுவதையும் சக்கரவர்த்தியினிடம் சொல்லி அதற்குத் தகுந்த ஏற்பாடுகளைச் செய்துவிட்டு, மந்திரி ராதாகுப்தருடைய வீட்டிலிருந்து இப்பொழுது தான் நான் வருகிறேன்" என்றுன் அமைதியாக.

விமலையின் முகம் சுண்டிற்று. "என்ன, ராதாகுப்தர் வீட்டிலிருந்தா வருகிறீர்கள்?"

"ஆமாம்; நான் மந்திரியின் வீட்டிலிருந்துதான் இங்கே வருகிறேன். அங்கே குமார வீதசோகன் மந்திரியைக் கொல்ல வந்திருந்த ஸம்புஷ்டாசாரியனையும் பலமற்ற பிக்ஷுக் கூட்டத்தையும் கைது செய்துவிட்டு, அசோகருடைய வரவுக்காக எதிர் பார்த்திருந்தார். அந்தச் சமயத்தில்தான் நானும் புறப்பட்டேன். அசோக சக்கரவர்த்தியும் யுவராஜனும் அங்கே வந்து சேர்ந்தார்கள். "அண்ணு வந்து என்ன தண்டனை விதிப்பாரோ அது பிறகுதான் தெரியும்?" என்று வீதசோகன் ராதாகுப்தரிடம் சொல்லிக்கொண்டிருந்தான்.

"ஏ பெண் பேயே! உன்னுடைய கபட நாடகம் முழுவதும் அசோகரது பூர்வ புண்ணியத்தினுல் நிர்மூலமாகியது. போ, இன்னும் ஏதாவது பாக்கியிருந்தால் அந்த ராஜமாதாவுடன்

யோசிக்கலாம். இன்னும் எங்கெங்கே விஷ விதைகள் விதைக்க லாம் என்று போய்ப் பார்'' என்றான்.

அவள் மிகவும் மெதுவான குரலில், ''அது கிடக்கட்டும், என்னுடைய இந்தச் சூழ்ச்சிகளை யெல்லாம் அசோகருடைய காதுவரையில் கொண்டு போனது யார்?''

''யாராக இருந்தால் என்ன? ஏன்! நானேதான் கொண்டு போனேன்.''

''என்ன? நீங்களா? உங்களுக்கு எப்படித் தெரிந்தது?''

''நேற்று நீங்கள் பேசியபொழுது நான் பர்ணகுடியின் அருகில்தானே இருந்தேன்.''

''ஐயையோ!'' என்று கூவிவிட்டாள் அவள். தன்னுடைய அருமையான திட்டங்களையும் சூழ்ச்சிகளையும் பாழாக்கினது இந்தத் தர்மாநுஜனா என்று நினைத்தபொழுது அவளுடைய ஹிருதயமே வெடித்துவிடும்போல் இருந்தது. இதுமட்டுமா? 'சூழ்ச்சிகளை நாசமாக்கியது மட்டும் அல்ல. தன் எதிரிலேயே அந்த வெற்றியைப் பெருமையுடன் சொல்லிக்கொள்ளுகிறானே! என்பதை எண்ண எண்ண அவள் நெஞ்சிலே பழுக்கச் காய்ச்சிய வேலைப் பாய்ச்சியதுபோல் இருந்தது. 'வேறு யாராவது இந்த வார்த்தைகளைச் சொல்லியிருந்தால் இதற்குள் என் கத்திக்கு இரையாயிருப்பார்கள்' என்று நினைத்தாள். இன்னதென்று விவரிக்க இயலாத ஒருவித வேதனையினால் அவள் நெஞ்சு துடி துடித்தது. வைரம் பாய்ந்த அவள் மனம் இந்த ஒரு விஷயத்தில் மட்டும் மெல்லிய மலர்போல் இருந்தது. அவன் வார்த்தைகளைக் கேட்டும் அந்தக் காளிக்குக் கோபமே வரவில்லை. சோகமும் கருணையும் ததும்பும் குரலில், ''தர்மாநுஜா, என்ன காரியம் செய்துவிட்டீர்கள்! உங்களுக்கு ஒருவிதமான லாபமும் இல்லாமல் இருக்கும்பொழுது எதற்காக இப்படிச் செய்தீர்கள்?''

''கொலை என்பது உனக்கு வெகு சகஜமாகத் தோன்றுகிறது. உன் சொந்த சௌக்கியத்துக்காக — கலிங்கநாட்டுச் சிம்மாசனம் நீ உள்ள அளவும் உனக்கே நிலைப்பதற்காக — அந்த ராணிப் பதவியும், அடக்கி ஆளவேண்டும் என்கிற பேராசையும் சேர்ந்து உன்னை ஆட்டிவைக்கின்றன — நீ எந்தக் காரியத்தைச் செய்வதற்கும் பின்வாங்கவில்லை. தகப்பனாருக்குச் சமானமான கலிங்காதிபதியை ஒரு நொடியிலே கீழே தள்ளினாய். பெற்ற தாயை

விடப் பன்மடங்கு பாராட்டி வளர்த்த இந்துமதிதேவியை உயிரோடு எரிக்கத் துணிந்தாய். அதோடு நில்லாமல் இன்று யுவ ராஜனை ஒழித்துவிட வேண்டுமென்று தயாராக வந்திருக்கிறாய். இன்னும் உன் சுயநலமும் பேராசையும் எந்த எல்லைவரையில்தான் போகுமோ? யார் கண்டார்கள்?"

"தர்மாநுஜா! என்னுடைய பேராசைக்கும் ஓர் எல்லை வைத் திருக்கிறேன். அதன் லட்சியம் ஒரே இடத்தில்தான் குடிகொண் டிருக்கிறது. என்றைத் தினம் அந்த லட்சியத்தை அடைகிறேனோ அத்துடன் என் பேராசை முடிந்துவிடும். அது எது என்றால்..."

"வேண்டவே வேண்டாம்!" என்று இரு கைகளையும் செவிகளின்மேல் வைத்துக்கொண்டு, "நான் உன் பேராசையின் முடிவைக் கேட்கச் சித்தமாயில்லை" என்றான்.

"விமலையின் குரல் பின்னும் தணிந்தது. "பிரிய தர்மாநுஜா! இதுவரையில் நான் செய்தவைகளைக்கொண்டு என்னை நிர்ணயிக் காதே. என் அன்பு எவருடைய மனத்தையும் பயப்படுத்தாது!"

"சீச்சீ! உன் வார்த்தைகளை ஒருநாளும் நம்பமாட்டேன். உனக்கு மேலும் பேசுவதற்கு வெட்கமாக இல்லையா? தன் பேராசையைப் பூர்த்தி செய்துகொள்வதற்காகக் கொலை, துரோ கம், நன்றியில்லாமை முதலிய மகா பாதகங்களைச் செய்த ஒரு பெண்ணின் வார்த்தையை எதுவரையில் நம்பலாம் என்று எனக் குத் தெரியும். ராணீ! உன் மனத்தில் இருக்கும் பாபகரமான எண் ணங்கள் அன்று இருந்தது போலத்தான் இன்றும் இருக்கின்றன. என்னைச் சிலநாட்கள் பாராமல் இருந்தால் நீ இப்படிப் பிதற்ற மாட்டாய் என்று நினைத்தேன். ஆனால் நீ இருப்பதைப் பார்த்தால் நீ அதை மறப்பதைவிட்டு வளர்ப்பதில் முனைந்திருக்கிறாய் என்று தோன்றுகிறது."

"தர்மாநுஜா! ராஜதானிக்கு நாங்கள் புறப்பட்டு வந்து கொண்டிருந்த சமயத்தில் உங்களை வழியில் சந்தித்து ஒரு பொருளை யாசித்தேன். நீங்களோ உங்கள் ஹிருதயம் யாருக்கோ சொந்தம் என்று சொல்லி, என்னைப் புறக்கணித்துவிட்டீர்கள். ஆகவே நான், 'உங்கள் உள்ளங்கவர்ந்தவள் எந்த அப்ஸரஸோ?' என்று நினைத்துச் சும்மா இருந்துவிட்டேன். ஆனால் கொஞ்ச நேரத்துக்கு முன் உங்கள் ஹிருதய தேவதை இன்னாள் என்பதை என் கண்களால் பார்த்தேன். அவளும் என்னைப்போல் ஒரு

சாமானிய மனிதப் பெண். அதிலும் அசட்டுப் பெண் என்று தெரிந்ததும் என் ஆவல் புத்துயிர் பெற்றது. ஏ தர்மாநுஜா! அந்த அசட்டு இந்திரை என்னைவிட எதிலே உயர்ந்தவள்? அவள் மேல் அன்பைச் சொரிகிருய்; என்மேல் அனலைச் சொரிகிருய்! இவ்வளவு கருணை இல்லாமல் இருப்பானேன்?" என்று சற்றே நிறுத்தினுள் விமலை.

தர்மாநுஜனுக்குச் சிரிப்பு வந்தது. "இந்திரை எல்லாவிதத்திலும் உயர்ந்தவள்தான். அவள் பெயரை உன் பெயரோடு சேர்த்துப் பேசுவது முட்டாள்தனம்."

அவளுக்கு எரிச்சலும் ஆத்திரமும் பற்றிக்கொண்டு வந்தன. "எந்த விதத்திலே அவள் உயர்வு? வயதிலா? ரூபத்திலா?" என்ருள்.

"ஏ பேயே! வயதையும் ரூபத்தையும் நான் பெரிதாக மதிப்பவன் அல்ல. அழகிலே நீ அவளைவிடப் பன்மடங்கு உயர்ந்தவள்தான். ஆனுல் உன் குணம்...நாகத்தைப்போல் ஜொலிக்கிருய். ஆனுல் நீ நாகரத்னம் அல்ல; பாம்பின் விஷம். போனது போகட்டும். இனியாவது நல்லபடி நட. போனுல் போகட்டும் என்று இந்தத் தர்மாநுஜன் உன்னைச் சகோதரியாக வாவது மதிப்பான்" என்ருன்.

அவள் நெஞ்சு துடித்தது.

'சீ! இவனுக்கு இந்திரையின் மேலுள்ள நாட்டத்தினுல்தான் என்னை இப்படிப் பேசுகிருன். அவள்மீது ஏதாவது களங்கத்தைச் சுமத்தி இவனை மடக்கவேண்டும். கலிங்கநாட்டையே வெற்றி கொண்ட இந்த விமலைக்கு இது ஒரு பொருட்டா? ஆகட்டும்; பார்க்கிறேன் ஒரு கை!' என்று மனத்துள் நினைத்தவளாக, "தர்மாநுஜா! உன்னுடைய 'அனுஜப்ரேமை'யை – சகோதரியாக வாவது மதிப்பாய் – என்ற சொல்லை நான் கேட்கவே விரும்பவில்லை. உன்னுடைய அடியாளாக உனக்குப் பாதசேவை செய்வதையே விரும்புகிறேன். என்றைக்காவது ஒருநாள் - இந்த உடலில் உயிர் உள்ளவரையில் – என் ஆசையை நிறைவேற்றியே தீருவேன். அதுமட்டும் நிச்சயம்!" என்று சொல்லியவளாக விடுவிடென்று முன்வாயிலை நோக்கி நடந்தாள் அவள்.

அவள் வார்த்தைகளின் படபடப்பையும் அவள் சொல்லிச் சபதம் செய்த வாக்கியங்களையும் நினைத்து நினைத்துத் திகைத்தவ

ணுக அந்த அறையிலேயே நின்றுவிட்டான் தர்மா நுநுன். நூற்றுக் கணக்கான எண்ணங்கள் அவன் சிந்தையிலே தோன்றித் தோன்றி மறைந்துகொண் டிருந்தன. அந்த நிலையிலே எவ்வளவு நேரம் நின்றிருந்தானே தெரியாது.

மிகவும் மெதுவாக அடிமேல் அடிவைத்து யாரோ நடந்து வருவது கேட்டு அவன் கனவு கலைந்தது. மறுவிநாடி அவன் எதிரே நின்ருர் ஸ்வாமி சிதானந்தர்.

"குழந்தாய்! என்று சொல்லியவராக அவனைத் தழுவிக் கொண்டார் அவர். அந்த ஊமை வெளிச்சத்திலே அவன் தன் மாணவன் என்று தெரிந்துகொண்டாரேயன்றி அவன் உடையைக் கவனிக்கவில்லை. அந்த நிலையிலே இருவரும் பேச வாயின்றி எவ்வளவு நேரம் நின்றிருந்தார்களோ? தன் தோள்களில் கண்ணீர் சிந்துவதை உணர்ந்து, அவர் பிடியினின்றும் தன்னை விடுவித்துக் கொண்டான் தர்மாநுஜன். "ஸ்வாமி! தாங்கள்கூட இப்படித் தளர்வதுண்டா? தாங்களே தளர்ந்துபோனுல் நாங்கள் எம் மாத்திரம்?" என்ருன்.

அதுவரையில் மேகங்களுள் மறைந்திருந்த சந்திரன், வெளியே வந்து தன் அமுதமயமான கிரணங்களை இந்தக் குரு சிஷ்யர்களின்மேல் வீசத் தொடங்கினுன். சிதானந்தர் ஆச்சரியத்துடன் ஏறிட்டுப் பார்த்தார். "என்ன மகேந்திரா! நீ பௌத்த பிக்ஷு ஆகிவிட்டாயா?"

"மகாராஜ்! பிக்ஷு வேஷந்தான். உண்மையில் சநாதன தர்மத்தின் வேராகிய தங்களது சீடன்தான் நான். இந்தக் காஷாயமும் குறடும் இருந்தால் குரு என்ற பெயரோடு எங்கே வேண்டுமானுலும் போகலாம். கொஞ்சம் சௌகரியங்களும் கிடைக்கும். நான் எண்ணியவைகள் முடிந்தவுடன் நிஜரூபத்தில் வெளிவர நினைக்கிறேன்."

சிதானந்தரது முகத்தில் இளநகை அரும்பிற்று. சிரித்த வண்ணம் அவன் முதுகிலே தட்டி, "மீனுக்கு நீச்சம் கற்பிக்க வேண்டுமா? என் குருகுலத்தில், பிக்ஷுவேஷத்துடன் பகைவர்களுக்கு நடுவில் புகுந்து உலவும்படி நான் கற்பித்ததாக ஞாபகம் இல்லை. நீ இங்கே வந்து சில நாட்கள் ஆயின என்று தெரிகிறது. ஆனுல் இன்றுதான் என் கண்களுக்கு அகப்பட்டாய். ஏனோ?"

"ஸ்வாமி! நான் இங்கே வந்து சில நாட்கள் ஆயின என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"அதுதானு பிரமாதம்! உன்னுடைய வனராஜன் இந்தப் பிராந்தியத்திற்கு வந்து சிலநாட்கள் ஆயின. ஆகவே அவன் உன்னேடுதான் வந்திருப்பான் என்று ஊகித்தேன்."

"என்ன! வனராஜன் இங்கே வந்திருக்கிருனு? நான் ஹரித்வாரத்தில் கங்காநதிக் கரையில் அல்லவா விட்டுவந்தேன்! அதன் பின் அவன் என் கண்களிற் படவே இல்லேயே!" என்று ஆச்சரியத்துடன் உரத்த குரலில் சொன்னுன்.

"குழந்தாய்! மெதுவாகப் பேசு. இதுவோ சிறைச்சாலே. இந்தக் காலத்திலோ சுவர்களுக்கும் காது உண்டு. நீ அவனேப் பார்க்காவிட்டாலும், அவன் தனக்கென்று வேருெரு யுவராஜனேத் தேடிக்கொண்டு, அவனுடைய கூட்டுறவிலேயே காலங் கழிக்கிருன்."

"அடா! அந்த வனராஜனுடைய யுவராஜன் யார்? நான் இந்த வேஷம் போட்ட பிறகு எல்லோருக்குமே தாங்கள் யுவராஜனுக ஆகவேண்டும் என்ற ஆசை வந்துவிட்டதுபோல் இருக்கிறது. இருந்தாலும், வனராஜனேயே ஏமாற்றக்கூடிய அந்த யுவராஜன் யாரோ?"

"அவனு! அவன் சக்கரவர்த்தியையே ஏமாற்றி, விமலேயின் கபட நாடகங்களேயும் நாசம் செய்துவிட்டான். அவ்வளவு தூரம் சொல்லுவானேன். நானே ஏமாந்து போனேனென்ருல் வனராஜன் ஏமாருமல் என்ன செய்வான். அதுமட்டும் அல்ல, அவன் உன் சாயலாகவே இருக்கிருன்."

"அப்படியா? சாயலிலும் என்னேப்போலவே இருக்கிருனு? இது மிகவும் ஆச்சரியப்படத்தக்க விஷயம். அந்தப் போலி வேஷக்காரன் என் பெயரை வைத்துக்கொண்டு, வலியவந்து பௌத்தர்களிடம் கைதியாவானேன். அதுதான் எனக்கு விளங்கவில்லே. கலிங்கர் கோமான் இறந்துவிட்டார்; எப்படியாவது அசோகனே வசப்படுத்தித் தான் பட்டத்திற்கு வரலாம் என்ற எண்ணமோ? தவிர, சக்கரவர்த்தி அவனிடம் மிகுந்த அன்பு வைத்துக் கௌரவிப்பதாகவும் கேள்விப்பட்டேன்."

சிதானந்தர் புன்சிரிப்புடன் சொல்லுகிறார்: "குழந்தாய்! அந்தப் போலி வேஷதாரியைப்பற்றியும் அவன்மேல் அசோகர் அன்பு பாராட்டுவதைப்பற்றியும் நீ இதற்குள் கண்டுபிடிக்க முடியாது. உன்னைப்போல் நடித்து, பௌத்தர்களிடம் கைதியானது மிகவும் புனிதமான ஒரு செயல். ஆகையால் அவனை நாம் கௌரவிக்க வேண்டும். நீ இன்று தவறாக எண்ணினாலும், பிறகு விஷயங்கள் தெரியும்பொழுது நீயே பச்சாத்தாபப் படுவாய்."

"ஸ்வாமி! இன்று அந்தப் போலி இளவரசனை நான் பார்க்கலா மென்று எண்ணியிருந்தேன். ஆனால் நான் வருவதற்குள் அவன் போய்விட்டான்."

"எங்கே போனான்?" என்றார் சிதானந்தர்.

தர்மாநுஜன் விஷயங்களை வெகு சுருக்கமாகச் சொன்னான்.

சிதானந்தரது முகம் ஆனந்தத்தால் மலர்ந்தது. தமக்குள்ளேயே சிரித்துக்கொண்டு, "அசோகனே வந்து அழைத்துப் போனானா?" என்று சொல்லியவராக அவனை ஏறிட்டுப் பார்த்தார்.

தர்மாநுஜனுக்கு அவரது ஆனந்தத்தின் கருத்து எப்படி விளங்கும்! சற்று நேரம் இருவரும் பேசவில்லை. பிறகு, "கலிங்காதிபதியைக் கண்டாயா?" என்றார் அவர்.

"ஸ்வாமியின் விசாரணை நடந்த அன்று விடியற்காலை தங்களைத் தரிசித்துவிட்டு அவர் திரும்பும்பொழுது கங்கைக் கரையில் எதிர்பாராத விதமாக அவரை நான் சந்திக்க நேர்ந்தது. அதன்பிறகு இதுவரையில் அவரை நான் பார்க்கவும் இல்லை, விஷயமும் தெரியாது. ஆனால் தன் உரிமைக்காகப் போராடுவதற்குச் சேனாபலத்துடன் வருவார் என்று நினைக்கிறேன். அதற்குள் இங்கே இருக்கும் நிலைமையைத் தெரிந்து சொல்லும்படி கட்டளை யிட்டிருக்கிறார்."

"இந்த நிலையில் விஷயங்களை எப்படிச் சேகரித்தாய்?" "சரி! அவர் யுத்தம் செய்தால் வெற்றி எந்தப் பக்கம் இருக்கும் என்று எண்ணுகிறாய்?

தர்மாநுஜன் ஒன்றுமே பேசவில்லை.

சிதானந்தர் மேலும் பேசலானார்:

"அப்பா! மகேந்திரா! அசோகரோடு போராடி வெற்றி பெறுவது என்பது மனித சக்திக்கு மீறிய செயல். அவனிடம் ஒரு தெய்விக சக்தி இருப்பதாகத்தான் நான் நினைக்கிறேன். அப்படி இல்லாவிட்டால் அவன் இவ்வளவு தூரம் குடிகளின் அன்புக்குப் பாத்திரமாக இருக்கமுடியாது. இன்று, இந்தப் பரத கண்டத்திலுள்ள சிலர் நீங்கலாக மற்ற எல்லோரும் அவனது வெற்றியைத் தமதாகக் கொண்டாடுகிறார்கள்......அவன் தர்மமே உருவாயிருக்கிறான். ஒழுக்கமும் அன்பும் தர்மமும் கவசமாகிக் காக்கும் ஒருவனுடன் எவன் போர்செய்து வெற்றி பெற முடியும்? அவனது குண சௌந்தர்யமே பகைவர்களை, அல்ல பகைமையையே வென்றுவிடும். அதிலும் என் தகப்பனார் அவருடன் போர் புரியும்படியான சந்தர்ப்பம் நேரிடாது என்றுதான் நான் நினைக்கிறேன்."

"யுவராஜா, நீ சொல்வது உண்மைதான். இதற்குமுன் ஸம்ராட் அசோகன் வாள் வலியையும் தோள் வலியையுமே பெரிதாக நினைத்துக்கொண் டிருந்தான். அப்பொழுது யார் வேண்டுமானாலும் அவனை எதிர்க்கலாம், வெற்றி பெறலாம். ஆனால் இன்று அஹிம்சை, சமத்துவம், சகோதரத்துவம் இவைகளையே படைக்கலன்களாகக் கொண்டுவிட்டான். இப்படிப் பட்ட புண்ணிய புருஷனை ஓர் அரசனுடன் வெற்றிக்காக யுத்தம் செய்யவேண்டும் என்ற எண்ணம் எந்த மனிதனுடைய மனத்திலும் உதிக்காது. அவன் முகத்திலே தோன்றும் தெய்விக ஒளியினால் மிலேச்ச அரசர்கள்கூட அவனது மலரடிகளைப் பணிய ஆசை கொள்ளுகிறார்கள்.

"அன்புருவான அவனைக் கண்டவுடனே மனிதர்களுக்கு அகங்காரம், பகைமை, குரோதம் முதலியவைகள் மறைந்து விடுகின்றன. அவனது புகழோ நாளுக்குநாள் பெருகி வருகிறது. அந்தப் பெருக்கின் வேகத்தைப் பார்த்தால் அதன் முடிவு எங்கே என்று யாரால் சொல்ல முடியும்! இதுவரையிலும் அசோக பூபதியும் கலிங்க மன்னனும் ஒருவரை ஒருவர் நேரில் சந்தித்த தில்லை. இனிமேல் முதல்முறையாக ......அசோகனைச் சந்திக்கும் பொழுது அவனுடைய உண்மையான மன நிலையையும் கொள்கை களையும் பற்றிய நல்ல அபிப்பிராயங்கள் அவர் மனத்தில் உதியாமல் இரா.

"அப்பா! உன் தந்தையிடம், கூடுமான வரையில் யுத்தம் செய்யாமல் இருப்பதே மேன்மை என்றும் ஏதோ ஒருவிதமாக இருவரும் நண்பர்களாவதே மேல் என்றும் நான் சொன்னதாகச் சொல். இவன் முன்பு நாம் கண்ட அந்த அசோகன் அல்ல என்பது அவன் நடவடிக்கைகளாலேயே வெளிப்படையாகத் தெரிகிறது. 'கலிங்க மன்னன் நேரில் வந்தால் ஒருவிதமான நிபந்தனையுமின்றிக் கலிங்கநாட்டைத் திரும்பக் கொடுக்கிறேன்' என்று அசோகன் சபை நடுவே சபதம் செய்திருக்கிறான்.

"இரவும் பகலும் இவைகளையே எண்ணி எண்ணிப் பச்சாத் தாபப்படுகிறான். கலிங்காதிபதி அவன் எதிரில் தோன்றவேண் டியதுதான் பாக்கி. மிகுந்த கௌரவத்துடன் சிம்மாசனத்தைத் திருப்பிக் கொடுத்து விடுவான். இது நிச்சயம். அவனுடைய சுபாவத்தை நான் பூரணமாக அறிந்துதான் இந்த வார்த்தையைச் சொல்லுகிறேன்."

"ஏன் அவரைச் சேனைகளுடன் வரவேண்டுமென்று கட்டளை யிட்டீர்கள்."

"அதற்கும் காரணம் உண்டு. சைன்னியத்திற்காவது பீரங்கி களுக்காவது உபயோகமே இல்லை. இருந்தாலும் அசோகனைப் போன்ற ஒரு சக்கரவர்த்தியைக் கலிங்காதிபதி—நாட்டை இழந்த வரானாலும்—தனிமையில் பார்ப்பதைவிட சேனைகளோடு சந்திப் பதுதான் உசிதம். தவிர அசோகன் ஒன்றும் செய்யாமல் இருக்க லாம். சில்லறைத் தேவதைகள் என்ன செய்யும் என்பதை நாம் எப்படி நிர்ணயிக்க முடியும்?"

"குருமஹராஜ்! உங்கள் உத்தரவைச் சிரமேல் வகித்துக் கலிங்காதிபதியிடம் தெரிவித்துவிடுகிறேன்" என்று சொல்லிய வனாகப் புறப்பட்டான் தர்மாநுஜன்.

நீர் மல்கும் கண்களுடன் அவனையே பார்த்து நின்றார் சிதானந்தர்.

## 26

## நடுநிசியில்

இன்பமும் துன்பமும் ஒருங்கே கலந்த ஒரு நிலையில் அசோகனது மனம் கொந்தளித்துக்கொண்டிருந்தது. ராதாகுப்தன் பிழைத்தது பற்றிய சந்தோஷம் ஒருபுறம். ஆனால் கொல்லாமையையே மஹாமந்திரமாகக் கொள்ளவேண்டிய இந்தப் பிக்ஷுக்கள் செய்யும் அட்டூழியம் அவன் நெஞ்சை வாள்கொண்டு அறுத்தது. 'பௌத்த தர்மத்தைப் பிரசாரம் செய்வதும், உயர்ந்த கொள்கைகளை மக்களுக்குப் போதிப்பதும் இந்தப் பிக்ஷுக்களுடைய கடமை. இதையே வாழ்க்கைத் தத்துவமாக பின்பற்ற வேண்டியவர்கள், ராதாகுப்தனைப் போன்ற மகா புருஷர்களையே கொல்லத் தொடங்கினால் இது வேலியே பயிரைத் தின்பதல்லாமல் வேறென்ன? அதுவும் ஒருவனா கொல்லவந்தான்? நூற்றுக் கணக்கான பிக்ஷுக்கள் ஸம்புஷ்டாசாரியனைச் சேனாதிபதியாக நியமித்துக்கொண்டு ஒரு நிரபராதியான கிழவனைக் கொல்லுகிறதென்றால் பிறகு இந்த உலகத்தில் எந்த அட்டூழியந்தான் நடக்காது! இவர்கள் மனிதனையா கொல்லுகிறார்கள்! அஹிம்ஸை என்ற தத்துவத்தையும் என் புகழையும் கொல்லுகிறார்கள்!' என்று நினைத்தவனாய்ப் பெருமூச் செறிந்தான்.

நரகத்தை அழித்தது முதல் உபகுப்தரையே தனது குருவாக நினைத்திருந்தான். தான் ஒரு சக்கரவர்த்தி என்று பெயர் வைத்துக்கொண்டு ஒருபுறம் தர்மப் பிரசாரம் செய்வதையும், தன் காலின் கீழேயே இந்தப் பிக்ஷுக் கூட்டங்கள் அதர்மமாகிய குழியைப் பறிப்பதையும் நினைக்க நினைக்க அவன் நெஞ்சு துடிதுடித்தது. இதற்கு முன்பெல்லாம் சின்னஞ்சிறு விஷயங்களுக்கெல்லாம் கோபம் பொங்கியெழும் அசோகன் இப்பொழுது மிகுந்த பொறுமையோடு பேசலானான்.

"பிக்ஷுக்களே! உங்களுடைய அட்டூழியங்களைப்பற்றி ஓரளவு முன்னமேயே தெரியும். உங்கள் வேஷத்தின்மீது அளவற்ற நம்பிக்கை வைத்திருந்தேன். உலகையே துறந்த நீங்கள் தகாத செயலில் இறங்கமாட்டீர்கள் என்றும் உறுதியாக நம்பி

னேன். இதனால் உங்கள் திருவிளையாடல்களைப்பற்றி அவ்வப் பொழுது கேள்விப்பட்டும் அவைகளை நான் நம்பவில்லை. உங்கள் மேல் சொல்லப்படும் குற்றங்களுக்குச் சரியானபடி நியாயம் வழங் கப்படவில்லை என்று சொல்லுவதை மக்களும் நிறுத்திவிட்டார்கள். பிக்ஷுக்கள் நல்லதையேதான் செய்வார்கள் என்ற பிரமையில் நானும் ஆழ்ந்திருந்தேன். இன்றுதான் அந்தப் பிரமை என்ற பூசணிக்காய் உடைந்து, உங்கள் நிஜஸ்வரூபம் வெளிப்பட்டது. எளிய குடிகளுக்கு அநியாயமாகக் கொடுமை செய்தீர்கள். அரசாங்கத்தின் ஆதரவில் ஏராளமான வசதிகள் இருந்தும் வேஷத்தினால் வயிற்றை நிரப்ப வழிதேடினீர்கள். பகவான் கௌதமபுத்தருடைய உபதேசங்களைக் காலால் மிதித்து நாசம் செய்திருக்கிறீர்கள். ஒன்றும் தெரியாத மூடனையும் முட்டாளையும் துறவியாக்கி எளிய மக்களைக் கொள்ளையடித்தீர்கள். இந்த எல்லாச் செயல்களும் பௌத்தமதத்தின் பெயரால் தர்ம குருவின் சந்நிதானத்திலேயே நடந்த அட்டூழியங்கள்! எப்படி இவ்வளவு சுலபமாக மக்கள் பிக்ஷுக்களாகிறார்கள் என்று நான் ஆச்சரியம் அடைந்தது உண்டு. அதன் ரகசியம் இன்றுதான் தெரிய வந்தது. இந்தக் கபட பிக்ஷுக்கள் நாட்டைவிட்டு ஒழிய வேண்டும். இந்தக் கரிக்கும்பலிலே எங்கேயாவது ஒரு வைரம் இருக்கலாம். அதைக் கண்டுபிடிக்க வேண்டுமே தவிர இந்த மாதிரி உதவாக்கரைகளான மந்தைகளை ஜனங்கள், பிக்ஷுக்கள் என்று கௌரவிக்கவே கூடாது!'' என்று ஆவேசம் வந்தவன் போல் சொல்லி நிறுத்தினான் அசோகன்.

எதிரிலிருந்த பிக்ஷுக்கள் கூட்டம் தலைகுனிந்து நின்றது. சில நிமிஷங்கள்வரை ஒரே நிசப்தம். அசோகன் தொண்டையைக் கனைத்துக்கொண்டு மேலும் சொல்லலானான். ''பகவான் ததாகத ருடைய கொள்கைகளை – பௌத்ததர்மத்தின் பெருமையைப்– பிரசாரம் செய்வதன்பொருட்டு பிக்ஷுக்களையும் பிக்ஷுணிகளையும் வகுத்தார்கள். இந்தத் திருப்பணிக்கு ஏராளமான பொன்னையும் பொருளையும் அர்ப்பணம் செய்தேன். தர்மத்தின் பொருட்டு சொந்தச் சுகபோகங்களையும் துச்சமென்று தள்ளி, இதிலே ஈடு பட்டேன். அங்கங்கே பிக்ஷுக்கள் வசிப்பதற்குரிய புத்த விகா ரங்களையும் சைத்யங்களையும் அமைத்தேன். பிறநாட்டிலே தங்கும் பிக்ஷு, பிக்ஷுணிகளின் ஒழுக்கத்தையும் சேவாதர்மத்தையும் காப்பாற்றும்பொருட்டு அந்த அந்த நாட்டு அரசர்களுடன் உடன்படிக்கையும் செய்துகொண்டேன். அவர்களை அன்பும் ஆதரவுமாக நடத்தவேண்டும் என்று பொதுஜனங்களுக்கு அறிக்

கையும் விடுத்தேன். ஆனால் கடைசியில் நான் கண்ட பலன் என்ன? பிரமை என்கிற திரை விலகவே இவைகளெல்லாம் நிஜ உருவத்துடன் தோன்றிவிட்டன!'' என்று சற்றே நிறுத்தினன்.

அசோகனது வார்த்தை நின்றதோ இல்லையோ வீதசோக னது குரல் கணீரென்று ஒலித்தது.

"சக்கரவர்த்தி! நீங்கள் இவ்வளவு வருத்தப்படுவதற்குக் காரணமே இல்லை. ஸம்புஷ்டாசாரியரையும் அவரைச் சூழ்ந் துள்ள சில பிக்ஷுக்களையும் பார்த்துத் தாங்கள் இப்படி நிர்ண யிக்கக் கூடாது. இவர்களுடைய அதர்மப் பிரசாரத்தின் நடுவே தான் பஞ்ச பூதங்களாலும் அசைக்கமுடியாத உபகுப்தரைப் போன்ற மஹாபுருஷர்களும் முக்காலங்களையும் உணர்ந்தவரான முங்கலீபுத்ர திஷ்யரைப்போன்ற ரத்னங்களும் இருந்துகொண் டிருக்கிறார்கள். ஆகையால் தங்கள் செயல் பயனற்றுப் போய் விட்டது என்று வருந்துவதில் அர்த்தமே இல்லை.''

"குமார! இம்மாதிரியான ரத்னங்களைத்தான் பொறுக்கி எடுக்கவேண்டும். அதற்குத்தான் நாம் இருக்கிறோம். இத் தகைய ரத்னங்களைப் பொறுக்கி எடுத்துக் குடிகளுக்கு அர்ப் பணம் செய்யவேண்டும். இந்தச் சேற்றிலே நிஜமான ரத்னத் தைக் கண்டெடுப்பது எப்படி? இன்று இருக்கும் நிலைமையில் இந்தச் சேற்றிலிருந்து ஒன்றையுமே கண்டுபிடிக்க முடியாது. அப்படிக் கண்டுபிடிக்கக்கூடிய மகாமந்திரத்தை யார் உபதேசிப் பார்கள்?'' என்று சொல்லிச் சிந்தையில் ஆழ்ந்தான் அசோகன்.

வேறு ஒருவரும் ஒன்றுமே பேசவில்லை. மேலும் ஏதாவது சொல்லப்போகிறானே என்று எல்லோரும் அவன் முகத்தையே பார்த்துக்கொண்டு நின்றனர். திடீரென்று அவன் முகத்திலே ஆனந்தத்தின் சாயை தோன்றிற்று. மங்கிய அந்த நிலவின் ஒளியிலே அது தெளிவாகத் தெரிந்தது. "உபகுப்தரைப்போன்ற ஒரு சிறந்த குரு இருக்கும்பொழுது நான் ஏன் கவலைப்பட வேண்டும்!'' என்று சொல்லியவனாக ராதாகுப்தரைப் பார்த்துச் சொல்லுகிறான்:

"சித்தப்பா! சூரியோதயம் ஆகும் வரையில் இந்த ஸம்புஷ்டா சாரியனையும் பிக்ஷுக்கூட்டங்களையும் நீங்கள் கவனித்துக்கொள் ளுங்கள். நான் ஆசாரியரைத் தரிசிக்கும்பொருட்டு வேணு வனத் திற்குச் செல்கிறேன். அவர் எப்படிக் கட்டளையிடுகிறாரோ அதன்

படி இந்த நீதி வழுக்கிய பிக்ஷுக்கூட்டத்திற்குத் தண்டனை விதிக்க நிச்சயித்திருக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு வேணு வனத்திற்குப் புறப்பட்டான் அசோகன்.

அருகில் நின்றுகொண்டிருந்த யுவராஜன் இவன் கண்களுக்குத் தென்பட்டான். இப்பொழுது அந்த இளவரசன் மீதிருந்த அன்பு முன்போல் தன்னலமற்றதாக இல்லை. அந்த மெய்யன்பு காதலாகக் கனிந்திருந்தது. அசோகன் புன்சிரிப்புடன், ''யுவராஜா! இரவு மூன்று ஜாமம் ஆகியிருக்கும். நீ எனக்காகக் காத்துக்கொண்டிருக்கவேண்டிய அவசியமில்லை. இப்பொழுது குமார வீத சோகனோடு அரண்மனைக்குச் செல். அங்கேயே நீ தங்கலாம். நாளை விடியற்காலையிலிருந்து உன்னுடைய இருப்பிடம் இன்னதென்று தீர்மானிக்கப்படும்'' என்று சொல்லும்பொழுதே அவள் திகைத்தாள்.

அசோகனுக்கு விடையாக ஏதாவது சொல்ல வேண்டும் என்று நினைத்தாள். வார்த்தைகள் வாயில் வரவில்லை. சற்றே சமாளித்துக்கொண்டு, ''சக்கரவர்த்தி! அரண்மனைக்குச் சென்று சிரமபரிகாரம் செய்துகொள்வதற்கு ஒரு தடையும் இல்லை. இருந்தாலும் இப்பொழுது அருணோதய வேளை வந்துவிட்டது. சிரமபரிகாரமும் அவசியம் இல்லை. தாங்கள் உத்தரவு கொடுத்தால் நானும் தங்களுடன் ஆசாரிய தரிசனத்திற்கு வேணுவனம் வருகிறேன். நான் இனிமேலும் வேணுவனத்திலேயே தங்கிவிடலாமா என்றும் ஆசை. உங்களுடன் வரும்படி அனுமதிக்க வேண்டும்'' என்றாள். கேட்டது கிடைத்தது. இருவரும் வேணுவனத்தை நோக்கிச் செல்லலானார்கள்.

வேணுவனம் என்பது ஒரு பெரிய அரணியம் அன்று. அசோகர் நரகத்தை அழித்தபொழுது, 'இனி உபகுப்தரையே குருவாகக் கொள்வது' என்ற தீர்மானத்திற்கு வந்துவிட்டார். அவரது உபதேசங்களைக் கேட்கக் கேட்க, தான் எப்பொழுதும் அவர் அருகிலேயே இருக்க வேண்டுமென்று அவருக்குத் தோன்றிற்று. அவருடைய அழகிய உபதேசங்களை உலகம் முழுவதும் பரவச் செய்வதற்கு என்ன வழி என்று சிந்திக்கத் தொடங்கினான். தன்னுடன் அரண்மனையிலேயே வந்து தங்கவேண்டும் என்றும் கேட்டுப் பார்த்தான். ஆனால் உபகுப்தர் ஒப்பவில்லை. ஆயுள் முழுவதும் மலைக் குகைகளிலோ காடுகளிலோ வசிக்க விரும்புவதாகச் சொல்லிவிட்டார் உபகுப்தர். இந்த வார்த்தைகளைக் கேட்ட

சக்கரவர்த்திக்கு ஒரு யுக்தி தோன்றிற்று. நகரத்தை அடுத்த ஒரு அழகிய நந்தவனத்தைக் கொடுத்து, 'என்மீதும் என் குடிகளின்மீதும் தங்கள் உபதேசமாகிற அமுதத்தைப் பொழிந்து கொண் டிருக்கவேண்டும்' என்று கேட்டுக்கொண்டான். அது தான் வேணுவனம்.

எதிர்பாராத சமயத்தில் யுவராஜனும் அசோகனும் வருவது கண்டு ஆனந்தமும் ஆச்சரியமும் ஒருங்கே பொங்க, வரவேற்றார் உபகுப்தர்.

'இப்பொழுது இந்த அகாலத்தில் வருவானேன்!' என்று சிந்தித்தவராய், "என்ன முக்கியமான விஷயம்?" என்றார்.

அசோகன் சுருக்கமான வார்த்தைகளால் விஷயத்தை விளக்கினான்.

உபகுப்தரது மனம் சிந்தையில் ஆழ்ந்தது. பிறகு மெதுவான குரலில், "அசோகா! நீ எல்லா விதத்திலும் ஆர்யாவர்த்தத்தின் சக்கரவர்த்தியாகத் தகுந்தவன். இதுவரையில் பௌத்ததர்மத்திற்குத் தொண்டுசெய்கிறாய் என்று புகழ்பெற்றாய். இனி பௌத்த தர்மத்தையே காக்கிறவன் என்று உன்னுடைய புகழ் மூன்று உலகிலும் பரவும். மகததேசத்துச் சக்கரவர்த்தியாக இருந்தும் ஸம்புஷ்டாசாரியனைப் போன்ற ஒரு தகுதியற்றவன் கையில் அதிகாரத்தைக் கொடுத்ததனால் விஷயங்கள் இவ்வளவு விபரீதமாயின. பகவான் ததாகதர் சொன்ன விலைமதிக்க முடியாத அரும் பெரும் தத்துவங்களை அவன், தன் இஷ்டம்போல் விநியோகம் செய்ய ஆரம்பித்தான். அஹிம்ஸா தத்துவத்தைக் காற்றிலே விட்டு விட்டுப் பிக்ஷுக்கள் மிருகங்களின் புலாலை உண்ணத் தொடங்கினார்கள். 'அந்தணர் என்று சொல்லிக்கொள்ளுகிறவர்கள் ஹோமம் செய்யும்பொழுது மாமிசம் சாப்பிடுகிறார்களே, நாம் மட்டும் ஏன் சாப்பிடக்கூடாது?' என்றெல்லாம் விதண்டாவாதம் செய்தார்கள். இவர்களுடைய அட்டூழியங்கள் பொறுக்காமல்தான் முங்கலீபுத்ர திஷ்யர் காட்டிலே குடிபுகுந்தார். மட்டைக்கேற்ற கொட்டாப்புளி என்று இந்த ஸம்புஷ்டாசாரியனுக்குக் குருஸ்தானம் கிடைத்தது. இவர்களைச் சீர்திருத்தவேண்டுமானால் முங்கலீபுத்திர திஷ்யர், தம் அரணியவாசத்தை விடுத்து நாட்டிற்கு வந்து, ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட்ட வேண்டும்" என்றார்.

அப்பொழுதுதான் அவனுக்கு இந்திரையின் மூலம் தன்னிடம் வந்த அந்தக் கடிதம் நினைவுக்கு வந்தது. அந்தச் செய்தியோடு

கொலை விஷயமும் வந்ததால் அதைப்பற்றி அவன் மறந்தே போனான். தாமாகவே அவன் கைகள் பையை நாடின. உபகுப்தரது தியானபீடத்தருகில் எரியும் தூங்காவிளக்கைச் சுடர்விழத் தூண்டினான். அந்தக் கடிதத்தைப் பார்க்கவேண்டும் என்ற ஆவலுடன் உபகுப்தரும் போலி மகேந்திரனும் தீபத்தின் அருகே வந்தார்கள்.

'சகல குணாலங்கிருத தேவானாம்பிரிய சக்கரவர்த்தி அசோகனுக்கு ஆசீர்வாதம். நாம் ஆர்யாவர்த்தம் முழுவதும் திரிந்து கொண்டே வருகிறோம். கடல்கடந்து சீனம், சாவகம், சிங்களம் முதலிய நாடுகளிலும் நமது தர்மம் ஒளிரும் காலம் வரும். எங்கள் சம்பந்தப்பட்டவரையில் செயல்கள் ஒழுங்காகவே நடைபெறுகின்றன. இருந்தாலும் அஹிம்ஸையைப் பரப்பவேண்டும் என்ற கொள்கையுடன் நீ செய்யும் முயற்சிகள் வேலைக்குத் தகுந்த பயனைக் கொடுக்கவில்லை என்று வருத்தப்பட வேண்டியிருக்கிறது. சக்கரவர்த்தியாகிய நீ அன்பின் வலுவினாலேயே அஹிம்ஸை என்கிற பயிரை நாற்புறமும் விதைத்துவிட்டாய். ஆனால் அதற்குத் தண்ணீர் ஊற்றிப் போஷிப்பது யார்? இன்று இருக்கும் நிலையைப் பார்த்தால் கூடிய சீக்கிரத்தில் பகவானது மொழிகளே அழிந்து விடுமோ என்றுகூடத் தோன்றுகிறது.

'பகவான் கௌதம புத்தர், அந்தக் காலத்தில் பிக்ஷு, பிக்ஷுணிகளை நியமித்தார். ஆனால் அப்பொழுது அடிக்கடி சபை கூட்டிப் பிரசாரம் செய்யத் தகுந்தவர்களைத் தேர்ந்தெடுத்துக்கொண் டிருந்தார்கள். தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு ஒரு தலைவனைப் பகவான் தாமே தேர்ந்தெடுப்பார். அப்படி ஒரு கட்டுத் திட்டத்தோடு நடந்துவந்தபடியால் பிரசாரம் உயர்வான முறையில் நடந்தது. பிக்ஷுக்கள் உலக விஷயங்களிலே தலையிட மாட்டார்கள். சுகபோகங்களிலே ஆசை வைக்க மாட்டார்கள். இப்பொழுதோ துறவிகள் அரசாங்கத்திலும் தலையிடுகிறார்கள். அரசர்களும் அதற்கு அனுகுணமாகவே ஆடம்பரங்களும் ஆடையணிகளும் கொடுத்து ஓரளவு அவர்களுக்கு அனுகூலமாயிருப்பதாகக் கருதச் செய்துவிட்டார்கள். பிக்ஷுக்களுக்கு இந்த மாதிரியான கௌரவச் சின்னங்களெல்லாம் ஏற்பட்டதன் காரணமாக நாட்டிலே சோம்பல் மலிந்தது. வியாபாரம், ராணுவம், ராஜசேவகம், குடும்ப நிர்வாகம் இவைகளை எல்லாம் விட்டுவிட்டுக் கண்டவனெல்லாம் காவியுடுத்து, தடியெடுத்தவனெல்லாம்

தண்டல்காரனுகப் பிழைக்கத் தொடங்கிவிட்டார்கள். உண்மையான பௌத்த தர்மம் மறைந்து போகலாயிற்று.

'குருவோ சரியில்லை; சிஷ்யர்களோ கோடானுகோடி. இந்த நிலையில் மனம்போனபடி செயல்கள் நடவாமல் கட்டுத்திட்டத்தோடு எப்படி நடக்கமுடியும்? ஆகவே உன் வேலைகள் பயனற்றுப் போயின. இப்பொழுதிருக்கும் நிலையில் உண்மையான பிக்ஷு யார், பிக்ஷுணி யார் என்று கண்டுபிடிக்க வேண்டும். இதற்கு மகாசபை ஒன்று கூட்டவேண்டும். இந்த மகாசபைக்கு நாட்டிலுள்ள எல்லாப் பிக்ஷு, பிக்ஷுணிகளும் கட்டாயம் வந்தே தீரவேண்டுமென்று ஒரு கடுமையான சட்டம் விதிக்கவேண்டும். எவன் வரத் தவறுகிருனே அவன் போலிப் பிக்ஷுவாக மதிக்கப்பட்டு, கடுந் தண்டனைக்கு ஆளாவான் என்பதையும் விவரமாகப் பறை சாற்றுவிக்கவேண்டும். கூடுகிறவர்களிலிருந்து உண்மையான தர்ம குரு ஒருவரையும் பிரசாரகர்களையும் தேடி, அவர்களிடம் இந்த விஷயத்தை ஒப்பித்துப் பிரசாரம் செய்யப் பிரயத்தனம் செய்யவேண்டும்.

'இந்த மகாசபையின் தேதியை நிச்சயித்துவிட்டால் குறித்த நேரத்தில் நான் அங்கே வந்து சேருவேன். அழைப்பு அவசியமில்லை. அழைப்பதற்கு இடமும் உன் வேலைக்காரர்களுக்குத் தெரியாது. மகாசபையைக் கூடிய சீக்கிரத்திலே கூட்டி, இந்த ஒழுங்கற்ற குழப்பத்தை ஒழித்து, நாட்டில் நன்மை பரவும்படி செய்யவேண்டும். இதுதான் இன்று நீ செய்யவேண்டிய கடமை.

இப்படிக்கு,

புத்த தேவர் திருநாமம் வாழி.'

"இந்தக் கடிதத்தைப் படித்ததும் நான் வந்த நோக்கமும் கடிதமும் ஒன்ருயிருக்கின்றனவே! இதே நோக்கத்துடன் தங்களை அடைந்தேன். முன்னுலேயே அதற்கு விடை வந்திருக்கிறது பாருங்கள். என்ன ஆச்சரியம்!"

"சக்கரவர்த்தி, ஆசாரிய முங்கலீபுத்திர திஷ்யர் முக்காலமும் உணர்ந்தவர். அவருக்குப் பிக்ஷுக்களின் கொடுமையும் உன் மன நிலையும் அவ்வப்பொழுது தெரிந்துகொண்டேதான் இருக்கும். அதனுல்தான் உரிய சமயத்தில் இந்த அருமையான உபதேசங்கள்

கடிதமூலமாகக் கிடைத்திருக்கின்றன. இனிச் செய்யவேண்டியது அவர் சொற்படி நடக்கவேண்டியது ஒன்றுதான்."

"அது சரி; நீங்கள்தான் மஹாசபைக்குத் தலைமை வகிப்பதாக வாக்குக் கொடுக்கவேண்டும்."

"ஆசாரிய திஷ்யரே வருவதாகச் சொல்லியிருப்பதனால் நான் வாக்குக் கொடுக்கவேண்டிய அவசியமே இல்லை. இந்த மகா சபையை எந்த இடத்தில் கூட்டுவது, காரியக் கிரமங்களை யார் யாரிடம் ஒப்பிப்பது, எல்லா ஜனங்களுக்கும் தெரியும்படி எந்த முறையில் விளம்பரம் செய்வது; என்பவற்றை பற்றிச் சிந்திக்க வேண்டியதுதான் முதற்காரியம். இப்பொழுது ஸம்புஷ்டாசாரியனையும் அவனோடு சேர்ந்தவர்களையும் விடுதலை செய்துவிடலாம். நடைபெறப்போகும் மகாசபையில் அவர்களுக்குரிய தண்டனை தீர்மானிக்கப்படும். ஆகவே இப்பொழுது விடுவது பற்றி ஒன்றும் யோசிக்கவேண்டாம்" என்றார் உபகுப்தர். அரசன் ஆமோதித்தான் என்பதைச் சொல்லவேண்டியதில்லை.

பக்ஷிகளின் கலகல சப்தம் சூரியோதயத்தை அறிவித்தது. இதுதான் சமயமென்று போலி யுவராஜன் உபகுப்தரை அணுகி, தங்களிடம் சிறிது காலம் தர்மவிசாரம் செய்யவேண்டுமென்று ஆவல். அதை இப்பொழுதே நிறைவேற்றி வைப்பதில் தங்களுக்கு ஒன்றும் ஆக்ஷேபம் இல்லையே?" என்று கேட்டான். அதற்கு மேல் அசோகனால் ஒன்றும் பேச முடியவில்லை. இந்த மகாசபை முடியும்வரையில், தான் அன்று சிறையிலே கண்ட உண்மையை ஒருவரிடமும் சொல்வதில்லை என்று மனத்துள் சபதம் செய்து கொண்டான் அசோகன்.

# 27

## பழிக்குப் பழி

மகாசபை கூட்டுவதற்கான ஏற்பாடுகள் மிகவும் விமரிசையாக நடந்துகொண் டிருந்தன. பரதகண்ட முழுவதும் எங்கெங்கே பௌத்த விகாரங்கள், மந்திரங்கள் இருந்தனவோ அங்கெல்லாம் அசோகனது ஆணைக்கொடி பறக்கலாயிற்று. ஜமீன், ஜாகீர், இன்னுமுள்ள சிற்றரசர்களுக்கெல்லாம் அரசன் விடுத்த அறிக்கையைக் குதிரை வீரர்கள் கொண்டு சென்றார்கள். அங்க, வங்க, கலிங்க நாடுகளிலும் இந்த விளம்பரங்கள் காற்றிலும் கடுகேவமாகப் பரவின.

கங்காநதியின் வட பாரிசத்தில் பாடலீபுரத்தின் அருகில் ஒரு உபவனம். அதிலேதான் மகாசபையின் பொருட்டு மிகவும் பெரிய பந்தல் போடப்பட்டது. பாடலீபுரத்தை நோக்கித் திரள் திரளாகப் பிக்ஷுக்களின் கூட்டம் சாய்ந்துகொண்டே இருந்தது. பெரும்பான்மையோர், 'இந்த மகாசபைக்குப் போவதனாலேயே இந்த வேஷமும் காஷாயமும் நிலைநின்றுவிடும்; நாம் சிறந்த பிக்ஷுக்களாக மதிக்கப்பெறுவோம்' என்று எண்ணமிடலானார்கள்.

இந்தச் சபை கூடுவதற்கு இன்னும் பதினைந்து நாட்கள்தான் பாக்கி. ஆகவே நாட்டிலுள்ள மூலைமுடுக்குகள் எல்லாவற்றிலுமிருந்த பிக்ஷு கணங்கள் ஒன்றாகத் திரண்டுவந்து பாடலிபுரம் முழுவதும் நிறைந்து விட்டார்கள்.

அறிக்கை விடுத்த விதம் ஒன்று. ஆனால் நடைமுறையில் செய்யப்பட்ட பிரசாரமோ வேறொன்று. சிலர் மிகுந்த தக்ஷிணைகள் வழங்கப்படும் என்றார்கள். சிலர் ராஜபோஜனம் என்றார்கள். இப்படி அவரவர்கள் மனம் போனபடி மகாசபையை வர்ணித்தார்கள். அதிகார வெறி பிடித்த வேறொருவன், 'மகாசபைக்கு வராத பிஷுக்களைத் தண்டிக்கும்படி அசோகர் எனக்குத்தான் உத்தரவு கொடுத்திருக்கிறார்' என்று பிறரைப் பயமுறுத்திக் கொண்டிருந்தான். இப்படி அவன் செயல்கள் இரண்டு மூன்று நாட்கள் தடையில்லாமல் நடந்துவந்தன. அப்படிப் பிறர்

அடங்கி நடந்ததன் பயனுக, தன் அதிகாரத்திற்கு எல்லோரும் அடங்கித்தான் நடக்கவேண்டும் என்ற ஒரு வெறி அவனுக்கு உண்டாயிற்று.

விடுதலை செய்யப்பெற்று எங்கேயோ தங்கியிருந்த ஸம்புஷ்டாசாரியனையும் அவனைச் சேர்ந்த பிக்ஷுக் கூட்டங்களையும் அழைக்கும்படி இதே வீரனுக்குக் கட்டளையிட்டிருந்தான் அசோகன். அதற்கு முன்னமேயே ஸம்புஷ்டாசாரியனுடைய மனம் எரிமலையைப் போல் எரிந்துகொண்டிருந்தது. இந்த ராஜ தூதனுடைய வார்த்தைகள் எரிகிற தீயை ஏறத் தள்ளியதுபோல் ஆயின. அந்த முரடன் இதுவரையில் தான் பிறரை வெருட்டிய அதே வார்த்தைகளை இங்கே ஸம்புஷ்டாசாரியனிடமும் சொன்ஞன். அருகிருந்த பிக்ஷு ஒருவன், தூதனை மனம்போனபடி திட்டிஞன். பேச்சு முற்றி வாய்ச்சண்டை கைச்சண்டையாயிற்று. வெறிகொண்ட அதிகாரி, பிக்ஷுவின் தலையை வெட்டி விட்டான். கோப மிகுதியிஞல் எது செய்யக்கூடாததோ அது தான் முதன்மையாக நடந்தது. தெய்வமாகப் பிக்ஷுக்கள் மதிக்கப்பட்ட சமயத்தில் ஒரு தர்ம குருவைச் சாமான்ய வீரன் வெட்டிவிட்டானென்றுல்!

ஸம்புஷ்டாசாரியன் இதையெல்லாம் பார்த்துக்கொண்டே தான் இருந்தான். இப்படி ஏதாவது நேரவேண்டும் என்றுதான் அவன் காத்திருந்ததும். தன்னுடைய சிஷ்யன் இறந்ததைப்பற்றி விசனமுறுவதற்குப் பதில் ஸம்புஷ்டாசாரியன் சந்தோஷப் பட்டான். இந்த மகாசபையைப் பற்றி அவனுக்கு உள்ளூறப் புகைந்துகொண்டே இருந்தது. துவேஷத்திஞலேயே சபையை நிறுத்திவிட முடியுமா? இப்பொழுது இந்த விஷயம் அவனுக்கு உதவிசெய்யும் கருவியாயிற்று. சக்கரவர்த்தியின் உத்தரவிஞலேயே பிக்ஷு வெட்டப்பட்டான் என்று ஊர் முழுவதும் பிரசாரம் செய்தான். அதோடு நில்லாமல் மகாசபை என்று பெயர் வைத்து எல்லாப் பிக்ஷுக்களையும் அழைத்து ஒன்ருகக் கொலை செய்யப் போகிருர்கள் என்றும் சொல்லிவைத்தான்.

மகாசபையின் நிகழ்ச்சி முறையில் முதலாவதாகப் பிக்ஷுக் களின் பரீக்ஷை என்று குறித்திருந்தது. அது இவர்களுக்கு எரிச்சலை உண்டுபண்ணிற்று. 'பிக்ஷுக்களையாவது, பரீக்ஷிப்ப தாவது! பரீக்ஷிக்கும் அதிகாரம் எவனுக்கு உண்டு!' என்று கூறுவிஞர்கள்.

எப்படியாவது யுக்தி செய்து இந்த மகாசபை நடவாமற் செய்யவேண்டும். அல்லது ஒழித்தே விட வேண்டும்' என்று சொல்லி, நிகழ்ச்சி முறையிலிருந்த பரீக்ஷை என்ற சொல்லையே எடுத்துவிட முயன்றார்கள். ஆனால் அசோகன் அதற்கு உடன் படுவதாக இல்லை. பரீக்ஷைதான் முக்கியம், எவனுக்குத் தான் பரீக்ஷிக்கப்படுவதில் விருப்பம் இல்லையோ அவன் காஷாயத்தைக் களைந்துவிட்டு இல்லறத்தை மேற்கொள்ளலாம் என்று சொல்லி விட்டார் சக்கரவர்த்தி. இப்படி அவர் சொல்லியதனால் பிக்ஷுக் கூட்டத்தார் முன்னும் பின்னும் போகமுடியாமல் தவித்தார்கள். இந்த நெருக்கடியான சந்தர்ப்பத்தில்தான் இந்தச் சிரச்சேதம் என்கிற கைக்கொள்ளி அவர்களுக்குக் கிடைத்தது. இதன் உதவி யால் இந்த மகாசபையை ஒரு நொடியிலே கொளுத்திவிடலாம் என்று தீர்மானித்தார்கள் அவர்கள்.

இதற்குச் சில நாட்களுக்கு முன்புதான் தன்னுடைய பிக்ஷுக் கூட்டங்களுக்கு நடுவில் மகாசபைக்கு எதிராகத் தான் தலைமை வகித்து நடத்தப் போவதாகச சொன்னான். அத்துடன் இந்தச் சிஷ்யனது கொலையும் நடுவில் வந்து சேரவே அசோகனது உயிரே தன் கையில் இருக்கிறது என்று எண்ணினான் ஸம்புஷ்டாசாரியன். இதை வெளிப்படையாகக் காட்டிக்கொள்ளவில்லை. ஏனென்றால் மகாசபை ஒழியவேண்டும் என்றுதான் பிக்ஷுக்கள் விரும்பினார் களே தவிர அசோகனை ஒழிக்கவேண்டும் என்று விரும்பவில்லை. ஆகவே அவர்களுக்குத் தெரியாமலே தன் எண்ணத்தை நிறை வேற்ற ஆசாரியன் காத்திருந்தான்.

"பிக்ஷுவின் கொலை அரசரின் ஆக்ஞையின் பேரில்தான் நடந்திருக்கிறது. இதற்குத் தண்டனை விதிக்கத்தான் வேண்டும். அந்தத் தண்டனை விதிக்கும் அதிகாரத்தை எனக்குக் கொடுங்கள். இந்தப் பிக்ஷுவின் கொலைக்கு என்ன தண்டனை விதிக்கிறீர்கள் என்று அரசன் கேட்டால் என்னைச் சுட்டிக் காட்டிவிடுங்கள். அதற்குமேல் மகாசபை, பிக்ஷுக்களின் பரீக்ஷை இவைகள் எப்படி நடைபெறும் என்பதை நான பார்த்துக்கொள்கிறேன்" என்று கர்ஜித்தான். அங்கே கூடியிருந்த பிக்ஷுக்கள் ஒருமனதாக இவனைத் தலைவனாக அங்கீகரித்துக்கொண்டார்கள்.

ஸம்புஷ்டாசாரியனது பெருமை எல்லையைக் கடந்தது. அசோகனுக்கு என்னவிதமான தண்டனை விதிக்கலாம் என்பதைக்

குறிப்பிட்டுத் தீர்மானிக்க ஓரிடத்தையும் சொல்லிவிட்டு இந்த மங்கள சமாசாரத்தைப் புத்திமதிதேவியிடம் தெரிவிக்கக் கிளம்பினான்.

*　　*　　*　　*

சாயங்காலம் ஸம்ராட் அசோகன் தன் பூங்காவில் தனியே உட்கார்ந்துகொண்டு சிந்தையில் ஆழ்ந்திருந்தான். அவன் முகத்திலே சோகம் குடிகொண் டிருந்தது. அந்தப் பூஞ்சோலையும் அந்தி நேரமும் உலகையே வசப்படுத்தக்கூடியதாக இருந்தன. ஆனால் அசோகனது கண்களுக்கு அவை புலனாகவில்லை. பஞ்சபூதங்களும் இயற்கையும் சேர்ந்து அவன் மனத்தைக் களிப்பிக்க முயல்வதுபோல் இருந்தன. பூமிதேவியே மனோகரமான உருவெடுத்து அவனது கவலையைப் போக்கடிக்க முயன்று கொண்டிருந்தாள். செயற்கை ஊற்றுக்கள் தண்ணீர்த் திவலைகளைச் சிதறி மனத்தைக் குளிரச்செய்தன. ஒளிமயமான சூரியன் தன்னால் இயன்ற வரையில் அழகைச் சுமந்துவந்து அவனைக் களிப்பிக்க, வாயுபகவான் மெல்லிய மணம் கமழும் காற்றினால் தன்னுடைய கைங்கரியத்தைச் செய்துகொண் டிருந்தான். மிகப் பெரிய வானவிதானம் தன்னுடைய சூன்யமான நிலையிலும் மேகங்களால் தன்னை அலங்கரித்துக்கொண்டு கதிரவனது பொன் ஒளியை இரவல் வாங்கிக்கொண்டாவது அசோகனது துயரத்தைப் போக்கவேண்டும் என்று முயன்றது. இப்படி இயற்கையரசியே அவனை உற்சாகமூட்டியும் அவன் அவைகளைச் சட்டை செய்யவே இல்லை. காலையில் தான் கேள்விப்பட்ட ஒரு சம்பவத்தின்மீதே அவன் மனம் சுழன்றுகொண் டிருந்தது. எப்பொழுதும் கருணையால் நிறைந்திருக்கும் அவன் கண்கள் இப்பொழுது கண்ணீராலும் நிறைந்திருந்தன.

"நீ இட்ட கட்டளையில் சிரச்சேதம் என்ற சொல்லே கிடையாது. மறைமுகமாகக்கூட அப்படித் தொனிக்கவில்லை. மூர்க்கனான சேவகன் செய்த கொலை, அவனைத்தான் சேருமேயன்றி உன்னைச் சாராது" என்று உபகுப்தர் சொன்ன வார்த்தைகள் அவன் செவியில் ஏறவே இல்லை. 'ஏ, அசோகா! பிராயச்சித்தம் செய்துகொள்ளச் சித்தமாயிரு!' என்று ஸம்புஷ்டாசாரியன் எழுதி அனுப்பிய ஓலையின் ஒவ்வோர் எழுத்தும் மிகப் பெரிய உருவம் கொண்டு அவன் அகக்கண்முன் கூத்தாடுவது போல் தோன்றிற்று. கடுமையான குரலில் எங்கேயோ ஓர்

இடத்தில் இருந்துகொண்டு ஸம்புஷ்டாசாரியன் தன்னை அதட்டு வது போலவும் தோன்றிற்று. இப்படி ஓயாமல் ஒன்றன்பின் ஒன்றுகத் தோன்றி வதைக்கும் சிந்தனைகளுடன் மெய்ம்மறந் திருந்தான் அசோகன்.

அசோகனிடமிருந்து ஏதாவது ஒரு பதில் வரும் என்று எதிர் பார்த்தான் ஸம்புஷ்டாசாரியன். கோபம் பொங்கி எழுந்தது. பிக்ஷுக்கூட்டங்கள் புடைசூழச் சேனதிபதிபோல் பெருமிதத் துடன் அரண்மனை வாயிலில் வந்து, 'நமோ புத்தாய' என்று கர்ஜித்தான் ஸம்புஷ்டாசாரியன், காவற்காரன் பழம் பெருச் சாளி. ஸம்புஷ்டாசாரியனது நிலைமையையும் சுற்றிலுமுள்ள பிக்ஷுக் கூட்டங்களின் நிலைமையையும் நொடியில் கண்டு கொண்டான். ஒருவரும் உள்ளே புகக்கூடாது என்று கடுமை யான உத்தரவு போட்டான். பிக்ஷுக்களின் கோபம் எல்லையைக் கடந்தது. எல்லோரும் ஏககாலத்தில், 'நமோபுத்தாய' என்று கோஷித்தனர். கடல் அலைபோல் 'ஹோ' என்று கோஷிக்கும் அந்தப் பேராரவாரம் அசோகன் செவிகளுள் வீழ்ந்து அவன் கனவு கலைந்தது. வெகு வேகமாக அரண்மனை வாயிலை அடைந் தான். அவனைக் கண்டவுடனே ஸம்புஷ்டாசாரியன் பின்னும் ஆவேசத்தோடு, இடிக்குரலில், "பழிக்குப் பழி! பிராயச்சித்தம்!" என்று கூச்சலிட்டான். பிக்ஷுக்களின் கூட்டத்தையும், அவர்கள் இருக்கும் நிலையையும் கண்ட அசோகன் மிகவும் அமைதியான குரலில், "நான் இட்ட கட்டளைக்கும் கொலைக்கும் யாதொரு விதமான சம்பந்தமும் இல்லை. உங்களோடு நானும் விசனப்படு கிறேன். அதைத்தவிரப் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டிய அவசியம் ஒன்றும் இல்லை. ஆனல் தர்மத்தின் தத்துவத்துக்கு ஏற்ப நான்தான் உண்மையான குற்றவாளி என்று நிச்சயமானுல் அப் பொழுது பிராயச்சித்தம் செய்துகொள்கிறேன். இறந்துபோன பிக்ஷுவின் சடங்கு முடிந்ததும் ஒரு கூட்டம் கூடி யார் குற்றவாளி என்பதைத் தீர்மானியுங்கள். அப்பொழுது பெரியவர்கள் பார்த்துத் தீர்மானிக்கும் தண்டனையை நான் ஏற்றுக்கொள்கிறேன்" என்ருன்.

ஸம்புஷ்டாசாரியன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித் தது. அவன் இந்த விஷயத்தை நீடிக்கவிட விரும்வில்லை. மகா சபை கூடுவதற்கு முன்னமே சக்கரவர்த்திக்குப் பிராயச்சித்தம் விதித்துவிட வேண்டும் என்றும் அவன் துடிதுடித்தான். 'அசோகனை ஒழித்துவிட்டால் சபையும் ஒழிந்துவிடும் அல்லவா?'

என்று நினைத்தவனாக அசோகனைப் பார்த்து, "இன்னும் மூன்று நாட்களுக்குள் பிக்ஷுவின் கிரியைகள் முடிந்துவிடும். நாலாம் நாள் எந்தவிதமான சாக்குப்போக்கும் சொல்லாமல் உன் குற்றத்திற்கு உரிய பிராயச்சித்தத்திற்குத் தயாராயிரு" என்று சொல்லிவிட்டு, வெற்றி மிடுக்குடன் அசோகனைப் பார்த்துவிட்டுத் தன் கூட்டங்களை அழைத்துக்கொண்டு கிளம்பினான் ஸம்புஷ்டாசாரியன்.

ஏற்கனவே நொந்துகிடந்த மனத்தை இத்த வார்த்தைகள் பின்னும் புண்ணாக்கின. ஆகவே தனிமையை நாடித் தோட்டத்திற்குள் புகுந்தான். காலை முதல் நடந்த சம்பவங்கள் ஒன்றன் பின் ஒன்றாக அவன் மனத்தில் தோன்றலாயின. இப்படி எவ்வளவு நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தானோ தெரியாது.

ஏதோ ஒரு இனிய குரல் கேட்டு அவன் திடுக்கிட்ட பொழுது சந்திரன் வான வீதியிலே பவனி வந்துகொண் டிருந்தான். அவன் தன்னையும் கவனிக்காமல் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது கண்டு இந்திரை மனம் புழுங்கினாள். "அண்ணா, அண்ணா!" என்று மிகவும் மெல்லிய குரலில் கூப்பிட்டாள் அவள். உணராதவன் போல் இருந்த அசோகன் திடுக்கிட்டான்.

"அண்ணா! வருத்தத்திற்கு எல்லையில்லையா? எவ்வளவுதான் வருத்தப்படுவது? நீங்கள் எவ்வளவுதான் விசனப்பட்டாலும் இறந்துபோன பிக்ஷு திரும்பி வரப்போவதில்லை. மேலும் உங்களுடைய கட்டளைக்கும் பிக்ஷு சிரச்சேதம் செய்யப்பட்டதற்கும் ஒருவித சம்பந்தமும் இல்லை என்று ஆசாரிய உபகுப்தனாரே சொல்லுகிறார். அவரே சொல்லும்பொழுது நீங்கள் விசனிப்பானேன்."

இந்த வார்த்தைகள் காதில் விழுந்தபொழுதுதான் அவனுக்கு உலகப் பிரக்ஞை வந்தது. தன் துயரத்தை இந்திரையின் எதிரில் காண்பித்துக்கொள்ளக் கூடாதென்று முயன்றான். ஆனால் அந்த முயற்சி பலிக்கவில்லை.

சாமானியமான சிலரைப்போல் அசோகனுக்கு உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று காண்பிக்கும் நடிப்புத்திறன் கிடையாது. இளமைப் பருவத்திலிருந்து இதுவரையில் அரசியலில் ஆகட்டும், சொந்த விஷயங்களில் ஆகட்டும் அப்படிக் கபடமாக நடித்ததும் இல்லை; நடிக்கும்படி நேர்ந்ததும் இல்லை. ஹிருதயம் எப்படி இருக்கிறதோ அப்படியே மனம் திறந்து பேசுவதும், எதைச்

சொல்லுகிருனே அதைச் செயலில் செய்து காண்பிப்பதுந்தான் அவனது நியமம். இதுவரையில் சொல்லும் சிந்தையும் செயலும் ஒன்றுக்கொன்று முரண்பட்டதே கிடையாது. ஆகவே இந்தச் சிறு விஷயத்தில்கூட அவனுல் அதற்கு மாறுபட்டு நடக்க முடியவில்லை. அவள் ஏதோ பேசினுள் என்று மட்டும் தெரிந்தது. அவள் என்ன சொன்னுள் என்பது விளங்கவில்லை. அவளைப் பார்த்து, "இந்திரே! சற்றுமுன் நீ என்ன சொன்னுய்?" என்று கேட்டான்.

"அண்ணு! நான் சொன்ன வார்த்தைகள் துக்கத்தின் மிகுதியால் உங்கள் காதில் விழவில்லை. அப்படியிருந்தும் அதை ஏன் நீங்கள் மறைக்கவேண்டும். மறைப்பதனுல் விசனம் மிகுதியாகிறதே தவிரக் குறைவதில்லை!"

இந்த வார்த்தைகளைக் கேட்டு அவன் மனத்திற்குள் வெட்கமடைந்தான். "இந்திரே! இன்று என் மனம் தூள்தூளாகச் சிதறிப் போய்விட்டது!"

"என்ன! உங்கள் மனத்துக்கு என்ன சங்கடம் நேரிட்டது? பிக்ஷுவின் சிரச்சேதம் மட்டுந்தாஞ? வேறு ஏதாவது விசேஷமா?"

அசோகன் மிகவும் அமைதியான குரலில், "மனிதன் எப்பொழுதும் மரணத்திற்கு வசப்பட்டுத்தான் இருக்கிருன். முடிவு என்பது எப்பொழுதாவது, எந்த வழியிலாவது வந்தேதான் தீரும். ஆனுல் இந்தப் பிக்ஷுவின் மரணம் என் கட்டளையை ஆதாரமாகக் கொண்டு நடந்த கொலையாகையால் அது மனத்தை அறுக்கிறது."

"அப்படியானுல் இதைப்பற்றித் தகுந்த விசாரணை செய்தே தீரவேண்டும. உங்கள் உத்தரவிற்கும் இந்தக் கொலைக்கும் ஒருவிதமான சம்பந்தமும் இல்லை என்று உபகுப்தர் சொன்னுரே?"

"அவர் சொல்வதை யார் கேட்கிருர்கள்? இந்தக் கொலையின் விசாரணையை என்னுடைய குடிகளும் பிக்ஷுக்களும் வேறு விதத்தில் செய்வதாக உத்தேசித்திருக்கிருர்கள். நான்தான் ஏவியதாக ஒரு வதந்தியை மக்களிடமும் பரவச்செய்திருக்கிருர்கள். இதனுல் மக்கள் என்னைக் குற்றவாளியாக நினைக்கிருர்கள்."

"அண்ணு, மூட ஜனங்கள் அகாரணமாகத் தங்கள்மேல் குற்றம் சுமத்தினுல் நீங்கள் ஏன் பயப்படவேண்டும்? நீங்கள் அவர்களுக்குத் தகுந்தபடி பதில் சொல்லவோ தண்டிக்கவோ கூடாதா ?"

"இந்திரே! சாதாரண மனிதர்களிலே உள்ள துஷ்டர்களுக்கும் பிக்ஷுக்களிலே உள்ள துஷ்டர்களுக்கும் வித்தியாசம் உண்டு. இன்றைக்கு என்மேல் பொய்க்குற்றம் சுமத்துவது யார்? என்னுடைய தர்மகுரு. நேற்றுவரை என்னுடைய தர்மத்தை வானளாவப் புகழ்ந்த ஸம்புஷ்டாசாரியன். இன்று அவருடைய வாக்கில், பிக்ஷுவை நான்தான் கொல்லச் செய்தேன் என்ற சொல் வந்துவிட்டது."

இந்திரையின் முகம் கோபத்தால் சிவந்தது. "அழகு! அழகு! வெகு ஒழுங்குதான். இந்தமாதிரியான பொய்க்குற்றம் சுமத்துகிற ஒருவனைத் 'தர்மகுரு' என்று சொல்லமுடியாது. எப்பொழுது பொய் சொல்ல ஆரம்பித்திருக்கிருரோ அப்பொழுதே அவர் குரு பதவியிலிருந்து விழுந்துவிடுகிருர். அவரை அநுசரிப்பதால் தர்மத்திற்குக் கெடுதியே உண்டாகும்" என்று படபடவென்று பொரிந்தாள்.

"அம்மா! இந்திரே! இவைகளெல்லாம் எனக்கும் தெரிந்துதான் இந்த மகா சபையைக் கூட்டினேன். அந்த மகா சபையிலிருந்து ஒரு தீர்ப்பு ஏற்படும் வரையில் இவர்கள் சொல்வதை நான் கேட்டுத்தான் ஆகவேண்டும். இன்று வரையில் ஸம்புஷ்டாசாரியரைக் குருவாக மதித்து, முதன்மை அளித்து வந்திருக்கிறேன். எந்த வேலைகளிலும் அவர் சொன்னதே வேத வாக்காகத்தான் நடந்து வந்திருக்கிறேன். அப்படி இருக்க இன்று என்மேல் அவர் சொல்லுகிற குற்றங்களை நான் எப்படி மறுக்க முடியும்? 'நீங்கள் தர்மகுருவும் அல்ல; பிக்ஷுவின் கொலைக்குப் பிராயச்சித்தம் விதிக்க (கொலைகாரரான) உங்களுக்கு யோக்கியதையும் இல்லை' என்று நான் சொல்லத் தொடங்கினுல் குடிகளே என்னைச் சந்தேகித்துத் தூற்றுவார்கள். ஆகையினுல் ஒருவிதமான தடையும் சொல்லாமல் அவர்கள் சொல்லுகிற தண்டனையையும் ஒப்புக்கொள்ள நிச்சயித்திருக்கிறேன். இதுவரையில் அவர்கள் செய்திருக்கிற அட்டூழியங்களையும் இப்பொழுது எனக்குப் பிராயச்சித்தம் விதிப்பதாகச் சொல்லுவதையும் பார்த்தால் நியாயத்தையே உலகத்தை விட்டு

ஒழிப்பதாக அவர்கள் கங்கணங் கட்டிக்கொண் டிருப்பதாகத் தோன்றுகிறது. ஆனுல், விஷயங்கள் எனக்கே வந்து விட்டபடியால் நான் பின் வாங்காமல் ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான்."

இந்திரை நடுநடுங்கிப் போனுள். தான் விஷமென்று வெறுத்த அந்த ஸம்புஷ்டாசாரியன் சக்கரவர்த்திக்கு என்ன தண்டனை விதிப்பானே என்று தோன்றிற்று. "அண்ணு! அந்தத் துஷ்ட தரும குருவின் வசப்படக் கூடாது. பிராயச்சித்தம் என்ற பெயரால் தங்களுக்குக் குரூரமான தண்டனை விதிக்கப் பின்வாங்க மாட்டான். இந்த விஷயத்தில் நீங்கள் இன்னும் கொஞ்சம் யோசித்துத்தான் இறங்க வேண்டும்."

"இந்திரா! ஏது கிழவிபோல் பேச ஆரம்பித்து விட்டாயே! இன்று கூடி அமர்க்களம் செய்த பிக்ஷுக்களுக்கு, அவர்கள் எல்லோரும் கூடி யோசித்து ஒருமனதாகச் சொல்லும் முடிவான தண்டனைக்கு நான் உடன்படுவதாக வாக்களித்துவிட்டேன். தலையே போனுலும் அதை மாற்ற முடியாது" என்று அழுத்தமாகச் சொன்னுன் அசோகன்.

நிராசையினுல் இந்திரையின் முகம் சுண்டிற்று. சிங்கத்திற்குச் சமமான ஸம்ராட் அசோகன், இன்று ஓர் அயோக்கியப் பிக்ஷுவின் கையில் சிக்கித் தவிப்பதை நினைக்க நினைக்க அவள் நெஞ்சு படீர் படீரென்று அடித்துக்கொண்டது. மறு விநாடி அவர் இதுவரையில் செய்துள்ள தருமப் பிரசாரம் தன் தமையனைக் கவசம்போல் வந்து காப்பது போலவும் அவளுக்குத் தோன்றிற்று. மிகவும் தழு தழுத்த குரலில், "அண்ணு! நீ சக்கரவர்த்தியானுலும் இந்த விஷயத்தில் யோசனை இல்லாமல்தான் நடந்துவிட்டாய். என்ன காரியம் செய்து விட்டாய்! விலை மதிக்க முடியாத உன்னுடைய உயிராகிய நிதியைத் திருடன் கையிலல்லவா கொடுத்துவிட்டாய்! உன்னுடைய வாழ்க்கையாகிய படகை நீ வேண்டுமென்றே சூருவளியில் விட்டிருக்கிருயே. இந்த மாதிரி ஒரு சங்கடமான நிலைமை, யமதர்மனுக்கே வந்தால்கூட நடுங்காமல் இருக்க மாட்டான். நீ விசனப்படுவது நியாயந்தான். என்னுல் என்ன செய்யமுடியும்?" என்று சொல்லித் தேம்பித் தேம்பி அழத்தொடங்கினுள் இந்திரை.

அசோகனது மனம் மேலும் சஞ்சலத்தில் ஆழ்ந்தது. சமாளித்துக்கொண்டு அவள் கண்களைத் துடைத்து, "என்ன

இந்திரா! நீ ஏன் வருத்தப்படுகிறாய்? பிராயச்சித்தம் எதை விதித்தாலும் அதற்கு நான் வருத்தப்பட மாட்டேன். ஆனால், பிக்ஷுவைக் கொல்லச் செய்தேன், என்கிற வார்த்தைகள் மரணத்தைக் காட்டிலும் பன்மடங்கு வேதனையைத் தருகின்றன. நான் இதுவரையில் எந்தத் தருமத்தையும் குருக்களையும் பாதுகாத்து வந்தேனே, அப்படிப்பட்டவர்களிலே ஒருவரை நானே கொல்லச் செய்ததாக என்மேல் சுமத்தியிருக்கும் இந்த அபாண்டமேதான் என் மனத்தை அறுக்கிறது. ஸம்புஷ்டாசாரியன் என் புகழுக்குக் களங்கத்தை உண்டுபண்ண வேண்டுமென்றே இவ்வாறு செய்திருக்கிறான். இந்த மகா சபையை வெறுக்கும் பிக்ஷுக் கூட்டங்களுக்கு அவன்தான் தலைமை வகிக்கிறான். இன்றையிலிருந்து நாலாவது நாள் சூரியாஸ்தமன மாவதற்குள் உன் தமையன் இந்தப் பிக்ஷுக் கூட்டத்தின் நடுவில் தர்ம குருவைக் கொன்றதாகக் குற்றம் சாட்டப்படுவான். அதென்ன சாமானியமான அபகீர்த்தியா? இந்த அபகீர்த்திக்குத்தான் நான் பயப்படுகிறேனே தவிர உயிருக்கு நான் பயப்படவில்லை."

"ஆனால், இந்த விபத்திலிருந்து கரையேற ஒரு வழியும் இல்லையா?"

"ஒரு வழி இருக்கிறது."

"ஆனால் ஏன் விசனப்படவேண்டும்?"

"ஒரே ஒரு வழி இருக்கிறது. அது முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவது போல."

"அது என்ன வழி. அதைச் சொல்லுங்களேன்" என்று ஆவலுடன் கேட்டாள் இந்திரை.

"மனம் போனபடி நடக்கும் இந்தப் பிக்ஷுக்களின் நடத்தையைத் தடுக்கக் கூடியது அந்த ஒரு வழிதான்."

"வழி தெரிந்திருந்தால், முடவன் கொம்புத்தேனுக்கு என்று சொல்வானேன். ஆசாரிய உபகுப்தர் கையிலே இந்த விஷயத்தை ஒப்பித்தால்?"

"அம்மா! உபகுப்தரது தவ வலிமையால் இந்தப் பிக்ஷுக்களை அடக்க முடியாது. ஆசாரிய முங்கலீ புத்திர திஷ்யர்

ஒருவரால்தான் இந்தச் செயலைச் செய்யமுடியும். அவர் ஒருவருடைய வாக்குக்குத்தான் என்னை விடுவிக்கக் கூடிய சக்தியுண்டு. அவர் எங்கிருக்கிருரோ நமக்குத் தெரியாது. இன்னும் பன்னிரண்டு நாட்கள் கழித்து வந்து மகா சபைக்குத் தலைமை வகிப்பதாகச் சொல்லியிருக்கிருர். பிராயச்சித்த சபையோ இன்னும் மூன்று நாளில் கூடப் போகிறது. தற்செயலாக இந்தச் சமயத்தில் அவர் எப்படி வர முடியும்? என்னைத் தேடினீர்களானுல் இருப்பிடம் தெரியாது என்று அவரே தெரிவித்திருக்கிருர்'' என்று சொல்லி அசோகன் விசனத்தில் ஆழ்ந்தான்.

இந்திரைக்குத் தன் தமையனின் சங்கடமான நிலை புரிந்தது. புதிரும் விடையும் கையிலேதான் இருந்தன. ஆனுல் செய்வதெப்படி? 'இந்த நெருக்கடியான சமயத்தில் யார் முங்கலீபுத்திரரைத் தேடிப் பிடிக்க முடியும்?' என்று நினைத்தபொழுது அவளை அறியாமலே மெல்லிய சிரிப்பின் ரேகை அவள் முகத்தில் படர்ந்தது. கருத்துடன் கூடிய ஓர் ஒளி அவள் கண்களிலே தோன்றிற்று. இந்த நிலையில் அசோகன் அவளைக் கண்டிருந்தால் ஆச்சரியத்தால் திகைத்துப் போயிருப்பான். ஆனுல், அசோகன் கைகளிலே முகத்தைத் தாங்கியவனுய்த் தலை குனிந்து உட்கார்ந்திருந்தான்.

இந்த அசட்டுப் பெண்ணுக்குத் திடீரென்று என்ன ஆனந்தம்! அவளைச் சுற்றியிருந்த காட்சிகள் எப்பொழுதும் போலத் தானே இருக்கின்றன. சுற்றுமுற்றும் பார்ப்பானேன். ஒருவேளை இந்தப் பூஞ்செடிகளுக்கே ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடிய சக்தி வந்துவிட்டதா என்ன? அட, இது என்ன இது? ஒருவேளை அந்தப் பூங்கொடிக்குப் பின்னுல் ஒரு பௌத்த பிக்ஷு மறைந்திருக்கிற காட்சி அவளுக்குத் தெரிந்துவிட்டதோ? அப்படித்தான் இருக்கும். காதலின் மிகுதியால் தன் தமையனுக்கு வந்திருக்கிற அந்தப் பேராபத்தைக் கூட அவள் மறந்து விட்டாளா? இவ்வளவு நேரம் அந்தக் கஷ்டங்களைத் தனதாகப் பாவித்துக் கசிந்து உருகின அவள் இதற்குள் மறந்திருக்க முடியுமா? சேச்சே! இந்திரையின் சகோதர வாஞ்சையை இம்மாதிரி சந்தேகிப்பது அநியாயம். அந்தப் பிக்ஷுவைப் பார்த்ததும் அகமும் முகமும் மலர்ந்தது உண்மைதான். ஆனுல் அது அவனைக் கண்டதற்காக மட்டுமன்று. தன் தமையனது பேராபத்தை நீக்கக்கூடிய ஒரு சாதனம் தன் கையில் அகப்பட்டு விட்டது என்ற சந்தோஷத்தின் பெருக்

கால் ஏற்பட்ட மகிழ்ச்சிதான். "அண்ணு! ஆசாரிய முங்கலீ புத்திரர் இருக்குமிடம் மற்றவர்களுக்குத் தெரியாவிட்டாலும் கடிதம் கொண்டுவந்து கொடுத்த பிக்ஷுவுக்குத் தெரிந்துதான் இருக்க வேண்டும். அவரிடமே சொல்லி ஆசாரிய திஷ்யரை இங்கே வரவழைப்பதற்குப் பிரயத்தனம் செய்யலாம். நீங்கள் கவலைப் படவேண்டாம்."

"இந்திரே! இதென்ன பிரமை. எந்தப் பிக்ஷு கடிதம் கொடுத்தானே? அவனை எப்படிக் கண்டு பிடிப்பது?"

"அவரை எனக்கு நன்ருகத் தெரியும்" என்று சொல்லும் பொழுது அவள் முகம் சிவந்தது."

"என்ன? அந்தப் பிக்ஷுவை உனக்குத் தெரியுமா?"

"ஆமாம், தெரியும். அதுமாத்திரம் அல்ல; நம்முடைய எந்த வேலையையும் அவர் சரிவரச் செய்வார் என்ற நம்பிக்கையும் உண்டு."

"இந்திரே! நீ உலகம் தெரியாத குழந்தை. பிக்ஷுக் கூட்டத்தாரைப் பற்றி உனக்குத் தெரியாது. தர்ம குரு ஸம்புஷ்டாசாரியன் சக்கரவர்த்திக்கே பிராயச்சித்தம் விதிக்கும் சபைக்கு முங்கலீ புத்திர திஷ்யரை எந்தப் பிக்ஷுவும் அழைத்துக் கொண்டு வரக் கூடுமென்று எனக்குத் தோன்றவில்லை."

"ஆனுல் அவர் உண்மையான பிக்ஷு அல்லாதவராக இருந்தால்?"

"கடிதம் கொடுத்தவர் பிக்ஷு என்று நீதானே சொன்னுய்?"

"ஆமாம் அப்படித்தான் சொன்னேன். ஆனுல், அவர் வேஷத்தில் பிக்ஷுவே தவிர உண்மையான பிக்ஷு அல்ல."

"சரி சரி. அப்படியானுல் ஸம்புஷ்டாசாரியனுடைய பரமானந்த சிஷ்யர்களில் ஒருவனுகத்தான் இருக்கவேண்டும். அவன் ஒருநாளும் திஷ்யரின் இருப்பிடத்தைத் தெரிவிக்கவே மாட்டான்."

"அண்ணு! நீங்கள் வீணுகத் தர்க்கம் செய்வதில் பிரயோசனம் இல்லை. நீங்கள் அந்தப் பிக்ஷுவின் மேல் பூரண நம்பிக்கை வைக்கலாம். அவர் ஒருவரால்தான் இந்தக் காரியத்தைச் செய்யமுடியும்" என்று அழுத்தமாகச் சொன்னுள் இந்திரை.

அசோகனது மனத்தில் ஆசை தளிர்விட்டது. ஆனால் அவர் இருப்பிடத்தைச் சீக்கிரம் சொல்" என்று எழுந்தான் அசோகன்.

அவள் ஆச்சரியமடைந்தாள். எதிர்பாராத விதமாக சற்றுத் தொலைவிலேயுள்ள ஒரு கொடி வீட்டின் ஓரத்திலே இளைஞுன ஓர் பிக்ஷு நிற்பதைக் கண்டால், ஆச்சரியப் படாமல் என்ன செய்வது? தன் தங்கையைக் கைகளைப் பற்றி அழைத்துக்கொண்டு அந்தக் கொடிவீட்டை நோக்கி நடந்தான். இந்திரையை ஒருமுறை பார்த்துவிட்டு அந்தப் பிக்ஷு, "தேவானும் பிரிய சக்கரவர்த்தி அவர்களுக்குச் சர்வ மங்களமும் உண்டாகட்டும்" என்று சொல்லியவனுய்த் தலை வணங்கினுன். "அடடா, இது யுவராஜா மகேந்திரன் அல்லவா?" என்று கூவினுன் அசோகன். உற்றுப் பார்க்கவும், அவனல்ல என்றும் தோன்றிற்று. "நீங்கள் ஏறக்குறைய யுவராஜனைப் போலவே இருக்கிறீர்கள். அதனுல் சொல்லிவிட்டேன்" என்று தன் பிழைக்காக மன்னிப்புக் கேட்பவன்போல் சொன்னுன் அசோகன். அதே சமயத்தில், 'இந்த மகாசபை, விவகாரங்களில் ஈடுபட்டு, வேணு வனத்தில் இருக்கும் யுவராஜனைச் சந்திக்காமல் போனேமே?' என்று தன்னைத்தானே நிந்தித்துக்கொண்டான். பிறகு பிக்ஷுவைப் பார்த்து, "ஆசாரிய திஷ்யரது இருப்பிடம் உங்களுக்குத் தெரியுமா?"

"சக்கரவர்த்தி, இடம் எனக்குத் தெரியாது. இருந்தாலும் சமீபத்தில் பார்க்கவேண்டிய அவசியம் நேருமென்றும், எங்கே வந்து தம்மைச் சந்திக்கலாமென்றும் அவர் திவ்ய ஞானத்தினுல் கண்டு சொல்லியிருக்கிருர்" என்ருன்.

"அசோகனுக்கு எதிர்பாராமல் கிடைத்த இந்த அரிய சந்தர்ப்பம் தெய்வசித்தம் என்றே தோன்றிற்று. பிக்ஷுக்களைப் பற்றி அவநம்பிக்கையுடன் பேசிய அவன், இந்தப் பிக்ஷுவிடம் தன் பிராயச்சித்த வரலாறு முழுமையையும் சொல்லித் திஷ்யரை அழைத்துவரும் பொறுப்பையும் அவனிடம் ஒப்பித்தான்.

பௌத்த மதத்திற்கே வந்திருக்கிற ஒரு களங்கத்தை விலக்கு வதான ஓர் அரும் செயலைச் செய்யும் சந்தர்ப்பம் தனக்கு நேர்ந்தது பற்றிப் பூரித்தவனாய் அந்தப் பவித்திரமான செயலைச் செய்து முடிப்பதாக அவன் வாக்களித்தான். "இதோ ஓர் ஓலை கொண்டு வருகிறேன்" என்று அவர்களை அங்கேயே விடுத்து மற்றொரு கொடி வீட்டை நாடிச் சென்றான் அசோகன்.

"இந்திரே! எந்த நாட்டிலும் உயர்ந்த செயல்களுக்கு வெகு மதி அளிப்பதுண்டு. ஆனால் இதற்குப் பிரதியாக நான் மிகவும் விலையுயர்ந்த ஒரு பொருளை விரும்புகிறேன் என்று சக்கரவர்த்தி யிடம் சொல்" என்றான் பிக்ஷு.

நாணத்தால் முகம் சிவந்தாள் இந்திரை. சற்றுநேரம் அமைதி. ஒவ்வொரு நிமிஷமும் தமையனின் வரவை எதிர்பார்த்து ஒன்றுமே பேசாதவளாக நின்றிருந்தாள் அவள். அந்த மௌனத்தைக் கலைக்க விரும்பியவனாய், "இந்திரே, என்னுடைய வனராஜன் இங்கே எங்கேயோ வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன்; அது நிஜமா?" என்றான் பிக்ஷு.

"ஆம் நிஜந்தான். இதை அடுத்த சோலையிலேதான் விளை யாடிக்கொண் டிருக்கிறது."

"பார்க்கவேண்டும். ஆனால் அதற்குள் சக்கரவர்த்தி இங்கே வந்துவிட்டால்?"

"சக்கரவர்த்திக்கும் அதனிடம் பிரியந்தான். தவிர அது அடுத்த கொடிவீட்டில்தான் இருக்கிறது" என்று சொல்லி இருவரும் அடுத்த கொடிவீட்டை நோக்கி நடந்தார்கள். அதே சமயத்தில் அசோகனும் அங்கே வந்து சேர்ந்தான்.

"என்ன? இந்த வனராஜன் உனக்கும் நண்பனா!" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் அசோகன். "அப்படியானால், இந்த வனராஜனை என்றைக்குக் கண்டுபிடித்தாளோ அன்றைக்கே இந்தப் பிக்ஷுவையும் நண்பனாக்கிக் கொண்டாள்போல் இருக் கிறது" என்று சொல்லிவனாய் ஓலையைப் பிக்ஷுவிடம் கொடுத் தான் அசோகன். வனராஜனை நெருங்கித் தடவிக் கொடுத்து விட்டுப் பிக்ஷு புறப்படத் தயாரானான். அசோகன் சாதாரணமாகச் சொன்ன இந்த வார்த்தையைக் கருத்துடன் கூடியதாகவும்,

தங்களது காதலைப்பற்றி அவன் தெரிந்துகொண்டதாகவும் எண்ணினாள் இந்திரை. அசோகர் சொன்னதைத் தெரிந்துகொண்டதாக எண்ணியதோடு நிற்கவில்லை. தெரிந்துகொண்டு அங்கீகரித்துச் சம்மதம் அளித்துவிட்டதாகவும் முடிவு கட்டினாள் இந்திரை. தான் முடிவு கட்டியதோடு நில்லாமல் பிக்ஷுவின் செவிகளில் அவசர அவசரமாக இந்த விஷயத்தைப் போட்டும் வைத்தாள். பிக்ஷு புன்முறுவலுடன் ஏற்றுக்கொண்டவனாக அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டான். நெடுநேரம் வரையில் அங்கேயே உட்கார்ந்திருந்தாள் இந்திரை.

## 28

# குற்றமும் சிட்சையும்

குழந்தையை விரும்பி நூற்றுக்கணக்கான முயற்சிகள் செய்தும் தீர்த்த யாத்திரை செய்தும், கோயில் குளங்களையெல்லாம் வேரோடு கல்லியும், தான தருமங்கள் செய்தும் வந்த ஒருவனுக்குத் தன் மனைவி ஒரு குழந்தைக்குத் தாயாகப் போகிறாள் என்று கேட்டால் எத்தகைய ஆனந்தம் ஏற்படுமோ அத்தகைய பரமானந்த நிலையில் மூழ்கியிருந்தான் ஸம்புஷ்டாசாரியன். அசோகன் இத்தகைய நெருக்கடியான சந்தர்ப்பத்தில் அகப்பட்டுத் தவிப்பது கண்டு ஸம்புஷ்டாசாரியனும் பிக்ஷுக் கூட்டங்களும் களிவெறியால் துள்ளினர்.

பெரிய கூட்டத்தின் நடுவில் அரசருக்குரிய சிம்மாசனம் போல் உயரத்திலே இருந்த ஆசனத்தில் ஸம்புஷ்டாசாரியன் உட்கார்ந்திருந்தான். இவைகளை யெல்லாம் கவனித்தும் பொறுமையை இழக்காமல் மிகவும் அமைதியாக உட்கார்ந்திருந்தான் அசோகன். அவன் அருகே தெய்விக ஒளியே வடிவம் தாங்கி வந்ததுபோல் உட்கார்ந்திருந்தார் ஆசாரிய உபகுப்தர். குமார வீதசோகன், தன் தமையன் தானே சுமத்திக்கொண்ட இந்த வீண் விவகாரத்தின்பொருட்டு வருந்திய முகத்தினனாய் இருப்புக் கொள்ளாமல் தவித்துக்கொண் டிருந்தான்.

பிக்ஷுக் கூட்டம் சக்கரவர்த்திக்கு விதிக்கப்போகும் தண்டனையை எதிர்பார்த்திருந்தது, ஏராளமான கூட்டம். அப்படியிருந்தும் அந்த இடத்திலிருந்த அமைதி, கற்பனைகூடச் செய்யமுடியாதபடி ஊமைகளின் கூட்டம்போல் இருந்தது. அசோகனுடைய தர்மதேஜஸினால் தாக்குண்ட ஸம்புஷ்டாசாரியனது பார்வை ஏதோ மந்திரத்தால் கட்டுண்டதுபோல் காணப்பட்டது. தீர்ப்பு அளிப்பதற்காக நெடுநேரத்துக்கு முன்னமே அவன் தீர்மானித்து ஒத்திகை செய்திருந்த அந்த வாக்கியம் அவன் வாயைவிட்டு வெளியே வரக் கூசிற்று. ஒரு நொடி, தான் மிகப் பெரிய குற்றத்தைச் செய்வதாக அவனது விஷ நெஞ்சிற்கே தோன்றிற்று. ஆனாலும் அவனுடைய துர்க்

குணம் முழு வேகத்துடன் ஆதிக்கம் செலுத்தி வந்தபடியால் இந்த ஒரு சிறு நல்லெண்ணத்திற்கும் அது இடம் கொடுக்கவில்லை.

தான் தீர்ப்பைச் சொல்லிவிட வேண்டுமென்றுதான் அவன் துடிதுடித்தான். இருந்தாலும் தான் செய்யவிருக்கும் அந்தப் பயங்கரமான துரோகம், விஷம் நிறைந்த அவன் மனத்தையும் தடுமாறச் செய்தது. தீர்ப்புச் சொல்லவேண்டிய வார்த்தைகளுக்குப் பதிலாக, 'இன்னும் தர்ம குரு வரவில்லை' என்ற வார்த்தை எழுந்தது. இந்த வார்த்தைகள் அவரை அறியாமலே வெளி வந்தன. இந்த வார்த்தைகளுக்குள் வேறு ஏதாவது கருத்து அடங்கி யிருக்கிறதா என்பது அவனுக்கே தெரியாது. ஆனல் இந்த வார்த்தைகளைச் சொன்னவுடன், அசோகனது முகம் மலர்ந்ததைக் கண்டு, 'என்ன சொல்லிவிட்டோம்?' என்று அவனே சிந்திக்கலானுன்.

அசோகனது பார்வை சபையின் ஆசார வாசலின்மீதே படிந்திருந்தது. சில பிக்ஷுக்களும் வேறு சிலரும் வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருந்தார்கள். நேரம் செல்லச் செல்ல அந்தச் சலனமும் நின்றுபோய் அலையற்ற மகா சாகரம்போல் காணப்பட்டது அந்தச் சபை.

ஸம்ராட் அசோகனது கண்கள்மட்டும் அந்த முன் வாயிலை விட்டு அகலவே இல்லை. யாரை எதிர்பார்க்கிருர் என்ற விஷயம் சபையோருக்கு விளங்கவில்லை. ஸம்புஷ்டாசாரியனும் அந்த ஒரு வார்த்தையைத் தவிர வேறென்றுமே சொல்லவில்லை. கூட்டங் கூடி நெடுநேரம் ஆய்விட்டபடியால் சபையில் அமைதி குறையத் தொடங்கிற்று. அங்கிருந்தவர்கள் பொறுமையை இழந்து, தங்களுக்குள் கசமுச என்று பேசத் தொடங்கினுர்கள். அவர்களுள் ஒரு தைரியமுள்ள பிக்ஷு மிகுந்த ஆத்திரத்துடன் எழுந்து நின்று, "நடவடிக்கைகளைத் தொடங்கலாமே" என்ருன்.

இன்னது செய்வது என்று அறியாமல் தவித்துக்கொண்டிருந்த ஸம்புஷ்டாசாரியனுக்கு இது ஒரு தூண்டுகோலாக இருந்தது. திடுக்கிட்டு எழுந்து, வியாச பீடத்தில் ஏறி நின்ருன். சற்றுநேரம் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுப் பேசத் தொடங்கினுன்:

"சபையோர்களே! இன்று எங்கள் ஆசிரமத்திற்குத் தகாததும் நாங்கள் செய்ய விரும்பாததுமான ஒரு செயலை கூசிய மனத்துடன், கடமைக்காகச் செய்ய நாங்கள் இங்கே

கூடியிருக்கிறோம். இந்த மகாசபையானது மத விஷயத்தைப் பற்றி ஆராய்வதற்கான பரம பவித்திரமான ஒரு ஸ்தலம். நாங்கள் பிரத்தியக்ஷ தர்ம குருக்கள்; கௌதமபுத்தரின் பிரதிநிதிகள். நாங்கள் சொல்லும் வார்த்தைகள்தான் மதம். நாங்கள் எதைக் கட்டளையிடுகிறோமோ அது தருமத்தின் ஆக்ஞை; பகவான் ததாகதரின் ஆக்ஞை. அப்படியிருந்தும் எங்களை வீணாக அவமானம் செய்வதற்காகவும் எங்கள் அதிகாரத்தைப்பற்றித் தீர்மானிப்பதற்காகவும் அசோகன் மகாசபை கூட்ட நினைத்தது பெரிய அபசாரம். சாதாரணக் குடிமக்கள் எப்படி அரசனது உத்தரவிற்குக் கீழ்ப்படிவார்களோ, அதுபோல பிக்ஷுக்களாகிய நாங்களும் சக்கரவர்த்தியின் கட்டளைக்குக் கீழ்ப்படியவேண்டும் என்று தீர்மானித்து, நடைபெறப் போகும் மகாசபையைக் கூட்டியிருக்கிறான். சாதாரணக் குடிமக்களையும் தர்ம குருக்களாகிய எங்களையும் ஒரே நிலையில் வைப்பதானால் பௌத்த தர்மம் நிலை நிற்பது எப்படி?

"பௌத்த தர்மத்திற்காகவே சகலத்தையும் அர்ப்பணம் செய்திருப்பதாகச் சொல்லிக்கொள்ளுகிற சக்கரவர்த்தி, நடைமுறையில் இப்படி நடந்துகொண்டால்? — ஆனால் அபவித்ரமான எண்ணத்துடன் செய்யும் செயல் எங்கேயாவது நிறைவேறுவது உண்டா? சக்கரவர்த்தியின் எண்ணம் எங்களுக்கு முன்னதாகவே தெரிந்துவிட்டபடியால் ஒரே ஒரு பிக்ஷு பலியானான். இல்லாவிட்டால் எல்லாப் பிக்ஷுக்களும் பலியாகியிருப்பார்கள்" என்பதற்குள் மிகுந்த கோபத்தோடு எழுந்தார் உபகுப்தர்.

அருகேயுள்ள ஒரு உயர்ந்த பீடத்தின் மேல் ஏறி, "ஸம்புஷ்டாசாரியரே! நிறுத்தும்! நிறுத்தும்! தங்களது நாவானது மனம் போனபடி பேசுகிறபடியால் சபையின் நேமங்களையும் மீறி நான் இடையில் எழுந்து பேசுகிறேன். ஆனால் இன்றைய சபைக்கு நியமம் என்பது ஏது? சபையோர் முதலில் கூடி ஆலோசித்துத் தலைவரைத் தேர்ந்தெடுப்பது வழக்கம். ஆனால் இங்கேயோ, 'நான் தான் தலைவன்' என்று தம்பட்டம் கொட்டிக்கொண்டு பேசத் தொடங்கிவிட்டீர்கள். அதுவும் எத்தகைய பேச்சு? பௌத்த தர்மத்தையும் அசோகனையும்பற்றி வாய்க்கு வந்தபடி பிதற்றல்! இது எந்த நியமத்திலே சேர்ந்தது? இந்த மாதிரி சமயத்தில் மரியாதையாகவும் உண்மையாகவும் குற்றமற்றதாகவும் பேசுவதுதான் தங்களுக்கு அழகு என்பதைத் தெரிவிக்கிறேன். மகா சபையைக் கூட்டவேண்டும் என்ற எண்ணம் பரம பவித்திர

மானது. தர்மப் பிரசாரம் என்ருல் அது ஒரு பிழைக்கும் வழி என்று நீங்கள் நினைக்கிறீர்கள். வேலை 'செய்யாமலும் பொறுப்பில்லாமலும் சும்மாயிருக்கலாம்' என்று எண்ணிப் பலரும் தீக்ஷை வாங்கிக்கொள்ளத் தொடங்கினுர்கள். இப்படிப்பட்ட நிலையில் உண்மையான பிக்ஷுவைக் கண்டுபிடிக்க வேண்டாமா? அதன் பொருட்டுத்தான் சக்கரவர்த்தி இந்த மகாசபை கூட்ட ஏற்பாடு செய்திருக்கிருர்.

"ஜனங்களுடைய சௌக்கியத்தையும் தேசத்தின் க்ஷேமத்தையும் பெருக்குவதற்காக இது கூட்டப்பட்டதே தவிர வேறு ஒருவிதமான எண்ணமும் கிடையாது. ஸம்புஷ்டாசாரியரே! சக்கரவர்த்தியின் மீது வாய்க்கு வந்தபடி குற்றம் சுமத்திப் பாபத்திற்கு ஆளாகாதேயுங்கள்!" என்று சொல்லி உட்கார்ந்தார்.

ஸம்புஷ்டாசாரியனின் முகம் கோபத்தின் மிகுதியால் ஜொலித்தது. "ஏ உபகுப்தா! யாரைப் பார்த்துப் பேசுகிருய்? கேவலம் நீ ஒரு செட்டிப்பையன். நேற்றுவரையில் தராசைப் பிடித்துப் பணம் சம்பாதிப்பதிலேயே உன் காலத்தைக் கழித்தவன். நீ வந்து மேடையேறி எங்களுக்குத் தருமம் கற்பிக்கிருயா? நல்லது. நரகத்தின் எண்ணெய்க் கொப்பறையில் விழுந்தும் ஒன்றும் நேரவில்லை என்று சக்கரவர்த்தியின் கண்களிலே மண்ணைத் தூவி, ஆசாரியன் என்ற உயர்ந்த பதவியை உனக்கு நீயே சூட்டிக்கொண்டிருக்கிருய். நீ எங்கள் நடுவில் உட்காருவதற்குக்கூடத் தகுதியற்றவன். ஆகையால் எழுந்திரு. இங்கிருந்து எழுந்து போ. வெளியே போ!" என்று சீறினுன் ஸம்புஷ்டாசாரியன்.

அசோகனது முகம் கொழுந்துவிட்டெரியும் தீயைப்போல் சிவந்தது. "ஸம்புஷ்டாசாரியரே! ஆசாரிய உபகுப்தரின் அதிகாரத்தைப்பற்றி நீங்கள் பேசுவதை நான் ஒருகாலும் பொறுக்கமாட்டேன். என்னைப்பற்றியோ என்னுடைய கீர்த்தியைப் பற்றியோ எதுவேண்டுமானுலும் பேசுங்கள். ஆனுல் ஆசாரியரைப்பற்றிப் பேசினுல் பொறுக்கமாட்டேன்!" என்று கம்பீரமாகச் சொன்னுன்.

"ஆசாரியனு? யார் அது ஆசாரியன்? அவனை ஆசாரியன் என்று சொல்லுகிறவர்கள் யார்? ஏதோ ஒரு செப்பிடுவித்தை காண்பிப்பதுபோல் கொதிக்கும் எண்ணெய், தன்னை ஒன்றும் செய்யவில்லை என்று ஜாலம் செய்த ஒரு சிறு செட்டிப்பையன் எப்படி ஆசாரியனுனுன்?" என்ருன் ஸம்புஷ்டாசாரியன்.

"ஸம்புஷ்டாசாரியரே! நான் இன்னும் சக்கரவர்த்தியாகவே தான் இருக்கிறேன் என்பதை மறந்து போய்விட்டீர்போல் இருக்கிறது. எதுவரையில் என் தோள்களில் பலம் இருக்கிறதோ அதுவரையில் யார் அவரைப்பற்றி அவதூறு சொன்னபோதிலும் அவர்களை எதிர்த்தே தீருவேன். இன்றைத் தினம் கூடியிருக்கும் சபை உபகுப்தரைப்பற்றி ஆராய்வதற்கல்ல" என்று சொல்லி விட்டு உட்கார்ந்தான்.

மிகவும் கவலைதோய்ந்த முகத்துடன், "அண்ணா! இன்று பிராயச்சித்தத்தை நிர்ணயிக்கும் பொறுப்பை இந்த ஸம்புஷ்டா சாரியன் கையிலா ஒப்பிக்கிறீர்கள்?" என்று நாத் தழுதழுக்கச் சொன்னான் வீதசோகன். துக்க மிகுதியினால் அவன் குரல் கம்மிற்று.

"குமாரா! தர்மகுருவான என்மேல் உனக்கு என்ன சந்தேகம்? நானே உங்கள் குரு. பிராயச்சித்தத்தைப்பற்றி நிச்சயம் செய்யும் உரிமை என்னுடையது. இங்கே கூடியிருக்கிற எல்லோரும் ஒரே மனதாக என்னையே தலைவனாக ஏற்றுக்கொண்டு என் சொல்படி நடப்பதென்று முடிவு கட்டிவிட்டார்கள். நானே வேண்டாவெறுப்புடனும் மனக் கசப்புடனும் கடமையை நிறைவேற்றும் பொருட்டு இந்தப் பதவியை வகிக்கவேண்டி யிருக்கிறது" என்று வெகு அமைதியாகச் சொன்னான் ஸம்புஷ்டாசாரியன்.

ஸம்புஷ்டாசாரியனது நயவஞ்சக வார்த்தை வீதசோகனது கோபத்தைப் பின்னும் அதிகமாக்கியது. பிடரியைச் சிலிர்த்து எழும் சிங்கம்போல் எழுந்து நின்று, "உங்களைத் தர்ம குரு என்று யார் சொன்னது? தலைமை வகிக்கும்படி தேர்ந் தெடுத்தது யார்? எவன், காலில் நகம் முளைத்த நாள்முதல் ராஜ குடும்பங்களில் கலகம் மூட்டுவதிலேயே காலம் கழிக்கிறானோ, அகாரணமாகச் சண்டையை உண்டுபண்ணி அதைக் கண்டே ஆனந்தப்படுகிறானோ அப்படிப்பட்ட பேயனுக்குத் தர்மா சாரியன் என்ற பெயர் யார் கொடுத்தது? உள்ளபடி யோசித்துப் பார்த்தால் இங்கே கூடியிருக்கின்ற இத்தனை ஆயிரம் மனிதர்களுள் உபகுப்தர் ஒருவர்தாம் தர்மாசாரியர் என்னும் பட்டத்திற்கு உரியவர்" என்று உரத்த குரலில் சொல்லிவிட்டு, அசோகரிடம் திரும்பி, "சக்கரவர்த்தி! இன்றைத் தீர்மானத்தைச் செய்யத் தகுந்தவர் உபகுப்தனார்தாம். அதைவிடுத்து ஸம்புஷ்டாசாரி யனிடம் கொடுப்பது தகாது" என்றான்.

ஸம்புஷ்டாசாரியன் அதற்குமேல் பேச இடங்கொடாதவனாக, "குமாரா! என்னுடைய தலைமையின்கீழ் எத்தனையோ பிராயச்சித்தங்கள் நடந்திருக்கின்றன. அவைகளைச் செய்ததும் சக்கரவர்த்திதான். இன்று தன்மேல் வந்திருக்கும் குற்றத்திற்கு மட்டும் நான் பிராயச்சித்தம் விதிக்கக் கூடாது என்றால் பிரஜைகள் என்ன சொல்லுவார்கள்? அரசனுக்கு ஒரு நீதி, குடிகளுக்கு ஒரு நீதியா? அது ஒருநாளும் நடவாது. சக்கரவர்த்தி, பொறுமையுடன் ஒப்புக்கொள்வாரென்று நம்புகிறேன்" என்று அமர்த்தலாகச் சொன்னான்.

வீதசோகனை அருகே வரும்படி அழைத்து, "குமாரா! ஸம்புஷ்டாசாரியருடைய அதிகாரத்தைப் பற்றியும் வேறு எதைப் பற்றியும் இன்று நான் பேசுவதில்லை என்று நிச்சயம் செய்திருக்கிறேன். மேலும் இங்கே வந்திருக்கும் குடிகள் ஒருமுகமாக இவர் சொல்லுவதையே ஒப்புக்கொண்டாலும் சரி, அல்லது அவர்களாகவே யோசித்து வேறுவிதமான தண்டனை கொடுக்க வேண்டுமென்று சொன்னாலும் சரி; நான் ஒப்புக்கொள்வதாகச் சொல்லிவிட்டேன்" என்றான் அசோகன்.

அசோகன் தன் தீர்மானத்தை விட்டு அசையமாட்டானென்று தெரிந்ததும், வீதசோகன் இடிந்து உட்கார்ந்துவிட்டான். ஸம்புஷ்டாசாரியனின் முகம் மலர்ந்தது. சக்கரவர்த்தி இப்படிச் சொன்ன பிறகு உபகுப்தனாவது வீதசோகனாவது தன்னை ஒன்றும் செய்ய முடியாது. தேவனாம்பிரிய ஸம்ராட் அசோகனது உயிர் தன் கைப்பிடிக்குள் அடங்கிவிட்டது என்று நினைத்தவனாக மிகுந்த ஆவேசத்துடன் ஸம்புஷ்டாசாரியன் பிக்ஷுக்களைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினான்.

"பிக்ஷுக்களே! சக்கரவர்த்தி எந்தவிதமான குற்றம் செய்திருக்கிறார் என்று உங்களுக்குத் தெளிவாகத் தெரியாது. ஏதோ ஓரளவு தெரியும். இப்பொழுது எல்லாவற்றையும் உடைத்துச் சொல்லிவிடுகிறேன். உபகுப்தரின் நேசம் ஏற்பட்டது முதல் பௌத்த தர்மத்தின் மேலும் அசட்டை ஏற்பட்டுவிட்டது சக்கரவர்த்திக்கு. மகாசபை கூட்டி எல்லாக் குருமார்களையும் ஒழித்துவிட்டு, உபகுப்தரின் கையில் பௌத்த தர்மத்தின் கொடியைக் கொடுத்து, அரசன் இஷ்டப்படி மதப்பிரசாரம் செய்ய வேண்டும் என்று இந்த இருவரும் கூடிச் சதிசெய்வதாகத் தெரிகிறது. அப்படி இல்லாவிட்டால் இந்த மகாசபை கூட்ட

வேண்டிய அவசியம் என்ன? எங்களில் யாராவது ஒருவர் ஸ்நான பான பூஜை புரஸ்காரங்களை விட்டுவிட்டு ஒழுங்கீனமாகத் திரிகிறோமா? நான்கு மாதத்திற்கு முன் ஒருமுறை பூஜை செய்தவர்கள்கூட இப்பொழுது ஆறு காலமும் பூஜை செய்கிறார்கள். அப்படி இருக்க எங்களைப் பரிசோதிப்பதற்காக மகாசபை கூட்டியிருக்கிறார்கள் என்றால் அதன் உத்தேசந்தான் என்ன என்பதை நீங்களே ஆலோசித்துக்கொள்ளலாம்" என்று சொல்லித் தன் பேச்சைச் சபையோர்கள் எப்படி ஏற்றுக்கொள்கிறார்கள் என்று அறிய விரும்பியவனாக சபை முழுவதும் ஒருமுறை பார்த்தான் ஸம்புஷ்டாசாரியன்.

வீதசோகன் கொதித்து எழுந்தான். "ஸம்புஷ்டாசாரியரே! எவன் ஸ்நானபானாதிகளையும் பூஜைகளையும் ஒழுங்காகச் செய்யவில்லை என்று கேட்கிறீர்கள்? ஸ்நான பானங்களினால் மட்டும் ஒருவன் மேன்மை அடைவதென்றால் மீன், தவளை முதலியவைகள் இதற்குமுன் தர்மகுரு ஸ்தானத்தை அடைந்திருக்கலாம். கேவலம் பட்டினி கிடந்து உடலை வாட்டுவதனாலேயே மேன்மை ஏற்படுகிறதென்றால், பஞ்சத்தில் அடிபட்டவர்களும் நோயாளிகளும் தர்மகுரு ஆகலாமே! இதென்ன வீண் வார்த்தை! எவன் பூஜையை ஆறுகாலம் செய்தாலென்ன? அகமும் புறமும் தூய்மை கெடாமல் இருப்பவன்தான் பிக்ஷு. ஏ! ஸம்புஷ்டாசாரியரே! ஸம்புஷ்டாசாரியரைச் சேர்ந்த பிக்ஷுக்களே! அஹிம்சையையே அனுசரிக்க வேண்டிய நீங்கள், மந்திரி ராதாகுப்தரைக் கொலைசெய்யச் சித்தமாயிருந்தீர்கள்! இந்த ஒரு செயலிலிருந்தே தெரியவில்லையா, உங்கள் தர்மம் எப்படி நாளுக்கு நாள் வளர்ந்திருக்கிறதென்று? எதை எடுத்தாலும் ஒரே கபடமும் மோசடியும்! பௌத்ததர்மம் என்கிற இந்த மரக்கலத்தை விஷப்புழுக்களாகிய நீங்கள் நாற்புறமும் பொத்தலாக்கிவிட்டீர்கள். மூழ்கிப் போகவேண்டியதுதான் என்ற நிலைக்கு வந்துவிட்டது. அந்தக் கப்பலை எப்படியாவது கரை சேர்க்கவேண்டும் என்பதுதான் சக்கரவர்த்தியின் நோக்கம். அதன் பொருட்டுத்தான் கூட்டப்பட்டது மகாசபை. இதை எப்படியாவது விதண்டாவாதம் செய்து நடைபெற ஒட்டாமல் செய்துவிட வேண்டும் என்று நீங்கள் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறீர்கள். ஆனால், அப்படி உங்கள் இஷ்டம்போல் பிறரை ஆட்டிவைத்த காலம் மலையேறிவிட்டது. இனி இந்த மௌரியகுலம் கேவலம் மொட்டைத் தலையர்களின் சொல்படி ஆடாது. பிறருக்கும் ஓரளவு விஷயம் தெரியும் என்பதை நினைத்துப் பேசுங்

கள். சக்கரவர்த்தியை விசாரிக்க உண்மையான தர்மகுருவுக்கு அதிகாரம் உண்டே தவிர, கேவலம் கொலைகாரனுக்கு அதிகாரம் இல்லை" என்று கர்ஜித்தான்.

வீதசோகனுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு அசோகன் வெலவலத்துப்போனான். அவன் பேச்சிலே தொனித்த ஆவேசமும் கோபமும் வர்ணிக்க இயலாததாக இருந்தது. சபை முழுவதும் சற்றுநேரம் வைத்தகண் வாங்காமல் வீதசோகனது வாயையே பார்த்தது. ஸம்புஷ்டாசாரியன் மட்டும் கொஞ்சமும் கலங்கவில்லை. அதே நிலையில் நின்றிருந்தான்.

ஸம்புஷ்டாசாரியனது கபட நாடகங்கள் தெரிந்தது முதல், குமார வீதசோகனுக்கு அவனைக் காண்பது விஷ சர்ப்பத்தைக் காண்பதுபோல் அருவருப்பைக் கொடுத்தது. தன் தமையன் மேல் இருந்த வாஞ்சையினால் உலகமே திரண்டு எதிரே வந்தாலும் போர்புரியச் சித்தமாயிருந்தான் அவன். வீதசோகனது வார்த்தைகளினால் சபையோர் சற்றுத் திகைத்ததைத் தவிர வேறு ஒருவிதமான பலனும் ஏற்படவில்லை. இருந்தாலும் தன்னால் இயன்றவரை ஒருகை பார்த்தே விடுவது என்ற தீர்மானத்துடன் இருந்தான் வீதசோகன்.

உண்மையிலேயே ஸம்புஷ்டாசாரியனுக்கும் உள்ளூற நடுக்கந்தான். வீதசோகன் இருந்த நிலையில் அவன் ஆவேசமும் வேகமும் எந்த எல்லைவரையில் செல்லும் என்பதை அவனால் நிர்ணயிக்க முடியவில்லை. 'மேலும் தீர்மானத்தை நீடிக்கச்செய்வது பிசகு. மேலும் மேலும் வீதசோகன் பேசத்தொடங்கினால் அவன் வாக்குவன்மையினாலும், உண்மையை அவன் கூசாமல் எடுத்துச் சொல்லுவதனாலும் பொதுஜனங்களின் மனம் மாறிவிடக்கூடும்' என்று எண்ணியவனாக, அவனுக்குப் பேச இடங்கொடாமல் தீர்ப்பைச் சொல்லி முடித்துவிட வேண்டும் என்ற துடிதுடிப்புடன் அவன் வியாஸ பீடத்தில் ஏறினான்.

"மகாஜனங்களே! நெடுநேரம் விவாதம் செய்வதில், பொழுது போவதைத் தவிர, வேறொன்றும் இல்லை என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. இந்த மாதிரியான செயல்களை உடனுக்குடனே தான் செய்துவிட வேண்டும். காலதாமதம் செய்வதால் நியாயம் வழங்குகிறவனுக்குத் தயை ஏற்படலாம். அதன் பயனாக நடுநிலைமை தவறினாலும் தவறலாம். தர்மசம்பந்தமான விஷயத்தில் குற்றவாளியிடம் தயவு காண்பிப்பதற்கு இடமே இல்லை. ஆகவே

மனம் கசந்து செய்யும் இந்த வேலையைச் சீக்கிரமே செய்து விடுகிறேன். சக்கரவர்த்தி உங்கள் எல்லோரிடமும் அன்பு பூண் டவர். எனக்கும் அவரிடம் எல்லையற்ற பேரன்பு உண்டு. ஆனால் அப்படிப்பட்ட நானே பிராயச்சித்தம் செய்விக்கவேண்டி யிருக் கிறதே என்றுதான் துக்கப்படுகிறேன். இத்தகைய துர்ப்பாக்கியம் எனக்கு நேரவேண்டாம்" என்று முதலைக் கண்ணீர் வடித்த வனாக, "இப்பொழுதுந்தான் என்ன...? என் மனம் பெரும் போராட்டத்தினால் தடுமாறுகிறது. ஆசாரிய முங்கலீபுத்திர திஷ்யரைப்போன்றவர்கள் இங்கே இருந்தால், இந்தத் தர்ம சங்கடமான நிலையில் நான் தவிக்கும்படி நேரிட்டிராது. ஆனால் அதைப்பற்றிப் பேசிக் காலதாமதம் செய்வதில் லாபம் இல்லை. ஆகவே சக்கரவர்த்திக்கு எத்தகைய தண்டனை விதிக்க வேண்டும் என்பதுபற்றிச் சொல்லுகிறேன்" என்றான் ஸம்புஷ்டாசாரியன். இடையிலே பேச்சின் ஸ்வரம் உயர்ந்து, 'சொல்லுகிறேன்' என்று அவன் சொன்ன குரல் அந்தச் சபை முழுவதும் சிலையோ டிற்று.

குமார வீதசோகன் கண்களாலேயே எரித்துவிடுபவன்போல் ஸம்புஷ்டாசாரியனது பாம்புக் கண்களையே பார்த்துக்கொண் டிருந்தான். அசோகனது பார்வை இன்னும் ஆசாரவாசலின்மீது தான் இருந்தது. இவ்வளவு பரம சங்கடமான நிலையிலும் அவன் அமைதியாக உட்கார்ந்திருந்தான். எனினும் அசோகனது மனம் மட்டும் கட்டுக்கடங்காமல் பதறிக்கொண் டிருந்தது. போலி ராஜ குமாரனது எழில் முகம் அவன் மனக் கண்களின் முன் தோன்றித் தோன்றி மறைந்துகொண் டிருந்தது. இந்திரையின் மருண்ட கண்கள் அவனை நோக்கி எதையோ வேண்டி இறைஞ்சுவது போலவும் தான் அவளுக்கு அளிப்பது போலவும் தோன்ற, பெருமூச்செறிந்தான்.

ஸம்புஷ்டாசாரியன் தொண்டையைக் கனைத்துக்கொண்டு "ஏ! மௌரியகுல அரசனே! உன்னைப்போன்ற ஒரு கொலை காரன் இந்த உலகத்தில் இருப்பது நியாயமில்லை. தர்ம குருவையே கொன்ற குருத்துரோகி நீ! ஆகவே எந்தக் கத்தி யினால் தர்மகுருவாகிய பிக்ஷு கொல்லப்பட்டாரோ அதே கத்தியினால் உன்னைச் சிரச்சேதம் செய்யவேண்டும் என்று நான் தீர்ப்புச் சொல்லுகிறேன். சக்கரவர்த்தி என்ற பதவியினால் இதை நீ தடுக்க முயன்றால் உன் புகழுக்குக் களங்கம் ஏற்படும்!" என்றான்.

இந்தச் சப்தம் எதிரொலிக்குமுன் அதாவது ஸம்புஷ்டாசாரியன் பேசிக்கொண்டே இருக்கும்பொழுது மிகுந்த தேஜஸ்வியான ஒரு தபஸ்வி அந்த மண்டபத்துள் நுழைந்து, வியாஸபீடத்தை நோக்கி வந்தார்.

"ஆசாரிய முங்கலீபுத்திர திஷ்யருக்கு ஜே!" என்ற ஜய கோஷம் அந்த மகாசபையையும் மீறி வான முகட்டையும் அளாவிற்று. தடதடவென்று எழுந்து அவர் பாதங்களில் பணிந்தான் அசோகன்.

"தீர்க்காயுஷ்மான் பவ" என்று ஆசீர்வதித்தார் திஷ்யர். சற்று நேரத்திற்கு முன் ஸம்புஷ்டாசாரியன் மரணதண்டனை அளித்த சொற்கள் செவிகளில் விழுந்த சிலர் முங்கலீபுத்ரரது ஆசிமொழியைக் கேட்டு ஒருவரை யொருவர் பார்த்து விழிக்கலாயினர்.

தண்டனை விதிக்கும்பொழுது ஸம்புஷ்டாசாரியனது முகத்திலே தோன்றிய பொருமையைக் கண்ட மற்றப் பிக்ஷுக்கள், 'இதென்ன! இப்படிப்பட்ட கல்நெஞ்சனு இவன்!' என்று முணுமுணுத்தனர். ஏதாவது ஒரு காரணம் கற்பித்து மகாசபையைக் கலைத்துவிடுவான் என்று மட்டும் அவர்கள் நினைத்தார்களேயன்றி, இப்படிப்பட்ட விபரீதமான தண்டனையை, அதிலும் அசோக சக்கரவர்த்திக்கே மரண தண்டனையை அவன் விதிக்கக் கூடுமென்று அவர்கள் கனவிலும் எண்ணவில்லை.

உண்மையிலேயே அந்தப் பிக்ஷுக்களுக்கு அசோகனிடம் அன்பு உண்டு. தவிரவும் சக்கரவர்த்தி, அதிலும் பௌத்த தர்மங்களுக்கே உறைவிடமான அவருக்கு இவ்வளவு குரூரமான தண்டனை விதித்தது, அவர்கள் மனத்தையே உருக்கிவிட்டது. மறுபடி மகாசபை கூட்டினுலும் கூட்டட்டும். தாங்கள் மறுபடி இல்லறத்தை மேற்கொள்வதாலுைம் சரி; அசோகனது கால் நகத்திற்குக்கூட ஒருவிதமான தீங்கும் வராமல் பாதுகாத்தே தீருவோம் என்ற உறுதியான எண்ணம் அந்த நெருக்கடியான சமயத்திலே அவர்களிடையில் தோன்றிற்று. இதற்குள் முங்கலீபுத்ர திஷ்யரின் கம்பீரமான குரல் கேட்டது.

"மகாஜனங்களே! இன்று நீங்கள் மிகவும் பயங்கரமான ஒரு பாதகச் செயலைச் செய்ய இருந்தீர்கள். உங்களை உயிராகவும் தன்னை உடலாகவும் கருதிப் பணிசெய்யும் சக்கரவர்த்தியை, பாரத பூமிக்கே ஒரு திலகம்போல் இருக்கும் மௌரிய குலத்தின்

மணிவிளக்கை, பகவான் ததாகதரது கொள்கைகளைக் கடல் கடந்து பிரசாரம் செய்விக்கும் உத்தமனை, வீண்பழி சுமத்தி, நாசம் செய்ய முனைந்தீர்கள். ஸம்புஷ்டாசாரியனும் அவனைச் சார்ந்தவர்களும் மறைமுகமாக இத்தகைய கொடுஞ் செயல்களைச் செய்ய முயல்கிறார்கள் என்ற விஷயம் எனக்கு முன்னதாகவே தெரியும். உலகத்திலிருந்து எல்லாவற்றையும் அநுபவித்துப் பார்த்து, அதில் சுவையில்லை என்று துறப்பவன்தான் துறவி. ஆனால் நீங்களோ தர்மகுருவாக வேண்டும் என்கிற ஒரே நோக்கத் தோடு துறவறத்திலே புகுந்தவர்கள். இது உங்கள் குற்றமல்ல. ஆகவே உங்களைச் சீர்திருத்த வேண்டுமென்ற எண்ணத்துடன் மகாசபை கூட்டும்படி அசோகனுக்கு நான்தான் கட்டளை யிட்டேன். என்னுடைய அழைப்பிற்கு இணங்கியேதான் நீங்கள் எல்லோரும் இவ்விடம் வந்திருக்கிறீர்கள். இருந்தாலும், தர்மத்தைப் பரீட்சிப்பதற்கே இந்த மகாசபை என்றதால் உங்களுக்கு வெறுப்பு ஏற்பட்டது. இந்த மகாசபையை ஒழிக்கவே ஸம்புஷ்டாசாரியனைப்போன்ற ஒரு விஷப் பாம்பைத் தலைவன் ஆக்கிக்கொண்டீர்கள். மேலும், சிறந்த, பவித்திரமான, ஒரு செயலைக் கெடுத்துவிடுவது என்றும் நிச்சயம் செய்திருந்தீர் கள். நீங்கள் உண்மையான பிக்ஷுக்களாக இருந்தால், இந்த மகாசபையை ஏன் வெறுக்கவேண்டும்? நல்ல நெறியில் செல்லு பவர்களுக்குத் தங்கள் யோக்கியதையை யார் பரீட்சித்தால் என்ன?

"மகாஜனங்களே! இங்கே, இன்று கூடியிருப்பவர்களில் பெரும்பான்மையோர் கபட பிக்ஷுக்கள்தாம். 'பௌத்ததர்மம் என்றால் என்ன? அதன் உயர்ந்த கொள்கைகளும் தத்துவங் களும் என்ன?' என்று கேட்டால், விடைசொல்லத் திறமை யற்றவர்களெல்லாம் பிக்ஷுக்கள் என்று பெயர்தாங்கி நடிக்கிறார் கள். அவர்களுள் புலன்களை வென்றவர்கள் மருந்துக்கும் இல்லை. எல்லாம் வெளிமயக்கு. வெறும் போலி பிக்ஷுக்களே! நீங்கள் என்மேல் கோபப்படுவதில் பலன் இல்லை. நெஞ்சைத் தொட்டுச் சொல்லுங்கள். உங்களில் எவன் உண்மையான துறவி......? உங்களுடைய விஷமங்கள் பரதகண்டம் முழுவதும் புல்லுருவி போல் பரந்து கிடக்கின்றன. இதனால் பௌத்ததர்மத்தின் அடிப் படையான அஹிம்ஸை ஒழிந்து ஹிம்ஸை மேலிட்டுவிட்டது. அழகிய நல்ல மரத்திலே புல்லுருவி பாய்வானேன்? அஹிம்ஸை, நடைமுறையில் பயனற்றுப் போவானேன் என்று நினைத்தேதான் இந்த மகாசபையைக் கூட்டினான் அசோகன். தன்னுடைய

தர்மகுருதான் இந்த அட்டூழியங்களுக்கெல்லாம் ஆணிவேர் என்று அவனுக்குத் தெரிந்துவிட்டது. நிஜமான தர்மகுருவைக் கண்டு பிடிக்கவேண்டும், என்ற எண்ணம் தோன்றிய உடனேயே நான் சபை கூட்டும்படி உத்தரவிட்டேன். மூர்க்கனான ஒரு வீரன், தன் அசட்டுத்தனத்தினாலும் கர்வத்தினாலும் ஒரு பிக்ஷுவைக் கொன்றுவிட்டானென்றால், அதன்பொருட்டுச் சக்கரவர்த்திக்கே தண்டனை விதிப்பது எப்படி நியாயமாகும். சக்கரவர்த்தியின் கட்டளையில் பிக்ஷுவின் கொலையைப்பற்றி ஏதாவது இருந்ததா? அப்படியிருந்தால் ஒரு பிக்ஷுவை மட்டும் கொன்றிருப்பானா? இந்த விஷயத்தில் சக்கரவர்த்தி குற்றவாளியா, இல்லையா? என்று தீர்மானிப்பதற்குத் தர்மகுருதான் வேண்டும் என்பதில்லை. அதற்கு, அமைதியான மனமும் பகுத்தறிவும் உள்ள ஒரு சாதாரண மனிதனே போதும். நீங்கள், மகாசபையின்மேல் உங்களுக்கு ஏற்பட்ட வெறுப்பை ஒதுக்கி வைத்துவிட்டு, அமைதியாக யோசித்துப் பார்த்தால், சக்கரவர்த்தி களங்கமற்றவர் என்பது உங்களுக்குத் தெளிவாகத் தெரியும். காமாலைக் கண்ணுக்குக் கண்டதெல்லாம் மஞ்சள் என்பதுபோல் இருக்கிறது உங்கள் மனநிலை. இப்பொழுது இந்த விஷயத்தை அமைதியோடு நீங்களே யோசித்துப் பாருங்கள். ஆற அமர யோசித்து அரசன் குற்றவாளியா? அல்லவா? என்று சொல்லுங்கள்" என்று நிறுத்தினார் திஷ்யர்.

ஏற்கனவே ஸம்புஷ்டாசாரியனது விஷவார்த்தைகளினால் வெறுப்புற்றிருந்த பிக்ஷுக்களின் முகம் இவரது வார்த்தைகளினால் மலர்ந்தது. எல்லோரும் ஒருமுகமாக, "ஆசாரிய? சக்கரவர்த்தி குற்றமற்றவர். பிக்ஷுவின் கொலை, கேவலம் வாய்ச்சண்டையால் வந்த வினை. இதைப்பற்றி அவருக்கு ஒன்றுமே தெரியாது. ஸம்புஷ்டாசாரியனது வாக்கில், வெறும் பொய்யும் பொறாமையும் நிறைந்திருக்கின்றன என்பது எங்களுக்கு விளங்கிவிட்டது. அவர் பேச்சை நாங்கள் ஒப்புக்கொள்ளவில்லை" என்று சொல்லி யவர்களாக, "தேவனும்பிரிய ஸம்ராட் அசோகர் நீடூழி வாழட்டும்!" என்று கோஷித்தார்கள். அந்த ஜயகோஷம் சபை முழுவதும் எதிரொலித்தது.

"பிக்ஷுக்களே! சரியான சமயத்தில் தகுந்த வார்த்தைகளினால் உங்கள் உள்ளக் கிடக்கையைத் தெரிவித்துவிட்டீர்கள். மாசு மருவற்ற அசோகனது ஸத்கீர்த்திக்கு ஒரு நொடியிலே களங்கம் வர இருந்தது. நம்முடைய பாக்கியவசத்தினால் அந்த வீண்பழி

நீங்கிவிட்டது. அவர் குற்றமற்றவர் என்று மறுபடி நானும் தெரிவிக்கிறேன்" என்று சொல்லியவராக ஆசனத்தில் அமர்ந்தார் முங்கலீபுத்ர திஷ்யர்.

ஸம்புஷ்டாசாரியனுக்குச் சப்த நாடிகளும் ஒடுங்கிவிட்டன. பல்லைப் பிடுங்கிய பாம்புபோல் தலைகுனிந்து உட்கார்ந்திருந்தான்.

உரிய நேரத்தில் வந்து, தனக்கு ஏற்படவிருந்த மாபெரும் அபகீர்த்தியிலிருந்து தன்னைத் தப்புவித்ததன் பொருட்டு நன்றி செலுத்த விரும்பியவனாக அசோகன் எழுந்து பேசலானான்.

"ஆசாரியரே! நீங்கள் மிகவும் சரியான சமயத்தில் வந்து எல்லையற்ற உபகாரம் செய்திருக்கிறீர்கள். தண்டனை அடைவதை நான் பொருட்படுத்தவில்லை. தர்மகுருவைக் கொன்றான் என்னும் பழிச்சொல்தான் எனக்கு மிகுந்த வேதனையை உண்டுபண்ணி விட்டது. இந்த வீண்பழியிலிருந்து நீங்கள் என்னை மீட்டீர்கள். இனி மகாசபையைக் கவனிக்கத் தங்களது ஆசியால் இரு மடங்கு உற்சாகம் வந்துவிட்டது" என்று மிகவும் ஆனந்தத்துடன் நன்றி ததும்பும் குரலில் கூறினான்.

"சக்கரவர்த்தி! என் கடமையைத்தான் நான் செய்தேனே தவிர, வேறில்லை. உன்னைப்போன்ற ஸத்புத்ரனுடைய நட்புக் கிடைத்ததையே பெருஞ் செல்வமாக மதிக்கிறேன். வந்தனம் அளிக்க விரும்பினால் அதற்கு உரியவன் இதோ நிற்கிறானே இந்தப் பிக்ஷுதான்" என்று சொன்னார்.

"அசோகன் அந்தத் தர்மாநுஜனைப் பார்த்து, "அப்பா! நீ யாராக இருந்தாலும் சரி; சரியான சமயத்தில் வந்து என் உயிரைக் காப்பாற்றினாய் என்று சொல்லமாட்டேன். என் மானத்தைக் காத்தாய். நீ செய்திருக்கும் இந்த அருமையான உதவிக்குக் கைம்மாறு செய்வது என்பது இயலாது. இருந்தாலும் என்னால் கொடுக்கக்கூடிய ஒரு பொருளை நீ விரும்பலாம். உனக்கு என்ன வேண்டும்? கூசாமல் கேள்" என்று அன்பும் பரிவும் கலந்த குரலில் சொன்னான்.

"அசோக! இந்த இளைஞன் அதி மேதாவி! நற்குணம் உள்ளவன். சீலம் உள்ளவன். நல்ல குலம். உனக்கு நண்பனாகத்

தகுந்தவன். ஆகவே உன்னுடன் அரண்மனைக்கு அழைத்துச் செல். மகாசபை கூடி, விஷயங்கள் ஒழுங்கான பிறகு, இவன் யார்? இவனுக்கு எத்தகைய வெகுமதி கொடுக்கலாம் என்று யோசிப்போம்" என்றார் திஷ்யர்.

சபை கலைந்து வெளியே வரும்போது உபகுப்தர் முங்கலீ புத்ர திஷ்யரைப் பார்த்து, "மகராஜ்! இந்த இளைஞன் யாரென்று உங்களுக்குத் தெரியவில்லையா? வேணு வனத்தில் என்னுடன் இருக்கும் கலிங்க நாட்டு இளங்கோ மகேந்திரன்" என்றார்.

திஷ்யர் அதற்குச் செவி சாய்க்காமலே, உபகுப்தரோடு ரகசியமாக இரண்டொரு வார்த்தைகளைச் சொன்னார்.

"இவன் உங்கள் வேணு வனத்தில் இருக்கும் மகேந்திரன் அல்ல. ஆனால் இவனும் அவனும் ஒரே சாயலாக இருக்கிறார்கள். காரணம் கூற முடியாத சிருஷ்டியின் ரகசியங்களுள் இதுவும் ஒன்றுபோல் இருக்கிறது" என்றான் அசோகன்.

அசோகனைப் பின்தொடர்ந்து பிக்ஷு உடையுடனேயே போனான் தர்மாநுஜன். அசோகனுக்கு இன்னது செய்வது என்று விளங்கவில்லை. எதற்கும் ஒரு தந்திரம் செய்து பார்ப்போம் என்று நினைத்தவனாய், வேணு வனத்தில் உள்ள போலி ராஜ குமாரனை அரண்மனைக்கு வந்து போகும்படி செய்தி அனுப்பி னான்.

ஏழாம் நாள் காலை. பாடலீபுரம் முழுவதும் ஒரே கோலா கலத்தில் மூழ்கி இருந்தது. தேச தேசங்களில் இருந்தெல்லாம் அந்த மகா சபையைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலுடன் பலர் வந்து குழுமி இருந்தார்கள். ஏற்கனவே அழகுக்கு உறைவிடமாக இருந்த அந்த நகரம், இப்பொழுது ஏதோ ஒரு பெரிய விழாவின் பொருட்டு அலங்கரிக்கப்பட்டு, மணமகனை எதிர் பார்த்து நிற்கும் புது மணப்பெண்போல் பொலிந்தது.

அகன்ற மணல்வெளி, கங்கா நதியை அடுத்த அந்த மணல் வெளியிலே மிகப் பெரிய பந்தல். அதிலேதான் மகா சபை கூடவேண்டும். அதில் முதல் விஷயம் பிக்ஷுக்களின் பரீக்ஷை. ஒரு விதமான கலவரம் இன்றி வெகு அமைதியாகவும், ஒழுங் காகவும் நடைபெற்றன நிகழ்ச்சிகள். துறவறத்தில் நிலை நிற்க

முடியாதவர்கள் இல்லறத்தை மேற்கொள்ளுவதென்றும் முடிவு ஆயிற்று.

அவர்களுள் சிலரைத் தேர்ந்தெடுத்து, எவர்கள் கடல் கடந்து செல்வதென்றும், எவர்கள் பாரத நாட்டிலும் சிங்களத்திலும் பிரசாரம் செய்வதென்றும் தீர்மானிக்கப்பட்டது. இப்படி மிகவும் சிறந்த முறையில் மகாசபை முடிந்தது.

ஆனால் இந்த மகாசபையினால் உண்மையில் வருந்தியவர்கள் ஸம்புஷ்டாசாரியனும் அவனைச் சேர்ந்த சிஷ்ய கோடிகளும் தான். இந்த மகாசபையில் போலி பிக்ஷுக்களுக்குச் சரியான சம்பாவனை கிடைக்குமென்று தெரிந்திருந்தபடியால் தர்மாநுஜனை முன்னதாகவே பிக்ஷு வேஷத்தைக் கலைத்துவிடும்படி எச்சரித்தார் உபகுப்தர். ஆகவே அவன் மகா சபையில் சாதாரணமான ஒரு மனிதனாக, அசோகனது விருந்தாளியாக வந்திருந்தான்.

பௌர்ணமியை அடுத்த பின்னிலாக் காலமாகையால் அப்பொழுதுதான் சந்திரன் மெல்ல மெல்ல வான வீதியை எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தான். நடு நிசி. பகலில் மகா சபை நடந்ததன் பயனாக வெகு சீக்கிரமே ஊர் ஓசை அடங்கிவிட்டது. புத்த சைத்தியங்களிலும் விஹாரங்களிலுங்கூட மனிதர் நடமாட்டம் ஓய்ந்து அமைதியே குடிகொண்டிருந்தது. அந்த நள்ளிரவில், கங்கா தீரத்திலே உள்ள ஒரு சிறு மேட்டில் மூன்று ஜீவன்கள் மட்டும் விழித்திருந்தன. மூவரும் யார் என்பதைச் சொல்லவேண்டியதில்லை. ஸம்புஷ்டாசாரியனது முகத்திலே சவக்களை தாண்டவமாடிற்று. தான் இதுவரையில் கட்டிய மனக்கோட்டைகள் எல்லாம் எதிர்பாராத விதமாக ஒரு நொடியில் தூள் தூளாகச் சிதறியதை நினைக்க அவன் நெஞ்சு குமுறிக் குமுறி எழுந்தது. ராஜமாதா புத்திமதி தேவியோ இன்னதென்று விவரிக்க முடியாத ஒரு நிலையில் தவித்துக்கொண்டிருந்தாள். வெட்ட வெட்டத் தளிர்க்கும் மரம்போல் இந்த அசோகன் ஒவ்வொரு முறையும் வெவ்வேறு விதமாகத் தப்பியதை எண்ண அவள் நெஞ்சு வெடித்துவிடும்போல் இருந்தது. உலக அநுபவம் இல்லாத இந்த அசடன் வீதசோகன், 'அண்ணா! அண்ணா!' என்று குலவுவதையும் கூடிக்கூடிப் பேசுவதையும், முதல் தடவை நடந்த சபையிலே தமையனுக்

காகப் பரிந்து பரிந்து பேசியதையும் நினைக்க நினைக்கத் தன்மகன் மீதே அவளுக்கு வெறுப்பு உண்டாயிற்று.

அந்த இரவிலே, ஸம்புஷ்டாசாரியனும் விமலையும் அவளை ஏதோ ஒரு செயலைச் செய்யும்படி வற்புறுத்திக்கொண் டிருந் தனர். ஆனால் அவள் நெடுநேரம் யோசித்துப் பிறகே ஒப்புக் கொண்டாள். கடைசியில் மூவரும் நெடுநேரம் பேசினார்கள். என்ன நேர்ந்தாலும் விஷயத்தை வெளியே விடாமல் வைத் திருக்க வேண்டுமென்ற சபதத்துடன் மூவரும் எழுந்தார்கள். வெற்றியின் சின்னங்கள் முகத்திலே கூத்தாட, வெகு வேகமாக முன்னே நடந்தாள் விமலை. மற்ற இருவரும் மெதுவாகத் தள்ளாடி நடந்தனர். 'தற்செயலாக அந்தத் தர்மாநுஜனை எங்கேயாவது சந்திக்க மாட்டோமா?' என்று ஏங்கிற்று, விமலையின் நெஞ்சம்.

## 29

## கிளர்ச்சி

சாயங்காலம் அசோகன் மேல்மாடத்தில் தனியே உட்கார்ந்திருந்தான். செக்கர் வானத்தின் விசித்திரமான காட்சிகளில் எப்பொழுதும் ஈடுபடும் அவன் மனம், அன்று ஏனோ ஒருவிதமாகப் பித்துப் பிடித்ததுபோல் இருந்தது. மகா சபை முடிந்து, திஷ்யர் தர்மகுரு பதவியை ஏற்றது முதல் பல நாட்கள் வரையில் அந்த விஷயங்களிலேயே ஈடுபட்டிருந்த அவன் மனம் கடந்த சில நாட்களாக, ஏதோ ஒரு விதமான சஞ்சலத்தால் குழம்புவானேன்? 'யுத்தம் என்ற பேச்சோ கிடையாது. அரசாங்கத்திலோ அமைதி நிலவுகிறது. புகழோ மேன்மேலும் பெருகி வான முகட்டையே எட்டி விட்டது. ஸம்ராட்டுக்கு என்ன குறை?' என்று நினைத்தபொழுது அவன் முகத்திலே இளமுறுவல் அரும்பிற்று.

இதயத்தின் அடியில் எங்கேயோ ஒளிந்திருந்த இன்பக் கனவுகள் மெல்ல மெல்லத் தலை நீட்டி எட்டிப்பார்க்கத் தொடங்கின. அவனை, அந்தப் போலி ராஜ குமாரனை வரவழைத்து, இன்று நேருக்கு நேராகக் கேட்டுவிடுவது என்ற எண்ணம் தோன்ற, 'மோகனா!' என்று கூப்பிட்டான் அசோகன். மெய்காப்பாளன் மோகனன் வந்து நின்றான். "உடனே ரதத்தை எடுத்துக்கொண்டு வேணு வனத்திற்குப்போய் யுவ ராஜனை அழைத்து வா" என்றான் அசோகன். விஷயம் விளங்காதவனாய், "சித்தம்" என்று சொல்லிவிட்டு அவன் வெளியே சென்றான்.

அதே சமயம், அசோகனது மயிலனும் மயிலியும் வந்து விளையாடத் தொடங்கின. மயில்கள் பழைய மயில்கள்தாம். ஆனால் அன்று அசோகனது கண்களுக்கு அவை விருந்தாயின. முன்பு பல முறையும் கண்ட மயில்கள்தாமே. இதே மயில்களின் விளையாட்டைப் பலமுறை பார்த்திருக்கிறான். ஆனால் அப்பொழுது இருந்த மனநிலை வேறு, இன்று இருக்கும் இன்ப நிலை வேறு. இப்பொழுது தனக்கும் ஒரு காதலி கிடைத்து

விட்டாள் என்ற ஆனந்தம். அதுமட்டுமா? அந்த இன்பவல்லி தன்னையே நினைத்து நினைத்து உருகுகிருள் என்றும் தெரிந்து விட்டது என்று நினைத்தான். நெடுந்தூரம் பின்நோக்கிச் சென் றன அவன் சிந்தனைகள். அன்று சிறையிலே, ஒய்யாரமாக மெய்ம்மறந்து தூங்கிக்கொண்டிருந்த அந்த நிலையை மீண்டும் மீண்டும் கற்பனைக் கண்களால் கண்டு ஆனந்தித்துக்கொண் டிருந்தான். "சக்கரவர்த்தி, என்னை எதற்காகக் கூப்பிட்டனுப் பினீர்கள்?" என்ற சொல் தேவகானம்போல் அவன் செவிகளுள் பாய்ந்து இதயத்தில் இன்பத்தேனை நிரப்பின. இந்த வார்த்தை கள் முடியுமுன்பே அசோகன் அளித்த பளிங்காசனத்திலே அமர்ந்தான் யுவராஜன். "நண்பா! வரவேணும் வரவேணும்" என்று உபசரித்த அசோகன், "இன்றைச் சந்தியா தேவி யின் சோபையைப் பார்த்தாயா? மேற்குத் திசை மகளைச் சூரியன் சந்திக்கும் அற்புதமும், நேர் கிழக்கே சந்திரன் இரவாகிய தன் காதலியை நாடி ஓடிவரும் அற்புதமும் என்ன அழகு! பார்த்தாயா? இந்த அற்புதமான காட்சியை நீயும் கண்டு மகிழாமல் வேணு வனத்திலே வேதாந்த விசாரம் எதற்கு? என்றுதான் கூப்பிட்டேன்" என்ருன்.

அவள் சந்தேகத்தில் ஆழ்ந்தாள். கடந்த சில நாட்களாகவே அசோகனது நடத்தையில் ஏதோ சிற்சில மாறுதல்கள் இருப்பது போல் தோன்றிற்று. 'இன்று இந்தச் சொற்களின் கருத்துத் தான் என்ன?' என்று நினைத்தாள். தான் ஒரு பெண் என்று தெரிந்துவிட்ட பிறகு இனி மூடுமந்திரம் செய்வானேன் என்று நினைத்தவளாக, "சக்கரவர்த்தி! தங்களை ஏமாற்றுவதென்பது முடியாத காரியம். முதல் முறை தங்களைச் சந்தித்தபொழுது தங்களைப்பற்றி மிகவும் தாழ்வாகவே நினைத்தேன். ஆனல் நெருங் கிப் பழகப் பழகத்தான் தங்களது உண்மையான குணம் புலனு யிற்று. அந்தக் குண ஸௌந்தரியத்திற்கு என்னையே அர்ப்பணம் செய்துவிட்டேன். இந்த உடல் உள்ளவரையில் தங்களுக்குச் சேவை செய்கிற அந்த இன்பம் கிடைக்கவேண்டும் என்றே விரும்பினேன்" என்று சொன்ன பொழுது அவள் முகம் சிவந்தது. ஒருவரை ஒருவர் ஏமாற்றுவது இயலாதென்று தெரிந்ததும் இருவர் முகத்திலும் ஏககாலத்தில் இளநகை அரும்பிற்று.

"அது கிடக்கட்டும்; புருஷ வேஷம் போட்டுக்கொண்டு சிறையில் இருப்பானேன்?"

"சக்கரவர்த்தி! அப்படி மாறுவேஷத்தினால் தங்களை ஏமாற்றியதற்கு மன்னிக்கவேண்டும். ஆனால் நான் எதன்பொருட்டு அப்படிச் செய்தேன் என்ற விஷயம் தெரிந்தால், நீங்கள் ஆனந்தப்படுவீர்களே யன்றிக் கோபிக்கமாட்டீர்கள் என்பதும் எனக்குத் தெரியும்!"

"யுவராஜ! உன்னைப்போன்றவர்களைக் குற்றஞ்சாட்டுகிற திறமை எனக்கில்லை. நீ ஒரு பெண் என்பதைச் சிறைச்சாலையிலேயே கண்டுகொண்டேன்."

நாண மிகுதியால் அவள் முகம் சிவந்தது.

சந்திரன் தனது பால் நிலவினால் உலகத்தை மகிழ்வித்துக் கொண்டிருந்தான். அசோகனும் அவளும் எவ்வளவு நேரந்தான் பேசியிருப்பார்களோ தெரியாது. மெய்ம்மறந்து ஆனந்தமாகப் பேச்சிலேயே ஈடுபட்டிருந்த அவர்கள், மந்திரி ராதாகுப்தர் வந்தவுடன் திடுக்கிட்டார்கள்.

"உங்கள் ஏகாந்தமான சம்பாஷணையை இடையில் வந்து கெடுப்பதை மன்னிக்கவேண்டும்" என்ற பீடிகையுடன் பேசத் தொடங்கினார் அவர். இருவரும் எழுந்து அவரை உட்காரும்படி சொல்லிவிட்டு, "சித்தப்பா! உங்கள் வரவு எப்பொழுதும் ஆனந்தத்தையே கொடுப்பது வழக்கமாயிற்றே. அப்படியிருக்க நீங்கள் குறுக்கிட்டதாகச் சொல்லவேண்டுமா?" என்றான் அசோகன். யுவராஜன் முகத்திலே மின்னொளிபோல் இளநகை அரும்பிற்று.

ராதாகுப்தர், "சக்கரவர்த்தி! மிகவும் முக்கியமானதும் அவசரமானதுமான விஷயம். கலிங்கநாட்டிலிருந்து பிரதாபராய் என்ற பெயருள்ள சர்தார் ஒருவர், மிகப் பெரிய சேனாசமுத்திரத்தோடு பாடலீபுரத்தை நோக்கி வந்துகொண்டிருப்பதாக ஒற்றர் மூலம் செய்தி. இந்தப் பெயருள்ள ஒரு தளபதி இருப்பதாகவோ இருந்ததாகவோ நான் கேள்விப்பட்டதில்லை."

யுவராஜன் பாடு தடுமாற்றம் ஆகிவிட்டது. இருந்தாலும் சமாளித்துக்கொண்டு, "முன்பு கேட்டதில்லை. ஒருவேளை விசாக நந்தராவது, விமலா ராணியாவது நியமித்திருக்கலாம்" என்று சொல்லிவிட்டாள். தான் சமயோசிதமாகப் பேசியதன் பெருமை அவள் முகத்திலே தோனித்தது.

" அவர் வரும் உத்தேசம் என்ன ?"

" உத்தேசம் வேறென்றும் இல்லை. சக்கரவர்த்தியை நேரில் கண்டு பேசவேண்டுமாம்! அவனிடமிருந்து நேரில் ஒரு தூதன் வந்திருக்கிறான். இது அவன் கொண்டுவந்த செய்தி. முதலில் ஒற்றன் சொன்னவுடன் விஷயம் இன்னதென்று விளங்கவில்லை. ஆனால் தூதன் வந்து விஷயத்தைத் தெரிவித்ததும், அவனுக்கு உரிய மரியாதைகள் செய்துவிட்டு இங்கே வந்தேன்" என்றார்.

ரரதாகுப்தரது முகத் தோற்றத்திலிருந்து அவர் தன்னிடம் தனிமையில் பேசவிரும்புவதை அறிந்த அசோகன், " யுவராஜ! நான் நாளையதினம் நடக்கவேண்டியவைகளை முடித்துக்கொண்டு விருந்தாளியாக வரும் சேனாதிபதிக்கு உரிய வரவேற்பளித்து, மரியாதை செய்துவிட்டு, நாளைநின்று வேணுவனத்திற்கே வந்து உன்னைச் சந்திக்கிறேன். ஆசாரிய உபகுப்தனுருக்கு என் வணக்கம் சொல்லு" என்று கரங்குவித்தான்.

தங்கள் இன்பகரமான சம்பாஷணை தடைப்பட்டதனால் ஏற்பட்ட மனக் கிளர்ச்சியுடன் எழுந்து, கரங்குவித்து, இருவரையும் வணங்கி, விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டான் போலி யுவராஜன்.

ராதாகுப்தரும் ஸம்ராட் அசோகனும் நெடுநேரம் வரையில் மிகவும் தணிந்த குரலில் பேசிக்கொண் டிருந்தனர்.

# 30

# இந்திரையின் தடுமாற்றம்

அன்று அந்தப் போலியுவராஜன் சக்கரவர்த்தியை நேருக்கு நேர் தனிமையில் சந்தித்து, எல்லா விஷயங்களையும் ஆதிமுதல் சொல்லி விடுவதென்ற தீர்மானத்துடன்தான் வேணுவனத்தை விட்டுப் புறப்பட்டான். ஆனால் வேலைகளின் மிகுதியினால் அசோகன் வரத் தாமதம் ஆகும் என்று தெரிந்தது. இருந்தாலும் அவன் உட்காரும் இடத்திற்குத் தானே நேரில் சென்று பார்த்துவிடுவது என்ற தீர்மானத்துடன் தோட்டத்தில் புகுந்தான். அவள் மனம் ஒரே இன்ப வாரிதியில் ஆழ்ந்திருந்தது. இனிய நினைவுகளால் சற்று நேரத்திற்கு ஒருமுறை அவள் முகத்திலே இளநகை அரும்பிற்று. 'எங்கே உட்காரலாம்? நேரில் தெரியக்கூடிய இடத்தில் உட்காருவதா? அல்லது ஒளிந்திருந்து அசோகர் வந்தபிறகு திடீரென்று அவரைத் திகைக்க வைப்பதா?' என்று சிந்தித்தவளாக மெல்ல மெல்ல அடிமேல் அடிவைத்து நடந்துகொண் டிருந்தாள். எதிர்பாராதவிதமாக அழகிய ஓர் இளநங்கை தன்னை நோக்கி வருவது கண்டு இவள் திடுக்கிட்டாள். அவள் இவளையே நாடி வந்து அருகில் நின்றாள். இவள் பாடலீபுரத்திற்கு வந்து நெடுநாளாயிற்று என்றாலும், அரண்மனையைப் பற்றியோ அசோகனது குடும்ப விஷயங்களோ ஒன்றுமே தெரிய வழியில்லாமல் போயிற்று. முதலில் தர்பார் சிறைச்சாலை வாசம்; இப்பொழுதோ வேணுவனம் என்னும் அரணியத்திலே வாசம். இந்த நிலையிலே அரண்மனையைப் பற்றியும், அந்தப்புரத்தைப்பற்றியும் இவளுக்குத் தெரிந்திருக்க நியாயம் என்ன?

ராஜமாதா புத்திமதிதேவி, குமார வீதசோகன் இவர்களைப் பற்றி மட்டும் தெரியுமே யன்றி, அசோகனுக்கு ஓர் அழகிய தங்கை உண்டு என்பதே இவளுக்குத் தெரியாது. இந்திரை வந்து நின்றவுடன் இவள் திடுக்கிட்டாள். ஆனால் அவளோ அதைப் பொருட்படுத்தாதவளாக, "அன்பே! எங்கே புறப்பட்டீர்கள், இந்த வேஷத்தோடு? இன்றைக்காவது தங்கள் சொற்களால் என் செவிகள் நிரம்பக்கூடாதா?" என்று கெஞ்சும் குரலில் கேட்டாள்.

இவள் திகைத்துப்போய் ஒரே ஆச்சரியக் கடலுள் மூழ்கி னாள். 'இதென்ன! சிறையிருக்கும் இடத்திலே ஒரு காதலிகூட வந்துவிட்டாளே!' என்று நினைத்தவளாக, "அம்மணி! நீங்கள் என்னை, யாரென்று நினைத்துப் பேசுகிறீர்கள்!" என்றாள்.

இந்திரை, அவன் ஏதோ விளையாடுவதாக நினைத்து, "அன்பே! இப்படிக் குரலை மாற்றிக்கொண்டு பேசினால் நான் ஏமாந்து விடுவேன் என்ற எண்ணமோ? இதென்ன விளையாட்டு. நீங்கள் முன்போல் இன்று என்னிடமிருந்து தப்பிச்செல்ல விட மாட்டேன். முன்பு வாக்களித்தபடி உங்கள் உண்மையான வரலாற்றை என்னிடம் சொல்லித்தான் தீரவேண்டும்" என்று கொஞ்சலாகச் சொன்னாள்.

'அட தெய்வமே! இதேது! கிணறுவெட்டப் பூதம் புறப் பட்ட கதையாக இருக்கிறதே!' என்று நினைத்து, "அம்மணி! நான் இதற்குமுன் தங்களைச் சந்தித்ததே இல்லை. நீங்களோ முன்பு வாக்களித்ததாகச் சொல்லுகிறீர்கள். என்ன விஷயம்? யார் வாக்களித்தது?" என்று மிகுந்த சந்தேகத்துடன் கேட்டு, அவளை ஏறிட்டுப் பார்த்தாள் ரோகிணி.

"என்ன! ஒன்றுமே தெரியாதததுபோல் இதென்ன கபட நாடகம்! ஓஹோ, இன்று நான் உங்களை விடப்போவதில்லை" என்று அவனை வழிமறித்தாள் இந்திரை.

அவளுக்கு உள்ளூற, 'ஒருசமயம் இந்தப் பெண்ணுக்கு ஏதாவது சித்தப்பிரமையாக இருக்குமோ?' என்று தோன்றவே, 'சரி; என்னதான் சொல்லுகிறாளோ பார்ப்போம்' என்று சற்றே நின்று, "அது சரி! என்னை வழிமறிக்க உனக்கென்ன அதிகாரம்!" என்றாள்.

"அதிகாரமா? இதென்ன வார்த்தை? இப்படிப் பேசுவது நியாயந்தானா? இந்த வார்த்தைகள் உங்களுக்குச் சுலபமாயிருக் கின்றன. ஆனால் என் நெஞ்சைச் சுடுகின்றன. இது என்ன வேடிக்கையா?"

"அம்மா! உன்னை நான் இதற்குமுன் கண்டதும் இல்லை. பேசியதும் இல்லை. ஏதோ உன் காதலன் விஷயத்தில் ஏற்பட்ட தோல்வியினால் இப்படிப் பேசுகிறாயோ என்று தோன்றுகிறது. இதனால் பிரமித்து என்னை உன் காதலன் என்று நினைத்துவிட்டாய்" என்றாள்.

அவள் கண்களில் கண்ணீர் துளித்து நின்றது. "என்னையே பிரமை என்று சொல்லிவிட்டால்? — பிறகு நான் என்ன சொல்லக் கிடக்கிறது. இதே சோலையில் இதே இடத்தில் பல முறை சந்தித்தும், பிரமை என்கிறீர்கள்!" என்று சொல்லும் பொழுது அவள் கண்களினின்றும் கண்ணீர் பெருகிற்று. குரல் கம்மிப் போயிற்று."

ரோகிணியின் மனம் கசிந்து உருகலாயிற்று. அன்புடன் அவளை நெருங்கி, "அம்மா! நீ சிறந்த அழகியாகவும் புத்திசாலியாகவும் இருக்கிறாய். உனக்கு இந்தப் பிரமை ஏற்பட வேண்டிய காரணந்தான் என்ன? நீ யார்? உன் பெயர் என்ன?" என்றாள்.

இந்திரையின் முகத்தில் ஒரே கலவரம். "இதென்ன! இவ்வளவு மோசமான நிலைக்கு வந்துவிட்டேனா? ஸ்வாமி, இதென்ன, விளையாட்டு வினையாய் விடும்போல் இருக்கிறதே. நான் அசோகன் தங்கை இந்திரை என்பது கூடவா மறந்து விட்டது?" என்றாள். 'பௌத்த பிக்ஷுக்கள் ஏதாவது மந்திரம் செய்திருப்பார்களோ? அல்லது விமலையின் சூழ்ச்சியினால் இவன் இப்படிப் பேசுகிறானோ?' என்று சிந்திக்கத் தொடங்கியது அவள் மனம்.

ரோகிணிக்கு விஷயம் விளங்கவேயில்லை. "அம்மா! நீ சக்கரவர்த்தியின் தங்கை இந்திரையா? இப்படிப்பட்ட மன நிலையில் நீ வெளியே உலவுவது பிசகு. வா! உன்னை உன் தமையனாரிடமே ஒப்பித்து விடுகிறேன். இந்த நிலையில் குளமும் குட்டைகளும் நிறைந்த சோலையில் உலவுவது மிகவும் அபாயம்" என்றாள்.

இந்திரையின் முகம் பீதியினால் வெளுத்தது. 'அடாடா இதென்ன மாயம்! இப்படிப் பேசுகிறாரே?' என்று சிந்தித்தவளாய் "ஸ்வாமி, உங்களுக்கு அடியோடு என்னைப் பற்றி ஞாபகமே இல்லையா? நான் என்ன செய்தால் உங்களுக்குப் பழைய நினைவுகள் வரும். பகவானே! இதென்ன சோதனை!" என்று பெருமூச் செறிந்தாள் அவள்.

"இந்திரே! என்னைச் சற்று நேரம் உற்றுப் பார்!" என்றாள் ரோகிணி.

பாவம் இந்திரை உற்றுத்தான் பார்த்தாள். அவளுக்கு ஏதாவது விளங்கினால்தானே!

போலி ராஜ குமாரனுயிருந்த ரோகிணி மிகவும் அமைதியான குரலில், "இந்திரே, நான் உன் அன்பிற்கு உரியவன் என்று நினைக்கிருய்; அது தப்பு. உனக்குமட்டும் அல்ல. உலகிலுள்ள எந்தப் பெண்ணின் அன்புக்கும் நான் உரியவன் அல்ல. ஏனென்ருல் நானும் உன்னைப் போன்ற ஒரு பெண்தான்" என்ருள்.

இந்திரையின் மனம் குழம்பத் தொடங்கிற்று. இதுவும் விமலையின் தந்திரங்களுள் ஒன்ருக இருக்குமோ என்று எண்ண அவள் மனம் தூள் தூளாக வெடித்துவிடும்போல் இருந்தது, அது மட்டும் அல்லாமல், வேஷதாரியான ஒரு பெண்ணிடம், காதலைச் சொல்லிக்கொண்டோமே என்ற வெட்கம் ஒருபுறம் அவளை வதைத்தது.

"இந்திரே! இப்பொழுதாவது உன் பிரமை நீங்கிற்ரு?" என்று புன்சிரிப்புடன் கேட்டாள் ரோகிணி.

"நீங்கிற்று. இருந்தாலும் உங்களைப் பார்க்கும்பொழுது ஒரு சிற்பி ஒரே சமயத்தில் இரண்டு ரூபத்தைச் சித்திரித்தானே என்றே தோன்றுகிறது. குரல்தான் பேதமே தவிர அதே சாயல், அதே அச்சு, அதே நடை, நொடி, பாவனைகள்! நான் ஏமாருமல் எப்படி இருக்க முடியும்?"

இதுவரையில் வேலை செய்யாத அவள் மனம் 'பளிச்'சென்றது. "என்ன? என் சாயலாகவா இருக்கிருன்?" என்று ஆச்சரியத்தால் மலர்ந்த கண்களுடன் கேட்டாள் ரோகிணி.

"ஆமாம்! இதே உருவம். இதே தோற்றம். சந்தேகமே இல்லை" என்று அழுத்தம் திருத்தமாகச் சொன்னுள் இந்திரை.

"சரி! சரி! விஷயம் இதுதான். அவன்தான் கலிங்கநாட்டு இளவரசன் மகேந்திரன்."

"இளவரசனு? அப்படிச் சொல்லவில்லையே?"

"சொல்லவில்லையா? சொன்னுலும், சொல்லாவிட்டாலும் அவனேதான் இளவரசன்."

"அப்படியா? இது வரையில் சொல்லவில்லை. இன்றுதான் சொல்லுவதாக வாக்களித்திருந்தார். அவரைத் தேடித் தெரிந்து கொள்ளவேதான் இந்தச் சோலைக்கு வந்தேன்."

"இந்திரே, அவர்தான் இளவரசன். சந்தேகமே இல்லை. நான்தான் அவன் தங்கை ரோகிணி."

இந்திரையின் கண்களில் நீர் நிறைந்தது.

"அம்மா! இந்திரே! விஷயம் மனத்துடன் இருக்கட்டும். இப்பொழுது அவன் எங்கே இருப்பான் தெரியுமா?" என்று மிகவும் மெதுவான குரலில் கேட்டாள் ரோகிணி.

"அம்மா! இதுவரையில் அவர் அரண்மனையில்தான் இருந்தார். அரைச் சாமத்துக்கு முன் வெளியே போனவர் எங்கே போனாரோ எனக்கு எப்படித் தெரியும். இங்கே வந்து என்னைச் சந்திப்பார் என்று நம்பித்தான் நான் இங்கே வந்தேன்......." என்று சற்றே நிறுத்தினாள்.

சற்றுத் தொலைவிலிருந்த ஒரு கொடிப் புதரின் அருகே நின்று இவர்களது செயலைப் பார்த்துக்கொண் டிருந்த தர்மா நுஜனுக்கு உள்ளம் கொதித்தது. உடனே வெளியே வந்து அவனை அங்கேயே பிடித்து உலுக்கி விஷயத்தைத் தெளிவு படுத்தலாமா? அல்லது தனியே வேணு வனம் சென்று தன்னுடன் மற்போர் செய்யும்படி கூப்பிடலாமா என்றெல்லாம் நினைத்தவனாய் அங்கிருந்து வெளியே ஒருவருக்கும் தெரியாமல் நடந்தான்.

அவன் மனத்துள் ஒரு பெரிய போராட்டம். நேரில் இந்திரையையே கேட்டுவிட்டால் என்ன? என்று ஒரு சமயம் தோன்றும். அவள் தெரிந்துதான் அவனுடன் அப்படி நடந்து கொண்டாளா? அல்லது ஏமாற்றப்பட்டாளா? என்றும் தோன்றும். 'கேவலம் பெயரையும் அரசுரிமையையும் அபகரித்த தோடு நில்லாமல் காதலியையும் அபகரிக்க எண்ணிவிட்டானா? நல்லது இவனுக்காயிற்று, எனக்காயிற்று; பார்க்கிறேன்! அடாடா! என்ன தைரியம்! என்ன நெஞ்சழுத்தம்! அசோகனையே ஏமாற்றிக்கொண் டிருக்கிறானே! இந்தப் பேதைப் பெண் எம்மாத்திரம் என்று நினைத்துவிட்டானோ?' என்று நினைத்தவனாகப் போலி யுவராஜனைப் பின் தொடரும் எண்ணத்துடன் வேணு

வனத்திற்குச் செல்லும் பாதையிலே வழியிலுள்ள ஒரு சிலா தலத்தின்மேல் உட்கார்ந்தான் மகேந்திரன்.

அவன் சிந்தனைகள் நெடுந்தூரம் ஓடின. ஸதியாகிய தன் தாயின் நினைவு வர, அவன் கண்கள் கண்ணீரைச் சிந்தின. கனவிலிருந்து அவன் திடுக்கிட்டு எழுந்தபோது ராஜகுமாரன் ரதத்திலேறி வேணுவனம் போவதைக் கண்டான். சரி, இவனை வேணு வனத்திலேயே சந்தித்து விடுவது என்ற முடிவுக்கு வந்தவனாக வேகமாக நடந்தான். இவன் போனபோது அந்த வேஷதாரி வேணு வனத்தில் இறங்கி உள்ளே போகும் தருணம்.

"ஏ கபடக்காரா! நில் நில்!" என்று கூவியவனாய் அவனை நெருங்கி, "ஏ, துரோகி, என் பெயரையும் பதவியையும் அபகரித்தது போதாதென்று, இன்று என் இந்திரையையும் வசப்படுத்தத் துணிந்த நீ யார்?" என்று இடி முழக்கம்போல் கேட்டான் மகேந்திரன்.

போலி யுவராஜன் கல கலவென்று சிரித்தவனாய், "அண்ணா! என்னை இன்னாரென்று தெரியவில்லையா?" என்றான்.

"என்ன? ரோகிணியா?" — பளிச்சென்று சிதாநந்தரது மொழிகள் அவன் நினைவுக்கு வந்தன, "அம்மா, ரோகிணி!" என்று சொல்லியவனாகத் தன் தங்கையைத் தழுவிக்கொண்டான் தமையன். அவன் கண்களிலே கண்ணீர் பெருகி ஓடிற்று.

# 31

## எதிர்பாராத செய்தி

**கோ**பமும் எரிச்சலும் பொறுமையும் உடன் கொண்டு வேணு வனத்தில் நுழைந்த அவன், சகோதரியின் அருமையான தியாகத்தையும் வாத்ஸல்யத்தையும் நினைத்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கியவனாக வெளியே வந்துகொண் டிருந்தான். "அம்மா! இந்த இரவோடு நம் சங்கடங்களெல்லாம் தொலைந்தன. அஞ்ஞாத வாசம் முடிந்து, ஸௌபாக்கிய ரவியின் பொற் கிரணங்களைப் பார்க்கப் போகிறோம், என்று உறுதியாக நம்பு" என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டான். அவள் நீர்மல்கும் கண்களுடன் தமையன் சென்ற வழியையே பார்த்து நின்றாள்.

அவள் மனம் இன்பமோ துன்பமோ என்று நிர்ணயிக்க முடியாத ஒரு நிலையில் தவித்தது. தமையனைக் கண்டதனால் ஏற்பட்ட உள்ளக் கிளர்ச்சி அவளை மெய்ம்மறந்த சிந்தனையில் ஆழ்த்திற்று. தான் கைதியான பிறகு ராணி இந்துமதி தேவி என்னவானாள், எங்கே இருக்கிறாள் என்பதை நினைக்க, 'அவனிடம் இதைப்பற்றிக் கேளாமல் விட்டுவிட்டோமே' என்ற தாகம் ஏற்பட்டது. தந்தை உயிருடன் இருப்பதைப்பற்றி ஏற்கனவே தெரியும். 'அம்மா! தேவி இந்துமதி எந்த வீட்டிலே எந்த நிலையிலே, எப்படி இருக்கிறாளோ?' என்பதை எண்ண அவள் மனம் உருகிற்று. எவ்வளவு நேரம் சிந்தையில் ஆழ்ந்திருந்தாளோ தெரியாது. அருகில் யாரோ பெருமூச்சு விடுவது போல் சப்தம் கேட்கவே, அவள் கனவு கலைந்தது. தனக்கு அருகில் ஒரு முதிய பிக்ஷுணி உட்கார்ந்திருப்பதை அப்பொழுதே கண்டாள். எழுந்து, பிக்ஷுணியை வணங்கி, "அம்மணி, தங்களை எங்கேயோ பார்த்த முகமாய்த் தோன்றுகிறதே!" என்றாள்.

அந்தப் பிக்ஷுணி இந்த வார்த்தைகளைக் காதிலேயே வாங்காமல், "யுவராஜா! நான் தங்களை எச்சரிக்கும் பொருட்டே

வந்தேன். நீங்கள் இன்று இரவு இந்த வேணுவனத்தில் இருக்கக் கூடாது" என்ருள்.

மறுபடி ரோகிணி, "தங்களை எங்கேயோ பார்த்த ஞாபகம் என்று தொடங்க, "அப்பா, கடந்த நாட்களை நினையாமல் மீதியுள்ள நாட்களை நல்ல வழியிலே செலவு செய்ய விரும்பு. எனக்குப் பழைய நினைவுகளைப் பற்றிக் கவலை இல்லை. அதைப் பற்றிக் கேளாதே" என்ருள் பிக்ஷுணி.

"அம்மணி, தங்களை மறக்க முடியுமா? நினைவு வந்து விட்டது. தாங்கள் உபகுப்தர் மனைவி குந்த நந்தினி யல்லவா? ஆசாரிய உபகுப்தர் நரகத்தினின்றும் என்னை விடுவித்தபொழுது தங்களைப்பற்றிச் சொன்னர். நேரில் தரிசிக்கும் பாக்கியம் இன்றே கிடைத்தது" என்று சொல்லி அவள் பாதங்களைத் தொட்டு வணங்கினுள் ரோகிணி.

"அப்பா! உபகுப்தாசாரியர் தம் கடனைத் தீர்த்துவிட்டார். நான் வேண்டுமென்றே உன்னை யமன் வாயில் ஒப்புக்கொடுத்த பாபத்திற்குப் பரிகாரம் செய்துகொள்ள வில்லை. ஆனல் எதிர் பாராமல் இன்று ஒரு தகுந்த சமயம் வாய்த்தது. உன் உயிரைக் காக்கவே ஓடோடி வந்தேன்!"

"என்ன? என் உயிருக்கு ஆபத்தா? இதென்ன, புதிய கூத்தா?"

"ஆமாம்! இது கபட நாடகத்தின் புதிய காட்சிதான். ஸம்புஷ்டாசாரியனும் ராஜமாதாவும் விமலா ராணியும் உன்னைக் கொல்லப் போவதாகத் தெரிந்தது. ஏற்கனவே ஏதேதோ சூழ்ச்சிகள் நடந்ததாகக் கேள்வி. ஆனல் இது எல்லாவற்றிற்கும் சிகரம். கேட்டால்கூட நடுங்கி விடுவாய். இருந்தாலும் பௌத்த தர்மமும் பாடலீபுத்ர நகரமும் மௌர்ய குலமும் நசித்துப் போகக் கூடாதென்று பகவத் ஆக்ஞை இருப்பது போல் இருக்கிறது. ஏழு நாட்களுக்கு முன்பு கங்கா தீரத்திலே தியானம் செய்துகொண் டிருந்தேன். வெள்ளை உடை தரித்த பலர் அருகில் கூடி இருந்தார்கள். நடுவில் வயது முதிர்ந்த பெண்மணி ஒருத்தியும் இளமையோடு கூடிய அழகி ஒருத்தியும்

இருந்தார்கள். தெய்வாநுக்கிரகத்தால் அவர்கள் என்னைக் கவனிக்க வில்லை. பேச்சிலிருந்தே யார் என்ன என்பது புரிந்தது. அவர்கள் பேச்சிலிருந்து முங்கலீ புத்ர திஷ்யர் உள்பட எல்லாரையுமே கொன்றுவிட ஏற்பாடு......! வெகு நேரத்திற்குப் பிறகு யார் யாரைக் கொல்லுவதென்று முடிவு கட்டினார்கள். விமலை உன்னையும், ராஜமாதா அசோகனையும் முடித்து விடுவது. இந்தப் புண்ணிய கைங்கரியம் இன்றிரவிலேயே நடைபெறலாம். இதைச் சொல்லவே மூன்று நான்கு நாட்களாக அலைகிறேன். உன் இருப்பிடம் தெரியவில்லை. சக்கரவர்த்தியிடம் நேரில் சொல்லலாமா என்றுகூட நிச்சயித்திருந்தேன். அவருக்கு என் வார்த்தையில் நம்பிக்கை இருக்குமோ இராதோ என்ற சந்தேகம்? இதற்குள் நல்ல வேளையாகச் சர்தார் பிரதாபராய் என்ற ஒரு தளகர்த்தர் சக்கரவர்த்தியைப் பேட்டி காண வருவதாகத் தெரிந்தது. அவரிடம் விஷயத்தைச் சொல்லிவிட்டு நானும் அவர்களுடனேயேதான் இங்கே வந்தேன். உன் உயிரைப் பற்றித்தான் எனக்கு மிகுந்த கவலை. இப்பொழுது நீ என்னுடன் வந்தால், இன்றிரவை, அந்தச் சர்தாரின் பாதுகாப்பிலே பய மின்றிக் கழிக்கலாம்" என்றாள்.

ரோகிணியின் முகம் வெளுத்தது. "அம்மணி, நீங்கள் சொல்வது போல், கேவலம் என் உயிரைக் காப்பதன் பொருட்டு நான் வரமுடியாது. ஆபத்து எனக்குமட்டும் அல்ல. ஆர்யாவர்த்தத்தின் ஸம்ராட் அசோகரையே சூழ்ந்து நிற்கிறது. அவரைக் காப்பாற்றுவதை விட, என் உயிர் பெரிதா? நீங்கள் சமயம் அறிந்து செய்த இந்த உதவியை ஒருநாளும் மறக்கமாட்டேன். இதோ போகிறேன் அம்மணி" என்று எழுந்தாள் ரோகிணி.

"யுவராஜா! நீ போகவேண்டாம்! உன் உயிருக்கும் ஆபத்து. சக்கரவர்த்தியைக் காப்பதற்குப் பிராதபராய் வந்து விடுவார். அவர் மகா வீரர். அப்படிப்பட்டவர் கையிலே சக்கரவர்த்தி ஒப்பிக்கப்பட் டிருக்கும்பொழுது உனக்கென்ன பயம்? நீ முதலில் உன் உயிரைப் பார்த்துக்கொள்" என்றாள் பிக்ஷுணி.

"அம்மணி! என்னை இப்படித் தடுக்க வேண்டாம். கணவனைக் காக்கும்பொருட்டுச் செல்லும் மனைவியைத் தடுத்தல்

பாவம்!" என்று சொல்லியவளாக எழுந்து நடந்தாள். குந்தை ஒரே கலவரத்தில் ஆழ்ந்தாள்.

"கணவனுவது? மனைவியாவது? நீ என்ன சொல்கிறுய்?" என்ருள்.

"அம்மணி! அதைச் சொல்ல இது நேரமில்லை. நான் ராஜ காரியமாக இப்படி நடிக்கிறேன்" என்று சொல்லி மறைந்தாள் அந்த வேஷதாரி. வெகுநேரம் வரையில் அவள் சென்ற திசையையே பார்த்தவளாக நின்றிருந்தாள் குந்தநந்தினி.

## 32

## வீதசோகன் துறவு

நடுநிசி. ஊரெங்கும் ஒரே அமைதி. அரண்மனையில் பாராக் காரர்கள் உருவிய கத்தியுடன் காவல்புரிந்து நின்றனர். இள வரசன் மகேந்திரன் ஓட்டமாக ஓடிவந்து, அரண்மனையில் நுழைந்தாலும், அவனுக்கு அங்கேயுள்ள விசேஷமான சலுகை யால் ஒருவரும் தடுக்கவில்லை. ஒரே மூச்சில் சக்கரவர்த்தியின் பள்ளியறையை அடைந்தான். அரசனது மெய்க்காவலன் மோகனன் அயர்ந்து தூங்கிக்கொண் டிருந்தான்.

"சக்கரவர்த்தியின் முகத்தில் இளநகை அரும்பி இருந்தது. அவர் இன்பக் கனவு காண்கிறார் என்று நினைத்தாள் ரோகிணி. மெல்ல மெல்லக் கட்டிலின் அருகே போய், "சக்கரவர்த்தி! சக்கரவர்த்தி!! எழுந்திருங்கள்" என்று அவனது தோள்களை மெல்லத் தட்டினாள். இயற்கையிலேயே கூச்சமுள்ள அவள் கைகள் பின்வாங்கின.

"அசோகன் திடுக்கிட்டான். சுருட்டி வாரிக்கொண்டு எழுந்து, "யார்? இளங்கோவா? இந்த நள்ளிரவில் தன்னந் தனியாக எங்கே இங்கு வந்தாய்?" என்று மிகுந்த ஆச்சரியத்துடன் கேட்டான்.

"மனைவிக்கு உரிய கடமையைச் செய்யும்பொருட்டு, என்னுடைய மற்றொரு ஆத்மாவை ரக்ஷிக்கும் பொருட்டு நான் இவ்விடம் ஓடிவந்தேன்" என்றாள்.

"இன்னுமா என்னைக் கொல்ல முயற்சி செய்கிறார்கள்."

"உங்களை மட்டும் அன்று, பாடலீபுத்ர நகரத்தையே அழிக்க முயற்சி நடக்கிறது, தீவிரமாக" என்று, தான் கேள்விப்பட்ட விஷயங்களையெல்லாம் சுருக்கிச் சொன்னாள்.

"பிறகும் அசோகன், "என்னதான் இருந்தாலும் ராஜ மாதாவே இப்படித் துணிவாளென்று நான் நம்பவில்லை" என்றான்.

இதற்குள் யாரோ நடந்துவருவது கேட்டது. "சக்கரவர்த்தி! என் வார்த்தைகளிலே நம்பிக்கை இல்லாவிட்டால் தயவுசெய்து என்னுடன் இந்தத் திரை மறைவிற்கு வாருங்கள். என்ன நடக்கிறது பார்ப்போம்" என்று சொல்லியவளாக அவன் கைகளைப் பற்றிப் பலவந்தமாக இழுத்தவளாக அடுத்திருந்த திரைமறைவில் நின்றுகொண்டாள் அவள்.

மெல்ல மெல்ல அடியோசை கேட்டது. மெதுவாக ஒரு மனிதன் அரசனது அமளியை நெருங்கினுன். அவள் நினைத்தது போல் அது ராஜமாதா அன்று; ஸம்புஷ்டாசாரியன். படுக்கை காலியாக இருப்பது கண்டு அவன் முகம் ஏமாற்றத்தினுல் மாறிற்று. பயங்கரமான பேய்ச்சிரிப்புடன், 'ராஜமாதா! உன்னுடைய காரியங்களை மிகவும் அழகாகச் செய்து முடித்துவிட்டாய்! புத்திமதியல்லவா? பெயருக்கேற்பப் புத்திமதியாகவே நடந்துகொண்டிருக்கிருய். இனி இந்த அரசும் அமளியும் என்னுடையவைதாமே! கேவலம் வீதசோகன் பெயரளவில் சக்கரவர்த்தியாவான்! பேஷ்! நல்ல வேலை செய்தாய்! அவனையும் இப்படி ஒருநாள்...பிறகு ஸம்புஷ்டாசாரியனை எவன் அசைக்கமுடியும்!' என்று சொல்லிக்கொண்டே அந்த மஞ்சத்தில் உட்கார்ந்தான். விலையுயர்ந்த மகமல் போர்வையை எடுத்துப் போர்த்துக்கொண்டான். அசோகன் இந்த எதிர்பாராத காட்சியினுல் திகைத்தே போனுன். தான் இறந்துவிட்டதாக எண்ணிய உடனே தன் கட்டிலிலே உட்கார்ந்த அந்தப் போலித்துறவியைப் பற்றி அவன் மனம் சிந்திக்க ஆரம்பித்தது.

* * * *

இதே சமயத்தில் அரண்மனையின் இன்னொரு பக்கத்தில் இன்னொரு நாடகம் நடந்துகொண்டிருந்தது. விலாசமஹலில் கட்டிலின்மேல் மெய்ம்மறந்து தூங்கிக்கொண்டிருந்தாள் இந்திரை. அவளது முகத்திலே ஆனந்தம் குடிகொண்டிருந்தது. கையில் வாளுடன் அவள் முகத்தையே பார்த்து நின்றுள் விமலை. 'ஓஹோ! கனவு காண்கிருயா? ஒரே நிமிஷம்! உன்னை ஒழித்துவிட்டு அந்தத் தர்மாநுஜனை நான் அடையாவிட்டால் என் பெயர் விமலையா?' என்று எண்ணிக் கத்தியை ஓங்கினுள். இதே சமயத்தில் கனவிலே ஆழ்ந்திருந்த இந்திரை, 'கலகல' வென்று சிரித்துவிட்டாள். இந்தச் சிரிப்பின் பயனுக விமலை ஓங்கிய கை தணிந்தது.

'இந்திரே! நீ கனவிலே ஆனந்த நிலையில் அவனுடன் கொஞ்சி மகிழ்ந்திருக்கிருயோ என்னமோ? இந்த இன்ப நிலையிலே உன்னைக் கொன்றுவிட்டால் அது உனக்கு ஆனந்தமல்லவா? உன்னை இந்த இன்ப நிலையிலிருந்து எழுப்பிப் பயப்படுத்தியே கொல்ல வேண்டும்!' என்று நினைத்தவளாக, "இந்திரே! எழுந்திரு! இந்தக் கனவுகளையெல்லாம் மறந்துவிடு" என்று எழுப்பினுள்.

அவள் கண்விழித்தாள். பயங்கரமான காளி ஸ்வரூபமும் கையிலே வாளுமாக விமலை நிற்பதைக் கண்டதும் பயத்தினுல் அவள் கண்கள் தாமாகவே மூடிக்கொண்டன. "பெண்ணே! உன் பிடிவாதத்தை விடு! உன் ஆயுள் இன்னும் கொஞ்ச நேரந்தான். அதற்குள் அந்தத் தர்மாநுஜனை மறந்துவிடு. இதோ உன்னையும் ஒழித்துவிட்டு, யுவராஜனையும் ஒழிக்கப்போகிறேன்!" என்று சீறினுள்.

இந்திரை நடுநடுங்கியவளாக, "யுவராஜனை ஒன்றும் செய்யாதே!" என்று கெஞ்சினுள்.

"அட! யுவராஜனைப்பற்றி உனக்கென்ன இவ்வளவு அக்கறை?"

"அவர்தான் என் உயிர்!" என்று நடுங்கியவளாகச் சொன்னுள் இந்திரை.

"ஆனுல் நீ அந்தப் பிக்ஷுவை நேசிக்கவில்லையா?"

"பிக்ஷுதாம் யுவராஜன்! அவர்தாம் என் காதலர்."

"என்ன! வேணுவனத்தில் இருக்கும் அவன் யார்?" என்று இடிக்குரலில் கேட்டாள் அவள். அவள் முகத்திலே எள்ளும் கொள்ளும் வெடித்தன. ஓஹோ! காதலில் பங்குக்கு வந்ததற்காக உன்னையும், அரசுரிமையில் பங்குகொள்வான் என்பதற்காக அவனையும் ஒழிக்கத்தான் வேண்டும்!" என்று கர்ஜித்தாள் விமலை.

"யுவராஜா! யுவராஜா! என்னைக் காப்பாற்றேன். நான் ஒரு துஷ்டையின் கையினுலேயா சாகவேண்டும்?" என்று சொல்லியவளாக எழுந்து அவளை எதிர்க்கத் துணிந்தாள் இந்திரை. இதற்குள் விமலை கையை ஓங்கிவிட்டாள்.

ஓங்கிய கையை ஒரு பலமான கை பின்புறமிருந்து பிடித்தது. திமிறியவளாகத் திரும்பினுள் அவள். முகத்திலே

கோபம் ஜொலிக்க அவளைச் சுட்டுவிடுபவன்போல் பார்த்தான் யுவராஜனுன தர்மாநுஜன்.

"அடி பாபி! விஷப்பாம்பே! இந்திரையைக் காப்பதற்காக உன் பாபிக் கையை நான் தொட்டுவிட்டேன். இந்தப் பாபம் கங்கையில் நீராடினுலும் போகாது. உன் துஷ்டத்தனம் கேவலம் ஒரு நிரபராதியான பெண்ணைக் கொல்லும் வரையிலும் போய்விடுமென்று நான் நினைக்கவில்லை. நீயும் ஒரு பெண்ணு? நீ பேய்! பேயைக் காட்டிலும் குரூரமான ஒரு நீச ஜன்மம். அவள் உனக்கு என்ன குற்றம் செய்தாள்? அன்று முதல் இன்று வரையில் நீ செய்திருக்கும் துரோகங்கள் எத்தனை! எண்ணத் தொலையாது; ஏட்டில் அடங்காது, நீ செய்த ஒவ்வொரு துரோகத்திற்கும் உன்னை நரகத்தில் போட்டிருக்கலாம். அசோகர் உன்னை மன்னித்து விட்டார். இனிமேலும் மன்னித்து விட்டால் உன்னுல் சும்மா இருக்க முடியாது. இப்பொழுதே உன்னைச் சக்கரவர்த்தியிடம் ஒப்பித்து நியாயம் வழங்கும்படி செய்கிறேன். ஒரு வேளை இந்த முறையும் மன்னித்தால் நானே நியாயம் வழங்க வந்து விடுவேன். பெண் பேயே! கலிங்கத்தின் மேல் விபத்தை வரவழைத்ததும் நீதான். அரசன்மேல் அபவாதம் சுமத்தியதும் நீதான். ஆகவே கலிங்கத்தின் பொருட்டுப் பழி வாங்க நான் வந்தே தீருவேன்!" என்று ஆத்திரத்துடன் கர்ஜித்தான் யுவராஜன் மகேந்திரன்.

"ஆனுல்! ஆனுல்! தர்மாநுஜா! நீதான் உண்மையில்...... அதற்குமேல் அவளைப் பேச விடவில்லை. வேலைக்காரர்களிடம் காவல் செய்து கொண்டு வரும்படி அவளை ஒப்பித்து, தான் இந்திரையுடன் அசோகனது பள்ளியறைக்கு நடந்தான். பயத்தால் நடு நடுங்கிய இந்திரையைத் தன் கையால் அணைத்த வணுக அவன் நடப்பதைக் கண்ட விமலையின் நெஞ்சு கொதித்தது. பற்களை நெறு நெறுவென்று கடித்துக்கொண்டாள். அவள் இரு கைகளையும் காவலர்கள் இரும்புக் கைகளால் பிடித்துக்கொண் டிராத பக்ஷத்தில் என்ன செய்திருப்பாளோ?

* * * *

இவர்கள் அந்த அறையின் வாயிலை அடையு முன் ஒரு பயங்கரமான அலறல், 'ஐயோ!' என்ற கூக்குரல் இவர்கள் செவிகளுள் தெளிவாக விழுந்தது. குமார வீதசோகன்தான்

முன்னே உள்ளே நுழைந்தான். ராஜமாதா புத்திமதி தேவி ரத்தந் தோய்ந்த கட்டாரியுடன் ரண பத்ர காளிபோல் நின்றிருப்பதையும் அசோகனது மஞ்சத்திலிருந்து மரணவஸ்தைப்படும் ஒருவர் முனகலையும் கேட்ட அவன் நெஞ்சம் துடி துடித்தது. 'சரி! சக்கரவர்த்தியைத் தன் தாயார் குத்திவிட்டாள்!' என்று நினைத்து, "அம்மா! இதென்ன மாபாதகம். பெற்ற தாய் மகனைக் கொல்வதுண்டா? சீ! சீ! நீ! என்ன மனிதப் பிறவியா? பேயா? ராக்ஷஸியா? இதென்ன விபரீதம்! இப்படியும் உனக்குப் புத்தி போக வேண்டுமா! சீ, சீ, பிசாசே? தொலை!" என்று கூச்சலிட்டவனாய், "அண்ணா! அண்ணா! எங்கே காயம்?" என்று குனிந்தான்.

உடனே எங்கிருந்தோ, "குமாரா! நான் இதோ இருக்கிறேனடா!" என்று அன்பு கனியும் சொல் வந்தது. தம்பியை இறுகத் தழுவிக்கொண்டான் அசோகன்.

இதற்குள் கட்டிலில் இருந்த மனிதனின் முனகலும் நின்றது. "குமாரா! இறந்து விட்டார்போல் இருக்கிறது. அது ஸம்புஷ்டாசாரியன்" என்றான் அசோகன்.

"ஐயையோ! என்று கூவி விட்டாள் ராஜ மாதா! "யார், ஸம்புஷ்டாசாரியனா? இங்கே, எப்படி, இது, அசோகன் . . ." என்று ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் பிதற்றினாள் அவள்.

குமார வீதசோகன் தமையனது அன்பின் பிணிப்பிலிருந்து விலகி, "அம்மா! 'கேவலம் மண்ணாசையால் நீ இப்படிப் பட்ட கோரமான செயலைச் செய்யத் துணிந்திருக்கிறாய். நீ ஏற்கனவே பாரத நாட்டுக்கே ராணியாகி, உன் இஷ்டப்படி பதவியும் அதிகாரமும் வகித்திருக்கிறாய். இன்னும் ஏன் இந்தப் பேராசை? மௌரிய குலத்தின் ஆரம்பத்திலேயே முளைத்த பங்காளிக் காய்ச்சல் எப்படி முடிந்ததென்று உனக்கு நினைவில்லையா? நீ செய்திருக்கும் அட்டூழியங்களைப் பார்க்கப் பார்க்க உலகத்தின் மேலிருந்த ஆசையே எனக்கு ஒழிந்து போய் விட்டது. உனக்கும் எனக்கும் தாய் மகன் என்ற முறை இன்றுடன் ஒழிந்துவிட்டது. நான் உலகத்தைத் துறக்கா விட்டால், நானும் நீயும் உள்ள வரையில் நீ அசோகனுக்கு ஏதாவது கெடுதி செய்துகொண்டேதான் இருப்பாய். ஆகவே, இன்றே இப்பொழுதே இந்த நள்ளிரவிலே நான்

பிக்ஷுவாகி, தீக்ஷை பெற்றுக்கொள்ளப் போகிறேன்" என்று சொல்லி, "நாமோ புத்தாய, புத்தம் சரணம் கச்சாமி; சங்கம் சரணம் கச்சாமி; தர்மம் சரணம் கச்சாமி" என்று அண்டமே இடிந்து விழும்படி கூவினன்.

அசோகனது கண்களில் கண்ணீர் பெருகிற்று. "குமாரா! நீ இன்னும் உலகம் எப்படிப் பட்டதென்று பார்க்க வில்லை. உலகத்தை அநுபவித்துத்தான் துறக்க வேணும். அப்பா! என் கண்மணீ! வீத சோகா! நீ இப்பொழுது துறவறத்தை மேற்கொள்ளக் கூடாது. ராஜ குடும்பத்திலே பிறந்து நீ என்ன சௌக்கியத்தைக் கண்டாய். அப்பா! குமாரா! அவசரப் படாதே!" என்று சொல்லியவனுய்த் தம்பியைத் தழுவிக் கொண்டான் அசோகன்.

ராஜ மாதா புத்திமதி தேம்பித் தேம்பி அழுதவளாய், "குமாரா! இதென்ன இது? இந்த இள வயதிலே மௌரிய குலத்திலே ஒருவரும் துறந்ததில்லை. அப்பா! நான் இனி ஒன்றுமே செய்வதில்லையடா! நீ தீக்ஷை செய்துகொள்ளாதே!" என்று விம்மியவளாக அவனை நெருங்கினுள்.

"அம்மா! உன் கறை படிந்த கைகளால் என்னைத் தொடாதே! பகவான் ததாகதரது சொல்லைப் பரப்ப நான் தீக்ஷை ஏற்றுக்கொள்ளப் போகிறேன். ஏற்கனவே பற்றற்று இருந்த என் மனம் உங்கள் கொடுஞ் செயல்களால், 'சட்டி சுட்டதும் கை விட்டதும்' என்ருயிற்று. போனது போகட்டும்; இனியாவது ஆரியா வர்த்தத்தின் சிம்மாசனம், பகைமையற்று ஒளிரட்டும்!" என்ருன்.

அசோகர் மிகவும் அன்பும் வாத்ஸல்யமும் கூடிய குரலில், "குமாரா! இதென்ன! இந்த விஷயத்தை இன்று, இந்த இரவிலேயே தீர்மானிக்க வேணுமா? பொழுதுதான் விடியட்டுமே! இங்கே கொலை; அங்கே கொள்ளை. இந்த நிலையிலே, தீக்ஷை எதற்கு? அப்பா! குமாரா! அவசரப்பட வேண்டியதில்லை. ஆர அமற யோசித்துச் செய்வோம். நீ துறவறம் பூண்டுதான் பிரசாரம் செய்ய வேண்டும் என்பதில்லை. மணிமுடி புனைந்தும் தர்மப்பிரசாரம் செய்யலாமே!" என்று கூறினர்.

"அண்ணு! என் தலையில் பொறுப்பை ஒப்பித்துத் தாங்கள் துறவு பூண நினைக்கிறீர்களா? அது ஒரு நாளும் முடியாது.

புத்திமானும் தர்மாத்மாவுமான நீங்களே இப்படிச் சொன்னால் சாதாரண ஜனங்கள் என்னதான் சொல்லமாட்டார்கள். துற வறத்துக்கு இன்று, நாளை என்று வேளையும் பொழுதும் உண்டா? தோன்றிய பொழுதுதான் வேளை. அண்ணா! எனக்கு வேண்டியவைகளை வரவழையுங்கள்" என்றான்.

செய்வது இன்னதென்று அறியாதவனாக அசோகன் மெய்ம் மறந்து நின்றான். இதே சமயத்தில், கைதியான விமலை பின் தொடர நடு நடுங்கும் இந்திரையைக் கையில் பற்றியவனாக வந்து நின்றான் தர்மாநுஜன். விமலையின் கண்கள் ரத்த வெறி கொண்ட வேங்கையின் கண்கள்போல் ஜொலித்தன.

யார் அனுப்பினார்களோ தெரியாது. அந்த நடு நிசியில் பாதக்குறடும் கமண்டலமும் காவியுடையும் எடுத்து வந்தார் ஒருவர். அசோகர் கையமர்த்தினார். கொணர்ந்தவர் யாரும் அல்ல. ஆசாரிய உபகுப்தர்தான். அவருக்கு எப்படித் தெரியும்?...... தெரிந்துகொண்டு வரவில்லை. வீதசோகனே தான் கேட்டுக்கொண்டானாம்! உபகுப்தரை வணங்கி அவை களைக் கைளிலே வாங்கிக் கண்களில் ஒற்றிக்கொண்டான். மறுபடி, 'நமோ புத்தாய' என்ற மகா வாக்கியம் அவன் வாயினின் றும் எழுந்தது. தான் உடுத்திருந்த உடைகளையும் அணிகலன்களை யும் கழற்றி எறிந்தான் அவன்.

அசோகன் கண்கள் பனிசோர, "குமார!" என்றான். அதற்கு மேல் வார்த்தைகள் அவன் வாயினின்று எழவில்லை. இன்னது செய்வதென்று விளங்காதவனாய், அவனை நெருங்கி அவன் முகத்தையே பார்த்த வண்ணம் நின்றான். எல்லோரும் கற்சிலைபோல் நின்றிருந்தனர். ஒருவருடைய வாயிலிருந்தாவது ஒரு வார்த்தை வரவேணுமே! வரவில்லை. அங்கே மரண அமைதி நிலவிற்று. இவைகளுக்கெல்லாம் சாட்சி போல் ஸம்புஷ்டா சாரியனது உடல் மஞ்சத்தின்மீது கிடந்தது.

அரண்மனையின் ஏதோ ஒரு மூலையிலிருந்து இரவின் மூன்றாம் சாமத்தைக் குறிக்கும் மணி ஓசை முழங்கி ஓய்ந்தது. அவன்- வீதசோகன், அந்த ராஜ சந்நியாசி - எழுந்தான். "சக்கரவர்த்தி! நீ புத்ர பௌத்ரர்களுடன் நெடுங்காலம் வாழவேண்டும்! உன் னுடைய பெரு முயற்சியால் பரத கண்டத்தின் மூலை முடுக்கு களிலெல்லாம் பௌத்த தர்மம் பரவட்டும். பாரதவர்ஷம் மட்டுமேயன்றி கடல் கடந்தும் உன் கொள்கைகள் மலரட்டும்!"

என்று சொல்லிவிட்டு, "நமோ புத்தாய!" என்று சொல்லிக் கொண்டே அவ்விடத்தை விட்டு அகன்றான். வைத்தகண் வாங்காமல் அவனையே பார்த்த வண்ணம் நின்றிருந்தார்கள் மற்றவர்கள்.

வீதசோகன் வெளியே சென்று சில நிமிஷங்கள்தான் ஆகி இருக்கும். சர்தார் பிரதாப்ராய் ஓட்டமாக ஓடி வந்து சேர்ந்தார். அங்கே இருந்த அந்த நிலையில் அவருக்கு ஒன்றுமே விளங்கவில்லை. அலங்கோலமான அறை; முகத்திலே ஒளி இல்லாமல் மூலைக்கு ஒருவராக நிற்கும் தர்மாநுஜன் முதலியவர்கள்; பேயறைந்தவள்போல் நிற்கும் புத்திமதி தேவி; இவர்களைப் பார்த்துத் திகைத்தார். அசோகனது முகத்தைப் பார்த்தபின்பு தான் அவருக்குக் கூட்டிலே உயிர் வந்தது.

"சக்கரவர்த்தி! நேரம் சென்றது தெரியவில்லை. எங்கே விஷயம் மிஞ்சிவிடுமோ என்று ஓட்டமாக ஓடி வந்தேன்" என்று திணறிப் பெரு மூச்சுடன் சொன்னார் பிரதாபராய். அசோகனது மௌனம் கலைந்தது. "அன்பு மிக்க ஸர்தார்! தாங்கள், எதிர் பாராத சமயத்தில் எதிர் பாராத விதமாகச் செய்த உதவிக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்" என்றான்.

"அவசர அவசரமாக முங்கலீ புத்ர திஷ்யரைக் காக்க ஓடினேன். அவர்களைக் கைது செய்துவிட்டேன். இங்கே எந்த நிலையில் இருக்குமோ என்று நடு நடுங்கிய வண்ணம் வந்த எனக்கு நீங்கள் உயிருடன் இருக்கும் செய்தி தெரிந்த பிறகுதான் மன அமைதி ஏற்பட்டது. நல்லது, உங்களுக்கு முன்னமே செய்தி தெரிந்து விட்டதா?" என்றார் பிரதாபராய்.

"முன்னமே எப்படித் தெரியும்? இதோ நிற்கிறானே இந்தத் தோழன்தான் இரண்டாம் முறை அல்ல; மூன்றாம் முறையாக என் உயிரைக் காப்பாற்றினான்" என்று சொல்லி, ரோகிணியைச் சுட்டிக் காட்டினான் அசோகன்.

மறு வினாடி, "அப்பா!" என்று அவர் நீட்டிய கரங்களுக்குள் புகுந்தாள் ரோகிணி. பேச வாயெழாதவனாக நின்றிருந்தான் தர்மாநுஜன்.

"என்ன? கலிங்காதிபதி யல்லவா நீங்கள்!" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் அசோகன்.

## 33

# மகதமும் கலிங்கமும்

அன்று அரண்மனை முழுவதும் ஆனந்தத்தினால் நிறைந்திருந்தது. ஸம்ராட் அசோகன் தன் புதிய நண்பர்களுடன் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தான். சிதானந்தர் மிகவும் மெல்லிய குரலில் தமது அநுபவங்களையெல்லாம் விவரித்துக்கொண்டிருந்தார். அரசி சுபத்ராங்கியும், ராணி இந்துமதிதேவியும் இன்ப வாரிதியிலே மிதந்தவர்களாகச் சற்றுத் தொலைவிலுள்ள ஒரு பகுதியில் அமர்ந்து, இவர்களது உரையாடல்களைச் செவிமடுத்திருந்தனர். சற்று நேரத்திற்கு ஒருமுறை அவர்களது பார்வை ஆசாரிய உபகுப்தனுரை நோக்கிச் சுழன்று மீண்டுகொண்டிருந்தது.

பெண்கள் அமர்ந்திருந்த பகுதியிலே இந்திரையும் ரோகிணியும் மிகவும் மெதுவான குரலில் ஏதோ பேசுவதும், புன்னகை கொள்வதுமாக இருந்தனர். முங்கலீபுத்ர திஷ்யர் ஏதோ கூற வாயெடுத்த தருணம், எல்லோருடைய கண்களும் வாயிற்புறம் நோக்கின. குமார வீதசோகர் துறவிக்கோலத்துடன் அங்கே தோன்றினுர். எல்லோருடைய முகங்களிலும் ஆச்சரியம் ஒளி வீசியது.

அவர் அசோகனை நெருங்கி மிகவும் அமைதியான குரலில், "சக்கரவர்த்தி! ராஜமாதா புத்திமதிதேவி மீண்டும் அந்தப்புரத்திலே வசிக்க விரும்பவில்லை. தம் தவறுகளையெல்லாம் நினைந்து நினைந்து அவர் மனம் உருகி வருந்துகிறுர். அவரைத் திபெத்துக்கோ சீனத்துக்கோ அனுப்புவதில் தங்களுக்கு ஒருவிதமான ஆட்சேபமும் இல்லையே?" என்றுன்.

அசோகனது கண்களிலே நீர் மல்கிநின்றது. "தங்கள் சித்தப்படி எதுவேண்டுமானுலும் செய்யலாம்" என்று சொல்லும் பொழுது அவன் குரல் தழுதழுத்தது.

வாஞ்சையிலே பரதனையும் விஞ்சிய அந்த ராஜ சந்நியாசி, மெல்ல மெல்ல நடந்து வெளியே சென்றுர். அவரது பாதக்

குறடுகளின் ஓசை அந்த அமைதியிலே தெளிவாகக் கேட்டு மறைந்தது. நெடுமூச்செறிந்தான் அசோக சக்கரவர்த்தி.

கலிங்காதிபதி என்ன செய்வதென்று விளங்காதவராகத் துடித்துக்கொண் டிருந்தான். காரணம் வேறென்றும் இல்லை. கலிங்கத்து அரசனாக விளங்கிய விசாகநந்தன் மெல்ல மெல்ல வந்துகொண் டிருந்தான்.

வந்தவன் நேரில் கலிங்கமன்னனது தாள்களிலே வீழ்ந்து, 'மன்னிக்கவேண்டும்!' என்று தொடங்க, மன்னர் அவனைத் தடுத்து, "தங்கள் மனம் தெளிந்துவிட்டதா?" என்றார். விசாகநந்தர் முகம் சுண்டியவராக ஆசனத்தில் அமர்ந்தார்.

சற்று நேரம் ஒரே அமைதி. ஒருவரும் ஒன்றுமே பேச வில்லை. பிறகு ஸம்ராட் அசோகன் மிகவும் மிருதுவான குரலில், "இந்திரே!" என்று அழைத்தான். அதுவரை அமர்ந்திருந்த இடத்தைவிட்டு எழுந்துவந்து, தமையனின் அருகே நின்றாள் அவள். அசோகன் மிகவும் அமைதியான குரலில், "கலிங்காதிபதி அவர்களுக்குச் சிறுவேண்டுகோள்! தாங்களும் தங்கள் குழந்தை களும் எனக்குச் செய்திருக்கும் உதவிக்கு ஒரு வெகுமதி கொடுக்க விரும்புகிறேன். என் இந்திரையை இளங்கோ மகேந் திரனுக்கு அன்பின் பரிசாக அளிக்கிறேன்" என்றான்.

பிரதாபராய் என்று நடித்த கலிங்க மன்னனது முகம் ஆனந்த மிகுதியினால் மலர்ந்தது. "குழந்தாய்! மகேந்திரா! ஆர்யாவர்த்தத்தின் சக்கரவர்த்தி அளிக்கும் பரிசை எழுந்து, வணங்கிப் பெற்றுக்கொள்" என்றான்.

இந்திரையின் மலர்க்கரங்களைப் பற்றி மகேந்திரனிடம் அளித்தான்.

ஆசாரிய சிதானந்தர், முங்கலீபுத்ர திஷ்யரைப் பார்த்து, "என் வேலைகள் முடிந்துவிட்டன. ஸநாதன ஹிந்து தர்மத்தில் பௌத்ததர்மம் சேர்ந்துவிட்டது. இரண்டும் ஒன்றுதான்; ஒரே தர்மமார்க்கந்தான் என்பதை உலகினருக்கு அறிவித்து விட்டேன். இனித் தங்களது செயல்கள்தான் எஞ்சி நிற்கின்றன" என்றார்.

ஆசாரிய திஷ்யரது அகமும் முகமும் ஒருங்கே மலர்ந்தன. அன்பும் பரிவும் கலந்த குரலில், "அம்மா! குழந்தாய்! ரோகிணி!

நீ கலிங்க நாட்டுக்காகச் செய்த தியாகம் என்றும் புகழத்தக்கது. உனது ஒப்புயர்வற்ற சகோதர வாஞ்சையும் அத்தகையதே! உனக்கு மிகச் சிறந்த வெகுமதி - விலைமதிக்க ஒண்ணாத ஒரு பரிசை-நான் அளிக்கப்போகிறேன்" என்றார்.

ஆனால் ரோகிணியோ தன் தந்தையின் முகத்தையே பார்த்து நின்றாள். மன்னன் நரசிம்மன் அன்பு ததும்பும் குரலில், "கண்மணி! ரோகிணி! ஆசாரியருடைய ஒப்பற்ற அநுக்கிரகத்தைப் பெறுவதற்கு நீ ஏற்றவள்தான்! எழுந்திரு" என்றான்.

காற்றிலே ஒசிந்தாடும் பூங்கொடிபோல் மெல்ல எழுந்து ஆசாரியரை அடிபணிந்தாள் அவள். 'ஸநாதன ஹிந்து தர்மம், பௌத்தர்மம் இவைகளின் மணம் எப்பொழுதும் ஆர்யாவர்த்தத்தின்மீது கமழ்ந்துகொண்டிருக்கவேண்டும் என்று ஆசீர்வதிக்கிறேன்' என்று சொல்லியவராக முதுமையினால் நடுங்கும் தம்முடைய கரங்களால் ரோகிணிதேவியின் கரங்களைப் பற்றி அசோக மௌரியனது கரங்களிலே அளித்தார் திஷ்யர்.

ஆர்யாவர்த்தத்தின் முதல் சக்கரவர்த்தி தேவனாம்பிரிய அசோகனது முகத்திலே வெற்றியின் பெருமிதமும் மகிழ்ச்சியும் ஒருங்கே தோன்றின.

*　　　*　　　*　　　*

மேல் நடந்தவைகளைப்பற்றிச் சரித்திரம் கூறும். மகதத்தின் காடுகளை அடுத்த பகுதியிலே, 'தர்மாநுஜா! தர்மாநுஜா!' என்ற ஒலி நிலவுபொழியும் இரவுகளிலே கேட்கும். ரோகிணி அவள் பொருட்டு ஒருதுளி கண்ணீர் சிந்துவாள்.

கலிங்கத்திலே ஸநாதன ஹிந்துதர்மம் புத்துயிர் பெற்று வளர்ந்தது என்பதைச் சொல்லவேண்டியதில்லை.

முற்றும்

